

# தமிழ்நாட்டு வரலாறு

## பாண்டியப் பெருவேந்தர் காலம்

தமிழ்நாட்டு வரலாற்று
வரைவுத் திட்ட வல்லுநர் குழு

பொதுப் பதிப்பாசிரியர்
முனைவர் ம. இராசேந்திரன்
தமிழ் வளர்ச்சி இயக்குநர்

தமிழ் வளர்ச்சி இயக்ககம்
குறளகம், சென்னை - 600 108

# நூல் விவர அட்டவணை

| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | தமிழ்நாட்டு வரலாறு<br>பாண்டியப் பெருவேந்தர் காலம் |
| பொதுப்பதிப்பாசிரியர் -<br>வெளியீட்டாளர் | : | இயக்குநர்<br>தமிழ் வளர்ச்சி இயக்ககம்<br>குறளகம், சென்னை - 108. |
| பதிப்புரிமை | : | தமிழ்நாடு அரசு |
| வெளியீட்டு எண் | : | 8 |
| மொழி | : | தமிழ் |
| பதிப்பு | : | முதற்பதிப்பு, கி.பி. 2000 |
| படிகள் | : | 2000 |
| தாள் | : | 70 ஜி.எஸ்.எம். (த.நா.அ.தா) |
| நூலின் அளவு | : | 22 X 16.5 செ.மீ. |
| விலை | : | உரு. 80/- |
| ஒளியச்சுக் கோவை,<br>அச்சிட்டோர் | : | இராயப்பேட்டை எழுது பொருள்<br>அச்சுத் துணைப்பொருள்கள்<br>தயாரிப்பாளர் கூட்டுறவுச் சங்கம்<br>இராயப்பேட்டை, சென்னை-14. |
| நூல் கிடைக்குமிடம் | : | தமிழ் வளர்ச்சி இயக்ககம்<br>குறளகம், இரண்டாம் தளம்<br>சென்னை - 600 108<br><br>உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்<br>தரமணி, சென்னை - 600 113. |

மு. கருணாநிதி
முதலமைச்சர்



தலைமைச் செயலகம்
சென்னை - 600 009
நாள்: 19.2.2000

## அணிந்துரை

''இந்திய நாட்டுக்கு வரலாறு எழுதுவது என்பது, தென்னகத்தில் கிருஷ்ணா நதிப் பள்ளத்தாக்கில் இருந்தோ, காவிரிப் பள்ளத்தாக்கில் இருந்தோ, வைகைக் கரையில் இருந்தோதான் எழுதப்பட வேண்டும். அப்படி எழுதப்படுகிற வரலாறுதான் இந்தியாவினுடைய உண்மையான வரலாறாக இருக்கமுடியும்'' - எனப் பேராசிரியர் சுந்தரம்பிள்ளை அவர்கள் கூறியுள்ளார்கள். இக்கருத்தைத் தாம் முழுக்க முழுக்க ஏற்றுக் கொள்வதாக, இந்தியநாட்டின் ஆதிகால வரலாற்றை எழுதிய - வரலாற்றுத்துறைப் பேராசிரியர் வின்செண்ட் ஸ்மித் தமது நூலின் முகவுரையில் தெரிவித்துள்ளார்.

''இந்திய வரலாற்றை எழுதும் பணி கங்கைக் கரையிலிருந்து தொடங்கப்படுவதற்கு மாறாகக் காவிரிக் கரையில் இருந்துதான் தொடங்கப்பட வேண்டும். அப்போதுதான் திராவிடப் பண்பாட்டின் உண்மையான வரலாறு உலகுக்கு வெளியாகும். இன்று எழுதப்பட்டுள்ள வரலாற்று நூல்கள் திராவிடத்தின் - பழந் தமிழகத்தின் உண்மையான வரலாற்றை முறையாக எடுத்துரைத்திடவில்லை'' என்று பேரறிஞர் அண்ணா அவர்களும் குறிப்பிட்டுள்ளார்கள்.

இப்பெருமக்களது கருத்துகளின் அடிப்படையில், தமிழ்நாட்டு வரலாற்றை முறைப்படுத்தியும்,புதிய ஆய்வு முடிவுகளைக் கொண்டு செப்பம் செய்தும் சிறப்பாக வெளியிடவேண்டும் எனும் நோக்குடன் ''தமிழ்நாட்டு வரலாறு'' எழுதும் திட்டம் 1971ஆம் ஆண்டில் அன்றைய கழக அரசினால் தொடங்கப்பட்டது. இதற்கென வல்லுநர்குழு அமைக்கப்பட்டு, கிடைக்கும் அக - புறச் சான்றுகளின் அடிப்படையில் தமிழர்களின் முறையான வரலாற்றைத் தொகுத்து, ஏழு தொகுதிகளாக எழுதி வெளியிட முடிவு செய்யப்பட்டது. அதன்படி, அறிஞர் பெருமக்களின் உதவியோடு ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டு, இத்திட்டத்தின் முதல் நூலாகத் ''தொல்பழங்காலம்'' எனும் முதல் தொகுதி 1975 ஆம் ஆண்டில் வெளியிடப்பட்டது.

அய்யன் திருவள்ளுவருக்குக் குமரிமுனையில் சிலை அமைக்கும் திட்டம், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி உருவாக்கும் திட்டம் ஆகியவற்றைப் போலவே தமிழக வரலாறு எழுதும் இந்தத் திட்டத்தின் பணிகளும் 1976 சனவரியில் கழக அரசு கலைக்கப்பட்ட பிறகு தமிழகத்தில் அமைந்த பிற அரசுகளின் கவனத்தைப் பெறாமையால் மிகவும் தொய்வடைந்த நிலைக்கு ஆட்பட்டன.

1983 ஆம் ஆண்டில் - முதல் தொகுதி நூல் வெளியான 7 ஆண்டுகளுக்குப்பின், இரண்டாம் தொகுதியான ''சங்ககாலம்'' அரசியல், வாழ்வியல் ஆகிய இருபகுதி நூல்களாக வெளியிடப்பட்டது.

பின்னர், 1989 இல் அமைந்த கழக அரசில் இத்திட்டத்திற்கு மீண்டும் புத்துணர்வு தந்து பணிகளை விரைவுபடுத்தினேன். அதன்பயனாக 1991 ஆம் ஆண்டில் மூன்றாம் தொகுதியான ''பல்லவர் - பாண்டியர் காலம்'' - முதல்பகுதி நூல் வெளியிடப்பட்டது. 1991 சனவரியில் கழக அரசு மீண்டும் கலைக்கப்பட்ட பிறகு, ஐந்தாண்டுக் காலம் இத்திட்டம் மறுபடியும் முடங்கிக் கிடந்தது.

1996 ஆம் ஆண்டில் கழக அரசு நான்காவது முறையாக அமைந்த பின்னர் இத்திட்டத்திற்கு அளிக்கப்பட்ட ஊக்கம் காரணமாக, இப்பணிகள் விரைவுபடுத்தப்பட்டுத் ''தமிழ்நாட்டு வரலாறு'' குறித்த நூல்கள் தொடர்ந்து வெளிவந்தவண்ணம் உள்ளன.

1997 ஆம் ஆண்டில், மூன்றாம் தொகுதியான ''பல்லவர் - பாண்டியர் காலம்'' - இரண்டாம் பகுதி நூலும், 1998 ஆம் ஆண்டில் நான்காம் தொகுதியான ''சோழப் பெருவேந்தர் காலம்'' - முதல் பகுதி நூலும், பின் இரண்டாம் பகுதி நூலும் வெளியிடப்பட்டுள்ளன. தற்பொழுது ஐந்தாம் தொகுதியாகிய ''பாண்டியப் பெருவேந்தர் காலம்'' நூல் வெளியிடப்படுகிறது.

12 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி முதல் 14 ஆம் நூற்றாண்டின் முற்பகுதி வரை ஏறத்தாழ 150 ஆண்டுக்காலம் தமிழகத்தில் ஆட்சிபுரிந்த பாண்டியப் பெருவேந்தர்களின் வரலாறு விரிவாக இந்நூலில் இடம்பெற்றுள்ளது. அக்கால அரசியல் வரலாறு, ஆட்சிமுறை, மக்களின் சமுதாய நிலை, சமூகப் பழக்க வழக்கங்கள், பொருளாதார நிலை, அக்காலத்தில் நடைமுறையிலிருந்த கிராம சபை, கோவில் நிருவாகம், நீர்ப்பாசனம், உழவு, நெசவு, நிலவரி, நாணயங்கள், மக்களின் சமய நம்பிக்கைகள், பல்வேறு கலைகளின் வளர்ச்சி நிலைகள் முதலிய அனைத்தும் இந்நூலில் விரிவாக விளக்கப்பட்டுள்ளன.

இந்நூலையடுத்து எஞ்சியுள்ள தொகுதி - 6, தொகுதி - 7 ஆகியவற்றிற்குரிய நூல்களும் தொடர்ந்து தயாரிக்கப்பட்டு வெளியாக விருக்கின்றன.

இந்த ஏழு தொகுதி நூல்கள் மட்டுமல்லாமல், தமிழ்நாட்டு வரலாறு முழுமையையும் ஒரே தொகுதியாகக் கொண்ட நூல் ஒன்றையும் வெளியிட முடிவு செய்யப்பட்டு, அதற்குரிய பணிகளும் நடைபெற்று வருகின்றன. இப்பணிகள் அனைத்தும் விரைவில் முடிவடையும். அதன்மூலம் பண்டைக்காலந்தொட்டு இந்நாள் வரையிலான தமிழகத்தின் வரலாறு உரிய சான்றுகளுடன் வரையறுக்கப்பட்டு - நூல் வடிவில் தமிழ் மக்களுக்கும், அறிஞர் உலகுக்கும் முழுமையாகக் கிடைக்கப்பெறும். இது, கழக அரசு தமிழுக்கும், தமிழ்ச் சமுதாயத்திற்கும், தமிழ் நாட்டிற்கும் வழங்கிடும் மிகச்சிறந்த கொடைகளில் ஒன்றாக எக்காலத்திலும் பெருமையுடன் இலங்கிடும் என்பது உறுதி.

பெருமைக்குரிய இந்த அரிய பணியில் பங்குபெற்றுத் ''தமிழ்நாட்டு வரலாறு'' முழுமையாக வெளியிடப்பட அயராது ஈடுபட்டிடும் அறிஞர்கள், சான்றோர்கள் அனைவர்க்கும் என் மனங் கனிந்த பாராட்டுகளையும், நல்வாழ்த்துகளையும் உரித்தாக்குகிறேன்.

(மு.கருணாநிதி)

முனைவர் மு. தமிழ்க்குடிமகன்
எம்.ஏ.,பிஎச்.டி.,
தமிழ் ஆட்சிமொழி,
தமிழ்ப் பண்பாடு, இந்துசமயம்
மற்றும் அறநிலையத்துறை அமைச்சர்



தலைமைச் செயலகம்
சென்னை - 600 009
தி.பி. 2030, மார்கழி 25
9.1.2000

# முன்னுரை

'தமிழக வரலாறு' பலரால் எழுதப்பட்டுள்ளது. ஒட்டுமொத்த வரலாறு போகப் 'பாண்டியர் காலம்' பற்றித் தி.வை.சதாசிவப் பண்டாரத்தாரும் 'நாயக்கர் காலம்' பற்றி அ.கி.பரந்தாமனாரும் நூல்களை யாத்து அளித்துள்ளனர். எனினும் அரசே, அதிகார பூர்வமாக வரலாற்றைத் தொகுத்து வெளியிடவேண்டும் எனும் கருத்து எழுந்த காலத்தில் அதற்கு வடிவம் கொடுத்த மாண்புமிகு தமிழக முதல்வர் கலைஞர் அவர்களே இன்று எட்டாவது நூலினை வெளியிடுகிறார் என்றால் இது தமிழர்கள் பெற்ற பேறு எனலாம்.

1971இல் தமிழ்ப் பேராசிரியர் அறிஞர் மு.வரதராசனார் அவர்கள் தலைமையில் முதல்வர் கலைஞர் அவர்களால் தொடங்கப்பெற்ற வரலாற்றுக்குழு இந்த 30 ஆண்டுக் காலத்தில் பல நூல்களை வெளியிட்டுள்ளது. எனினும் 1971 முதல் 1996 வரை 25 ஆண்டுக் காலத்தில் வெளிவந்துள்ள நூல்கள் நான்குதான். தொல்பழங்காலம், சங்ககாலம் (வாழ்வியல்), சங்ககாலம் (அரசியல்), பல்லவர் - பாண்டியர் காலம் - பகுதி 1 ஆகியவை வெளிவர 25 ஆண்டுகள் தேவைப்பட்டுள்ளன. ஆனால் இந்த நான்கு ஆண்டுகளில் (1996-2000) பல்லவர் - பாண்டியர் காலம் - பகுதி 2, சோழப் பெருவேந்தர் காலம்-பகுதி 1, பகுதி 2, இப்போது பாண்டியப் பெருவேந்தர் காலம் என நான்கு நூல்கள் வந்துவிட்டன. அடுத்து, 'விசயநகரப் பெருவேந்தர் காலம்' வருவதற்கான ஏற்பாடுகள் நடைபெற்று வருகின்றன. இதில் அரசியல் வரலாறு தொடங்கி அனைத்துக் கலைகளைப் பற்றியும் கட்டுரைகள் எழுதிய வரலாற்றாசிரியர்கள் அனைவரையும் பாராட்டுகின்றேன். கட்டுரைகள் அனைத்தும் கல்வெட்டுச் சான்றுகளுடன் அழகாக எழுதப்பட்டுள்ளன. அதனால்தான் சிறப்புப் பாராட்டு. தலைமைப் பொறுப்பேற்றுள்ள பேராசிரியர் சி.ஈ.இராமச்சந்திரன் அவர்களும், பதிப்புப் பொறுப்பேற்றுள்ள பேராசிரியர்களும் விரைந்து பணி முடித்துள்ளனர்.

இந்த வரலாற்றில் ஒரு முக்கியச் செய்தி. 1310உடன் பாண்டியர் வரலாறு முடிந்து மாலிக்காபூரின் படையெடுப்பு நிகழ்கிறது. மாலிக்காபூர் வருவதற்குக் காரணம் உடன்பிறந்தார்க்குள் ஏற்பட்ட உட்பூசலே என்பதுதான் நான் இதுவரை கொண்டிருந்த கருத்து. இந்த நூல் தக்க ஆதாரங்களுடன் என் கருத்தை மாற்றுகிறது. எப்படியும், இராசராச சுந்தரபாண்டியன் தான் மாலிக்காபூரை வரவழைத்தான் என்ற உண்மையும் விளங்கி விடுகிறது.

'நம்மிற் சண்டை செய்தாலும்
சகோதரர் அன்றோ?'

எனும் மனப்பாங்கு நம்மிடம் இல்லை. இன்றும் அதனால் ஏற்படும் இழப்புகளையும், இழிவுகளையும் தமிழகம் சந்தித்து வருகிறது. நூலில் அருமையான தமிழ்ச் சொற்களைக் கையாண்டு, அதே நேரத்தில் கடுமையாக இல்லாமல் எளிமையாக, படிப்பதற்கு விறுவிறுப்பான முறையில் கட்டுரைகள் அமைந்திருப்பது கண்டு வியப்புற்றேன். படிநிகராளியர் (பிரதிநிதி) போன்ற சொற்களைக் குறிப்பிடலாம். எளிய, இனிய தமிழில் நூல் வெளிவந்திருப்பது பாராட்டுக்குரியது.

''கி.பி. 12ஆம் நூற்றாண்டின் இறுதியில் சோழப் பேரரசு வீழ்ச்சியுற்றது. கி.பி.1190 முதல் பாண்டியப் பேரரசு எழுச்சி பெறத் தொடங்கியது. கி.பி.1250 முதல் 1310 வரை ஆண்ட பாண்டியப் பேரரசு தெலுங்கு நாட்டையும் இலங்கையையும் உள்ளடக்கியதாக இருந்தது'' என்று இந்த நூல் குறிப்பிடுகிறது. இராசேந்திர சோழன் இலங்கையின் மீது படையெடுத்து, கண்டிச் சிங்கள அரசு, கோட்டைச் சிங்கள அரசு, யாழ்ப்பாணத் தமிழ் அரசு ஆகிய மூன்றையும் வென்று 'மும்முடிச் சோழ மண்டலம்' என்று பெயர் வைத்தான் என்று 'ஹுலூ காலி' எனும் அறிஞர் எழுதுகிறார். இவ்வளவு மேலோங்கி நின்றவர்கள் ஏன் வீழ்ச்சியடைகிறார்கள் - பிறகு காணாமலே போய்விடுகிறார்கள் என்பதைத்தான் நாம் - இந்தத் தலைமுறையினர் சிந்திக்க வேண்டும்.

முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் 1218இல் சோழநாட்டின் மீது படையெடுத்து உறையூரையும் தஞ்சையையும் தீக்கிரையாக்கினான்.

''கூடமும் மாமதிலும் கோபுரமும் ஆடரங்கும்
மாடமும் மாளிகையும் பண்டாரமும் பல இடித்து''

என்று மெய்க்கீர்த்தி பேசுகிறது. சோழர், பாண்டியர் என்றில்லாமல் தமிழர்கள் என்று எடுத்துக்கொண்டால் எப்படி நமக்குள்ளே பொருது ஒருவரை ஒருவர் அழித்துக் கொண்டிருக்கிறோம் என்பதைப் புறநானூற்றுக் காலத்தில் மட்டுமன்றிப் பிற்காலத்திலும் அறிகிறோம்.

'எழுவர் நல்வலம் அடங்க' இளம் நெடுஞ்செழியன் போரிட்டான் என்றால் இதில் சோழரும், சேரரும் அடங்கியுள்ளனர் என்பதுதான் 'புறம்' தரும் செய்தி.

இந்த நூலைப் படித்த பிறகுதான் முதலாம் சடையவர்மன் சுந்தர பாண்டியன் காலத்தில் இளையான்குடியில் (என் ஊரில்) கல்வெட்டு நிறுவப்பட்டது என அறிந்தேன். வியந்தேன்.

ஒரு வரலாற்றைப் படைக்கும் போது எத்தனை உண்மைகளை வெளிக்கொணர முடிகிறது என்பதற்கு இந்த நூல் சான்றாகும். மேலும் கலைகள் பற்றியும், செப்புத் திருமேனிகள் பற்றியும், அக்கால இலக்கிய நிலை பற்றியும், சமயநிலை குறித்தும், நீர்ப்பாசனம் - வரி விதிப்பு முறைகள் குறித்தும், சமுதாய நிலை குறித்தும் மிகச் சிறப்பான கட்டுரைகள் இதில் இடம் பெற்றுள்ளன. விரிவஞ்சி அவற்றின் சிறப்புகள் குறித்து எழுதிட இயலவில்லை.

இதுபோன்ற தனிச் சிறப்புடைய வரலாற்று நூல்களை வெளிக்கொணர்வதில் எங்கள் துறை காட்டும் ஆர்வம், குழு எடுத்துக் கொள்ளும் முயற்சி ஆகியவற்றைப் பாராட்டாமல் இருக்கமுடியாது.

எல்லாவற்றுக்கும் மேலாக இந்தப் பணிகளை விரைந்து ஆற்றுவதற்காக எங்களைப் பணித்து, மிகச் சிறந்த அணிந்துரையும் வழங்கிச் சிறப்பித்த மாண்புமிகு முதல்வர் கலைஞர் அவர்களுக்கு நன்றியையும் வணக்கத்தையும் புலப்படுத்திக்கொள்கிறேன்.

(மு. தமிழ்க்குடிமகன்)

முனைவர் சி.ஈ. இராமச்சந்திரன்
தலைவர்
தமிழ்நாட்டு வரலாற்று
வரைவுத்திட்ட வல்லுநர் குழு

# பதிப்புரை

வரலாறு என்பது ஓர் இனத்தின் வாழ்வுக்கும்வீழ்வுக்கும் சான்று கூறும் எழுத்துச் சின்னம். தமிழினத்தின் வரலாறு மிகவும் நெடியது; பழம்பெருமை உடையது; பலரின் பார்வைக்கும் உரியது. ஆய்வுலகிற்கு அரிய பாடங்களைத் தருவது.

தமிழ்மண்ணில் சேரர், சோழர், பாண்டியர், பல்லவர் ஆகியோரின் ஆட்சி பல்வேறு காலக்கட்டங்களில் மேலோங்கி மிளிர்ந்தது. கல்வெட்டுகள், செப்பேடுகள், அயலவரின் குறிப்புகள், இலக்கியங்கள், நாணயங்கள் ஆகியவை தமிழகப் பெருமன்னர்களின் ஆட்சி, அக்காலச் சமுதாயம், பொருளாதாரம் முதலியன பற்றி உணர்த்துகின்றன. இவற்றின் துணையுடன் சென்ற காலச்சிறப்பு நிகழ்காலத்தில் தலைநிமிர்ந்து நிற்கிறது.

தமிழக வரலாற்றில் பெருநாட்டமுடைய தமிழக அரசு தமிழ்நாட்டு வரலாற்றை முறைப்படிச் செம்மையாக-முழுமையாக வெளியிடவேண்டும் என்று திட்டமிட்டது. இத்திட்டம் 1971இல் பிறந்தது. உரிய வல்லுநர்குழு அமைக்கப்பட்டது. முதல் தொகுதி 'தொல்பழங்காலம்' என்ற பெயரில் வெளிவந்தது. இரண்டாம் தொகுதியான சங்ககாலம் - அரசியல், வாழ்வியல் என்று இருபகுதிகளாகப் பிறந்தது. மூன்றாம் தொகுதியான பல்லவர் - பாண்டியர் காலமும், நான்காம் தொகுதியான சோழப்பெருவேந்தர் காலமும் இரண்டிரண்டு பகுதிகளாக மலர்ந்தன. ஐந்தாம் தொகுதியாகிய பாண்டியப்பெருவேந்தர் காலம் தற்போது உங்கள் கைகளில் தவழ்கிறது.

இந்த நூலில் பாண்டியரின் அரசியல் வரலாறு, ஆட்சிமுறை, சமுதாயம், பொருளியல், சமயம், இலக்கியம், கலைகள் ஆகியவை அடங்கியுள்ளன. இவற்றை வல்லுநர்கள் எழுதியுள்ளார்கள். அண்மைக்கால ஆராய்ச்சி முடிவுகளையும் அவர்கள் வழங்கியுள்ளார்கள்.

முதலாம் சடையவர்மன் சுந்தர பாண்டியன் (கி.பி.1250 - 1284) சோழப் பெருவேந்தன் இராசராசனைப் போன்ற பேரரசன் என்ற உண்மையை இந்த நூல் மூலம் அறிந்து மகிழலாம். பாண்டியரின் யானைப்படை (சகஸ்ர கரி), குதிரைப்படை (அசுவகோடி) ஆகியவற்றைப்பற்றிய அருஞ்செய்திகளை இந்த

நூல் தெரிவிக்கின்றது. பாண்டிய மன்னர்களின் அரசக் கருவூலம் எவ்வளவு செல்வச் செழிப்புடன் விளங்கியது என்பதை அறிந்த-நமக்கும் அறிவித்து வியந்த மார்க்கோபோலோ, வாசப் போன்ற அயல் நாட்டாரின் கருத்துகளை இந்நூல் மூலம் அறிய முடிகிறது. பாண்டியர்கள் அவ்வப்போது வெளியிட்ட 'எல்லாம் தலையானான் காசு', 'சோணாடு கொண்டான் காசு' போன்றவற்றின் பெருமையும் இந்த நூல்மூலம் புலப்படுகிறது. பாண்டியரின் மையப்பேரரசு மேனாட்டுப் பைசான்டைன் அரசு போன்றது என்ற மதிப்பீட்டையும் இந்த நூல் வழங்குகிறது.

வரலாற்றுப் பேரார்வம் கொண்ட - தமிழ்நாட்டு வரலாற்று வரைவுத்திட்டத்தைத் தோற்றுவித்த - இத்துறையின் வரலாற்று நூல்களை வெளியிட்டு இவற்றின் சிறப்பும் இன்றியமையாமையும் எல்லாத் திசைகளிலும் பரவுவதற்குக் காரணமாக உள்ள மாண்புமிகு தமிழக முதல்வர், முத்தமிழ் அறிஞர் டாக்டர் கலைஞர் அவர்களுக்கு என் சார்பிலும், வரலாற்றுக்குழுவின் சார்பிலும் நன்றி தெரிவித்துக் கொள்கிறேன்.

வரலாற்று நூல்களை வெளியிடுவதில் அக்கறையும் ஆர்வமும் கொண்டு, அடிக்கடி எங்களை ஆற்றுப்படுத்தியும், விரைவு படுத்தியும் இந்நூல் இனிதாக வெளிவரப் பேருதவி புரிந்த மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி, தமிழ்ப் பண்பாடு, இந்து சமய அறநிலையத்துறை அமைச்சர் முனைவர் மு.தமிழ்க்குடிமகன் அவர்களுக்கும் நன்றி தெரிவித்துக்கொள்கிறோம்.

இந்த நூல் விரைவில் வெளிவருவதற்கு எல்லா வகையிலும் நல்லுதவி புரிந்த, வரலாற்றுக்குழுவின் உறுப்பினர் - செயலரான, தமிழ் வளர்ச்சி இயக்குநர் முனைவர் ம. இராசேந்திரன் அவர்களுக்கும் நன்றி நவில்கிறோம்.

குழுக்கூட்டங்களில் கலந்துகொண்டு பயனுள்ள கருத்துகளை வழங்கிய வல்லுநர் குழு உறுப்பினர்களுக்கும், நல்ல கட்டுரைகளை வழங்கிய பேராசிரியர்களுக்கும், மேலாய்வு செய்துதவிய வல்லுநர்களுக்கும், நிழற்படங்கள் வழங்கி உதவிய தொல்லியல் துறை இயக்குநருக்கும், நூலைச் செம்மையாக உருவாக்கிய பதிப்பாசிரியர்களுக்கும் நன்றி கூறுகின்றேன்.

தமிழ்கூறு நல்லுலகம் இந்த நூலுக்கும் நல்லாதரவு தரும் என்று நம்புகிறேன்.

**சி.ஈ. இராமச்சந்திரன்**

முனைவர் ம.இராசேந்திரன்
தமிழ் வளர்ச்சி இயக்குநர்



தமிழ் வளர்ச்சி இயக்ககம்
குறளகம்
சென்னை - 600 108
21.2.2000

## நன்றியுரை

தமிழ் வளர்ச்சித் துறை வாயிலாகத் தமிழ்நாட்டு வரலாற்று நூல்கள் தொடர்ந்து வெளியிடப் பெற்று வருகின்றன. தொல் பழங்காலம், சங்ககாலம், பல்லவர் - பாண்டியர் காலம், சோழப்பெருவேந்தர் காலம் எனும் நூல்கள் இதுவரை வெளியிடப் பட்டுள்ளன. தற்போது பாண்டியப் பெருவேந்தர் காலம் எனும் இந்நூலை வெளியிடுவதில் தமிழ் வளர்ச்சித் துறை மகிழ்ச்சி யடைகிறது. எஞ்சியுள்ள தொகுதிகளுக்குரிய பணிகள் நடைபெற்று வருகின்றன. பணிகள் விரைந்து முடிக்கப்பெற்று அடுத்தடுத்து அந்நூல்கள் வெளியிடப்படும்.

தமிழ்நாட்டு வரலாற்று வரைவுத் திட்டத்தின்பால் ஆழ்ந்த ஈடுபாடுகொண்டு அறிவுரைகள் நல்கும் மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்கள் இந்நூலிற்கு அணிந்துரை வழங்கிப் பெருமை சேர்த்துள்ளார்கள். தக்கவாறு ஆற்றுப்படுத்தும் மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி, தமிழ்ப் பண்பாடு, இந்து சமயம் மற்றும் அறநிலையத் துறை அமைச்சர் அவர்கள் முன்னுரை வழங்கிச் சிறப்பித்துள் ளார்கள். மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்களுக்கும் மாண்புமிகு தமிழ் ஆட்சிமொழி, தமிழ்ப்பண்பாடு, இந்து சமயம் மற்றும் அறநிலையத் துறை அமைச்சர் அவர்களுக்கும் தமிழ்வளர்ச்சித் துறையின் சார்பில் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். தமிழ் வளர்ச்சி-பண்பாடு மற்றும் அறநிலையத் துறைச் செயலாளர், வரலாற்று வல்லுநர் குழுத் தலைவர் முனைவர் சி.ஈ. இராமச்சந்திரன் அவர்கள், குழு உறுப்பினர்கள், கட்டுரைகளை அளித்துள்ள ஆசிரியர்கள், மேலாய்வு செய்தளித்த வல்லுநர்கள், நிழற்படங்களை வழங்கியுதவிய தொல்லியல்துறை இயக்குநர், நூல் வெளியீட்டிற்கும் விற்பனைக்கும் உறுதுணைபுரியும் உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநர், நூல் உருவாக்கப் பணியில் ஈடுபட்ட இயக்ககப் பதிப்பாசிரியர்கள், உதவி இயக்குநர்கள் திரு. வை. கண்ணபுரக் கண்ணன், திரு. கூ.வ. எழிலரசு, தெரிவு நிலை முதுநிலை ஒப்பச்சர் திரு. சு. எத்திராசன், அச்சகத்தார் ஆகியோருக்கும் நன்றி உரியதாகும்.

ம. இராசேந்திரன்

# தமிழ்நாட்டு வரலாற்று வரைவுத் திட்டம்

## வல்லுநர் குழு (1999-2002)

1. முனைவர் சி.ஈ. இராமச்சந்திரன் - தலைவர்
   வரலாற்றுத் துறைத் தலைவர் (ஓய்வு)
   சென்னைப் பல்கலைக்கழகம்.
   ஈ/70, அண்ணா குடியிருப்புச் சாலை,
   பெசண்ட் நகர், சென்னை - 600 090.

2. தமிழ் வளர்ச்சி இயக்குநர் - உறுப்பினர்-செயலர்
   சென்னை - 600 108.

3. துணைவேந்தர் - உறுப்பினர்
   தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர்

4. முனைவர் கி.ர. அனுமந்தன் - உறுப்பினர்
   8-ஏ, முதல் குறுக்குத் தெரு,
   சீத்தம்மாள் குடியிருப்பு,
   ஆழ்வார்ப்பேட்டை, சென்னை - 600 018.

5. முனைவர் மா.சு. கோவிந்தசாமி - உறுப்பினர்
   எண். 2, 13ஆவது குறுக்குத் தெரு,
   கால்வாய்த் தெரு, இந்திரா நகர்,
   சென்னை - 600 020.

6. முனைவர் பி. இராசாராமன் - உறுப்பினர்
   7, 20ஆவது கிழக்குத் தெரு,
   காமராசர் நகர், திருவான்மியூர்,
   சென்னை - 600 041.

7. முனைவர் ஏ. சுப்பராயலு - உறுப்பினர்
   கல்வெட்டியல் துறை,
   தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர்.

8. முனைவர் கே.வி. இராமன் - உறுப்பினர்
தொல்லியல் துறைத் தலைவர் (ஓய்வு)
சென்னைப் பல்கலைக் கழகம்.
34, 5ஆவது குறுக்குத் தெரு,
மந்தைவெளிப்பாக்கம்,
சென்னை - 600 028.

9. இயக்குநர் - உறுப்பினர்
தொல்லியல் துறை,
தரமணி, சென்னை - 600 113.

10. முனைவர் எஸ். மாணிக்கம் - உறுப்பினர்
வரலாற்றுத் துறைப் பேராசிரியர்,
மதுரைக் காமராசர் பல்கலைக் கழகம்,
மதுரை.

11. முனைவர் நா. அழகப்பன் - உறுப்பினர்
அண்ணாமலைப் பல்கலைக் கழகம்,
சிதம்பரம்.

# தமிழ்நாட்டு வரலாற்று வரைவுத் திட்டம்

## பதிப்பாசிரியர் குழு

1. **முனைவர் சி.ஈ. இராமச்சந்திரன்** - தலைவர்
   வரலாற்றுத் துறைத் தலைவர் (ஒய்வு)
   சென்னைப் பல்கலைக்கழகம்.
   ஈ/70, அண்ணா குடியிருப்புச் சாலை,
   பெசண்ட் நகர், சென்னை - 600 090.

2. **முனைவர் மா.சு. கோவிந்தசாமி** - உறுப்பினர்
   வரலாற்றுத் துறைத் தலைவர் (ஒய்வு)
   அண்ணாமலைப் பல்கலைக் கழகம்.
   எண். 2, 13ஆவது குறுக்குத் தெரு,
   கால்வாய்த் தெரு,
   இந்திரா நகர், சென்னை - 600 020.

3. **முனைவர் கே.வி. இராமன்** - உறுப்பினர்
   தொல்லியல் துறைத் தலைவர் (ஒய்வு)
   சென்னைப் பல்கலைக் கழகம்.
   34, 5ஆவது குறுக்குத் தெரு,
   மந்தைவெளிப்பாக்கம்,
   சென்னை - 600 028.

4. **முனைவர் பி. இராசாராமன்** - உறுப்பினர்
   முதல்வர் (ஒய்வு),
   அரசுக் கலைக் கல்லூரி, சென்னை - 35.
   7, 20ஆவது கிழக்குத் தெரு,
   காமராசர் நகர், திருவான்மியூர்,
   சென்னை - 600 041.

## தமிழ்நாட்டு வரலாற்று வரைவுத் திட்டம்

### பதிப்பாசிரியர்கள்

1. **முனைவர் கோ. தங்கவேலு**
வரலாற்றுத் துறைத் தலைவர் (ஓய்வு)
மதுரைக் காமராசர் பல்கலைக் கழகம்,
1175, 58ஆவது தெரு,
பெரியார் நகர், கொரட்டூர்,
சென்னை - 600 080.

2. **முனைவர் நா. இராசகோபாலன்**
(மலையமான்)
63, டாக்டர் அரங்காச்சாரி சாலை,
சென்னை - 600 018.

# பொருளடக்கம்

# 1. அரசியல் வரலாறு

இரண்டாம் பாண்டியப் பேரரசு பற்றி அறிந்துகொள்ள உதவும் நூல்களும் கல்வெட்டுகளும் பல உள்ளன. பெரும்பற்றப்புலியூர் நம்பி எழுதிய திருவாலவாயுடையார் திருவிளையாடல் புராணம் 13ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது என்று அண்மைக்கால ஆய்வாளர்கள் கருதுகின்றனர். பரஞ்சோதி முனிவர் எழுதிய திருவிளையாடல் புராணம் சடையவர்மன் குலசேகரன் போன்ற பிற்கால அரசர்களின் திருப்பணிகளை எடுத்தியம்புகிறது. ஆலாஸ்ய மகாத்மியம் எனும் வடமொழித் தலபுராணம் 74 அரசர்களைப் பற்றிக் குறிப்பிடுகின்றது. ''மதுரைத் தலவரலாறு'' என்ற நூல் மதுரைக் கோயிலின் வரலாற்றைக் கூறுகிறது. முகமதியர் மதுரையைப் பிடித்த வரலாறு பற்றியும் மீண்டும் விசயநகர தளபதி கம்பண உடையார் மதுரையைக் கைப்பற்றி நல்லாட்சி வழங்கியது பற்றியும் அது அறிவிக்கிறது. சோழரின் ஆதிக்கக் காலத்தில் எழுதப்பட்ட ''மூவர் உலா'' 'கலிங்கத்துப் பரணி' போன்ற நூல்களிலும் பாண்டியர்களைப் பற்றிய பல குறிப்புகள் கிடைக்கின்றன.

முகமதியர்கள் மதுரைமீது படையெடுத்ததை மதுரை திருப்பணி மாலை (1323) விவரிக்கின்றது. மதுரை ஸ்தானீகர் வரலாறு மிகப் பயனுள்ள நூலாகும். வீமநாத பண்டிதர் எழுதிய கடம்பவன புராணமும் ஆலாஸ்ய மகாத்மியம் போன்று, பாண்டிய அரசர் பலரைக் குறிப்பிடுகின்றது. கற்பனை நயம் வாய்ந்தவையாக இவ்விரண்டு நூல்களும் அமைந்துள்ளன. கப்பலூர்க் கோவை, பாண்டிநாட்டுக் கப்பலூரைத் தலைநகராகக் கொண்டு ஆண்ட கருமாணிக்கன் காலிங்கரையன்மேல் பாடப்பட்ட கோவையாகும். திருப்பூவனம் கந்தசாமிப் புலவர் எழுதிய திருவாப்பனூர்ப் புராணம் சோழாந்தகன் என்னும் பாண்டியனைப் பற்றி மட்டும் வரலாறு சார்ந்த செய்திகளைக் கூறுகிறது. போசள நாட்டுப் புலவரான காலகளபர் (வித்தியாச் சக்கரவர்த்தி) என்னும் வடமொழிப் புலவர், வீரநரசிம்மனும் அவனுடைய மகன் வீரசோமேசுவரனும் பெரும்படையுடன் சென்று, காடவக் கோப்பெருஞ்சிங்கனைத் தோல்வியுறச் செய்து, சிறைப்பட்ட மூன்றாம் இராசராசனை மீட்ட செய்தியைத் தனது ''கத்ய கர்ணாமிருதம்'' என்னும் வடமொழிக் காப்பியத்தில் குறிப்பிடுகின்றார்.

வடமொழியில் எழுதப்பட்ட காப்பியமான ''பாண்டிய குலோதயம்'' இரண்டாம் சடையவர்மன் குலசேகரனின் (1237) சகோதரர்கள் நால்வரைப்பற்றிக் குறிப்பிடுகிறது. ஓலைச்சுவடியாக முதலில் கிடைத்த இந்நூலைப் பேராசிரியர் கே.வி. சர்மா ஆராய்ந்து வெளியிட்டுள்ளார். இந்நூலின் துணைகொண்டு கி.பி. 1304இல் அரியணையேறிய ஐந்தாம் சடையவர்மன் சுந்தரபாண்டியனைப் பற்றி அறிய முடிகிறது.

விசயநகர மன்னரான கம்பண உடையாரின் மனைவி கங்காதேவி, வடமொழியில் எழுதிய காப்பியத்தில் கம்பணர் பெரும்படையுடன் தமிழ் நாட்டிற்கு வந்து, இரண்டாம் இராசநாராயண சம்புவரையனை வென்று, பிறகு மதுரையில் ஆட்சி செய்து வந்த முகமதியர்களையும் வென்று விசயநகரப் பேராட்சியை ஏற்படுத்திய செய்தியை விவரிக்கின்றார். காஞ்சிபுரம், திருவரங்கம், மதுரை போன்ற நகரங்களில் மூடப்பட்டிருந்த கோயில்கள் திறக்கப்பட்டு மீண்டும் வழிபடு தலங்களாக ஆக்கப்பட்டன.

திருவரங்கம் ''கோயிலொழுகு'' என்னும் நூலில் பாண்டியரின் திருப்பணிகளைப் பற்றிய குறிப்புகள் உள்ளன. இந்நூல் மாலிக்காபூரின் பாண்டியநாட்டுப் படையெடுப்பு பற்றியும் திருவரங்கம் கோயில் கொள்ளையடிக்கப்பட்ட நிகழ்ச்சிபற்றியும் குறிப்பிடுகின்றது. வரதாம்பாவின் ''அச்சதராயபியூதயம்'' முக்கு திம்மன்னாவின் ''பாரிஜாதா பகரணமு'', திருமலாம்பாவின் ''வரதாம்பிகா பரிணயம்'' முதலான தெலுங்கு நூல்களும் பாண்டியர் வரலாற்றுச் செய்திகள் சிலவற்றைக் கூறுகின்றன.

## வெளிநாட்டினரின் குறிப்புகள்

வெனிஸ் நாட்டவரான மார்க்கோபோலோ 13ஆம் நூற்றாண்டில் பாண்டிய நாட்டிற்கு வந்து அங்குள்ள ஆட்சியைப் பற்றியும், பழக்கவழக்கங்களைப் பற்றியும் எழுதியுள்ளார். காயல் என்னும் துறைமுகப் பட்டினம் சிறந்து விளங்கிற்று என்கின்றார். முத்துக்குளிப்புத் தொழில் விவரங்களும் அவரது நூலில் உள்ளன.

வடமேற்கு ஆப்பிரிக்காவிலிருந்து வந்த இபின்பட்டுவா என்பவர் மதுரை சுல்தான்களின் விருந்தாளியாக மதுரையில் தங்கியிருந்தார். தில்லி சுல்தான் துக்ளக் தனது படைத்தலைவனான ஜலாலுதீன் அசன்ஷாவை மாபாரின் (தமிழகத்தைக் குறிக்கும் சொல்) தலைவனாக அமர்த்தினான். இபின்பட்டுவா ஜலாலுதீன் அசன்ஷாவின் சகோதரியை மணந்தார். அவர் தென் இந்தியாவைப் பற்றி விரிவாக எழுதியுள்ளார். குறிப்பாக, முகமதியர்களால் இந்துக்களுக்கு ஏற்பட்ட இன்னல்களைப் பற்றி எழுதியுள்ளார்.

பாரசீக நாட்டுக் கவிஞன் வாசப்பும், டெல்லி சுல்தான் அல்லாவுதீன் கில்ஜியின் அரசவைக் கவிஞர்களான அமீர்குசுருவும் (கி.பி. 1253இல் பிறந்தவர்) பர்னியும் எழுதிய குறிப்புகள் மிகப்பயனுள்ளவையாகும். இங்கிலாந்தின் பேராசிரியர்களான எல்லியட், டௌஸன் ஆகிய இருவரும் (கி.பி. 1871இல்) ஆங்கிலத்தில் எழுதிய The History of India as told by its own Historians என்னும் நூலில் இக்குறிப்புகளைக் காணலாம். அமீர்குசுரு கி.பி. 1325இல் மறைந்துவிட்டார். பர்னி கி.பி. 1350இல் காலமானார். மாலிக்காபூரின் தமிழ்நாட்டுப் படையெடுப்பைப் பர்னியும் கண்ணுற்றார். அவர் தாம்

கண்ட காட்சிகளை ''டாரிசி பிரோஸ்ஷாஹி'' என்னும் நூலில் கி.பி. 1340லிருந்து 1350 வரை எழுதினார். மாலிக்காபூர் தாக்கிய நகரங்கள் பற்றியும் அவன் எடுத்துச் சென்ற ஏராளமான செல்வங்கள் பற்றியும் விவரமாக எழுதியுள்ளார்.

வாசப் கி.பி. 1300-லிருந்து எழுதத் தொடங்கினார். அவர் நான்கு தொகுதிகளை உருவாக்கினார். அந்நூல்களைப் பாரசீகத்தின் சுல்தானிடம் சமர்ப்பித்தார். அவனது அரசவைப் புலவரான இவர் இந்தியா, சீனா, மங்கோலியா போன்ற நாடுகளில் ஆண்ட முகமதிய மன்னர்களைப் பற்றி ''அந்நாடுகளுக்குச் செல்லாமலேயே'' எழுதி வைத்தார். செவிவழிச் செய்திகளை எல்லாம் நம்பி எழுதினார். வாசப் இந்தியாவிற்கு நேரில் வரவேயில்லை. குதிரை வியாபாரிகளும், கப்பல் மாலுமிகளும் சொன்னதையும், நண்பர்கள் கூறியதையும் கேட்டு எழுதியதாக அவரே ஒப்புக்கொண்டுள்ளார். ஆனால் அவருடைய கூற்றினை ஆதாரமாக வைத்துப் பாண்டிய வரலாறு எழுதப்பட்டுள்ளது. மாபாரில் கலேஸ்தேவர் (குலசேகரதேவர்)க்குச் சுந்தரபாண்டியன் என்ற பட்டத்து அரசியின் மகன் இருந்தான் எனவும், குலசேகரனின் ஆசைநாயகியின் மகன் வீரபாண்டியன் எனவும், பட்டத்துக்கு உரிய சுந்தரபாண்டியனுக்கு முடிசூடாமல், தவறான வழியில் பிறந்த வீரபாண்டியனுக்கு முடிசூட்டினான் என்றும், இதனால் கோபங்கொண்ட சுந்தரபாண்டியன் (1310) (ஹிஜ்ஜிரா 709இல்) தன் தந்தை குலசேகரனைக் கொன்றுவிட்டான் என்றும் கூறுகின்றார். ஆனால் உண்மை அதுவல்ல. கல்வெட்டுகளின் ஆதாரங்களைக்கொண்டு அண்மைக்கால ஆராய்ச்சியாளர் என். சேதுராமன் இச்செய்திகள் முற்றிலும் தவறானவை என்று உறுதிப்படுத்தியும் இரு சகோதரர் களுக்கும் இடையில் பிணக்கில்லை என்றும் இருவரும் ஒற்றுமையுடன் அரசாண்டனர் என்றும் அவர்கள் தம் தந்தை குலசேகரன் நலம்பெற கோயில்களில் சிறப்பு வழிபாடுகளுக்கு ஏற்பாடுகளைச் செய்தனர் என்றும் கல்வெட்டு ஆதாரங்களின் துணைகொண்டு குறிப்பிடுகின்றார்.

## கல்வெட்டுகள்

இக்காலப் பாண்டியரது வரலாறு எழுதுவதற்குக் கல்வெட்டுகள்தான் தலைசிறந்த சான்றுகளாக அமைந்துள்ளன. பொதுவாகத் தமிழ்நாட்டிலும் குறிப்பாக முந்தைய பாண்டிய நாட்டுக் கோயில்களிலும் உள்ள நூற்றுக்கணக்கான கல்வெட்டுகள் வரலாற்றுப் பெட்டகங்களாகவே அமைந்துள்ளன. மேலும் சோழர் காலத்தில் வெளியிடப்பட்ட திருவாலங்காடு செப்பேடுகளிலும் அவர்களது கல்வெட்டுகளிலும் பாண்டியர்களைப் பற்றிப் பல முக்கியக் குறிப்புகள் காணப்படுகின்றன.

இரண்டாம் பாண்டியப் பேரரசின் காலத்தில் பெரிய கல்வெட்டு வாசகங்கள் எழுதப்பட்டன. அரசரின் பெருமையை மெய்க்கீர்த்திகள் மிகைப்படுத்திக் கூறினாலும், அவற்றில் சில உண்மைகள் மறைந்திருப்பதைக் கண்டறியவேண்டும். (கி.பி. 985 - 1014ஆண்டுக்கு) முன்னரே செப்பேடுகளில் மெய்க்கீர்த்தி முறை கையாளப்பட்டாலும், இராசராசசோழன் காலத்திற்குப் பின்னர், அம்முறை மிகவும் அதிகரித்தது. கல்வெட்டுகளில் காணப்படும் அரசனின் ஆட்சியாண்டு, நாள், நட்சத்திரம், கோள், திதி போன்ற காலநிலைகளைக் கணக்கில் கொண்டு ஆய்வு செய்து என். சேதுராமன் வெளியிட்டுள்ள புத்தகங்களும், கட்டுரைகளும் அண்மைக்கால ஆராய்ச்சிக்குச் சிகரம்போல் அமைந்துள்ளன. முன்னரே செருமன் பேராசிரியர் கீல்ஹொர்ன் (1907), ஜகோபி (1913), இராபர்ட்சீவல் (1913), சுவாமிக்கண்ணுபிள்ளை (1915) போன்ற பெரியோர்கள் பாண்டியர்காலக் கல்வெட்டுகளை ஆய்வு செய்துள்ளனர்.

இந்தியத் தொல்லியல் ஆய்வுத்துறையினரால் வெளியிடப்பட்ட தென்னிந்தியக் கல்வெட்டுகள், ஆண்டுதோறும் வெளியிடப்பட்டுவரும் கல்வெட்டுக் குறிப்புகள், திருவனந்தபுரம் தொல்லியல் இதழ்கள், எபிகிராபிகா இண்டிகா, நினைவுச் சின்னங்கள் அல்லது அகழ்வு ஆய்வுக் குறிப்புகள் ஆகியவை பயனுள்ளவை. தென்னிந்தியக் கோயில் கல்வெட்டுகளும் பயனுள்ளவையே. தமிழகத் தொல்லியல் துறையினரால் (சென்னை) வெளியிடப்பட்டுவரும் கல்வெட்டு இதழ்கள், புதிய கண்டுபிடிப்புகள் போன்றவை தக்க சான்றுகளாக உள்ளன. புதிய கல்வெட்டுகள் படியெடுக்கப்பட்டு அண்மைக்காலத்தில் நூலாக வெளியிடப்பட்டு வருகின்றன.

பிற்காலப் பாண்டியர் கல்வெட்டுகளில் மன்னனின் ஆட்சி ஆண்டு கொடுக்கப்பட்டிருக்கும். சேதுராமன் குறிப்பிட்டுள்ளது போல சுந்தர பாண்டிய தேவர்க்கு ''யாண்டு'' பன்னிரண்டாவது என்று எழுதப்பட்டிருக்கிறது என்றால் சுந்தரபாண்டியன் முடிசூடி 11 வருடங்கள் சென்றுவிட்டன என்று கொள்ளவேண்டும். எனவே இதற்கு 12ஆவது ஆட்சி ஆண்டு நடந்து கொண்டு இருக்கிறது என்று பொருள் கொள்ளவேண்டும். கல்வெட்டில் யாண்டு என்பது நடப்பு வருடத்தைக் குறிக்கும். கல்வெட்டைப் பொறுத்தமட்டில் ஆண்டு என்பதும் யாண்டு என்பதும் வேறானவையாகும்.

கல்வெட்டுகளில் யாண்டு, மாதம், சந்திரதிதி, நட்சத்திரம், கிழமை ஆகியவை கையாளப்பட்டிருப்பதைக் கொண்டுதான் மன்னரின் ஆட்சியாண்டுகளைக் கணக்கில் எடுத்துக்கொள்ளவேண்டும். ஒரு கல்வெட்டின் மூலமாக ஒரு மன்னனின் ஆட்சித் தொடக்கத்தை அறிந்தால், மற்ற கல்வெட்டுகளின் துணைகொண்டு அந்த மன்னனின். முடி ஆட்சிக்காலத்தை அறிந்து கொள்ளமுடியும். காலக் கணக்கீட்டு

முறைகள் சரியாக வரவில்லை என்றால் அதே பெயரில் வேறொரு மன்னன் இருந்தான் என்றுதான் கொள்ளவேண்டும். பஞ்சாங்கக் குறிப்புகளை மட்டும் வைத்துக் கொண்டு காலத்தைக் கணிப்பதும் தவறுதலாக முடியும். ஏனெனில் அத்துடன் மன்னனின் விருதுப்பெயர், மெய்க்கீர்த்தி, கூறப்பட்ட செய்திகள், சரித்திர நிகழ்ச்சிகள், முடிந்த நிகழ்ச்சிகள் ஆகிய அனைத்தையும் கருத்தில் கொள்ளவேண்டும்.

பாண்டிய மன்னர்களுக்குச் சுந்தரபாண்டியன், விக்கிரமன், குலசேகரன், வீரபாண்டியன், பராக்கிரமன், ஸ்ரீவல்லபன் என்று ஆறு பெயர்களே வரும். மாறவர்மன் அல்லது சடையவர்மன் என்று முன்னொட்டாக மாறிமாறிவரும் போக்கு பாண்டிய மன்னர்களுக்கே உரித்தாகும். ஒரே சமயத்தில் பலர் அரசாண்டுள்ளனர். ஒரே பெயரில்கூட இருக்கலாம். சிலருக்கு மெய்க்கீர்த்திகளும், விருதுப் பெயர்களும் இருக்கும். ஒரே விருதுப்பெயர் பலருக்கு இருக்கும். இவர்களைப் பற்றிய வானிலைக் குறிப்புகளையும் ஆராய்ந்து பார்க்கவேண்டும். அண்மைக்கால ஆய்வுகள் கி.பி. 1100லிருந்து 1400 வரை ஆண்ட 47 மன்னர்களைப் பற்றிக் கூறுகின்றன. சில சமயங்களில் ''பாண்டிய சகோதரர்கள்'' கூட்டாகவோ வெவ்வேறு இடத்திலிருந்தோ ஆட்சி செய்த குறிப்புகள் கிடைக்கின்றன.

## பாண்டியரின் நாணயங்கள்

பிற்காலப் பாண்டியர் வெளியிட்ட நாணயங்கள் நமக்குக் கிடைத்துள்ளன. அவர்களைப் பற்றிய குறிப்புகளும் கல்வெட்டுகளில் காணப்படுகின்றன. முற்காலப் பாண்டியரது நாணயங்கள் சதுரவடிவில் அமைந்தவை. பிற்காலப் பாண்டியரின் நாணயங்கள் வட்டவடிவில் அமைந்துள்ளன. அவற்றில் பாண்டிய அரசர்களது விருதுகள் பொறிக்கப்பட்டுள்ளன. ''கலியுகராமன்'', ''கோதண்டராமன்'' ''கச்சி வழங்கும் பெருமாள்'' 'சமரகோலாகலன்' 'எல்லாந்தலையானான்' ''எம்மண்டலமும் கொண்டருளிய'' என்பன போன்ற சிறப்பு விருதுகளைக் கொண்ட நாணயங்கள் பல இடங்களில் கிடைத்துள்ளன. ''சுந்தர பாண்டியன்'', ''குலசேகரன்'', ''வீரபாண்டியன்'' என்ற பெயர் பொறிக்கப்பட்ட செப்பு நாணயங்களும் கிடைத்துள்ளன. பலவற்றில் அவர்களது சின்னமாகிய கயல் பொறிக்கப்பட்டுள்ளது. குடை, சாமரம், விளக்கு போன்ற மங்கலக் குறிகளும் அவற்றில் காணப்படுகின்றன.

இக்காலக் கல்வெட்டுகளில் வழக்கிலிருந்த பல நாணயங்களின் பெயர்கள் நமக்குக் கிடைக்கின்றன. அச்சு, ஆணை அச்சு, காசு, பழங்காசு, நற்புதுக்காசு, ஈழக்காசு, பணம், திரமம் போன்ற காசுகள் புழக்கத்தில் இருந்தன. பாண்டியர் நாணயங்களைப் பற்றி டி. தேசிகாச்சாரி, பிட்டுல்ப், சட்டோபாத்யாயா போன்ற அறிஞர்கள் நல்ல ஆராய்ச்சி நூல்களை எழுதியுள்ளனர்.

## பாண்டியர் கலைச்சின்னங்கள்

தமிழ்நாட்டில் பல கோயில்களில் பாண்டியர் கட்டிய கோபுரங்கள், விமானங்கள், மண்டபங்கள் ஆகியவை அவர்களது வரலாற்றிற்கு அழியாச் சின்னங்களாக அமைந்துள்ளன. மதுரை மீனாட்சியம்மன் கோயிலிலுள்ள கிழக்குக் கோபுரங்களும் (கிழக்கு - மேற்குக் கோபுரங்கள்) உள்ளேயுள்ள சன்னதிகளும், மண்டபங்களும், அழகர் கோயிலிலுள்ள வெளிக் கோபுரமும் உள்ளேயுள்ள சுந்தரபாண்டிய திரு மண்டபமும்; தில்லை நடராசர் கோயிலிலுள்ள சுந்தரபாண்டிய கோபுரமும் பாண்டியர்கள் கலைச் சிறப்பை அறிவிக்கின்றன. மேலும் திருவரங்கம், திருநெல்வேலி நெல்லையப்பர் கோயில், திருவில்லிபுத்தூர் ஆண்டாள் கோயில், குற்றாலத்திலுள்ள திருக்குற்றாலநாதர் கோயில் போன்ற கோயில்களிலுள்ள சில கோபுரங்களும், மண்டபங்களும் சிற்பங்களும் பாண்டியரது கலைப்படைப்புக்குச் சான்றுகளாகத் திகழ்கின்றன.

## ஆராய்ச்சியாளர்கள்

பாண்டியர் வரலாறு பற்றிய புத்தகம் ஒன்றை முதன்முதலில் தமிழில் எழுதியவர் பண்டிட் அரிகர அய்யர். 'பாண்டியராஜ வம்ச சரித்திரம்' (1926) என்ற பெயரில் அதை வெளியிட்டார். இந்நூலிற்கு அணிந்துரை வழங்கியவர் கே.ஏ. நீலகண்ட சாத்திரியார். 1917இல் கே.வி. சுப்பிரமணிய அய்யர் எழுதிய The Historical Sketches of Ancient India எனும் நூல் பாண்டியர் வரலாற்றினை அறிந்து கொள்ள உதவும். எஸ். கிருட்டிணசாமி அய்யங்கார் எழுதிய South India and Under Muhammadan Invaders (கல்கத்தா 1923) மற்றொரு பயனுள்ள நூலாகும். 1929இல் பேராசிரியர் நீலகண்ட சாத்திரியார் எழுதிய "Pandiyan Kingdom" ஒரு முக்கிய நீண்ட ஆராய்ச்சி நூலாகும். 1940இல் பாண்டியர் வரலாற்றினைத் தமிழில் எழுதியவர் தி.வை. சதாசிவ பண்டாரத்தார் ஆவார். கே.வி. இராமன் அவர்களால் (1971-72 இல்), சுப்பிரமணிய அய்யர் அறக்கட்டளைச் சொற்பொழிவின் பயனாக எழுதப்பட்ட Some Aspects of Pandiyan History in the light of recent discoveries என்ற நூலும், 1977இல் எழுதப்பட்ட "பாண்டியர் வரலாறு" என்ற நூலும் மிகவும் பயனுள்ளவை. கே.கே. பிள்ளை அவர்கள் எழுதிய "தமிழக வரலாறும் மக்கள் பண்பாடும்" என்ற நூலும், மதுரைத் திருக்கோயில் திருக்குட நீராட்டுப் பெருவிழா மலரில் இவர் எழுதியுள்ள மதுரை பாண்டியர்கள் (ஆங்கிலம்) என்னும் கட்டுரையும் புதுச்செய்திகளைத் தருகின்றன. கொங்குநாட்டில் பல பகுதிகளில் காணப்பெறும் பாண்டியர் கல்வெட்டுகளைக் "கொங்கு" இதழிலும், "தேனோலை" இதழிலும் வெளிக்கொண்டு வந்துள்ளார் புலவர் செ. இராசு அவர்கள்.

கல்வெட்டறிஞர்களான கே.ஜி. கிருஷ்ணன், இரா. நாகசாமி, முத்துக்கோனார், தேவகுஞ்சரி, கே.ஆர். சீனிவாசன், இரா. கலைக்கோவன், கே.வி. சௌந்தரராசன், ஒய். சுப்பராயலு, மயிலை சீனி. வேங்கடசாமி போன்ற அறிஞர்களால் வெளியிடப்பட்ட புத்தகங்களும், கட்டுரைகளும் பாண்டியர் வரலாற்றின் போக்கை அறிந்து கொள்ள உதவும் தரவுகள் அடங்கிய பெட்டகங்களாகும்.

## இடைக்காலப் பாண்டியர்கள்

### சான்றுகள்

கடுங்கோன் வழிவந்த பாண்டியர்களின் கடைசி மன்னன் வீரபாண்டியனாவான் (கி.பி. 946 - 966). இராசசிம்ம பாண்டியன் பராந்தக சோழனால் கி.பி. 915ஆம் ஆண்டு தோற்கடிக்கப்பட்டு ஈழநாட்டில் தஞ்சம் புகுந்தபின் அவனது மகனான வீரபாண்டியன் கி.பி. 946இல் அரியணையேறினான். கி.பி. 949இல் நடந்த தக்கோலப்போரில் சோழர்களை வென்று மூன்றாம் கிருட்டிணன் என்ற இராட்டிரகூட மன்னன் தஞ்சையைக் கைப்பற்றியதாகக் கூறிக்கொள்கிறான். இவ்வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு, வீரபாண்டியன் கி.பி. 956இல் சோழரிடமிருந்து மதுரையை மீட்டுத் தனியாட்சி செலுத்தினான். இவன் தனது 6ஆவது ஆட்சியாண்டில் ''சோழன் தலைகொண்ட கோவீர பாண்டியன்'' என்ற பெயர் பெற்றான். ''சோழந்தகன்'' என்ற பெயர் பெற்றதினால் ''சோழந்தக சதுர்வேதி மங்கலம்'' (இன்றைய சோழ வந்தான், மதுரை மாவட்டம்) என்ற ஊரை ஏற்படுத்தினான். இவன் எந்தச் சோழனைக் கொன்றான் என்பது புலப்படவில்லை. மதுரை, திருநெல்வேலி, இராமநாதபுரம், தென்திருவாங்கூர் போன்ற மாவட்டங்களில் இவனுடைய கல்வெட்டுகள் கிடைக்கின்றன.

சோழர்களின் கல்வெட்டுகள் இப்பகுதிகளில் கி.பி. 962-966க்குப் பின்னர்தான் கிடைக்கின்றன. கி.பி. 966ஆம் ஆண்டில் இரண்டாம் ஆதித்த கரிகாலசோழன் வீரபாண்டியனை வென்று பாண்டிய நாட்டினை ஓரளவு சோழநாட்டுடன் இணைக்க முயன்றான்.

முதலாம் இராசராசசோழன் (கி.பி. 985 - 1012) பாண்டியநாட்டை முழுவதும் வெற்றி கொண்டு 'பாண்டிய குலாசனி' என்ற பட்டம் பெற்றான். பாண்டிய நாடு இராசராச மண்டலம் எனப் பெயரிடப்பட்டு இணைக்கப்பட்டது. இவன் பஞ்சவன் மாதேவி என்ற பாண்டிய இளவரசியை மணம் செய்து கொண்டான்.

### சடையவர்மன் சுந்தரசோழ பாண்டியன்

முதலாம் இராசேந்திரசோழன் (கி.பி. 1012 - 44) பாண்டிய நாட்டின் ஆட்சிப்பொறுப்பையும் ஏற்றுக் கொண்டான். பின்னர் தனது மகனையே பாண்டிய நாட்டிற்குப் படிநிகராளியாக (அரசப்

பிரதிநிதியாக) நியமித்து, சோழபாண்டியன் என அழைத்தான். இவனது மகன் சடையவர்மன் சுந்தரசோழ பாண்டியனாவான் (கி.பி. 1018 - 1040). இவனுடைய கல்வெட்டுகள் மதுரை மாவட்டம், திருநெல்வேலி மாவட்டம், புதுக்கோட்டை, தென் திருவாங்கூர் ஆகிய பகுதிகளில் கிடைக்கின்றன.

## மாறவர்மன் விக்கிரம சோழபாண்டியன்

இவன் முதலாம் இராசேந்திரனின் மகன். இவனது கல்வெட்டுகள் திருநெல்வேலிப் பகுதிகளில் கிடைத்துள்ளன. ஆற்றூரில் (திருச்செந்தூர் வட்டம்) கிடைத்த கல்வெட்டு இவனது 25ஆவது ஆட்சியாண்டைக் குறிப்பிடுவதாக உள்ளது[1]. ஆற்றூர் இராசராச சதுர்வேதி மங்கலம் என்று பெயரிடப்பட்டது[2].

## சடையவர்மன் சோழபாண்டியதேவன் (கி.பி. 1062 - 1070)

வீரராசேந்திரனின் (கி.பி. 1063 - 69) மகனான இவன் மூன்றாவது சோழப் பிரதிநிதியாவான். அடுத்ததாக வீரராசேந்திர சோழனின் மற்றொரு மகனான கங்கைகொண்ட சோழன் அரசப் பிரதிநிதியாக நியமிக்கப்பட்டான். மாறவர்மன் பராக்கிரம பாண்டியன் என்ற பெயரிலும் சோழ பாண்டியனின் கல்வெட்டுகள் சில கிடைத்துள்ளன.

சோழ பாண்டியப் பிரதிநிதிகளை நியமிக்கும் வழக்கம் குலோத்துங்க சோழனின் ஆட்சித் தொடக்கம் (கி.பி. 1070) வரை நீடித்திருந்தது.

இப்படி அரசப் பிரதிநிதிகளை நியமித்து, பாண்டியநாட்டைக் கண்காணித்து வந்தாலும், பாண்டிய வழித்தோன்றல்கள் ஆங்காங்கே சோழரின் மேலாதிக்கத்தை எதிர்த்துக் கலகம் செய்தவண்ணம் இருந்தனர்.

முதலாம் இராசாதிராச சோழனின் (கி.பி. 1018 - 54) 29ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டில் (மெய்க்கீர்த்தியில்) மானாபரணன், வீரகேரளன், சுந்தரபாண்டியன் ஆகிய மூவரின் படையொன்றினை இவன் வென்றதாகக் கூறப்பட்டுள்ளது. இப்போரில் மானாபரணனும், வீரகேரளனும் கொல்லப்பட்டனர். சுந்தரபாண்டியன் முல்லையூர் என்னுமிடத்தில் ஓடி ஒளிந்து கொண்டான். இக்கலகத்தில் பங்கு கொண்ட விக்கிரமபாண்டியன் தோல்வியுற்று ஈழமண்டலத்தில் தஞ்சம் புகுந்தான்.

## சீவல்லப பாண்டியன்

இரண்டாம் இராசேந்திர சோழனின் (கி.பி. 1052 - 63 ) காலத்தில் சோழருக்கு அடங்கிய சிற்றரசனாகப் பாண்டிய நாட்டை ஆண்ட மன்னன் சீவல்லப பாண்டியனாவான்.

## பாண்டிய வீரகேசரி

இவன் சீவல்லப பாண்டியனின் மகனாவான். இவன் கி.பி. 1065இல் வீர இராசேந்திர சோழனுடன் (கி.பி. 1063 - 1069) போரிட்டு இறந்தான். வீர இராசேந்திரனுக்குப் பின் அதிராசேந்திர சோழன் ஆட்சிக்கு வந்தான். ஆனால் அவன் சோழ அரியணையில் பல வருடங்கள் நீடிக்கவில்லை. இவன் நோய்வாய்ப் பட்டு இறந்தபின் அரியணையேறும் தகுதியில் சோழநாட்டு இளவரசர்கள் ஒருவரும் இல்லாமையால் குழப்பம் ஏற்பட்டது. பாண்டிய நாட்டை ஆளும் அரசப்பிரதிநிதிகள் நியமிக்கப்படவில்லை. இவ்வாய்ப்பைப் பயன்படுத்திப் பாண்டிய வழித்தோன்றல்கள் சோழராட்சியினின்று விடுபட்டுத் தனியாட்சியை ஏற்படுத்தும் முயற்சியில் ஈடுபடலாயினர். இதை அடக்கும் வகையில் கி.பி. 1081இல் முதற் குலோத்துங்க சோழன் பாண்டியநாட்டின் மேல் படையெடுத்துச் சென்று அங்கு ஆண்டு கொண்டிருந்த பாண்டியர் ஐவரை வென்றான் என்னும் செய்தியை அவனது மெய்க்கீர்த்தியும், கலிங்கத்துப்பரணியும் கூறுகின்றன[3].

## சடையவர்மன் ஸ்ரீவல்லபன் (கி.பி. 1101 - 1124)

இவன் முதலாம் பாண்டியனின் வழித்தோன்றல் என்று கூறலாம். இவனுடைய மெய்க்கீர்த்தி "திருமடந்தையும் ஜயமடந்தையும்..." என்று தொடங்குகிறது. இவனது தலைநகரம் மதுரை. இவனது மகனே சுந்தரபாண்டியன். சுந்தரபாண்டியனே மானாபரணன் ஆவான். ஸ்ரீவல்லபனுக்கு முன்னர் பராக்கிரம பாண்டியன் என்ற ஒருவன் இருந்தான்.

இவ்வரசனைத் தொடர்ந்து சுந்தரபாண்டியன் (கி.பி. 1104 - 1131, சடையவர்மன் ஸ்ரீவல்லபன் (1131 - 1143) (புகழ்மாது புணர என்னும் மெய்க்கீர்த்தியுடையவன்), மாறவர்மன் பராக்கிரம பாண்டியன் (1143 - 1166) (திருமகள் புணர எனும் மெய்க்கீர்த்தி பெற்றவன்), மாறவர்மன் ஸ்ரீவல்லபன் (1145 - 1162) (பூமகள் ஜெயமகள் எனும் மெய்க்கீர்த்திக்கு உரியவன்), சடையவர்மன் குலசேகரன் (1162 - 1177) (பூதலமடந்தை எனும் மெய்க்கீர்த்தி உடையவன்), சடைய வர்மன் வீரபாண்டியன் (1170 - 1195), சடையவர்மன் ஸ்ரீவல்லபன் (1158 - 1185), மாறவர்மன் விக்கிரமபாண்டியன் (1186 - 1190) போன்ற பாண்டிய மன்னர்கள் மதுரையிலிருந்து ஆட்சிபுரிந்தனர்[4]. இவர்கள் சோழர்களுக்குக் கட்டுப்பட்டு அவர்களின் மேலாதிக்கத்தை ஏற்று நடந்தனர். பாண்டிய வழித்தோன்றல்கள் சிலர் இலங்கைப் படைகளுடன் சேர்ந்து அவ்வப்போது கலகம் விளைவித்து வந்தனர். முதலாம் சடையவர்மன் குலசேகரன் (கி.பி. 1190) காலத்திலிருந்து இரண்டாவது முறையாகப் பாண்டியர் எழுச்சியைக் காணமுடிகிறது.

## சடையவர்மன் குலசேகரன் (கி.பி. 1162 - 1177)

இவன் மாறவர்மன் ஸ்ரீவல்லபனின் மகன் ஆவான். ''பூதலமடந்தை'' என்னும் மெய்க்கீர்த்தியுடன் இவனது கல்வெட்டுகள் தொடங்குகின்றன. இவன் திருநெல்வேலியைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி புரிந்தான். அந்தச் சமயத்தில் மதுரையில் பராக்கிரம பாண்டியன் ஆண்டு வந்தான். குலசேகரன் மதுரையைக் கைப்பற்ற எண்ணிக் கி.பி. 1168 - 69இல் மதுரையை முற்றுகையிட்டான். பராக்கிரம பாண்டியன் இலங்கைவேந்தன் பராக்கிரமபாகுவின் உதவியை நாடினான். ஆனால் உதவி வருவதற்கு முன்னமே பராக்கிரமபாண்டியனையும் அவன் மனைவி மக்களையும் கொன்று குலசேகரன் மதுரையைக் கைப்பற்றி னான். ஆனால் சிங்களப்படை இலங்காபுரி தலைமையில் வெகுவாக முன்னேறியது. குலசேகரன் தோற்கடிக்கப்பட்டு நாட்டிலிருந்து வெளியேற்றப்பட்டான். பராக்கிரமபாண்டியனின் மகன் வீரபாண்டியன் அரசனாக்கப்பட்டான். ஆனால் குலசேகரன் சோழர்களின் உதவியை நாடினான். சோழ அரசன் இராசாதிராசன் பல்லவராயன் தலைமையில் பெரும்படையை அனுப்பினான். ஆனால் பயன்கிட்டவில்லை. தொண்டி, பாசிப்பட்டனம் போன்ற இடங்களில் நடந்த போர்களில் சிங்களப்படையினரே வெற்றிகண்டனர். வீரபாண்டியனே மீண்டும் மதுரையில் அரசனாக்கப்பட்டான். ஆனால் இது நீண்ட நாள் நீடிக்கவில்லை. இறுதியில் சிங்களப்படையினர் பல்லவராயர் படைவீரன் தலைமையில் இயங்கிய சோழர் படையினால் தோற்கடிக்கப்பட்டனர் என்று ஆர்ப்பாக்கம் கல்வெட்டும், இராசாதிராசனின் பல்லவராயன் பேட்டைக் கல்வெட்டும் கூறுகின்றன. ஈழத் தளபதிகளைக் கொன்று அவர்களது தலைகளை மதுரைக் கோட்டை வாயிலில் வைத்தான் என்றும் கல்வெட்டு கூறுகின்றது. குலசேகர பாண்டியன் கி.பி. 1169இல் பாண்டிய அரசனாக முடி சூட்டப்பெற்றான். ''பாண்டிய நாடு ஈழநாடாகாதபடி பரிகரித்து'' என்று கல்வெட்டு கூறுகிறது.

சிங்கள அரசன் மீண்டும் மதுரையைக் கைப்பற்ற முயற்சி செய்தான். இதையறிந்த சோழ அரசன் தனது படையை ஈழத்திற்கே அனுப்பிப் புலைச்சேரி, மாதோட்டம் போன்ற இடங்களைத் தாக்கிப் பலத்த சேதம் உண்டாக்கினான். பாண்டிய அரசனான குலசேகரன் சோழர்கள் செய்த உதவிகளை மறந்து, சிங்கள அரசன் பராக்கிர பாகுவுடன் நட்புறவு கொள்ளத் தொடங்கினான். சோழர்க்குத் துணை புரிந்து வந்த மறவப்படை வீரர்களைப் பாண்டிய நாட்டை விட்டு வெளியேற்றினான். இவற்றை அறிந்த சோழ அரசன் குலசேகர பாண்டியனை அகற்றுமாறு தனது படைத்தலைவன் பல்லவராயனுக்குப் பணித்தான். அவ்வாறே குலசேகரன் அகற்றப்பட்டு வீரபாண்டியன் என்பவன் முடி சூட்டப்பெற்றான். இவை சுமார் கி.பி. 1177 அளவில் நடைபெற்று இருக்க வேண்டும் என்று பேராசிரியர் நீலகண்ட சாத்திரியார் கூறியுள்ளார்.

கி.பி. 1178இல் மூன்றாம் குலோத்துங்கன் பதவி ஏற்றான். அவன் மீண்டும் குலசேகரனின் மகன் விக்கிரமபாண்டியனைப் பாண்டிய நாட்டின் அரசனாக்கினான். வீரபாண்டியன் நெட்டூர் போரில் தோற்கடிக்கப்பட்டான். அவன் வீரபாண்டியனை அழைத்துக்கொண்டு குலோத்துங்க சோழனிடம் அடைக்கலம் புகுந்தான். அதை ஏற்று வீரபாண்டியனுக்குப் பாண்டிய நாட்டில் ஒரு பகுதியையும் கொடுத்தான். இது கி.பி. 1189- 90 இல் நடந்தது ''மதுரையும் முடித்த, பாண்டியன் முடித்தலையும் கொண்டருளிய'' என்ற விருதைக் குலோத்துங்கன் பெற்றான். இச் செய்திகளைத் திருவக்கரை, திருவரங்கம் போன்ற இடங்களிலுள்ள கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன.

## அரசியல் வரலாறு

சோழப் பேரரசு கி.பி. 12 ஆம் நூற்றாண்டின் இறுதியில் வீழ்ச்சியுற ஆரம்பித்தது எனலாம். மதுரையில் பாண்டியர்கள் தங்களின் பேரரசை உருவாக்கப் பெருமுயற்சி மேற்கொண்டனர். கி.பி.1190 முதல் இதன் எழுச்சி மேலோங்கத் தொடங்கியது. கி.பி. 1250 முதல் 1310 வரை ஆண்ட பாண்டியப் பேரரசு தெலுங்கு நாட்டையும், இலங்கையையும் உள்ளடக்கியதாக அமைந்திருந்தது.

சோழரது பேராதிக்கத்தினின்று தங்களை விடுவித்துக் கொண்டு பாண்டியர்கள் ஆளத் துவங்கினர். தற்போது நூற்றுக்கணக்கான பாண்டியர்களின் கல்வெட்டுகள் கண்டெடுக்கப்பட்டு வருகின்றன. பாண்டிய அரசர் பலரின் பெயர்கள் ஒரே மாதிரி இருப்பதுடன் இன்னாருக்குப்பின் இன்னார் ஆண்டார் என்ற செய்திகள் கல்வெட்டுகளில் காணப்படாமை பெரியதொரு குறையாக உள்ளது. கல்வெட்டுகளில் காணப்பெறும் காலக் குறிப்புகள், வானிலை கோள்பற்றிய குறிப்புகள் ஆகியவற்றின் துணைகொண்டு கீல்ஹார்ன்[5] (Kielhorn) ராபட் சீவல்[6], சகோபி (Jacobi)[7], எல்.டி. சுவாமிக்கண்ணுப் பிள்ளை[8] க.வி. சுப்பிரமணிய அய்யர்[9] , போன்ற பெரும் அறிஞர்கள் மன்னர்கள் காலங்களைக் கண்டறிந்து வெளியிட்டனர். அண்மைக் காலத்தில் கல்வெட்டுகளில் காணப்படும் நாளினையும் கோளினையும் மிகச் சரியாக ஆய்வு செய்து, என். சேதுராமன் புதியதொரு காலவரையறையைப் பகுத்து ஆய்ந்து வெளியிட்டுள்ளார்.

அரசர்களில் சிலருக்கு மட்டும் மெய்க்கீர்த்திகள் காணப்படுகின்றன. சக ஆண்டு, கலியுக ஆண்டுகள் பற்றிய குறிப்புகள் பல கல்வெட்டுகளில் காணப்படவில்லை. ஒரு குறிப்பிட்ட ஆண்டில் இரண்டு, மூன்று, ஐந்து மன்னர்கள் ஆள்வதைப் பார்க்க முடிகிறது[10]. இவர்களுக்குள் உள்ள உறவுமுறை என்ன என்பது பற்றி அறியமுடிவதில்லை. இவர்களைப் பற்றி நிலவும் சிக்கலுக்குத் தீர்வு காணும் வகையில் அக்காலத் தமிழ்ப் பாடல்கள் எதுவும் கிடைக்கவில்லை. கல்வெட்டுகளில் சில சமயங்களில் மன்னர்கள் பிறந்த

நட்சத்திரம், திதி, ஆண்டு நாட்கள் ஆகியவை குறிப்பிடப்படுவதால் இக் குறுப்புகள் ஓரளவு காலத்தைக் கணிக்க உதவுகின்றன. விருதுப் பெயர்களும் பட்டப் பெயர்களும் ஒரே மாதிரியாகப் பல காலங்களில் கிடைப்பதனால் பாண்டிய வரலாற்றினை அறிந்து கொள்வதில் குழப்பம் நிலவுகிறது. சுந்தர பாண்டியன், வீரபாண்டியன், விக்கிரம பாண்டியன், குலசேகரன், கோனேரின்மை கொண்டான் என்பன போன்ற பட்டப் பெயர்கள் பலருக்கு வழங்கப்பட்டிருப்பததினால், யாரைப் பற்றி இவைகள் குறிப்பிடுகின்றன என்பதைத் தெளிவாக அறிந்து கொள்ள முடிவதில்லை. மன்னர் பலரின் ஆட்சியாண்டும் மற்றவர்களின் ஆட்சியாண்டும் ஒன்றுபட்டும் மாறுபட்டும் உள்ளது. பல சிக்கல்களுக்குத் தீர்வு காணும் வகையில் என். சேதுராமனால் அண்மையில் மேற் கொள்ளப்பட்ட ஆய்வுகள் விடையளிக்கின்றன. கல்வெட்டுகளில் உள்ள உட்சான்றுகள் கொண்டும் ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. விருதுப்பாடல்கள் பல வெறும் கீர்த்தியை மட்டும் குறிப்பிடுவனவாகும். சில உண்மைக்குப் புறம்பானவையாகவும் அமைந்துள்ளன. சில விருதுப் பாடல்கள் உண்மை நிகழ்வுகளைப் பிரதிபலிக்கும் வகையில் அமைந்துள்ளன. மேலும் ஓர் அரசனின் கல்வெட்டில் காணப்படும் கையெழுத்தாளர்கள், அதிகாரி ஆகியோர் மற்ற மன்னர்களின் கல்வெட்டுகளிலும் காணப்படுவதிலிருந்து, ஓரளவு காலத்தைக் கணிக்க முடிகிறது. இதேபோலச் சில செய்திகளும் தொடர்ச்சியாகவோ தொடர்பு உடையதாகவோ உள்ளன.

வடதமிழகப் பகுதிகளில் காணப்படும் கல்வெட்டுகளில் சகயாண்டு குறிப்பிடப்பட்டுள்ளது. தென் தமிழகத்தில் அங்ஙனம் குறிக்கப் பெறாமையினால், தென் தமிழகக் கல்வெட்டுகளின் ஆண்டினை வரையறுப்பது கடினமான செயலாக உள்ளது. நெல்லூர், கடப்பை, கர்னூல், சித்தூர், செங்கல்பட்டு ஆகிய மாவட்டங்களில் காணப்படும் பாண்டியர்கள் காலக் கல்வெட்டுகள் சகயாண்டைப் பெற்றுள்ளன. தெலுங்கு பேசும் மக்கள் சந்திரனைக் கொண்டு கணக்கிடப்படும் ஆண்டுக்கணிப்பைப் பின்பற்றினர். இங்குக் காணப்படும் கல்வெட்டு களில் இத்தாக்கத்தைக் காணலாம். கேரளாவில் காணப்படும் கல்வெட்டுகள் கொல்லம் ஆண்டான 824-ஐ அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்டதாக உள்ளன.

## முதலாம் சடையவர்மன் குலசேகரன் (கி.பி. 1190 - 1218)

விக்கிரம பாண்டியனின் மகன் முதலாம் சடையவர்மன் குலசேகர பாண்டியன் (1190 - 1218) தன் தந்தைபோல் சோழனுக்கு உறுதுணையாக நில்லாமல் தொல்லை கொடுக்கலானான். குலோத் துங்கன் மதுரையில் வீராபிடேகம் செய்துகொள்ள விரும்பினான். ஆனால் அதற்கு விக்கிரமபாண்டியன் ஒப்புக் கொள்ள மறுத்தான். குலோத்துங்க சோழன் 1203இல் மதுரை மீது மீண்டும் படையெடுத்து.

குலசேகரனை அடக்கினான். இம்மதுரை வெற்றியே அவனுடைய வீழ்ச்சிக்குக் காரணமாக அமைந்தது எனலாம். அப்போது அவன் மதுரை திருவாலவாய்க் கோயிலுக்குப் பொன்வேய்ந்தான்[11]. இவனுடைய கல்வெட்டு ''பூவின்கிழத்தி'' என்னும் மெய்க்கீர்த்தியுடன் தொடங்கு கிறது. குலசேகரபாண்டியன் மதுரை ஆலவாய்க் கோயிலுக்கு மிகப்பல திருப்பணிகள் செய்து அழியாப் புகழ்பெற்றான். திருச்செந்தூருக்கு அருகேயுள்ள ஆற்றூரில் (கி.பி. 1206) 12 திருமுறைகளும் செப்பேட்டில் எழுதப்பட்டுச் சிவன்கோயிலில் வைக்கப்பட்டன[12]. இவ்வெற்றிக்குப் பின்னர் மதுரையில் விசயாபிடேகம் செய்து கொண்டான் குலோத்துங்கன். ஆனால் குலசேகர பாண்டியனையே மதுரையில் மீண்டும் அரசனாக அமர்த்தினான்.

## முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் (கி.பி. 1216 - 1244)

முதலாம் சடையவர்மன் குலசேகர பாண்டியனின் மகன் முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் ஆவான். இவன் கி.பி. 1216 ஜூன் 15 - 29க்குள் முடிசூட்டப்பெற்றிருக்க வேண்டும். இவனுடைய மெய்க்கீர்த்தி ''பூமருவிய திருமடந்தையும்'' என்று தொடங்கும்[13]. இவன் அவிட்ட நட்சத்திரத்தில் பிறந்தவன். இவனுடைய கல்வெட்டுகள் பெரும்பாலும் காவிரிக்குத் தென்கரையில் காணப்படுகின்றன.

மூன்றாம் குலோத்துங்க சோழன் இறந்த பின்னர் இவன் 1218இல் சோழநாட்டின்மீது படையெடுத்து உறையூரையும், தஞ்சையையும் தீக்கிரையாக்கினான். ''கூடமும் மாமதிலும் கோபுரமும் ஆடரங்கும் மாடமும் மாளிகையும் பண்டாரமும் பல இடித்து'' என்று இவனுடைய மெய்க்கீர்த்தி குறிப்பிடுகின்றது. இவன் கண்டியூர் ஆயிரத்தளியில் சோழனின் அரண்மனையில் வீராபிடேகம் செய்து கொண்டான். தெய்வப்புலியூர் (தில்லை) சென்று நடராசப் பெருமானை வழிபட்டான். பின்னர் ''பூங்கமல வாவிசூழ்'' பொன்னமராவதிக்குத் திரும்பினான்; மணிமுடியிழந்த சோழனுக்கு மணிமுடியை மீண்டும் அளித்தான். இதனால் இவன் ''சோணாடு வழங்கிய சுந்தரபாண்டியன் என்று பெயர் பெற்றான்[14]. மூன்றாம் குலோத்துங்க சோழனுக்குப் பின்னர் அரியணையேறிய மூன்றாம் இராசராசசோழனே (கி.பி. 1216 - 1260) மணிமுடியைப் பாண்டியரிடமிருந்து பெற்றான் எனலாம்[15]. சுந்தரபாண்டியன் திருக்காட்டுப்பள்ளி சிவன்கோயிலில் தனது ஏழாவது ஆட்சியாண்டில் அழகர்மங்கை அன்னையின் கோயிலைக் கட்டினான்[16]. திருக்காட்டுப்பள்ளிக்கருகிலுள்ள கோயிலடி எனும் ஊரிலும் இவனது கல்வெட்டு உள்ளது[17]. இவனது மகன் முதலாம் மாறவர்மன் விக்கிரம பாண்டியன் தனது தந்தையின் படையெடுப்பின்போது (கி.பி. 1218 - 19இல்) துணை நின்றான். பழையாறைக்கு அருகே ''விக்கிரமபாண்டிய நல்லூர்'' எனும் ஊரை உருவாக்கினான்[18]. இவனது விருதுப்பாடல்

''திருமகள் ஜயமகள்'' என்று தொடங்கும். இவனது கல்வெட்டுகள் கி.பி. 1232 வரை உள்ளன. சேரன் மாதேவியிலுள்ள பெருமாள் கோயிலைக் கட்டியவன் இவனே[19].

திருச்சிக்கு வடமேற்கே உள்ள திருப்பங்கலியிலிருந்து கிடைக்கும் இரண்டு கல்வெட்டுகள் சுந்தரபாண்டியனின் 9ஆம் ஆண்டைச் சார்ந்ததாகும் (கி.பி. 1225). கோயிலில் சுந்தரபாண்டியன் சந்தி என்ற சிறப்பு வழிபாட்டினைச் செய்யத் திருவரங்கத்திலுள்ள அரண்மனையில் 'மழவராயன்' என்னும் அரியணையில் அமர்ந்து இவன் உத்தரவிட்டான்.

சுந்தரபாண்டியன், இரண்டாவது முறையாகக் கி.பி. 1227இல் சோழநாட்டின்மீது படையெடுக்கும் நிலை உருவாயிற்று. மூன்றாம் இராசராசசோழனை மீண்டும் தோற்கடித்து, சோழர்களின் தலைநகராக விளங்கிய பழையாறையாகிய (கும்பகோணத்திற்குத் தெற்கே 6 கி.மீ. தூரத்திலுள்ள) முடிகொண்ட சோழபுரத்து அரண்மனையில் வீராபிடேகமும், விசயாபிடேகமும் செய்துகொண்டான்[20]. கருநாடகப் பிரதேசத்தையாண்ட போசளர்கள் சோழனின் உதவிக்கு வரவே, பாண்டியர்களின் வெற்றிக்குத் தடையேற்பட்டது. கி.பி. 1222இல் வல்லாள மகாராசாவின் மகன் நரசிம்மன் திருவரங்கத்தை நோக்கிப் படையுடன் உதவிக்கு வந்தான்[21]. 'கத்தியகர்ணாமிர்தம்' என்னும் வடமொழிக் காப்பியம் வீரநரசிம்மனும் அவன் மகன் வீரசோமேசுவரனும் (1233 - 62) பெரும் படையுடன் சென்று இராசராசனை மீட்டனர் என்று கூறுகிறது. போசள படைத்தளபதியான அப்பய்யதண்டநாயகனும் கோபய்யதண்டநாயகனும் சிதம்பரம் கோயிலுக்கு அளித்த கொடைகள் பற்றியும் கூறுகின்றது.

கி.பி. 1230இல் மூன்றாவது முறையாகச் சுந்தரபாண்டியன் சோழநாட்டின்மீது படையெடுத்தான். சோழனின் தலைநகராகிய பழையாறையை மீண்டும் கைப்பற்றினான். சுந்தரபாண்டியனின் காலத்தில் வாழ்ந்தவன் இரண்டாம் வல்லாளதேவனாவான். இவனுடைய மனைவிகளில் 'சோழமாதேவி' என்ற ஒருத்தி இருந்ததனால் சோழனுக்கும் போசளராசாவுக்கும் மணவினைத் தொடர்பு இருந்தது என்பதை உணரலாம். இதனால் இராசராசன் போசளர்களின் உதவியை நாடிக் காஞ்சிபுரம் செல்லும் வழியில், கோப்பெருஞ்சிங்க காடவராயன் தெள்ளாற்றின் கரையில் அவனைத் திடீரென்று தாக்கித் தனது தலைநகரான சேந்தமங்கலத்தில் (உளுந்தூர்ப் பேட்டைக்கு அருகிலுள்ள ஊர்) கி.பி. 1231இல் சிறை வைத்தான். (வயலூர்க் கல்வெட்டு) இச்செய்தியை அறிந்த போசளர்கள் கோப்பெருஞ்சிங்கனைப் பெரம்பலூரில் தோற்கடித்து மூன்றாம் இராசராச சோழனைச் சிறையினின்று மீட்டனர். அவர்கள் திருவரங்கத்திற்கு அருகிலுள்ள பாச்சூரில் படைவீடு அமைத்தனர். தொண்டைமாநல்லூர், திருவதிகை, திருவக்கரை ஆகிய இடங்களில் காடவனைத் தோற்கடித்தனர்.

திருக்களக்குடி (இராமநாதபுரம்) கல்வெட்டைப் பார்க்கும்போது சுந்தரபாண்டியன் பழையாறை அரண்மனையில் வீற்றிருந்தான் என்று கொள்ளலாம்[22]. இவன் 9 மாதங்கள் சோழர் அரண்மனையில் வீற்றிருந்தான்[23]. போசளர்களின் உதவி இவன் சோழநாட்டிலே தொடர்ந்து தங்குவதற்கு வழி வகுத்தது. போசளர்கள் பாண்டிய நாட்டின்மீது 1234இல் படையெடுத்து 20 ஆண்டுகள் தங்குவதற்குரிய நிலை ஏற்பட்டது. சுந்தரபாண்டியனின் தென்திருப்பேரைக் கல்வெட்டு (திருநெல்வேலி மாவட்டம்) 28ஆம் ஆட்சியாண்டைக் குறிப்பிடுகிறது. இம்மன்னனை ஞான சமுத்திரம் என்று இக்கல்வெட்டு குறிப்பிடுகிறது. எனவே இவன் கி.பி.1244 வரை ஆட்சிசெய்தான் என்று கொள்ளலாம். திருத்தங்கல் பெருமாள்கோயிலை இவனது மந்திரி குருகுலத்தரையன் கட்டினான் என்று கல்வெட்டு கூறுகின்றது[24]. குருகுலத்தாரையன் திருத்தங்கலில் சிவன் கோயிலையும் கௌரிகோயிலையும் கட்டினான்[25]. அருப்புக் கோட்டை சிவன்கோயிலில் அம்மன் (பார்வதி) கோயிலும், லிங்கபுராண தேவருக்குச் சிலையும் எடுப்பிக்கப்பட்டன[26]. திருவில்லிபுத்தூரில் இடர் கெடுத்த பெருமாள் விண்ணகர் ஆழ்வார் கோயிலும், பகவதி ஆழ்வார் விண்ணகர் கோயிலும் எடுப்பிக்கப்பட்டன[27].

## இரண்டாம் சடையவர்மன் குலசேகரன் (கி.பி.1237-1266)

இவனுடைய கல்வெட்டுகளில் பூதல வனிதை என்று துவங்கும் மெய்க்கீர்த்தி உள்ளது. இம்மன்னனின் பிறந்த நட்சத்திரம் விசாகம் ஆகும். முடிசூடிய நட்சத்திரம் சுவாதி ஆகும். இவனுடைய கல்வெட்டுகள் தென்கரை (மதுரை மாவட்டம்) கத்திரிமங்கலம் (திருநெல்வேலி மாவட்டம்), திருவைகுண்டம், சாக்கோட்டை (இராமநாதபுரம் மாவட்டம்), திருவெண்காடு (தஞ்சை மாவட்டம்) போன்ற இடங்களில் உள்ளன. இவன் கி.பி.1256-58 வரை வாழ்ந்திருக்கக்கூடும். வடமொழிக் காப்பியமான பாண்டியகுலோதயம் என்ற நூலில் இரண்டாம் சடையவர்மன் குலசேகரன் (1237), இரண்டாம் மாறவர்மன் சுந்தரன் (1238), இரண்டாம் மாறவர்மன் விக்கிரமன் (1250), (பின்னாளில் மிகப்பெரிய ஆட்சியை நிறுவிய) முதலாம் சடையவர்மன் சுந்தரன் (1250), இரண்டாம் சடையவர்மன் வீரபாண்டியன் (1254) ஆகிய ஐவரும் சகோதரர்கள் ஆவார்கள் என்று கூறப்பட்டுள்ளது.

## இரண்டாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் (கி.பி.1238-1258)

இவன் மேற்குறிப்பிட்ட மன்னனுடைய சகோதரனாவான் என்று பாண்டிய குலோதயம் குறிப்பிடுகின்றது. இவனுடைய மெய்க்கீர்த்தி பூமலர்திருவும் என்று தொடங்கும். இவனது மெய்க்கீர்த்தி புகழ்ந்து உரைக்கின்றதே தவிர உண்மையான சரித்திரச் செய்திகளைக் கொண்டிருக்கவில்லை என்று கூறலாம். இவன் போசள மன்னனான

வீரசோமேசுவரனை மாமடி என்கிறான்[28]. இவன் திருநெல்வேலி நெல்லையப்பர் கோயில், மேலைக் கானகக் கரை, பாண்டிமாதேவி ஈசுவரன் கோயில், நம்பிராட்டியார் மடம் (வேம்பத்தூர் மடம்) போன்றவைகளில் பல திருப்பணிகளைச் செய்தான். இவனுடைய கலவெட்டுகள் பெரும்பாலும் காவிரிக்குத் தென்பகுதியில் காணப்படுகின்றன.

இவனுடைய பத்தமடைக் கல்வெட்டு தனக்குமுன் ஆண்ட இரண்டாம் சடையவர்மன் குலசேகரனைப் ''பெரிய நாயனார்'' என்று குறிப்பிடுகின்றது[29]. கொங்கு மன்னன் விக்கிரமசோழன் இவனுக்கு மைத்துனன் ஆவான் என்பது திருநெல்வேலி கல்வெட்டிலிருந்து புலப்படுகிறது[30].

## முதலாம் சடையவர்மன் விக்கிரமன் (கி.பி.1241-1254)

இம்மன்னன் இரண்டாம் மாறவர்மன் சுந்தரன், சடையவர்மன் விக்கிரம பாண்டியன், போசளமன்னன் வீரசோமேசுவரன் (1233-62) ஆகியோரின் சமகாலத்தவன். திருவரங்கத்தில் கிடைக்கும் வீரசோமேசுவரனின் கல்வெட்டில், விக்கிரம பாண்டியன் தனது 4-ஆவது ஆண்டு 270ஆம் நாளில் விக்கிரம பாண்டிய சதுர்வேதிமங்கலம் என்ற ஊரைத் திருவரங்கம் கோயிலுக்கு அளித்த செய்தி குறிப்பிடப் படுவதனால், பாண்டியர் போசள மன்னர்களின் மேலாதிக்கத்தை ஏற்றிருந்தனர் என்பதை அறியலாம்[31].

இம்மன்னன் கி.பி.1242இல், தன்னுடைய 4-ஆவது ஆட்சியாண்டில் தேவிபட்டினம் திலகேசுவரர் கோயிலைக் கட்டினான். இக்கோயிலைப் போகீசுவர உடையார் கோயில் என்று கல்வெட்டு குறிப்பிடுகின்றது[32]. முன்னர் குறிப்பிடப்பட்ட மன்னன் இரண்டாம் மாறவர்மன் சுந்தரபாண்டியனைப் (கி.பி.1238-1258) போலவே, இவனும் போசள மன்னன் வீரசோமேசுவரனை 'மாமடி' என்று அழைப்பதனால் இவனும், மேற்குறிப்பிடப்பட்ட அரசனுக்குத் தம்பியாவான் என்று அறியலாம்.

## இரண்டாம் மாறவர்மன் விக்கிரமன் (கி.பி.1250-1276)

கி.பி.1261இல் முடிசூடிய முதலாம் மாறவர்மன் விக்கிரமபாண்டியனைப் பற்றி முன்பே குறிப்பிடப்பட்டது. இவன் இரண்டாம் மாறவர்மன் விக்கிரமனாவான். 3ஆம் மாறவர்மன் விக்கிரமன் கி.பி.1281-1289 வரையிலும், 4ஆம் மாறவர்மன் விக்கிரமன் கி.பி.1298 முதல் 1302 வரையிலும் 5ஆம் மாறவர்மன் விக்கிரமன் கி.பி.1323 முதல் 1344 வரையிலும் 6ஆம் மாறவர்மன் விக்கிரமன் கி.பி.1337 முதல் 1344 வரையிலும் அரசு புரிந்தவர்கள் என்று அண்மைக்கால ஆய்வுகள் குறிப்பிடுகின்றன.

இவனும் போசளமன்னன் கொங்கு மன்னனான விக்கிரம சோழனை மைத்துனன் என்கிறான் என்பதிலிருந்து இம்மன்னனும் (கி.பி. 1250) சடையவர்மன் குலசேகரனும் (கி.பி.1237), மாறவர்மன் சுந்தரபாண்டியனும் (கி.பி.1238), சகோதரர்கள் என்று அறியலாம். இவனது மெய்க்கீர்த்தி திருமலர்மாது பெருவரை மார்புற என்று தொடங்குவதாக அமைந்துள்ளது[33]. ''சமஸ்தபுவனேகவீரன்'' என்றும் ''எம்மண்டலமும் கொண்டருளிய'' என்றும் அது குறிப்பிடுகின்றது. அரகண்டநல்லூரிலுள்ள சிவன்கோயில் நடராசர் சன்னிதியும், மடைப்பள்ளியும், திருநடைமாளிகைத் திருமண்டபமும் இவனால் கட்டப்பட்டன. இவனே சிதம்பரம் சிவகாமி அன்னையின் கோயிலுக்குப் பொன் வேய்ந்தான். ஆத்தூர்க் கோயிலுக்குள் அமைந்திருந்த நாடக சாலை இவனால் போற்றப்பட்டது எனவும், இவன் நடிகை ஒருத்திக்கு நிலம் அளித்தான் எனவும் செய்தி கிடைக்கிறது[34].

## முதலாம் சடையவர்மன் சுந்தரபாண்டியன் (கி.பி.1250-1284)

இம்மன்னனே எழுச்சிமிக்க பேரரசனாகத் திகழ்ந்தவன். பாண்டியர் வரலாற்றில் சடைய வர்மன் சுந்தர பாண்டியன் எனும் பெயரில் பலரது செய்திகளை அண்மைக் கால ஆய்வுகள் வெளிக் கொணர்ந்துள்ளன. இவர்களின் கல்வெட்டுகளில் 60 ஆண்டு வருடமுறை கையாளப்பட்டுள்ளது. கோள்நிலைகளின் துணைகொண்டு மேற்குறிப்பிடப்பட்ட மன்னர்களைப் பற்றிய சான்றுகளும் கிடைத்துள்ளன.

முதலாம் சடையவர்மன் சுந்தரனே பாண்டியப் பேரரசை நிறுவிய மாபெரும் மன்னனாவான். சோழர்களில் முதலாம் இராசராசசோழனின் சாதனையும், ஆற்றலும் எங்ஙனம் போற்றப்படுகின்றதோ, அங்ஙனமே பாண்டிய மரபில் முதலாம் சடையவர்மன் சுந்தரபாண்டியனின் ஆற்றலும் மதிக்கப்படுகிறது என்றால் அது மிகையாகாது. இவன் கி.பி.1250இல் முடிசூடப்பட்டிருக்கிறான்.

இவனது கல்வெட்டு ''பூமலர்வளர் திகழ்'' என்று தொடங்கும் தமிழ் மெய்க்கீர்த்தியையும்[35] ''சமஸ்தஜகத் ஆதார'' (எல்லா உலகங்களுக்கும் ஆதாரமானவன்) என்று தொடங்கும் வடமொழி (கிரந்த வரிவடிவம்) மெய்க்கீர்த்தியையும்[36] கொண்டுள்ளது. இவன் பல சாதனைகளைப் புரிந்ததனால் எம்மண்டலமும் கொண்டருளிய சுந்தரபாண்டியன் என்ற பெயர் பெற்றான். இவன் சோழனுக்கு உதவிய போசள அரசனான வீரசோமேசுவரனை விரட்டியடித்தான். அவனின் படைத்தலைவனான சிங்கணனையும் நண்பனாக நடித்த, பகைவனான சேமனையும் வென்று கொன்றான். போசளரின் தமிழகத் தலைநகராகத் திகழ்ந்த கண்ணனூர் கொப்பத்தைக் கைப்பற்றினான். அவனிடமிருந்து யானைகளைத் திறையாகப் பெற்றான். கருநாடக அரசனை அழித்தான்.

அதனால் சோழகுல மலைக்கு இடிபோன்றவனாகத் திகழ்ந்தான் என்று கிரந்தக் கல்வெட்டு குறிப்பிடுகிறது. கப்பம்கட்ட மறுத்த இலங்கை மன்னனை மீண்டும் வெற்றி கொண்டான். அதனால் இலங்கையை அழித்த இரண்டாவது இராமன் என்று பெயர் பெற்றான். காடவ மன்னனான கோப்பெருஞ்சிங்கனைப் பலமுறை வென்றான். காடவனுடைய கல்வெட்டுகள் கர்நூல் மாவட்டத்திலுள்ள திரிபுராந்தம் (திராட்சாராமா) வரையும் கிடைக்கின்றன[37]. காடவ மன்னனுடைய தலைநகராகிய சேந்தமங்கலத்தைக் கைப்பற்றினான். பின்னர் சிதம்பரம் சென்று நடராசரை வணங்கினான். சிதம்பரம் மேலைக்கோபுரம் இம்மன்னனின் பெயரால் கட்டப்பட்டது. காகதீய மன்னன் கணபதியை வென்று நெல்லூரில் வீராபிடேகமும், விசயாபிடேகமும் செய்து கொண்டான். வீரகண்ட கோபாலன் என்ற தெலுங்கு சோழவம்ச மன்னனைத் தோற்கடித்து நெல்லூரையும், காஞ்சிபுரத்தையும் கைப்பற்றினான். திருவரங்கம் சென்று துலாபாரம் செய்து பொன்னையும், பொருளையும் கோயிலுக்கு அளித்தான். சேரனை வென்றான் திருமண்டபம் என்னும் மண்டபமொன்றினை அமைத்தான். போசளரையும், காடவனையும் வென்றபின் மகதை மண்டலத்தை (சேலம், ஆர்க்காடு மாவட்டங்களை) கைப்பற்றி வீராபிடேகமும் விசயாபிடேகமும் செய்து கொண்டான்[38]. இவன் காஞ்சிபுரத்தைக் கைப்பற்றியதால் ''காஞ்சிபுரவரதீசுவரன்'' ''காஞ்சிபுரம் கொண்டான்'' என்று பெயர் பெற்றான்[39]. இவன் கொங்கு நாட்டையும் கைப்பற்றினான். இவன் தன் எல்லையைத் திருவாங்கூர் வரை பரப்பினான். இவனுடைய கல்வெட்டுகள் சோழமண்டலம், ஒருங்கிணைந்த செங்கல்பட்டு, வட தென் ஆர்க்காடு மாவட்டங்கள், தொண்டை மண்டலம் ஆகிய பகுதிகளில் கி.பி.1252-க்குப் பிறகு காணப்படுகின்றன. இவ்வாண்டில்தான் பாண்டியரின் பேராதிக்கம் இவ்விடங்களில் பெருகத் தொடங்கியது எனலாம்.

பல வெற்றிகளைப் பெற்று, மிகப்பெரிய பேரரசை நிறுவியதனால் பல விருதுப் பெயர்களை இவன் பெற்றான். எம்மண்டலமும் கொண்டருளிய என்று திருக்கழுக்குன்றம் கல்வெட்டும் பொன்வேய்ந்த மகிபதி என்று திருப்புட்குழிக் கல்வெட்டும் குறிப்பிடுகின்றன[40]. எல்லாந் தலையானான் என்றும் நாணயங்களில் குறிப்பிடப்பட் டுள்ளான்[41]. திருவரங்கம், சிதம்பரம் ஆகிய கோயில்களில் துலாபாரம் செய்து கொண்டு இவ்விரு கோயில் விமானங்களுக்கும் தான் பெற்ற வெற்றியின் பயனாகப் பொன்வேய்ந்தான்.

6 கோயில் பொன்வேய்ந்த பெருமாள் என்ற விருது இவனுக்கு வழங்கப்பட்டது. திருவரங்கத்தில் நரசிம்ம சுவாமிக்கும், திருமாலின் தொண்டரான விசுவக்சேனருக்கும் கோயில்களைக் கட்டிப் பொன் வேய்ந்தான்[42].

தன் அண்ணனான இரண்டாம் சடையவர்மன் குலசேகர பாண்டியனின் நலம் கருதித் திருப்புட்குழியில் மண்டபம் ஒன்றை இவன் கட்டினான். அவனுடைய புகழை நிலை நாட்டும் பொருட்டு ஆரகலூரில் (ஆத்தூர் வட்டம்) கோயில் ஒன்றையும் அமைத்தான். திருவானைக் காவல் கல்வெட்டொன்று சேரனை வென்றான் திருநாள் என்ற விழாவைச் சடையவர்மன் சுந்தரன் ஏற்படுத்தினான் என்று கூறுகிறது[43]. தன்னுடைய அண்ணன் விக்கிரம பாண்டியனின் நினைவாக சிதம்பரத்தில் விக்கிரம பாண்டிய சதுர்வேதி மங்கலம் என்ற ஊரை நிருமாணித்தான்[44]. கோயில் பொன்வேய்ந்த பெருமாள் என்னும் விருதுப்பெயர் என்றும் நிலைபெறப், படிமங்களைச் செய்து திருவயிந்தபுரம், திருவரங்கம் ஆகிய கோயில்களில் பிரதிட்டை செய்தான்.

இவனால் ஒருங்கிணைந்த தஞ்சை மாவட்டத்திலுள்ள திருக்கோளிலி (திருக்குவளை) சிவன்கோயில் மகாமண்டபத்தின் வாசல் முதல் கீழைவாசல் முடிய திருப்பணி செய்யப் பெற்றது. திருவைகுண்டத்துத் திருமால் கோயிலிலுள்ள சுந்தரபாண்டியன் கோபுரம் இவனால் கட்டப்பெற்றிருத்தல் வேண்டும் என்று கல்வெட்டு உணர்த்துகிறது[45].

## முதலாம் சடையவர்மன் வீரபாண்டியன் (கி.பி. 1253-1283)

சடையவர்மன் வீரபாண்டியன் என்ற பெயரில் மன்னர்கள் மூவர் இருப்பதை பாண்டிய வரலாற்றில் காணமுடிகிறது. இங்குக் குறிப்பிடப்பட்ட முதலாம் சடையவர்மன் வீர பாண்டியனின் (கி.பி.1253) மெய்க்கீர்த்தி ''கொங்கு ஈழம் கொண்டு'' எனத் தொடங்கும். இவன் சதய நட்சத்திரத்தில் பிறந்தவன். இரண்டாம் சடையவர்மன் வீரபாண்டியன் கி.பி.1254இல் முடிசூடியவன். இவனுடைய மெய்க்கீர்த்தி ''திருமகள் வளர்'' என்று தொடங்குவதாகும். மூன்றாம் சடையவர்மன் வீரபாண்டியன் கி.பி.1297ஆம் ஆண்டு ஆட்சிக்கு வந்தவனாவான். இவன் கலியுகராமன் என்ற விருதுப்பெயர் பெற்றவனாவான். இவன் கி.பி.1343 வரை வாழ்ந்தான்.

இவன் கொங்குநாடு, ஈழநாடு, வடுகரது மலை (காளத்தி), கங்கைக்கரை (கெடிலநதியின் இருமருங்கும்) காவிரிக்கரை ஆகியவற்றை வென்ற செய்தி கல்வெட்டுகள் மூலமாகக் கிடைக்கின்றது. இவனது கல்வெட்டு திராட்சாராமாவில் (வடஆந்திர மாநிலம்) கிடைத்திருக்கிறது. இவன் காடவனை மீண்டும் அடக்கிக் கி.பி.1263இல் சிதம்பரத்திலுள்ள வீரபாண்டியன் திருமண்டபத்தில் வீராபிடகேமும், விசயாபிடேகமும் செய்து கொண்டான். இது தற்போதுள்ள நூற்றுக்கால் மண்டபமாகும். இது தற்போது சிவகாமி அம்மன் சன்னிதிக்குத் தென்புறம் அமைந்துள்ளது. இவன் வீரபாண்டியன் காசு என்ற பெயர்கொண்ட நாணயத்தை வெளியிட்டான்[46].

முன் குறிப்பிடப்பட்ட முதலாம் சடையவர்மன் சுந்தர பாண்டியனுடன் சேர்ந்து இவன் பல போர்களில் ஈடுபட்டான். இவன் முதலாமவன் ஆணையை ஏற்றுச் செயற்பட்டிருக்க வேண்டும்[47]. சில தனிப்பட்ட வெற்றிகளையும் இவன் பெற்றிருக்கிறான். மேலே குறிப்பிடப்பட்ட வெற்றிகள் இவனுடையதாகும். இவன் திருகூட கிரியிலும் (கண்டி) கோணமலையிலும் (திருக்கோணமலை, இலங்கை) கயல்கொடியை நிலை நிறுத்தினான். இவன் சோழமன்னனான மூன்றாம் இராசேந்திர சோழனைக் காவிக்குளம் என்ற இடத்தில் வென்றான். கெடிலநதியின் இருமருங்கிலும் ஆட்சிபுரிந்த காடவனை வென்றான்[48].

கோயம்புத்தூர் மாவட்டத்திலும்[49] அழகர்கோயில், இலவானாசூர், குற்றாலம், கோவில்பட்டி போன்ற ஊர்களிலும் இவனது கல்வெட்டுகள் கிடைக்கின்றன.

## இரண்டாம் சடையவர்மன் வீரபாண்டியன் (கி.பி.1254-1265)

இவன் முதலாம் மாறவர்மன் விக்கிரமன் (கி.பி.1250), முதலாம் சடையவர்மன் வீரபாண்டியன் (கி.பி.1253), இரண்டாம் சடையவர்மன் வீரபாண்டியன் ஆகியோரின் சமகாலத்தவன். இவனது குற்றாலம் கல்வெட்டு ''திருமகள் வளர்முலை'' எனும் மெய்க்கீர்த்தியுடன் திகழ்கின்றது[50]. இவன் கி.பி.1265இல் மதுரையைவிட்டுக் கி.பி.1266இல் இராசகேசரி வீரபாண்டியன் என்ற புதுப் பெயரில் கொங்கு நாட்டின் மணி முடியை ஏற்றான். இவனை இராசராசப் பாண்டியன் என்று பாண்டியகுலோதயம் கூறுகிறது. மதுரைப் பாண்டியர்களின் பிரதிநிதியாகக் கொங்குவில் ஆட்சியை மேற்கொண்டான் என்றும் தனிப்பட்ட கொங்குப் பாண்டிய மரபு என்று எதுவும் இல்லை என்றும் ஆய்வுகள் தெரிவிக்கின்றன[51].

## முதலாம் மாறவர்மன் குலசேகரன் (கி.பி.1268-1318)

இவன் இரண்டாம் மாறவர்மன் விக்கிரமன், முதலாம் சடையவர்மன் சுந்தரன், முதலாம் சடையவர்மன் வீரபாண்டியன், இரண்டாம் சடையவர்மன் வீரபாண்டியன் ஆகிய அரசர்களின் சமகாலத்தவனாவான். வெனிசு நகரத்தைச் சேர்ந்த மார்க்கோபோலோ என்ற பயணி கி.பி.13-ஆம் நூற்றாண்டின் இறுதியில் பாண்டிய நாட்டின் பல பகுதிகளைப் பார்வையிட்டு ஐவராட்சி நிலவிய பாண்டிய நாட்டைப் புகழ்ந்து உரைப்பது நினைவிற் கொள்ளத்தக்கது. இவர்களின் கூட்டு முயற்சியினால், தென் ஆந்திர மாநிலம், கேரளம் ஆகிய பகுதிகள் பாண்டியரின் ஆளுகைக்குட்பட்டன. இவனது தந்தையான முதலாம் சடையவர்மன் சுந்தரபாண்டியனைப் போன்றே தானும் ''எம்மண்டலமும் கொண்டருளிய'' ''கச்சிக்கு வாச்சான்'' என்ற விருதுப் பெயர்களுடன் திகழ்ந்தான். இவனது மெய்க்கீர்த்தி தேர்போல் அல்குல் என்று தொடங்குவதாகும். இவன் மூலநட்சத்திரத்தில் பிறந்தவனாவான்.

இவனுக்குப் புவனேகவீரன் என்ற பட்டப்பெயர் இல்லை என்றும், அது இரண்டாம் மாறவர்மன் குலசேகரனுக்கு (கி.பி.1314-1362) உரியது என்றும் ஆய்வுகள் காட்டுகின்றன. இவன் 43 ஆண்டுகள் புகழுடன் ஆட்சிபுரிந்த இறுதி மன்னனாவான்.

இவன் ''மலைநாடும், சோணாடும், இருகொங்கும், ஈழமும், தொண்டை மண்டலமும் கொண்டருளியவன்'' என்று சேரமாதேவி கல்வெட்டு (கி.பி.1279) குறிப்பிடுகின்றது[52]. இக்காலக் கட்டத்தில் காடவக் கோப்பெருஞ்சிங்கனும், மூன்றாம் இராசராசசோழனும் மறைந்துவிட்டதனால் அதிக எதிர்ப்பின்றி ஆளும்நிலை உருவாயிற்று. சோழனின் தலைநகரான கங்கைகொண்ட சோழபுரம் இவனுடைய அரண்மனையாயிற்று[53]. ஒருகிணைந்த செங்கல்பட்டு, வடஆர்க்காடு மாவட்டங்களில் அப்போது ஆட்சிபுரிந்த குறுநில மன்னனான குலசேகர சம்புவராயன் பாண்டியருக்கு அடங்கி வாழ்ந்தான்.

மலைநாட்டைக் கைப்பற்றியதால் கொல்லம் கொண்டருளிய குலசேகரன் என்று அழைக்கப்பட்டான்[54]. மேலும் கொல்லம் கொண்ட பாண்டிய சதுர்வேதி மங்கலம் என்ற ஊரைத் திருநெல்வேலி அருகே ஏற்படுத்தினான். (1291)[55]. இவ்வூரில் சிவன் கோயிலையும் திருமால் கோயிலையும் கட்டினான். திருநெல்வேலி நெல்லையப்பர் கோயில் திருச்சுற்றுமாளிகை இவனால் அமைக்கப்பட்டது[56]. திருவால வாயுடையார் திருவிளையாடல் புராணத்தைத் தமிழில் எழுதிய பெரும்பற்றப்புலியூர் நம்பி என்னும் புலவர் இம்மன்னன் காலத்தில் வாழ்ந்திருக்கக்கூடும்[57]. திருப்பரங் குன்றத்தில் கி.பி.1311இல் இவன் அம்மன் கோயிலைக் கட்டினான்[58].

நல்லூர்க் கல்வெட்டு (விருத்தாசலம் வட்டம்) குலசேகரனின் மகனான சுந்தரபாண்டியன் தனது அண்ணன் வீரபாண்டியன் பெயரால் ஒரு கோயில் கட்டினான் என்று குறிப்பிடுகின்றது. இதனால் இம்மன்னனுக்குச் சுந்தரபாண்டியன், வீர பாண்டியன் என்ற இரு மகன்கள் இருந்தது புலப்படுகிறது. முதல் மகனான வீரபாண்டியன் கி.பி.1297-முதல் 1342 வரை ஆண்டான். இவனே மூன்றாம் சடையவர்மன் வீரபாண்டியன் என்று முன்னர்க் குறிப்பிடப்பட்டான். இளையவனான சுந்தரபாண்டியன் கி.பி.1303 முதல் 1325 வரை ஆட்சி செய்தவனாவான். இவனே நான்காம் சடையவர்மன் சுந்தரபாண்டியன் ஆவான். இதையே அலாவுதீன் கில்ஜியின் அவைப்புலவர் அமீர்குசுரு கூறுகிறார். வீரபாண்டியனைப் (பீர்பாண்டியன்) பெரியவன் என்றும் சுந்தரபாண்டியனைக் கடைசிச் சகோதரன் என்றும் அவர் குறிப்பிடுகின்றார். இதிலிருந்து இவர்களுக்கு இடைப்பட்ட சகோதரர்கள் சிலர் இருந்திருக்கலாம் என்ற கருத இடமுண்டாகிறது.

## மாலிக்காபூர் படையெடுப்பு (கி.பி. 1311)

இம்மன்னனின் இறுதிக்காலத்தில் டில்லியை ஆண்ட அலாவுதீன் கில்ஜியின் படைத்தளபதியான மாலிக்காபூர் கி.பி.1311இல் (பிப்ரவரி மாதம்) தென்னிந்தியாவின் மீது படையெடுத்து மதுரையைத் தகர்த்தான். இவனின் படையெடுப்பால் அதிர்ந்துபோன குலசேகரன் நோய்வாய்ப்படவே, தன் தந்தை நலம்பெற வேண்டி, மகன் சுந்தர பாண்டியன் திருமால் உகந்தான் கோட்டையில் சிறப்பு வழிபாடுகளுக்கு ஏற்பாடு செய்தான்[59].

கி.பி.1313இல் கேரள இரவிவர்மன் குலசேகரனுடைய பாண்டிய நாட்டின் மீது படையெடுத்துக் கண்ணனூரைத் தனது தலைநகராக்கிக் கொண்டான். இவனது கல்வெட்டுகள் திருநெல்வேலி, வழுவூர், காஞ்சிபுரம், திருவதிகை போன்ற இடங்களில் கிடைக்கின்றன. காகதீயர்களின் உதவியால் பாண்டியர்கள் கேரள மன்னனைத் திருவரங்கத்திலிருந்து கி.பி. 1317இல் விரட்டினர். குறுநில மன்னனான குலசேகர சம்புவராயனும் உதவி செய்தான். தேவரி நாயக்கனின் படை திருவரங்கம் வரை சென்று கேரளப் படையை விரட்டியடித்தது. தனது நன்றியைக் காகதீயர்களுக்குப் புலப்படுத்தும் வகையில் விருத்தாசலத்தில் (கி.பி.1317இல்) பிரதாபருத்திரரின் படைத்தளபதியான முப்பிடி நாயக்கன் பெயரால் இவன் சிறப்பு விழா எடுத்தான். இரவிவர்மன் குலசேகரனுக்கு (பஞ்சவன் என்பது இவனுடைய பட்டப்பெயர்) உதவி புரிந்த அவனுடைய மருமகன், குலசேகரனுடைய சகோதரியின் மகனான மார்த்தாண்டன் ஆவான். இவனே கேரள வீரபாண்டியன் (கி.பி.1310-1317) என்ற பட்டப்பெயருடன் திகழ்ந்தான். இவனே தொண்டைமண்டலப் பகுதியைப் பாண்டியரிடமிருந்து கைப்பற்றி 1317 வரை ஆண்டான். தெற்கே இரவிவர்மன் குலசேகரன் ஆதிக்கத்தைச் செலுத்தி வந்தான். ''வீரகேரளன்'' என்னும் வெள்ளிக்காசுகளை வெளியிட்டான். சகோதரர்களான சடையவர்மன் வீரபாண்டியனும், சடையவர்மன் சுந்தரபாண்டியனும் நட்புடன் வாழ்ந்து வந்தனர்.

பாரசீகக் கவிஞரான வாசப் என்ற முகமதியர் இரண்டு சகோதரர்களும் ஒற்றுமையுடன் வாழவில்லை என்று கூறுவதை ஏற்கமுடியவில்லை. காசுபியன் கடலோரம் வாழ்ந்த அந்தக் கவிஞர் வியாபாரிகளால் சொல்லப்பட்ட வதந்திகளை நம்பி இங்ஙனம் எழுதினார். மணஉரிமையில் குலசேகரன் பெற்ற மகன் சுந்தரபாண்டியன் என்றும் தவறான முறையில் பிறந்தவன் வீரபாண்டியன் என்றும் முகமதிய வரலாற்று ஆசிரியரான அமீர்குசுரு கூறும் கருத்து ஏற்புடையதன்று. துணை நின்று முகமதியர்களைத் தமிழகத்துக்குள் அழைத்துவந்தவன் இராசராச சுந்தரபாண்டியதேவனாவான். இவன் மேற்குறிப்பிட்ட இரு

சகோதரர்களுக்குள் இடைப்பட்ட சுந்தர பாண்டியர்களில் ஒருவனாக இருக்கலாம் என்று கருத இடமுண்டு.

## ஆட்சிக் காலம் - ஆண்டுகள்

### இரண்டாம் சடையவர்மன் சுந்தரபாண்டியன் (கி.பி.1277-1294)

இவன் கி.பி.1277 பிப்ரவரி மாதம் 16ஆம் நாளிலிருந்து 20ஆம் நாளுக்குள் முடிசூடியிருக்கிறான். இவனுடைய பிறந்த நட்சத்திரம் உத்திரட்டாதியாகும். இப்பாண்டியனைப் பற்றி வேறு எந்தச் செய்தியும் தெரியவில்லை. இவனுடைய கல்வெட்டுகள் புதுக்கோட்டை, ஒருகிணைந்த தஞ்சாவூர், செங்கல்பட்டு மாவட்டங்களிலும் ஆந்திர மாநிலத்தில் நந்தநல்லூரிலும் காணப்படுகின்றன[60].

### மூன்றாம் சடையவர்மன் சுந்தரபாண்டியன் (கி.பி.1278-1301)

இவன் கி.பி.1278 ஏப்ரல் 19இல் முடிசூடிக்கொண்டான் என்றும் கி.பி.1301 வரை வாழ்ந்திருக்கலாம் என்றும் இவனுடைய கல்வெட்டுகள் இயம்புகின்றன. இவனுக்கு மெய்க்கீர்த்தியும் பட்டப் பெயரும் இல்லை. இவனுக்கும் மற்றைய பாண்டிய அரசர்களுக்கும் இருந்த உறவுமுறை பற்றித் தெரியவில்லை. இவனுடைய கல்வெட்டுகள் ஒருங்கிணைந்த தஞ்சை, தென்னார்க்காடு, செங்கல்பட்டு மாவட்டங்களில் மட்டுமே காணப்படுகின்றன.

### மூன்றாம் மாறவர்மன் விக்கிரமபாண்டியன் (கி.பி.1281-1289)

இவன் கி.பி.1281 முதல் 1289 வரை அரசாண்டான் என்பதைத் தவிர வேறு செய்தி எதுவும் கிடைக்கவில்லை. இவனுடைய கல்வெட்டுகள் தளவானூரிலும், நெம்மலியிலும் கிடைத்துள்ளன[61].

### மூன்றாம் சடையவர்மன் வீரபாண்டியன் (கி.பி.1297-1342)

இவனே முதலாம் மாறவர்மன் குலசேகரனின் மூத்த மகனாவான். இவனுடைய கல்வெட்டுகள் தமிழகமெங்கும் கிடைக்கின்றன. இவன் கலியுகராமன் என்ற விருதுப்பெயர் பெற்றிருக்கிறான். இவனே திருவரங்கம் ஆறாம் சுற்று மதிலைக் கட்டியவன் என்று திருவரங்கம் கோயிலொழுகு குறிப்பிடுகிறது. கலியுகராமன் என்ற பெயர் பொறித்த செப்புக் காசுகளை இவன் வெளியிட்டான். கி.பி.1311இல் மாலிக்காபூர் மதுரை மீது படையெடுத்தபோது இவன் மதுரையை விட்டு ஓடிவிட்டான். கி.பி.1313இல் கேரள இரவிவர்மன் குலசேகரன் படையெடுத்தபோது, தன் தம்பி சுந்தரபாண்டியனுடன் சேர்ந்து, காகதீய மன்னர் பிரதாபருத்திரனின் துணை கொண்டு கேரள மன்னனை விரட்டியடித்து, மதுரையை மீண்டும் ஆளத்துவங்கினான். கி.பி.1319இல் டில்லி சுல்தானின் படைத்தளபதி குசுருகான் தமிழ்நாட்டின் மீது படையெடுத்த போது வீரபாண்டியன் அவர்களை விரட்டியடித்தான். கி.பி.1327இல்

திருவரங்கத்தை முகமதியர்கள் பிடித்துக் கொண்டனர் என்றும் அப்போது வீரபாண்டியன் மதுரையை விட்டு வெளியேறி, திருநெல்வேலி, திருச்சிப் பகுதிகளிலிருந்து ஆளத் துவங்கினான் என்றும் கூறப்படுகிறது. தன்னைத் திருநெல்வேலி உடையார் என இவன் கூறிக் கொண்டான். இவனுடைய கல்வெட்டுகள் விருஞ்சிபுரத்தில் கிடைக்கின்றன. அங்கு ஆட்சி செய்துவந்த சம்புவராயர் ஏகாம்பரநாதன் (குலசேகர சம்புவராயனுடைய மகன்) பாண்டியனின் மேலாதிக்கத் திற்குக் கட்டுப்பட்டு அரசாண்டான். (1323). இவனுக்கும், முதலாம் சடையவர்மன் சுந்தரனுக்கு (1250) இருந்த விருதுப்பெயர் போன்று ''எல்லாந்தலையான பெருமான்'' என்ற பட்டப்பெயர் இருந்தது. கி.பி.1342-இல் திருப்பத்தூர்க் கோயிலை மதுரை சுல்தானின் படைகள் பிடித்துக் கொண்டபோது இவன் அவர்களை விரட்டியடித்தான்[62]. இம்மன்னன் 46 ஆண்டுகள் ஆட்சிபுரிந்தான் என்றும் தெரிகிறது. பெரு வீரனாகத் திகழ்ந்த இவன் காலத்தில் 19 பாண்டிய மன்னர்கள் பல்வேறு இடங்களிலிருந்து ஆண்டு வந்தனர். இவர்களின் கல்வெட்டுகள் தமிழகமெங்கும் கிடைக்கின்றன. இவனது தம்பிகள் பின்னர் குறிப்பிடப்படும் நான்காம் சடையவர்மன் சுந்தரபாண்டியனும் (1303) மூன்றாம் மாறவர்மன் சுந்தரபாண்டியனும் (கி.பி.1303-1322) ஆவார்கள். இவனுடைய தலைநகர் மதுரையாகும். இவன் தம்பியின் தலைநகர் உய்யக் கொண்டான் (திருச்சி) வீரதாவளம் ஆகும்.

## நான்காம் சடையவர்மன் சுந்தரபாண்டியன் (கி.பி.1303-1325)

இவன் முதலாம் மாறவர்மன் குலசேகர பாண்டியனின் இரண்டாவது மகனாவான் என்று முன்னரே அறிந்தோம். இவனே தன் அண்ணனாகிய வீரபாண்டியனின் பெயரால் நல்லூரில் (விருத்தாசலம் வட்டம்) வீரபாண்டீசுவரம் என்ற கோயிலைக் கட்டினான். கி.பி.1311இல் மாலிக்காபூரின் படையெடுப்பால் அதிர்ச்சிக்கு உள்ளான தனது தந்தை குலசேகரதேவரின் நலம் வேண்டித் தன் தந்தை பிறந்த நாளில் சிறப்பு வழிபாடுகளுக்கு ஏற்பாடு செய்தான் என்பதை முன்னரே பார்த்தோம். கி.பி.1313இல் கேரள இரவிவர்மன் குலசேகரன் தமிழகம் மீது படையெடுத்த போது தன் அண்ணனுடன் சேர்ந்து அவனை விரட்டியடித்தான். தனக்கு உதவிபுரிந்த காகதீய தளபதியான முப்பிடி நாயக்கனுக்கு நன்றி தெரிவிக்கும் வகையில் 1317இல் விருத்தாசலத்தில் சிறப்பு வழிபாடுகளுக்கு ஏற்பாடு செய்தான்[63]. இதனால் குலசேகரனும் அவனது மகன்களும் உட்பூசல் இன்றி ஒற்றுமையுடன் வாழ்ந்து வந்தனர் என்பது அறியற்பாலது. இவனுக்கு 'அவனிவேந்தராமன்' என்ற பட்டப்பெயர் இருந்திருக்கலாம் என்றும் தற்போது கிடைத்துள்ள அவனிவேந்தராமன் செப்புக்காசுகள் இவனுடையதாக இருக்கலாம் என்றும் கருதப்படுகிறது. இவனும் எம்மண்டலமும் கொண்டருளிய என்ற பட்டப்பெயர் கொண்டிருந்தான்.

இவன் போசளர்களின் படையெடுப்பைத் தடுக்கத் திருச்சிக்குத் தெற்கே அரணுடைய கூடி நகரை (அமிர்குசுரு குறிப்பிடும் பீர்தூல்) நிருமாணித்தான். 1219இல் உறையூர் அழிக்கப்பட்டுவிட்டதால், முதலாம் மாறவர்மன் சுந்தர பாண்டியன் உய்யக் கொண்டானில் வீரதாவளம் என்ற படை நகரம் ஒன்றை உருவாக்கினான். இதுவே இப்பாண்டியனின் காலத்தில் தலைநகராகத் திகழத் தொடங்கியது.

## மூன்றாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன்(கி.பி.1303-1322)

இவன் முன்னர்க் குறிப்பிடப்பட்ட மூன்றாம் சடையவர்மன் வீரபாண்டியனின் (கி.பி.1297-1342) தம்பியாவான். இவனும் ''எம்மண்டலமும் கொண்டருளிய'' என்ற பட்டப்பெயருடன் அரசாண்டுள்ளான். இவனது கல்வெட்டுகள் தொண்டை மண்டலத்திலும், சோழமண்டலத்திலும் கிடைத்துள்ளன[64]. குலசேகர பாண்டியனின் இரண்டு மகன்களான வீரபாண்டியனும், சுந்தரபாண்டியனும் இவனுடைய சமகாலத்தவராக ஆட்சி புரிந்துள்ளனர். இவன் காலத்திற்குப் பின்னர் மதுரையில் சுல்தான்களின் ஆட்சி கி.பி.1323லிருந்து தொடங்கியது. முகமதியர்கள் ஆட்சி 50 ஆண்டுகள் நிலைத்திருந்தது. அதனால் கி.பி.1323-க்குப் பிறகு பாண்டியர்களின் கல்வெட்டுகள் மதுரையைச் சுற்றிக் கிடைக்கின்றன.

## ஐந்தாம் சடையவர்மன் சுந்தரபாண்டியன் (கி.பி.1304-1319)

இவன் முன்னர்க் குறிப்பிடப்பட்ட கலியுகராமன் வீரபாண்டியனுடைய சகோதரியின் மகனாவான் என்று பாண்டிய குலோதயம் கூறுகிறது[65]. இவன் கோதண்டராமன் என்ற பட்டப்பெயருடன் அரசாண்டான். இவன் பூச நட்சத்திரத்தில் பிறந்தவன். இவன் திருவரங்கம் அருகில் கோதண்டராம சதுர்வேதி மங்கலம் என்ற பிரம்மதேய மங்கலத்தை உருவாக்கினான். இவன் கி.பி.1304இல் மார்ச்சு மாதம் 18ஆம் தேதியிலிருந்து ஏப்பிரல் 13க்குள் முடிசூடிக் கொண்டிருக்கலாம்.

## முதலாம் மாறவர்மன் ஸ்ரீவல்லபன் (கி.பி.1308-44)

சோழமண்டலம், (திருவாரூர்), தொண்டை மண்டலம் (இலவானாசூர்), திருவதிகை, புதுக்கோட்டை, பாண்டியமண்டலம் ஆகிய பகுதிகளில் மாறவர்மன் ஸ்ரீவல்லபன் என்ற பெயர்கொண்ட கல்வெட்டுகள் கிடைத்துள்ளன. கல்வெட்டில் உள்ள வானிலைக் குறிப்புகளின் துணை கொண்டு இவன் கி.பி.1308 முதல் 1344 வரை அரசாண்டான் என்பதைத் தவிர வேறு செய்திகளை அறிய முடிய வில்லை. இவனுடைய கல்வெட்டுகளில் ''வாளால் வழி திறந்தான்'' ''குளிகைப் பணம்'' ''வீரசம்பன் பணம்'' போன்ற பெயர்கள் குறிப்பிடப் பட்டுள்ளன. ''மானங்காத்தான்'' என்று இவனைக் கல்வெட்டுகள் அழைக்கின்றன.

## முதலாம் சடையவர்மன் ஸ்ரீவல்லபன் (கி.பி.1308-1341)

இவன் ஆகவராமன் என்ற பட்டப்பெயர் கொண்டிருந்தான் என்றும், அதனால் ஆகவராமன் பணம் என்ற காசுகளைத் தன் பெயரால் வெளியிட்டான் என்றும் கல்வெட்டுகள் அறிவிக்கின்றன. இவனுக்கு ''வாள்வாசி காட்டினான்'' என்ற பட்டப்பெயரும் இருந்தது. இந்தப் பட்டப் பெயரைக் கொண்டு இவன் வாளால் வழி திறந்தான் என்ற பராக்கிரமபாண்டியனுடன் இணைந்து முகமதியர்களிடம் போரிட்டு இருக்கலாம் என்று தோன்றுகிறது.

## சடையவர்மன் இராசராசன் சுந்தரபாண்டியன் (கி.பி.1310-1332)

இவன்தான் கி.பி.1311இல் டில்லியிலிருந்து படையெடுத்து வந்த மாலிக்காபூருடன் சேர்ந்து கொண்டு அவனுக்கு உதவிபுரிந்திருக்க வேண்டும் என்று அண்மைக் கால ஆய்வுகள் வெளிப்படுத்துகின்றன[66]. கி,பி.1320க்குப் பின்னர்தான் இவனுடைய கல்வெட்டுகள் மதுரையைச் சுற்றியுள்ள இடங்களில் கிடைக்கின்றன. இவன் பின்னாளில் மனம் திருந்தி மற்றைய பாண்டிய இளவரசர்களுடன் சேர்ந்துகொண்டு, முகமதியர்களை எதிர்த்துப் போரிட்டிருக்கலாம் என்றும் கருதப்படுகிறது.

குலசேகரனின் மூத்த மகன் வீரபாண்டியனும் (1297) கடைசிச் சகோதரன் சுந்தரபாண்டியனும் (1303) ஒற்றுமையுடன் அரசாட்சி புரியவில்லை என்று அமீர்குசுரு என்ற பாரசீகக் கவிஞர் கூறியுள்ளார். ஆனால் அது உண்மை அல்ல. இவர்களைத் தவிர கடைசிச் சகோதரன் ஒருவன் சுந்தரபாண்டியன் என்ற பெயரில் இருந்தான் எனவும், இவன் மேற்குறிப்பிட்ட இரு சகோதர்களிடமும் மனம் வேறுபட்டு முகமதியருடன் சேர்ந்து கொண்டான் எனவும் இவனே இராசராச சுந்தரபாண்டியனாவான் எனவும் அண்மைக் கால ஆய்வுகள் குறிப்பிடுகின்றன. இவன் குலசேகரனுடைய மகன் என்று கல்வெட்டுகள் எதுவும் குறிக்கவில்லை. ஒருவேளை இவன் குலசேகரனின் தம்பி மகனாக இருக்கலாம் என்று கருதப்படுகிறது. திருக்கடையூரிலுள்ள குலசேகரனின் கல்வெட்டுக் குறிப்புகள், குலசேகரனின் தம்பி நாட்டைச் சரிவர ஆளவில்லை என்று மக்கள் முறையிட்டதை உணர்த்துகின்றன[67]. முதலாம் சடையவர்மன் ஸ்ரீவல்லபனின் கல்வெட்டு ''முன்னாள் இராசராசன் சுந்தரபாண்டிய தேவர் துலுக்குருடன் வந்த நாளிலே...'' என்று குறிப்பிடுகின்றது[68]. இதனால் இவன் முதலில் முகமதியர்களுடன் இணைந்தும், பின்னர் அவர்களுடன் பிணக்கு ஏற்பட்டு, மற்ற பாண்டிய மன்னர்களுடன் இணைந்தும் போரிட்டிருக்க வேண்டும் என்று தோன்றுகிறது.

## இரண்டாம் மாறவர்மன் குலசேகரன் (கி.பி.1314-1362)

இவனுடைய கல்வெட்டுகள் தொண்டை மண்டலத்தில் கிடைக்கின்றன. இக்காலக்கட்டத்தில் வடக்கே விசயநகரத் தளபதியான குமாரகம்பணன் இரண்டாம் இராசராச சம்புவரையனைக் கொன்றான். இப்பாண்டிய மன்னனுக்குப் ''புவனேகவீரன்'' என்ற பட்டப் பெயர் இருந்தது. இப்பட்டப் பெயர் முதலாம் மாறவர்மன் குலசேகரனுக்கு உரியது என்று கூறுவது பொருந்தாது என்று அண்மைக்கால ஆய்வுகள் கூறுகின்றன. இவன் பிறந்த நட்சத்திரம் உத்திரமாகும்[69].

## முதலாம் சடையவர்மன் பராக்கிரமன் (கி.பி.1315-1334)

தில்லிசுல்தான் குத்புதீன் முபாரஹ் ஷா (கி.பி.1316 ஏப்ரல்) தனது படைத்தளபதியான குசுருகானைத் தென்னாட்டின்மீது படையெடுக்குமாறு ஆணையிட்டான். கி.பி.1318ஆம் ஆண்டு இறுதியில் அவன் தமிழகத்தின்மீது படையெடுத்தபோது அவனது படைகளை விரட்டியதால் இம்மன்னனுக்கு ''வாளால் வழிதிறந்தான்'' என்ற பட்டப் பெயர் இருந்தது என்பதை அறியலாம். 'வாளால் வழி திறந்தான் பணம்' என்ற காசு வெளியிடப்பட்டது என்பதையும் கல்வெட்டு மூலம் அறியலாம்[70]. மதுரை மீனாட்சி அம்மன் கோயிலின் ஆடிவீதியிலுள்ள (9)ஆவது நிலைக் கோபுரம் கி.பி.1323இல் இவனால் கட்டப்பட்டது[71]. முகமதியர்களின் படையெடுப்பின்போது, இவனைக் கைது செய்து டில்லிக்கு அனுப்பினார்கள் என்று கூறப்படுகிறது[72].

## ஆறாம் சடையவர்மன் சுந்தரபாண்டியன் (கி.பி.1318-1336)

இவன் கி.பி.1318இல் சூலை மாதம் 7ஆம் தேதியிலிருந்து 20ஆம் தேதிக்குள் முடிசூடினான் என்று ஆய்வுகள் கூறுகின்றன. மதுரையில் சுல்தானியர்கள் ஆட்சி நிறுவப்பட்டிருப்பினும் மதுரைக்கு அருகிலும் மதுரையைச் சுற்றிலும் இவனுடைய கல்வெட்டுகள் பல கிடைக்கின்றன. கிருக்களக்குடி, விராச்சிலை, நாமக்கல், திருநள்ளாறு, திருவாய்பாடி, வஞ்சிநகர், திருவீழிமிழலை, விக்கிரமங்கலம், திருப்பாலைவனம் , ஆனைமலை, துறையூர் போன்ற பல இடங்களில் இவனுடைய கல்வெட்டுகள் காணப்படுகின்றன[73].

## ஐந்தாம் மாறவர்மன் விக்கிரமன் (கி.பி.1323-1330)

இவனுக்கு இராசாக்கள் நாயன் என்ற பட்டப்பெயர் உண்டு. கோயில்களில் ''இராசாக்கள் நாயன் சந்தி'' எனும் சிறப்பு வழிபாடுகள் இவன் பெயரால் செய்விக்கப்பட்டன என்று சில கல்வெட்டுகள் கூறுகின்றன. இவனது பிறந்த நட்சத்திரம் அஸ்தம் ஆகும். இவன் ரோகிணி நட்சத்திரத்தில் முடிசூடியவனாவான். விருத்தாசலம், சிதம்பரம், திருவயிந்தபுரம், திருமாணிக்குழி, திருவாமத்தூர், திருவெண்ணெய்நல்லூர், கங்கைகொண்டசோழபுரம், திருமுட்டம்,

அரகண்டநல்லூர், பாதூர், திருக்கோயிலூர், திருவாவடுதுறை, காட்டுமன்னார்கோயில் போன்ற இடங்களில் இவனுடைய கல்வெட்டுகள் கிடைக்கின்றன[74]. தில்லியை ஆண்ட முகமது பின் துக்ளக்கின் (1325-1351) காசுகள் இதே காலக்கட்டத்தில் கி.பி.1330, 1334இல் பாண்டிய நாட்டில் கிடைத்துள்ளன.

## ஏழாம் சடையவர்மன் சுந்தரபாண்டியன் (கி.பி. 1329-1347)

கல்வெட் கூறும் நாள், கோள் ஆகியவற்றின் துணைகொண்டும் ஆய்வு மேற்கொண்டும், கி.பி. 1329 இல் இவன் முடிசூடினான் என்று ஆய்வாளர்கள் கூறுகின்றனர். இவனுடைய பட்டப்பெயர் எதுவும் இதுவரை கிடைக்கவில்லை. கோயில் திருமானத்தில் உள்ள கல்வெட்டுகள் இவனைப்பற்றி அறிய உதவுகின்றன. சுல்தானாகிய ஜலாலுதீன் அசன்ஷாவின் (கி.பி.1335-1340) காசுகள் மதுரையில் கிடைக்கின்றன.

## எட்டாம் சடையவர்மன் சுந்தரபாண்டியன் (கி.பி. 1330 - 1347)

இவன் கி.பி. 1330 இல் அரியணையேறியவன். இவனுக்கும் ''பொன்வேய்ந்த பெருமாள்'' என்ற பட்டப்பெயருண்டு என்பதை அறியலாம். இவன் திருவயிந்தபுரம் கோயிலுக்குப் பொன் வேய்ந்தான். ரிஷிவாஞ்சியம் கல்வெட்டு இவனைப் ''பொன் பரப்பின பெருமாள்'' என்று குறிப்பிடுகிறது[75]. இவனது காளையார்கோயில் கல்வெட்டுகள் மூலம் இவன் மதுரைக்கு அருகில் அரசாண்டு வந்தான் என்பதை அறியலாம்[76].

## ஆறாம் மாறவர்மன் விக்கிரம பாண்டியன் (கி.பி. 1337 - 1343)

வானிலைக் குறிப்புகளுடன் ஆய்வு மேற்கொள்கையில் இம்மன்னன் கி.பி. 1337 இல் ஆட்சி புரியத் தொடங்கினான் என்பதை அறியலாம். இவன் கி.பி. 1337 இலும், கி.பி. 1338 இலும் இராசநாராயண சம்புவரையர் இருவரை வெற்றிகொண்டான் என்பதை விக்கிரவாண்டிக் கல்வெட்டு புலப்படுத்துகிறது[77].

## முதலாம் மாறவர்மன், வீரபாண்டியன், இரண்டாம் மாறவர்மன் வீரபாண்டியன்

முதலாம் மாறவர்மன் வீரபாண்டியன் கி.பி. 1334 இலும், இரண்டாம் மாறவர்மன் வீரபாண்டியன் கி.பி. 1341 இலும் அரியணையேறினார்கள் என்பதை நாள், கோள் துணைகொண்டு அறியமுடிகிறது. பாண்டியர் வரலாற்றில் இப்பெயர் கொண்டவர்கள் இவ்விருவர் மட்டுமேயாகும். இரண்டாம் மாறவர்மன் வீரபாண்டியனின் திருக்களக்குடிக் கல்வெட்டு, கம்பண உடையார் கி.பி. 1371 இல் முகமதியரை விரட்டியடித்த செய்தியைத் தெரியப்படுத்துகிறது.

## முதலாம் மாறவர்மன் பராக்கிரமன் (கி.பி. 1335 - 1362)

இவனுக்கு முடிமன்னர்நாயன் என்ற பட்டப்பெயர் இருந்தது. குளித்தலையில் உள்ள பெருமாள்கோயிலின் கருவறை செங்கல்லால் இருந்தது. இதை இம்மன்னனின் மகன் கற்றளியாகக் கட்டினான்[78].

## ஒன்பதாம் சடையவர்மன் சுந்தரபாண்டியன் (கி.பி. 1340 - 1364)

ஒன்பதாம் சடையவர்மன் சுந்தரபாண்டியன் என்பவன் கி.பி. 1340 இல் முடிசூடியவன். இவனுடைய கல்வெட்டுகள் கி.பி. 1364 வரை கிடைக்கின்றன.

## இரண்டாம் சடையவர்மன் விக்கிரம பாண்டியன் (கி.பி. 1344 - 1352)

இவன் கி.பி. 1344 இல் முடிசூடினான் என்று அறியமுடிகிறது. இவனுடைய கல்வெட்டுகள் திருச்சோபுரம், பூவிருந்தவல்லி, திருப்புட்குழி (காஞ்சிபுரம்) ஆகிய இடங்களில் கிடைக்கின்றன[79].

தொண்டை மண்டலத்தில் விசயநகர அரசனான கம்பணனின் கல்வெட்டுகள் கி.பி. 1352 இலிருந்து காணப்படுகின்றன. கி.பி. 1356 இல் காஞ்சிபுரம் கம்பணனின் தலைநகராயிற்று. கி.பி. 1377 வரை மதுரை சுல்தான்களின் ஆட்சி நிலவியது என்பதை அறிய அவர்கள் வெளியிட்ட காசுகளே சான்றாகும். கி.பி. 1371 இல் கம்பணன் மதுரையை ஆண்டதாக மதுரைத் தலவரலாறு கூறுகிறது. இவனுடைய மகன் எம்பணஉடையார், கம்பணனின் மருமகன் பொற்காசு உடையாருடன் ஆட்சி புரிந்தான். இவர்களின் மறைவுக்குப்பின் கி.பி. 1448 வரை லக்கண உடையார் ஆட்சிபுரியத் தொடங்கினான். விசயநகர ஆட்சி மதுரையில் வேரூன்றத் தொடங்கியது.

### சம்புவரையர்கள்

ஒருங்கிணைந்த வடார்க்காடு, செங்கல்பட்டு மாவட்டங்களில் சம்புவரையர் என்னும் குறுநில மன்னர்கள் ஆண்டுவந்தனர். இவர்கள் முதலில் கி.பி. 13 ஆம் நூற்றாண்டு வரை சோழப் பேரரசர்களுக்குக் கட்டுப்பட்டும், பாண்டியர்களின் எழுச்சிக்குப் பின்னர் பாண்டியர்களுக்குக் கட்டுப்பட்டும் அரசாண்டவராவார்கள். இவர்கள் ஆண்ட பகுதியை ''இராசகம்பீர ராஜ்யம்'' என்பர். படைவீடு (போளூர் வட்டம்) இவர்களின் தலைநகரமாகும். இவ்வூரின் அருகிலுள்ள இராசகம்பீரன் மலை மீது கோட்டையும் இருந்தது. விருஞ்சிபுரம், பள்ளிகொண்டான், மேல்பாடி, குட்டியம், திருவானைக்கோயில், திருக்கழுக்குன்றம், காஞ்சிபுரம், உக்கல், ஆர்ப்பாக்கம், திருப்புலிவனம், செவல்லிமேடு, அச்சிறுபாக்கம், வெப்பூர், நெற்குணம், அரகண்டநல்லூர்,

சித்தலிங்கமடம், குன்னத்தூர் முதலிய இடங்களில் இக்குறுநில மன்னர்களின் கல்வெட்டுகள் காணப்படுகின்றன.

முதலாம் மாறவர்மன் குலசேகரபாண்டியனிடம் (கி.பி. 1268 - 1318) ஏகாம்பரநாதன் குலசேகர சம்புவரையன் நட்புடன் பழகி அரசாண்டான் (1318). இவன் ஏகாம்பரநாதன் சம்புவரையனின் மைந்தனாக இருக்கக்கூடும். இவனுடைய மரபினர் கி.பி. 1323 வரை பாண்டியர்களின் ஆதிக்கத்தின்கீழ்ப் பணியாற்றிப் பின்னர் சுதந்திரமாகச் செயற்படத் தொடங்கினர். கி.பி. 1324 - இல் அரியணையேறிய வென்றுமண் கொண்ட சம்புவரையன் தனி ஆட்சிப் பேரறிவிப்பை (பிரகடனத்தை) உறுதி செய்தான் ''சகலலோக சக்கரவர்த்திகள்'' என்னும் பட்டப்பெயருடன் இவனுடைய வழியினர் ஆளுவதற்கு முற்பட்டனர். மதுரையில் சுல்தான்களின் ஆட்சி நிறுவப்பட்டு, பாண்டியர்கள் விரட்டியடிக்கப்பட்ட சூழ்நிலையே இதற்குக் காரணமாகும். இவனுக்குபின் வென்று மண்கொண்ட சம்புவரையனின் மூத்தமகன் மல்லிநாதன் இராசநாராயண சம்புவரையன்) கி.பி. 1337 - 1362) அரசாண்டான். இளயவனான (இரண்டாம்) பொன்னின் தம்பிரான் இராசநாராயண சம்புவரையன் கி.பி. 1338 இல் முடிசூடினான். இவன் கி.பி. 1356 வரை ஆண்டிருக்க வேண்டும். மல்லிநாதனுடைய மகன் மூன்றாம் இராசநாராயண சம்புவரையன் (கி.பி. 1356 - 75) ஆவான். இவனைத் திருமல்லிநாதன் திருநீற்றுச் சம்பன் என்றும் அழைப்பதுண்டு.

கி.பி. 1356 இல் விசயநகர புக்கராயரின் படைத்தளபதியான வீரகம்பணன் காஞ்சிபுரத்தைக் கைப்பற்றினான். மல்லிநாதன் சம்புவரையன் கம்பணனின் ஆட்சியை ஏற்றுக்கொண்டு செயற்பட்டான்.

குலசேகர சம்புவரையன் பாண்டியர்களுக்கு உறுதுணையாக இருந்தான் என்று முன்னர் கூறப்பட்டது. வீரபாண்டியன் 1308 இல் விசயகண்டகோபாலனை எதிர்த்தபோது, இச்சம்புவரைய மன்னனும் போரில் ஈடுபட்டுப் பாண்டியர்களுக்கு உதவிபுரிந்தான். மறுபடியும் கேரள இரவிவர்மன் கி.பி.1313 - 1317 வரை தமிழக வடபகுதியைக் கைப்பற்றி ஆண்டபோது, பாண்டிய, காகதீயர்களின் உதவியையும், சம்புவரையரின் உதவியையும் பெற்று வெற்றிகொண்டான். திருவோத்தூர் அருகே செய்யாற்றின் கரையில் நடந்த போரில் சம்புவரையன் கேரளனைத் தோற்றோடும்படி செய்து செய்யாற்று வென்றான் என்ற பெயரைக் கொண்டான்.

தொண்டை மண்டலத்தில் விசயநகர ஆட்சி, சிறுகச் சிறுக வரை தொடங்கியது. வீரகம்பணனின் கல்வேட்டுகள் கி.பி. 1352லிருந்து காணப்படுகின்றன. கி.பி. 1356இல் காஞ்சிபுரம் கம்பணனின் தலைநகராயிற்று. இதனை ஏற்க மறுத்தான் இரண்டாம் இராசநாராயணன். அதனால் எழுந்த போரில் இராசநாராயணன் கொல்லப்பட்டான் என்கிறது. கம்பணனின் மனைவி கங்காதேவி எழுதிய வடமொழி

காப்பியமான ''மதுரா விஜயம்'' சம்புவரைய மன்னன் கொல்லப்பட வில்லையென்றும், தோற்கடிக்கப்பட்டான் என்றும் கல்வெட்டுச் சான்றுகளும், ஜைமனிபாரதம், சாளுவாப்புயுதயம், ராமய்யுதயம் போன்ற வடமொழிக் காப்பியங்களும் இயம்புகின்றன.

மல்லிநாதன் முதலாம் இராசநாராயணன் சம்புவரையன் விசயநகர மேலாதிக்கத்தை ஏற்றுக்கொண்டு செயற்பட்டான்.

## வாணாதிராயர்கள்

பாண்டியர்க்கடங்கிய சிற்றரசர்களாக விளங்கிய வாணாதி ராயர்கள் பாண்டியர்களைத் தாக்கித் திருவில்லிபுத்தூருக்குத் தெற்கே அவர்களை விரட்டித் தனியாட்சியை நிறுவினர். இதைத் திருவில்லிபுத்தூர் கல்வெட்டொன்று[80] '' மகாபணிவாணதரையர் சீர்மையான முதரை மண்டலம்'' எனக் கூறுவதாலறியலாம் (1453). இவர்கள் தங்களைப் ''பாண்டிய குலாந்தன்'' என்று கூறிக்கொண்டார்கள் என்று நெக்கோணம் (புதுக்கோட்டை மாவட்டம்) கல்வெட்டிலிருந்து புலப்படுகிறது[81].

## பாண்டிய நாட்டில் முகமதியர் ஆட்சி

பாண்டிய நாடு உள்நாட்டுக் குழப்பத்தில் இருந்தபோது தில்லி சுல்தானால் அனுப்பப்பட்ட இரண்டு படையெடுப்புகளை ஆங்காங்கே மேலே குறிப்பிட்டிருந்தோம். முதல் படையெடுப்பு கி.பி. 1310 - 11 இல் மாலிக்காபூரின் தலைமையில் நடந்தது. இதைப்பற்றி வாசாப், அமிதசுர என்னும் ஆசிரியர்கள் பல செய்திகளைத் தங்களது நூல்களில் குறிப்பிட்டுள்ளனர் அதன்படி குலசேகரன் இரு மகன்களாகிய வீரபாண்டியனுக்கும் சுந்தரபாண்டியனுக்கும் மூண்ட பொறாமையும் பகையும் பாண்டிய நாட்டையே பெருங்குழப்பத்தில் ஆழ்த்தி அதனது வீழ்ச்சிக்கு அடிகோலியது எனலாம். வாசாபின் கூற்றுப்படி சுந்தர பாண்டியன் தில்லி சுல்தானின் உதவியை நாடினான் அப்பொழுதிருந்த சுல்தான் அலாவுதீன் கில்ஜியின் படைத்தலைவனான மாலிக்காபூர், போசள நாட்டின் தலைநகரான துவாரசமுத்திரத்தைக் கைப்பற்றியபின், தமிழகத்தை நோக்கி வந்துகொண்டிருந்தான் பாண்டிய நாட்டில் இருந்த குழப்பம் அவனை மேலும் ஊக்குவித்திருக்க வேண்டும். இரு பாண்டிய சகோதரர்களுக்குள் பகைமை மூண்ட செய்தி மாலிக்காபூருக்குத் தெரிவிக்கப்பட்டது என்பதை அமிர்குசுருவும் குறித்துள்ளான். இது நடந்தது ஹிஜ்ரா 710 அதாவது 1310 - 11ஆம் ஆண்டாகும்.

இப்படையெடுப்பைப் பற்றிய விவரங்களை அறிவதற்கு அமிர்குசுரு, ஜியாவுதீன் பாரினி ஆகியோரின் குறிப்புகளும் சில கல்வெட்டுகளும் மிக்க உதவியாக உள்ளன[82]. அது நாட்டைக் கைப்பற்றும் நோக்கத்துடன் செய்யப்பட்ட ஊடுறவல் என்ற

சொல்வதற்கில்லை. ஆனால் அதற்கு முன்னோடியாக அமைந்தது என்று சொல்லலாம். இங்குள்ள அரசர்களிடமும் கோவில்களிலும் கிடந்த செல்வத்தைக் கவர்ந்துகொள்ள மேற்கொள்ளப்பட்ட படையெடுப்பு என்பதில் ஐயமில்லை. அமிர்குசுருவின் கூற்றின்படி 612 யானைகள், 20,000 குதிரைகள், 96,000 மணங்குப் பொன், முத்துகள் அணிகலன்கள் ஆகியன அடங்கிய பல பெட்டிகளை மாலிக்காபூர் கொள்ளை அடித்துச் சென்றான். பாண்டிய நாட்டில் எப்பகுதியும் கைப்பற்றப்படவில்லை என்றாலும் நாட்டுமக்களிடையே பெரும் குழப்பமும், பயமும் உண்டாயின. பேராசிரியர் நீலகண்ட சாத்திரி கூறியுள்ளதுபோல் பாண்டிய பேரரசின் பலவீனத்தையும் அதன் வீழ்ச்சியின் தொடக்கத்தையும் பறைசாற்றும் வகையில் அது அமைந்தது.

தென் இந்தியாவில் கி.பி. 1319லும் 1323லும் இரு முகமதியர் படையெடுப்பு நடந்தன. குசுரகான் மாபார் வந்து திரும்பினான். கி.பி. 1323இல் தில்லி சுல்தான் கியாசுத்தின் துக்ளக் அனுப்பிய படையெடுப்பு ஆக்கிரமிப்பு நோக்கத்துடன் மேற்கொள்ளப்பட்டது. அப்படையெடுப்பு உலுக்கான் என்பவனின் தலைமையில் நடந்தது. அவன் காகதீயரைத் தோற்கடித்து அவர்களது தலைநகரான வாரங்கல்லையும் கைப்பற்றிய பிறகு மாபாரின்மீது (தமிழ்நாடு) படையெடுத்து மதுரையுள் நுழைந்தான். நலிந்து கிடந்த பாண்டியர்களை வென்று மதுரைப் பகுதியில் தில்லி சுல்தான் ஆட்சியை நிறுவினான். ஜலாலுதின் அசன்ஷா என்பவனைத் தனது பிரதிநிதியாகத் துக்ளக் அமர்த்தினான். மாபார் துக்ளக்ராஜ்யத்தின் 23 மாகாணங்களில் ஒன்றாக இணைக்கப்பட்டது. சில நாட்களுக்குப் பின்னர் அவன் தில்லி சுல்தான் தொடர்பை ஒழித்துவிட்டு தானே மதுரை சுல்தானாக அரசு செலுத்தலானான் இது நடந்தது 1335ஆம் ஆண்டாகும். கிட்டத்தட்ட 50 ஆண்டுகள் (அதாவது 1371 வரை) நீடித்தது. அவ்வாண்டில் விசயநகர தளபதி வீரகம்பணன் சுல்தான் ஆட்சியை அகற்றி மதுரையை விடுவித்தான் என்று மதுரைத் தலவரலாறும் சில கல்வெட்டுகளும் தெரிவிக்கின்றன[83].

## அடிக்குறிப்புகள்

1. தெ.இ.சா. தொகுதி 14, எண். 189
2. கோ.வி.ராமன், பாண்டியர் வரலாறு ப. 93.
3. தன்பெருஞ்சேனையேவிப் பஞ்சவர் ஐவரும் பொருதப் போர்க்களத் தஞ்சி வெரிநளித்தோடி அரணெனப்புக்க ... மேலும் SII III ப. 147 (முதலாம் குலோத்துங்கன் மெய்க்கீர்த்தி) விட்டதண்டெழ மீனவர் ஐவரும் கெட்ட கேட்டினைக் கேட்டிலை போலு நீ (கலிங்கத்துப் பரணி, 368)
4. என். சேதுராமன் பாண்டியர் வரலாறு ப. 47 - 90.

5. எபிகிராபியா இண்டிகா தொகுதிகள் 8 மற்றும் 9 (1905 - 06; 1907 - 08)
6. எபிகிராபியா இண்டிகா தொகுதி 11; இந்தியன் ஆண்டிக்குரி 1915
7. இந்தியன் ஆண்டிக்குரி தொகுதி 42 (1913)
8. என் சேதுராமன், இம்பீரியல் பாண்டியாஸ், பக். 9-10.
9. எபிகிராபியா இண்டிகா, தொகுதி 25
10. கே.ஏ. நீலகண்ட சாத்திரியார்,Pandiyan Kingdom (1972) ப. 123.
11. 183 / 1908; புதுக்கோட்டை 163 மற்றும் 166.
12. இதற்கு முன்னர் முதல் குலோத்துங்க சோழன் காலத்தில் மூவர் முதலிகளின் பாடல்கள் கி.பி. 1100இல் தில்லியில் வைக்கப்பட்டன. தெ.இ.சா. தொகுதி 4, எண். 225.
13. தெ.இ.சா. தொகுதி. 5, எண். 431
14. புதுக்கோட்டை க. எண். 250, 256; தெ.இ.சா. 4, எண். 372.
15. தி.வி. சதாசிவபண்டாரத்தார். பிற்கால சோழர்கள் தொகுதி 2, ப. 172 - 3. எஸ்.ஆர் பாலசுப்பிரமணியம் தமது கோப்பெருஞ்சிங்கன் (ப. 18) என்ற நூலில் இது பற்றிக் குறிப்பிடுகின்றார். குலோத்துங்கன் படுதோல்வி அடையவே மனம் ஆற்றாது வருந்தி இறந்திருக்கக்கூடும் என்கிறார். இளவரசராக 1216இல் முடிசூடியிருந்த மூன்றாம் இராசராசன் சோணாட்டை ஆண்டு வந்தான் என்கிறார். வயதான காரணத்தினால் குலோத்துங்க சோழன் எதிர்க்க முடியாமற் போயிற்று என்கிறார் கே.ஏ. நீலகண்ட சாத்திரியார், தென் இந்திய வரலாறு, ப. 211.
16. தெ.இ.சா. தொகுதி 6, எண். 1
17. 270 / 1901
18. 257 / 1911
19. 704 / 1916
20. 30 / 1938
21. எபிகிராபிகா இண்டிகா, தொகுதி 7, ப. 162.
22. 78 / 1916; 79 / 1916.
23. என். சேதுராமன், பாண்டியர் வரலாறு, ப. 99
24. 575 / 1922.
25. 548 / 1922. குருகுலத்தரையன் முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் காலத்திலும்,பின்னர் இரண்டாம் சடையவர்மன் குலசேகரன் (14 செப்டம்பர் 1237 - 2 ஜுன் 1238) காலத்திலும்

மந்திரியாக திகழ்ந்தனவான். கே.வி. சுப்பிரமணிய ஐயர் தன்னுடைய Historical Sketches of Ancient Deccan தொகுதி 2 (1967) ப. 71இல் மூன்று சடையவர்மன் குலசேகர மன்னர்களைப் பற்றிக் குறிப்பிடுகிறார். 1162இல் ஆட்சிக்கு வந்தவன் ''பூதல மடந்தை'' என்ற விருதுப்பாடலுடனும்,1190இல் வந்தவன் ''பூவின் கிழத்தி'' என்ற துவங்கும் மெய்க்கீர்த்தியுடனும் 1237 / 38இல் பதவிக்கு வந்தவன் ''பூதல வனிதை'' என்று துவங்கும் மெய்க்கீர்த்தியுடன் ஆண்டார்கள் என்று குறிப்பிடுகின்றார்.

26. 406 /1914; 407 / 1914;
27. 546, 547 மற்றும் 557 / 1926 என். சேதுராமன், பாண்டியர் வரலாறு ப. 95 - 102
28. 291 / 1930; 326 /1962
29. 562 / 1916.
30. தெ.இ.சா. தொகுதி 5 எண். 421.
31. தெ.இ.சா. தொகுதி 24, எண். 261; தொகுதி 8
32. தெ.இ.சா. தொகுதி 8 எண். 403 மற்றும் 404; 362 / 1953 - 54.
33. ஆ.க.கு. 469 / 1917; 427 / 1930; 569 / 1963.
34. என். சேதுராமன், பாண்டியர் வரலாறு, ப. 121, ஆ.க.கு. 120, 127, 128, 129 / 1935.
35. திருப்பூந்துருத்தி கல்வெட்டு, தெ.இ.சா. தொகுதி. 5, எண். 459.
36. ஆ.க.கு. 260 / 1906; 275 / 1901; 677 / 1909; 218 / 1901.
37. 198 /1905; 419 / 1893.
38. 332, 340, 361 / 1913
39. ஆ.க.கு. 628 மற்றும் 64 / 1927
40. 186 / 1894; தெ.இ.சா. தொகுதி 6, எண். 455; 531 / 1920 மற்றும் 1921 பகுதி 2, 41வது பாரா. செந்தமிழ் தொகுதி 4, ப. 513.
41. இண்டியன் ஆன்டிக்குரி தொகுதி 21, ப. 324; 481 / 1918.
42. கே.ஏ. நீலகண்ட சாத்திரியார், பாண்டியப் பேரரசு, ப. 149.
43. 28 / 1937 - 38.
44. 277 / 1913.
45. 373 / 1959 - 60; கே. வி. இராமன், Some aspects of Pandiyan History in the light of recent discoveries. ப. 30
46. 131 / 1907.
47. கே.ஏ. நீலகண்ட சாத்திரியார், பாண்டியப் பேரரசு, ப. 153.

48. என். சேதுராமன், பாண்டிய வரலாறு, ப. 141.
49. 35 / 1923; 1923 பகுதி 2, பாரா 68; இடிகரை கல்வெட்டு.
50. 432 / 1917.
51. என். சேதுராமன், பாண்டியர் வரலாறு, ப. 143.
52. 698 / 1916.
53. திருக்காளக்குடி 71 / 1916.
54. 120 / 1907.
55. 79 / 1927.
56. 29 / 1927.
57. என். சேதுராமன், பாண்டியர் வரலாறு, ப. 145
58. என். சேதுராமன் பாண்டியர் வரலாறு ப. 145
59. 51 / 1932; என். சேதுராமன், இம்பீரியல் பாண்டியாஸ், ப. 181.
60. என். சேதுராமன், பாண்டியர் வரலாறு, ப. 149.
61. 54 / 1905; 14 / 1933, மேற்படி ப. 153.
62. 120 / 1908
63. 72 / 1918
64. அரகண்டநல்லூர், திருவோத்தூர், திருவாஞ்சியம், திருக்கச்சூர் (கீழூர்) திருக்கோயிலூர், விருத்தாசலம் போன்ற இடங்களில் கிடைத்துள்ளன. என். சேதுராமன்,164 - 5.
65. என். சேதுராமன், பாண்டியர் வரலாறு, ப. 166 - 7.
66. என். சேதுராமன், பாண்டியர் வரலாறு, பக். 173 - 176.
67. என். சேதுராமன், பாண்டியர் வரலாறு, ப. 186.
68. திருக்களார் கல்வெட்டு, 642 / 1902, தெ.சா. தொகுதி 8, எண். 247.
69. என். சேதுராமன், பாண்டியர் வரலாறு, ப. 195
70. ஆரியூர் (குளத்தூர் வட்டம், புதுக்கோட்டை) கல்வெட்டு புதுக்கோட்டை, 622.
71. மதுரைத் திருப்பணிமாலை பாடல்கள் 58/1915 7/1915
72. இந்தியன் ஆண்டிக்குரி. 1914, ப.4
73. என். சேதுராமன், பாண்டியர் வரலாறு, ப. 200-2
74. என். சேதுராமன், பாண்டியர் வரலாறு, ப. 204
75. 119 / 1944
76. என். சேதுராமன், பாண்டியர் வரலாறு, ப.208

77. 288 / 1915
78. 199 / 1944
79. என். சேதுராமன்; பாண்டியர் வரலாறு, ப. 220
80. திருவாங்கூர் தொல்லியல் சான்றுகள், தொகுதி 1,
81. புதுக்கோட்டை, க.எண். 672
82. கிருஷ்ணசாமி ஐயங்கார் இப்படையெடுப்புகளைப் பற்றி விரிவாக தனது நூலில் எழுதியுள்ளார். (South India under Muhammadan Invaders) 1921
83. ஏ. கிருஷ்ணசாமி The Tamil Country under Vijayanagar P. 29

# 2. ஆட்சி முறை

கி.பி 1190 முதல் 1311 வரையுள்ள 120 ஆண்டுகளைத் தான் பாண்டியப் பேரரசுக்கு உரியதாகக் கொள்வார்கள். ஆனால் கி.பி.1190க்கு முன்பே - (கி.பி.1090இல்) சோழருடைய மேலாண்மையைப் பாண்டியர் ஏறக்குறைய உதறித் தள்ளினார்கள். மதுரையில் தனியரசு ஏற்படுத்திக் கொண்டார்கள். மதுரைப் பாண்டியர், பேரரசுத் தகுதியை 1190இல் அடைந்தார்கள். அதன் பின்பு 25 ஆண்டுகளில் வீறு கொண்டெழுந்தார்கள். கி.பி.1216இல், சோழரைப் போரில் வென்றடிப்படுத்தினார்கள். ''சோணாடு கொண்டருளி'' என்ற பட்டத்தையும் பெற்றார்கள். இதன் விளைவாகத் தமிழகம் முழுமைக்கும் உரிய மதுரைப் பேரரசை உருவாக்கினார்கள். கி.பி.1311இல் டெல்லியின் முகமதியப் படையெடுப்பின் போது மதுரைப் பேரரசின் மூலபலம் முரிந்தது. கி.பி.1318, 1323ஆம் ஆண்டுகளில் அலையலையாக வந்த முகமதியப் படையெடுப்புகளினூடே பாண்டியர் மதுரையை விட்டகன்றனர். அவர்கள் மன்னர்களாக மதுரைக்குத் திரும்பி வரவேயில்லை.

இப்பேரரசின் மதுரைப் பீடத்தினுடைய கடைசி மன்னனாகிய சடையவர்மன் வீரபாண்டியன் தன் பங்குக்கு எனக் கிடைத்த திருச்சிப் பகுதி வீரதவளத்தைத் தலைநகராகக் கொண்டு கி.பி.1343 வரை ஆட்சி நடத்தினான். ஆகவே இப்பாண்டியப் பேரரசின் உண்மையான வயது கி.பி.1190இல் தொடங்கி 1343 வரையுள்ள 153 ஆண்டுகள் எனக் கொள்வது சரியானதாக அமையும். இதைக்கூட மாற்றிச் சொல்ல வருகின்ற வெளிப்படையான கணிப்பு ஒன்றுண்டு. அதனைப் பின்வருமாறு விளக்கலாம். கி.பி.1311, 1318, 1323ஆம் ஆண்டுகளில் நடைபெற்ற முகமதியப் படையெடுப்புகளில் கடைசி படையெடுப்பின் விளைவாக டெல்லியின் இளவரசன் முகமதுபின் துக்ளக் மதுரையில் சுல்தானிய முகலீம் ஆட்சியைக் கி.பி.1323இல் ஏற்படுத்தினான். இதனை அகற்றி விட்டுத் தங்களுடைய ஆட்சியை நிலை நிறுத்துகின்ற போர் முயற்சியில் தோற்றுப் போன பாண்டியர், மதுரை வீழ்ந்த பின்னர் தமிழகமெங்கும் சிதறி நின்றனர். கி.பி.1300 அளவில் நெல்லூர் முதல் கொல்லம் வரை விரிந்திருந்த பாண்டியப் பேரரசை மதுரையின் பெயரால் அரசாட்சி செய்வதற்காக ஏற்கனவே நியமனம் செய்யப் பட்டிருந்த இணையரசர்கள் (ஐவர் பாண்டியர் நிறுவனத்தைச் சேர்ந்தவர்கள்) ஆங்காங்கே குமரி முதல் சென்னை வரை, மதுரையில்லாத பேரரசின் ஆட்சியைத் தொடர்ந்து நடத்தலானார்கள். கி.பி.1335 அளவில் எட்டுப் பாண்டிய மன்னர்கள் சோழ மண்டலம், கொங்கு மண்டலம், தொண்டை மண்டலம் போன்ற பகுதிகளில்

தொடர்ந்து இவ்வாறு ஆண்டார்கள் என்பதற்கு ஆதாரமாக மேற்படி மண்டலங்களின் பற்பல ஊர்களில் ஏராளமான பாண்டியர் கல்வெட்டுகள் கிடைக்கின்றன. சான்றாகத் திருப்பத்தூர்க் கோயில் கல்வெட்டு (119, 120/1908) கூறுவது போல, திருப்பத்தூர்க் கோயிலிலிருந்து கி.பி.1342இல் முகமதியரைச் சடையவர்மன் வீரபாண்டியன் விரட்டினான். வட ஆர்க்காடு திருவல்லம் கல்வெட்டு அறிவிப்பது போல. மாறவர்மன் வீரபாண்டியன் என்ற பாண்டிய மன்னன் கி.பி.1357இல் தஞ்சையைத் தலைநகராகக் கொண்டு ஆண்டபோது காஞ்சிபுரத்தைக் கடந்து அவனுடைய அதிகாரம் நிலைத்திருந்தது. அச்சமயம் திருவல்லத்தில் பாண்டியரின் படைப்பற்று (பாசறை) இருந்தது. இராமநாதபுரத்து திருக்காளக்குடிக் கல்வெட்டு (64/1916) கி.பி. 1365 இல் (இதே பாண்டியன்காலத்து) கூறுவது போல, விசயநகரத்து வீர கம்பனாவின் படை முகமதியரை மதுரையிலிருந்து அகற்றியது. இதைக் கி.பி.1380 வரை ஆண்ட தஞ்சை வீர பாண்டிய மன்னன் தன் கல்வெட்டில் குறிக்கிறான். இவ்வாறு மதுரைப் பாண்டியர் தமிழகமெங்கும் அமைந்திருந்த ஆட்சி அமைப்புகளைத் தற்காத்து நின்றார்கள்.

அனைத்து மண்டலங்களிலும் பாண்டியர் ஆட்சியைத் தொடர்ந்து நடத்தி வந்த நாட்களில்- அதாவது கி.பி.1325 அளவில்- தொண்டை மண்டலத்து வட ஆர்க்காட்டுப் பகுதியில் சம்புவராயன் என்ற மன்னன் தனக்கென ஓர் அரசை அமைத்துக் கொண்டான். இந்த வேளையில் தமிழகத்தை மீட்க வந்தான் விசயநகரத்து இளவல் குமாரகம்பணன் என்பவன். கி.பி.1361 அளவில் இந்த இளவல் மேற்படி சம்புவராயரை வென்றான். பின்பு மதுரை நோக்கி வந்தான். கி.பி.1371 அளவில் முகமதியரை அவன் வென்றான். தமிழகமெங்கும் சிதறிக் கிடந்த ஏனைய பாண்டிய மன்னர்கள், கருநாடகப் போசளப் பேரரசன் மூன்றாம் வல்லாளனுக்கு வேண்டிய உதவியைச் செய்து வந்தார்கள். மதுரையை நோக்கி வல்லாளன் தனது படைகளை அனுப்பி வைக்கத் தக்க துணையாகவும் அவர்கள் நின்றார்கள். இந்தப் போசள அரசன் வல்லாளனை மதுரைச் சுல்தான் சிறைபிடித்துக் கொன்றான். பிறகு பாண்டிய மன்னர்கள் ஆங்காங்கே 'அஞ்சினான் புகலிடம்' என்ற பாதுகாப்புப் இடங்களை உருவாக்கிப் படைகளையும், ஆயுதங்களையும் சேகரித்து வைத்தார்கள் எனக் கி.பி.1342இல் அமைக்கப் பட்ட பாண்டியரின் இடப்பாறைக் கல்வெட்டும் (141/1941-42), கி.பி.1358இல் அமைக்கப்பட்ட பாண்டியரின் போளுர்க் கல்வெட்டும் (201/1932-33) விரிவாகக் கூறுகின்றன. குமாரகம்பணன் இறந்த பின்னர் அவனுடைய மகன் சமுன்னா உடையார் கி.பி.1378 அளவில் மதுரை நகரை முழுமையாக மீட்டான். பின்பு விசய நகரத்துப் படைத் தளபதிகளிடம் மதுரையையும், அதன் சுற்றுப் பகுதிகளையும் அவன்

ஒப்படைத்து ஆளச் செய்தான். சென்னை வரை சிதறி நின்ற பாண்டிய மன்னர்களின் ஆட்சி, பெரும்பாலான இடங்களில் கி.பி.1378 அளவில் ஒரு முடிவுக்கு வந்தது. அப்போது விசய நகர மீட்பாளர்கள் தமிழகமெங்கும் படைமறவர் ஆட்சியை நிலைநாட்டினார்கள்.

இத்தகைய படைமறவர் ஆட்சி கி.பி.1450 வரை தொடர்ந்தது. பின்னர் பாண்டியர் என்று சொல்லிக் கொண்ட வாணாதிராயன் என்ற வாணர்குலத்தவனுக்கு விசய நகரத்தாரால் மதுரை ஆட்சிப் பொறுப்பு கி.பி.1497 வரை கொடுக்கப்பட்டிருந்தது. பின்பு மதுரையும் விசயநகரத்துராயரின் நேரடி ஆட்சிக்குரியதாயிற்று. ஆகவே ஆய்வுரையின்படிக் கூறினாச் இரண்டாம் பாண்டியப் பேரரசுக்குரிய உண்மையான ஆயுட்காலம் (அது தொடங்கிய) கி.பி.1190 முதல் கம்பனா திசை வெற்றி (திக் விஜயம்) முடிவடைந்த கி.பி.1378 வரையுள்ள 188 ஆண்டுகள் எனச் சொல்லலாம். இதில்கூட ஒரு திருத்தம் உள்ளது. தொண்டை மண்டலத்துப் பல்லவ மன்னனை வென்றதால் சோழ அரசைச் சோழப் பேரரசு என அழைக்கிறோம். திருவாங்கூர் மன்னனை வென்று பேரரசுப் பாணியில் மதுரை அரசு கி.பி.1070 அளவில் கப்பம் வாங்கியது (கல்வெட்டு ஆண்டறிக்கை -1896). அப்படியானால் சோழ அரசைப் போலவே பாண்டிய அரசும் அதன் தொடக்கக் காலம் உட்பட்ட ஆயுளைக் கொண்டிருந்ததாகக் கணிக்கப்பெறும். இந்தச் சிந்தனையின்படிக் கணித்தால் கி.பி.1090 முதல் 1378 வரையுள்ள 288 ஆண்டுகள் இந்தப் பாண்டியப் பேரரசுக்கு உரிமையாகும். சோழரைப் போலப் பாண்டியருக்கும் பேரரசு ஆக ஆவல் உண்டு. அந்தச் சோழர் தொண்டை மண்டலத்தை ஆக்கிரமித்தும், பாண்டிய நாட்டில் நேரடி ஆட்சியைத் திணித்தும் பேரரசு ஆட்சியைக் கட்டினார்கள். இதன் விளைவாகக் கி.பி.1216இல் பாண்டியர் சோழ நாட்டின் மேல் படையெடுத்துச் சென்று சோழரை வென்று சோழ நாட்டைத் தங்களுடைய மேலாண்மைக்கு உட்படுத்தினார்கள். பின்பு போசள-சோழர் கூட்டணியை உடைக்கவும் காகதியரின் செல்வாக்கை நெல்லூர் - காஞ்சிபுரம் விட்டு அகற்றவும் கி.பி.1256 அளவில் திசை வெற்றி (திக்விஜயம்) என்ற பெரிய படைத்திட்டம் தயாராகியது. சடையவர்மன் சுந்தரபாண்டியன் தலைமையில் இப்பாண்டியர் இதைத் தயாரித்தனர். இதனை நடைமுறைப்படுத்திக் கொல்லம், மங்களூர், நெல்லூர், கொங்கு நாடு, இலங்கை ஆகியவை கொண்ட பெரிய தொரு பேரரசை இப்பாண்டியர் உருவாக்கினர். ஆட்சிமுறை நிலைநாட்டப்பட்டது. மதுரையிலிருந்து சென்ற அரச கட்டளைகள் மேற் சொன்ன இடங்களில் பாண்டியப் பேரரசின் சட்டமாயிற்று. சுமார் 130 ஆண்டுகள் (1216-1343) விரிவான பேரரசு பாண்டியருக்கு வாய்த்திருந்தது.

## பாண்டியப் பேரரசின் அமைப்பு, அரசின் கோட்பாடுகள், கடமைகள், பட்டத்து அரசிகள்

இடைக்கால இந்தியாவில் - குறிப்பாகத் தென்னிந்தியாவில் ஆட்சிபுரிந்த பேரரசர்கள் எல்லோரும் பண்டைய வேததர்ம சாத்திரக் கோட்பாடுகள் விதித்த அரசியல் நியதிகளின்படிச் சமுதாய அறம் பேணும் பொதுமைத் தலைவர்களாகச் செயற்பட்டார்கள். மதுரைப் பாண்டியரும் அவ்வாறே நடந்து கொண்டார்கள்.

பாண்டிய அரசு உட்பட அக்காலத் தென்னிந்திய அரசுகளின் உள்ளுறை இயக்கு சக்தியாக மனு சாத்திரம் விளங்கியது. மனுதருமம், அரசின் நடைமுறைக் கோட்பாடாக அமைந்தது. இந்த மனுதர்மத்தை உலகில் நிலை நாட்டுகின்ற அரும்பணிக்குத் தங்களை அர்ப்பணித்துக் கொண்டதாக எல்லாப் பாண்டிய மன்னர்களும் தங்களுடைய மெய்க்கீர்த்தி என்ற அரசக் கல்வெட்டில் குறித்து வைக்கத் தவறவில்லை. மனு தருமம் என்றால் என்ன? அதற்கும் பாண்டிய அரசுக்கும் என்ன உறவு? மன்னனுடைய அரசாட்சிக் கோட்பாடுகளில் மனு தருமத்தின் தாக்கம் என்ன? ஆட்சித் திறத்திலும், ஆட்சிக்குரிய அடிப்படைக் குறிக்கோள்களிலும் இழையோடி நின்ற மனு தருமச் சிந்தனை ஆட்சியிலிருந்த மன்னவனுடைய ஆளுமையை எந்த அளவிற்குப் பாதித்து நின்றது? இந்தக் கேள்விகளுக்கான விடைகளைத் தெரிந்து கொள்கின்ற முனைப்பில் பாண்டிய அரசின் அமைப்பைப் பற்றிய செய்திகளை நிரல்படுத்திப் பார்க்கலாம்.

### மனுதரும வருணாசிரமம்

வடபுலத்தில் தோன்றிய மனு என்ற அரசன் சமூக, அரசியல் உறவுகளை நான்கு வேதவழி வந்த இந்து தருமத்தின் அடிப்படையில் நிருணயம் செய்தான். அதனையே சட்டமாக யாத்துத் தந்தான். அவன் எழுதி வைத்த விதிமுறைகளே மனுதரும சாத்திரம் எனப்படும். அந்தணர், சத்திரியர், வைசியர், சூத்திரர் என்ற நான்கு வகுப்பினர் இந்து சமூகத்தில் எவ்வாறு அவரவர் சாதி ஒழுக்கப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பது மனு தருமத்தின் மூலம் வரையறை செய்யப்பட்டது. இவ்வாறு தோன்றியதுதான் வருணாசிரம தருமம். (வர்ணம்=சாதி: ஆஸ்ரமம்=அமைப்பு) மனுதருமத்தை முன்னிறுத்தி வருணாசிரமத்தைக் கட்டிக் காப்பதுதான் இடைக்கால மன்னர்களின் தலையாய பணியாக இருந்தது. இடைக் காலத்திற்குரிய தமிழகத்தில் சோழர், பாண்டியர், போசளர், விசயநகரத்தார் ஆகியோர் இதைக் காத்து நின்றனர். அவர்களுடைய மெய்க்கீர்த்திகள் இதற்குச் சான்று சொல்கின்றன.

முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் தன்னுடைய கி.பி.1220ஆம் ஆண்டுக்குரிய மெய்க்கீர்த்தி (108/1903) யில் 'மூவகைத் தமிழும் முறைமையில் விளங்க ... நால்வகை வேதமும் நவின்றுடன்

வளர... ஐவகை வேள்வியும் ... அறுவகைச் சமயமும் ... சிறக்க' ஆண்டதாக அறிவிக்கிறான். வேத முறை சார்ந்த பாண்டியரின் ஆட்சி பேரரசின் தொடக்க நாளிலேயே அழுத்தமாக அமைந்தது. பாண்டியப் பேரரசின் ஆட்சியைக் கோதாவரி வரை விரிவாக்கஞ் செய்த பாண்டிய நெப்போலியனான முதலாம் சடையவர்மன் சுந்தரபாண்டியன் (கி.பி.1251-71) தனது, 'பூமலர் வளர் திகழ் திருமகள்' எனத் தொடங்கும் மெய்க்கீர்த்தியின்படி பின்வருமாறு தன்னுடைய ஆட்சிமுறை அமைந்தது என்பான். ''அருந்தமிழும், ஆரியமும், ஆறு சமயத்து அறநெறியும் - திருத்துகின்ற மனு நெறியுந் திறம்பாது தழைத்து ஓங்க - முத்தமிழும் மனுநூலும் நான்மறை முழுவதும் - எத்தலச் சமயமும் இனிதுடன் விளங்கவும்''. இது போன்ற செய்திகள் பாண்டியப் பெரு வேந்தர்களின் மெய்க்கீர்த்தியில் வருகின்றன. இவ்வாறு கி.பி.600 அளவிலான பக்தி இயக்கக் காலம் தொட்டு, பாண்டியப் பேரரசின் வீழ்ச்சிக்குரிய கி.பி.1311 வரை வேத வழி முறையும், மனுநூலும் ஆட்சி முறையின் வழிகாட்டுக் கோட்பாடுகளாக விளங்கின.

## அரசரது கடமைகள்

பாண்டியர் ஆட்சி முறையில் மன்னர்களின் கடமைகள் சமூக மரபியலைச் சார்ந்து வரையறுக்கப்பட்டிருந்தன. தென்னிந்தியா முழுமைக்கும் விரிவாகி நின்ற பாண்டியப் பேரரசை நிருவாகம் செய்த பாண்டியப் பெரு வேந்தன் மதுரை அரசின் தலைவனாகச் செயற்பட்டான். ஆட்சி முறையில் பல கடமைகளை அவன் ஆற்றினான். அவற்றைப் பற்றிய விளக்கம் பின்வருமாறு :

## மன்னவத் தகுதி பேணல்

மதுரை நகரின் கிழக்கே மாடக் குளக் கீழ்ப்புறத்தின் அருகில் உள்ள அரண்மனையில் வாழ்ந்த பாண்டிய மன்னனுக்கு மதுரை ஆனைமலையில் முடி சூட்டு விழா நடந்தது. மதுரை மீனாட்சியும் சொக்கநாதரும் அவன் போற்றிய, விரும்பிய (இஷ்ட) தெய்வங்களாகும். அண்மையிலிருந்த மற்றைய நாடுகளின் மன்னர்கள் முடி சூட்டு விழாவிற்குத் தங்களுடைய தூதுவர்களை விருந்தினராக அனுப்பி வைத்தனர். முடி சூடும் கொண்டாட்டத்தின் போது வரிவிலக்கு என்ற சலுகையை மக்களுக்கு அரசு வழங்கியது. ''அபிடேகக்காணி'' என்றவரி சிதம்பரம் பகுதியில் வாங்கப்பட்டது. மகுடாபிடேகம், வீராபிடேகம், விசயாபிடேகம் போன்றவைகளுக்காக இவ்வரி வாங்கப்பட்டிருக்கக் கூடும். துலாபாரமும் உண்டு. அரசன் அனுப்பிய ஆணைகளான திருமுகம் பேரரசின் எந்தப் பகுதிக்கும் சென்றடையத் தக்கதாக பிரசாதவரி (அதாவது திருமுகவரி) மக்களிடம் அரசினரால் வாங்கப்பட்டது.

'வாளுக்கும், தோளுக்கும் நன்றாக' என்றபடி அரசனுடைய வீரம், உடல்நலம் மேம்பாட்டுக்காகச் ''சாந்தி'' என்ற தனிவழிபாடு நிகழ்த்தப்பட்டது. அரசன் பரமேசுவரன் என்றழைக்கப் பெற்றான். தெய்வமாகவே கருதப்படாமல் தெய்வாம்சமாக அவன் மதிக்கப்பட்டான். நாயனார், பெருமாள் என்ற மற்றைய தெய்வாம்சப் பெயர்களும் பாண்டியனுக்கு உண்டு.

மாறன், சடையன் என்பவை எல்லாம் கடவுள் பரமேசுவரரைத்தான் குறிக்கும். மாறன் என்றளவில் கலையார்வத்தைக் காட்டும் கடவுளாக உணரப்படும். அரசாட்சியின் தொனிப்பொருளாகக் கலையுணர்வும் (மாறன்) அறவுணர்வும் (சடையன்) மாறி மாறி வரவேண்டும் என்பது தமிழ் நாகரிகத்தின் இயல்புப்படி (யதார்த்த வழி) வந்த அரசியல் பாடமாகும். சடையன் என்பதோ அறவுணர்வு சார்பானது. அதனால்தான் கி.பி. 630இல் செழியன் (சடையன் என்பதன் தொடக்கக் காலச் சொல்) என்ற விருதுப்பெயர் தாங்கிய செழியன் சேந்தன் என்பவன் தொடங்கி வைத்த இந்த மரபு திருநெல்வேலி, தென்காசிப் பாண்டியராலும் பின்பற்றப்பட்டது. சுமார் ஆயிரமாண்டுகள் பாண்டியருக்குரிய வழக்காறாக இது அமைந்திருந்தது.

## அமைச்சர், நிலவுடைமைப் பெருங்குடியாளர், காணிஆண்ட தானைத் தலைவர்கள்

மாமன்னனுக்கு அறிவுரை வழங்கிய 'உடன் கூட்டம்' என்ற அமைச்சரவை சோழருக்கு வாய்த்திருந்தது போலப் பாண்டியப் பேரரசின் மத்திய அரசில் எந்த ஓர் அமைப்பும் காணப்படவில்லை. ஆனால் அமைச்சர்கள் செயற்பட்டார்கள். 'உடன் கூட்டம்' என்ற நிறுவன அமைப்பாக அந்த அமைச்சர்கள் இயக்கம் பெறவில்லை. மாறாக, ஏக மந்திரி (முதலமைச்சர்) என்ற பீடுடைய பட்டத்தோடு பல்லவராயன் என்ற பெருங்குடியாளன் விளங்கினான். இந்த அமைச்சர்கள், மரபுரிமையுடன் பாண்டிய அரசருக்குச் சேவை செய்தார்கள்.

மக்களுக்கும், மன்னவனைச் சார்ந்த அரசுக்கும் இடையே அமைந்த பாலமாக இந்த அமைச்சர் பெருமக்கள் செயற்பட்டார்கள். 'நமக்குச் சொன்னமையினாலே' என்ற சொற்றொடர் எல்லா அரசாணைகளிலும் காணப்பெறுகிறது. அதாவது பாண்டிய அரசன் தானாகச் செயற்படாமல் அரசப் பணிகளை மக்கள் சார்பாக அமைச்சர் சொல்லிச் செய்ததாக எல்லாமே அமைந்தன. அரச ஆணைகள் அவ்வாறு வெளியிடப்பட்டன என்பதைத் தெரிவிப்பதற்காக 'நமக்குச் சொன்னமையினாலே' என்ற சொற்றொடர் அரசாணையின் முகப்பிலேயே சேர்க்கப்பட்டது. அமைச்சன் மக்களுக்காக, மக்கள் சார்பில் அரசனை வேண்டிக் கொண்டபோது, பாண்டியருடைய அமைச்சரின் பெயரில் வழங்கி வந்த அரச ஆசனத்தின் மேலிருந்து அந்த

அரச ஆணைகளைப் பாண்டிய மன்னன் வாய்மொழித் தமிழில் எழுத்துருவில் வெளியிட்டான். அப்போதுதான் அந்த ஆணைகளுக்குச் சட்டத் தகுதி நிறைவாக வாய்த்தது. இரண்டாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் தனது எட்டாம் ஆட்சியாண்டில் (கி.பி. 1245) குதிரை வாணிப அரபுகள் (சோனகர்) சார்பாகச் சோனகப் பள்ளிச் சந்தி என்றமைந்த மகுதிக்கு நன்கொடைக்கான அரசாணையைப் (116/1903) பின்வருமாறு வெளியிட்டான். ''பூமலர் திருவும் ... மாமுதல் மதிக்குளம் விளங்கிய சுந்தரபாண்டியன்... மதுகோதைய வளநாட்டு மாடக்குளக்கீழ் மதுரைக் கோயில் பள்ளியறைக்கூடத்துப் பள்ளிப்பீட மழவராயனில் எழுந்தருளியிருக்க கீழ்ச் செம்பி நாட்டு பவித்திர மாணிக்க பட்டினம் கீழ்ப்பால் சோனக சாமந்த பள்ளி... இவர் செய்ய திருவாய் மொழிந்தருளினபடிக்கு... எட்டாவதின் எதிராம் ஆண்டின் எதிராண்டு முதல் சோனகப் பள்ளிச் சந்தி இறையிலி ஆக இறுப்பதாக இடம்பெற வேணுமென்ற ஐயன் மழவராயர் நமக்குச் சொன்னமையில்... குளமும், குளப்பரப்பும் உட்பட்ட நிலத்தில் பழந்தேவதானம் நீக்கி... வெட்டிப்பாட்டம்... தளி இறை... தட்டார்பாட்டம் மற்றும் எப்பேர் பட்டனவும் இவ்வாண்டு முதல் சோனகப்பள்ளிச்சந்த இறையிலியாக இறுப்பதாக இட்டு வரியிலார் எழுதிட்ட உள்வரியும் நம் ஓலையும் தரச் சொன்னோம். கைக் கொண்டு இப்படி சந்திராதித்தவரை செல்வதாக, கல்லிலும், செம்பிலும் வெட்டுவித்துக் கொள்கவென்று திருவாய் மொழிந்தருளினான். இவை மல்லி நாட்டு... உய்ய நின்றாடுவான் வீரகுரு குலத்தரையன் எழுத்து... பல்லவராயன் எழுத்து...'' இவ்வாறு கல்வெட்டு முடிவடைகிறது. அமைச்சன் சொல்லி, அமைச்சன் பெயரினைக் கொண்ட அரியணையில் இப்பாண்டியன் கி.பி. 1245இல் அமர்ந்து கொண்டு வெளியிட்ட இந்த அரசாணை சந்திரன், சூரியன் உள்ளளவும் (சந்திராதித்திய) ஆட்சிக்குரியதாக நடைமுறையில் இருக்கும். கல்லிலும்,செம்புப் பட்டயத்திலும் இந்த ஆணையைச் செதுக்கி வைத்துக் கொள்ளலாம். இந்த ஆணைக்குச் சாட்சியாக அமைச்சர்களாகிய குருகுலத்தரையன், பல்லவராயன் போன்றோர் கையெழுத்து இட்டனர். இவ்வாறு இடப்பட்ட அரச ஆணைகளில் அமைச்சர்களின் பங்கு கணிசமானது. மதுரையிலிருந்த தலைமை மாமன்னரைப்போல் 'உலக முழுதுடையாள்' என்ற அரசத் தகுதியுடைய மனைவி, நாணய வெளியீடு, கோயிலுக்குத் தெய்வச் சிலை அளிப்பு,சந்தி வழிபாடு, மெய்க்கீர்த்தி, வீராபிடேகம் போன்றவற்றைத் தங்களுடைய பெயரிலேயே வைத்துக் கொள்கின்ற முறை இல்லை. ('ஐவர் பாண்டியர்' என்ற) இணையரசர்கள் இவ்வாறு அமைச்சர் பெயருள்ள ஆசனமோ அமைச்சரின் 'நமக்குச் சொன்னமையினாலே' என்ற சட்ட முறையான அரசப் பேரறிவிப்போ தங்களுக்கெனக் கொண்டிருக்கவில்லை.

திருவாய்க் கேள்வி, திருமந்திர ஓலை நாயகம் என்பவர்கள் யாவரும் அரசனுடன் காணப்பட்ட அமைச்சர் தகுதியுடைய பெருந்தர அதிகாரிகள், அவ்வளவே. 'திரிபுவனச் சக்கரவர்த்தி கோனேரின்மை கொண்டான் வீரபாண்டியன்' எனப் பாண்டிய இணையரசனால் - பழனியில் வெளியிடப்பட்ட அரச ஆணை (373 / 1904) அமைந்துள்ளது. 'கோனேரின்மை கொண்டான்' என்று வந்தால் அந்த அரச ஆணை ஒரு செயற்பாட்டு ஆணையாகும். அமைச்சர்கள் இதில் நேரடியாகத் தொடர்பு கொண்டிருந்தார்கள். இவை 'கலிங்கராயன் எழுத்து' என்று குறிப்பிட்டிருந்தால் கலிங்கராயன் என்ற அமைச்சர் பெருமானின் கையெழுத்து இங்கே வாங்கப்பட்டுள்ளது என்று உணரலாம். அப்போது அது சட்டமாகி விட்டது. அமைச்சர்களின் பதவி மரபுவழியாக அடுத்தடுத்து வந்தது. தந்தைக்குப் பின் மகன் அப்பதவிக்கு வந்தான். நல்ல கல்வியும், உரிய பயிற்சியும் அவர்களுக்குக் கொடுக்கப்பட்டிருந்தது. அமைச்சர்களுக்கு எனச் சொந்த நிலங்கள் உண்டு. அந்த நிலப் பகுதிகள் அவர்களுக்கு உரிய ஊதியத்திற்கான காணியாக 'ஜீவிதம்' என்ற பெயரில் வழங்கப்பட்டிருந்தன. மரபு வழியான பயன்பாட்டுக்கு (அனுபவத்திற்கு) இவை விடப்பட்டன. இந்த முறையில் கல்லிடையான் குறிச்சி என்ற புலம், மழவராயன் என்ற அமைச்சனுக்கு அவனுடைய கொள்ளுத்தாத்தாவின் வழி வந்தது.

நிலவுடைமையாளர்களாக இவ்வமைச்சர்கள் விளங்கியதால் 'வேளான்' என்ற பெருங்குடியாளருக்குரிய பட்டமும், தகுதியும் இவர்கள் பெற்றிருந்தார்கள். ஆகவேதான், அமைச்சர் என்ற தகுதியை அவர்களால் பேணிக் காக்க முடிந்தது. மதுரை மீனாட்சிக் கோயிலில் உள்ள கி.பி. 1299ஆம் ஆண்டுக்குரிய மாறவர்மன் குலசேகரனின் கல்வெட்டு சொல்வதுபோல, முதலாம் மாறவர்மன் குலசேகரன் தன்னுடைய அமைச்சனான முனையதரையனுக்கு ஒரு கிராமத்தைக் காணி (ஜீவிதம் என்ற ஊதியம்) எனக் கொடுத்ததாகவும் இந்த அமைச்சனை அம்மன்னன் 'நம்பிள்ளை' என்று அழைத்ததாகவும் தெரிகிறது. தங்களுடைய மரபுரிமை மைந்தர்களை 'நம்பிள்ளை' என்று சோழரும் பாண்டியரும் அழைத்தார்கள். இதேபோன்று புரவலர் தன்மை கொண்ட பாசம், மதிப்பு ஆகியவற்றை அரசரிடமிருந்து பெறுகின்ற தகுதி படைத்த அமைச்சர்களையும் பெருங்குடியாளர்களையும் 'நம்பிள்ளை' என்று சோழரும் பாண்டியரும் அழைத்தார்கள். மேற்சொன்னவாறு முனையதரையனை (கொல்லம் முதல் நெல்லூர் ஆண்ட) குலசேகரப் பாண்டியன் அழைத்தமை அமைச்சர் பதவிக்குப் பாண்டியர் அளித்த மதிப்பைக் கோடிட்டுக் காட்டிற்று.

இந்தக் குலசேகரப் பாண்டியனின் மதுரையிலிருந்த அரியாசனம் 'முனையதரையன்' என்று அழைக்கப்படுவதற்கு வரலாற்றுப் பின்னணி உண்டு. புவனேகவீர தொண்டைமான் என்ற தாயினும் நல்ல பெருமாள்

முனையதரையன் என்பவன் தென்னார்க்காடு திருமுனைப்பாடி நாட்டுப் பகுதியின் குறுநில மன்னன் ஆவான்; சோழமரபின் கடைசி அரசனான மூன்றாம் இராசேந்திரனைப் பாண்டியர் கி.பி. 1268 அளவில் வென்றதைக் குறித்து இந்த முனையதரையன் பல பாடல்களை யாத்துச் சிதம்பரம் கோயிலில் செதுக்கி வைத்தான். சோழரை அறவே ஒழிக்க உதவி செய்த இந்த மரபினரின் சேவையை மதிக்கின்ற அடையாளச் சின்னமாக மேற் சொல்லப்பட்ட குலசேகர பாண்டியன் தனது அரியணையை முனையதரையன் என்று அழைத்தான். தொடர்ந்து அடுத்தடுத்து பதவிக்கு வந்த இரு பாண்டியர்களிடம் மழவரையான் என்ற அமைச்சன் பணியில் இருந்ததை அரியணையின் பெயர் கொண்டு கணிக்கலாம். சான்றாக, திருநெல்வேலியை அடுத்துள்ள திருக்கோளூர் வைத்தமாநிதி கோயில் கல்வெட்டுகளில் இரண்டு அரசாணைகள் காணப்படும். முதலாவது (717 - 1962 / 63) முதலாம் மாறவர்மன் சுந்தர பாண்டியனுடைய 20ஆம் ஆட்சியாண்டுக்குரியது (கி.பி. 1235). மழவராயன் அரியணையிலிருந்து இது பிறப்பிக்கப்பட்டது. இரண்டாவது கல்வெட்டை, மேலே சொல்லப்பட்ட மன்னவனை அடுத்துப் பதவிக்கு வந்த இரண்டாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் தன்னுடைய 11ஆவது ஆட்சியாண்டில் (அதாவது கி.பி. 1243இல்) மழவராயன் என்றழைக்கப் பெற்ற அரியணையிலிருந்து வெளியிட்டான். ஆக, கி.பி. 1235லும், கி.பி. 1248லும் இரண்டு மாமன்னர்களுக்கு அமைச்சராக 13 ஆண்டு இடைவெளியினூடே மழவராயன் தொடர்ந்து பணியாற்றி வந்துள்ளான். மன்னவ சாட்சியமாக ஐயன் மழவராயன் 'நமக்குச் சொன்னமையினால்' என்பது கல்வெட்டு வாசகம். இந்த அமைச்சன் மரியாதைக்குரியவன்; இந்த அமைச்சனுக்கு என ஊதியமாக அமைந்திருந்த புலம் கல்லடையான் குறிச்சி ஆகும். கிலாடி என்ற பகுதியில் இது இருந்தது. (இண்டிகா - தொகுதி 12 பக்கம் 45) மழவராயக் காணியாளரில் வீர பிரதாபன், பள்ளி கொண்ட பெருமாள் போன்றோர் அரச விசுவாசத்திற்குப் பெயர் பெற்றவர்கள். (இந்தியக் கல்வெட்டு ஆண்டறிக்கை 1926) கி.பி. 958இல் ஏற்பட்ட (சிதம்பரம் பகுதி) உடையார்குடிக் கல்வெட்டில் (540 / 1920) கண்டராதித்தன் தேவியார் மழவரையன் மகளார் செம்பியன் மாதேவி என்ற உத்தமச் சோழனுடைய (திருவயிறு வாய்த்த) தாயார் மழவராயரின் குலத்தவள் ஆவாள் என்று குறிக்கப் பெறுகிறாள்.

இதே போல் காலிங்கராயன் என்பவனும் ஏக மந்திரியாக விளங்கினான். இவன் பெயரில் அரியணை இருந்தது. ஆட்சியிலுள்ள பாண்டிய மன்னன் பெயரில், ஏனைய அரச சார்புடையோர் தங்களுடைய பெயர்களை வைத்துக் கொள்வார்கள். சான்றாக, சுந்தரபாண்டிய பிரம்மாதிராச, அதிசயப் பாண்டிய பிரம்மாதிராசன், குலசேகர பிரம்மாதிராசன் என்ற அந்தணப் பெருந்தர அதிகாரிகள்

திருச்செந்தூருக்கு அருகிலுள்ள மாறமங்கலம் கல்வெட்டில் (157-பி / 1903) கையெழுத்திட்டுக் கி.பி. 1231இல் ஆவணம் செய்தனர்.

அமைச்சனின் பெயர் கொண்டு அரசுச் சார்புடையோர் தங்களை அலுவலக முறையில் அழைத்துக் கொண்டார்கள். அவ்வமைச்சர் களுக்குப் பாண்டிய ஆட்சி முறையில் வாய்த்திருந்த மதிப்பு குறிப்பிடத்தக்கது. சான்றாக, நக்கான் செய்யாள் என்ற ஆடல் புலவி 'காலிங்கராய தலைக்கோலி' என்று அரசுச் சார்பில் அழைக்கப்பட்டாள். அதே போல் காலிங்கராயன் ஆசாரியன் எனப் பொற்கொல்லன் அழைக்கப்பட்டான். விக்கிரம பாண்டிய காலிங்கராயன் என்று தனக்கு வாய்த்த பாண்டிய மன்னனுடைய பெயரை முன்னிறுத்தி இவன் தன்னை அழைத்துக் கொண்டான். இத்தகைய முறையில் பெயரமைவதற்குக் காரணம் அந்த மன்னனுக்கும் காலிங்கராயன் குடும்பத்திற்கும் ஏற்பட்டிருந்த மணவினைப் பந்தம் தான் என்ற கருத்தும் உண்டு. ஆனால் அரச விசுவாசத்தைக் காட்டித்தான் இவ்வாறு பெயர் அமைந்தது எனலாம். தனிப்பட்ட முறையில் காணி என்றழைக்கப்பட்ட நாட்டுப் பகுதிகளைச் சொந்தமாகக் கொண்ட இந்த அமைச்சர்கள் குறுநில மன்னர்களின் நிலையில் இருந்தார்கள். உயர்ந்த சமூகத் தகுதியும் அவர்களுக்கு அளிக்கப்பட்டதால் மற்றவர்கள் அமைச்சர்களுக்கு அடங்கிப் போனார்கள். சேரன் உய்யநின்றாடுவான் என்றும் குருகுலத்தரையன் என்றும் அழைக்கப்பட்ட அமைச்சன், கோயில் களுக்கு வருகை தந்த போதெல்லாம் அரசர்க்கு மட்டும் உரியதாகக் கொள்ளப்பட்ட எக்காளம் ஊதப்பட்டது. இது ஓர் அரச சலுகையாகும். அமைச்சர் வழி எவ்வழி அவ்வழி பாண்டிய மன்னர் வழி என்றாகிப் போன ஆட்சிமுறையில் இந்த அமைச்சர்களின் பங்கு கணிசமாகத்தான் காணப்பெற்றது. சோழர் ஆட்சியில் அவர்களுடைய அமைச்சர் பெருமக்கள் அரச அலுவலகத்திற்கு உரிய தூண்களாகச் செயற்பட்டு அரசு இயந்திரம் இயங்குவதற்குத் துணை நின்றார்கள். சோழ அரசனுடன் உள்ள கூட்டம் (உடன் கூட்டம்) என்றளவில் வெறும் அலுவலராக அரசில் அங்கம் வகித்தார்கள். பாண்டியரின் ஆட்சி முறையில் இத்தகைய, அலுவலகத்துப் பணி அழுத்தப்படாத மாண்புடன் அமைச்சர்கள் காணப்பட்டார்கள். அரசனுக்கும், மக்களுக்கும் இடையே ஒரு பாலமாகச் செயற்பட்டார்கள்.

## வெளிநாட்டுறவில் உடன்படிக்கை, ஒப்பந்தம் - ஒரு விளக்கம்

பாண்டியர் ஆட்சி முறையில் அயலாருடன் செய்து கொள்ளும் ஒப்பந்தம், உடன்படிக்கை போன்ற அரச ஆணைகள் சட்ட முறைகளோடு எழுத்து மூலமும் கொடுக்கப்பட்டன. இவ்வாறு எழுதப்பட்ட ஒப்பந்தங்களில் அரச இலச்சினையான இரட்டை மீன் சின்னமிட்டுத் தொடர்புடைய அயலக மன்னனிடம் சேர்ப்பிக்கப்பட்டது. அவ்வாறு

சேர்க்கப்பட்டதற்கு அறிகுறியாகப் பாண்டிய மன்னன் தன்னுடைய கையால் நீர் தெளித்துச் சடங்கு முறைப்படி கொடுத்தான். 'உதகம் பண்ணி' 'நீரோட்டி' என்றமையும் கல்வெட்டுச் சொற்களால் இந்தச் சடங்கு குறிப்பிடப்பட்டது. பாண்டியராட்சியின் உன்னதக் காலக்கட்டமான பதின்மூன்றாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் நிகழ்ந்த வரலாற்று மாறுதல்களுக்கேற்பப் பாண்டியரின் வெளியுறவுக்கான உடன்படிக்கை கள் பெரும்பாலும் ஏற்பட்டன. கி.பி. 1216இல் முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் என்பவன் மூன்றாம் குலோத்துங்க சோழனோடு செய்து கொண்ட ஒப்பந்தமானது 'பிடிபாடு' என்று அழைக்கப்பட்டது. பத்திரப் பதிவின்போது தாராளமாகப் பயன்படும் இந்தச் சொல்லாட்சி அரசர்களின் உறவுகளை நிருணயிப்பதிலும் எடுத்தாளப்பட்டது.

கி.பி. 990 முதல் 1215 வரையுள்ள 225 ஆண்டுகளாக மதுரைப் பாண்டியரைத் தங்களுடைய மேலாண்மையில் பிணைத்து வைத்திருந்த சோழரும் சோழநாடும் பாண்டியரால் வெல்லப்பட்ட பின்பு சோழநாடு சோழர்க்கே திருப்பிக் கொடுக்கப்பட்டது. 'சோணாடு கொண்டருளி' என்ற விருதுப் பெயர் கொண்டு இந்த நிகழ்ச்சி எல்லா ஆவணங்களிலும் மன்னவனுக்குரிய முகமன் சொல்லாகக் குறிக்கப்பட்டது. இந்தப் 'பிடிபாடு' உடன்படிக்கைக்கு ஏறத்தாழ 50 ஆண்டுகளுக்குப் பின்பு முதலாம் சடையவர்மன் சுந்தரபாண்டியன் (கி.பி. 125) கொங்கு நாட்டு மன்னர்களுடன் ஏற்படுத்திக் கொண்ட ஒப்பந்தம் 'இசைவுத்திட்டு' என்றழைக்கப் பெற்றது. 'எம்மண்டலமும் கொண்டருளி' என்ற விருதுமுகமன் செய்திகள், வெல்லப்பட்ட நாடுகள் கப்பங்கட்டச் சம்மதித்தபோது அந்நாடுகள் அந்தந்த மன்னர்க்கே திருப்பிக் கொடுக்கப்பட்டன என்பதைக் குறிக்கின்றன. இதனை 'அருளி' என்ற சொல்கொண்டு குறிப்பிட்டார்கள். அரசுக்குள்ளே அரசு அமைந்தது போலப் போசளர் பாண்டி மண்டலத்துத் திருமய்யம் என்ற இடத்தில் 'நாட்டுப்பாடி' என்ற வரியைப் பாண்டிய அரசினருடன் சேர்ந்து வசூல் செய்து பங்கிட்டுக் கொண்டார்கள். அது சமயம், போசளப் படைத்தளகர்த்தனான அப்பையன் அந்தப் பகுதியிலுள்ள வைணவர் - சைவப் பூசலுக்கு உரிய தீர்ப்பாயமாகச் செயற்பட்டான். அப்பூசலைத் தீர்த்தும் வைத்தான் என்பன போன்ற செய்திகள் கிடைக்கின்றன.

வெளிநாட்டவரோடு தொடர்புடைய உடன்படிக்கை போன்ற ஆவணங்களை முறைப்படி எழுதித் தயாரித்தவர்கள் செய்த பணியைச் 'சந்தி விக்கிரமம்' என்றழைத்தார்கள். ஆவண சம்பந்தமான எல்லா எழுத்துப்பணிகளையும் இந்தச் சந்தி விக்கிரமப் பணியாளர்கள் எல்லா இடங்களிலும் செய்தார்கள். இவர்களுக்கான ஊதியமாகச் 'சந்தி விக்கிரகப் பேறு' என்ற வரி எல்லா இடங்களிலும் அரசினரின் பெயரால் வசூலிக்கப்பட்டது. இவ்வாறு தயாரிக்கப்பட்ட ஆவணங்களை

மன்னரவையிலிருந்து வெளியே எடுத்துச் செல்லப் 'பிரசாதவரி' வாங்கப்பட்டது. எந்த மக்களைச் சென்றடைந்ததோ அந்தப் பகுதி மக்கள் இந்தச் செலவு வரியைக் கொடுத்தார்கள். 'சந்தி விக்கிரகி' என்றழைக்கப்பட்ட ஓர் அரசு அலுவலாளன் போசள மன்னனுடைய அவையில் காணப்பட்டான். அவன் இந்த வகையான ஆவணத் தயாரிப்பாளனாக வேலை செய்தான். இத்தகைய தனி அலுவலன் பாண்டிய அரசனுடைய அவையில் காணப்படவில்லை. திருவாய்க் கேள்வி என்ற அமைச்சர் தகுதியுடைய பெருந்தர அதிகாரி சந்தி விக்கிரகப்பேறு அலுவலாளரை மேற்பார்வை செய்தான்.

## மாநிலப் பகுதிகளில் ஆட்சிமுறை

பாண்டியப் பேரரசின் ஆட்சி தஞ்சையிலிருந்து தொண்டை மண்டலம் வரை (கி.பி. 1220 அளவில்) பரவியிருந்தது. மதுரையில் அமர்ந்திருந்து ஆட்சி செய்த தலைமையான பாண்டிய மாமன்னனைப் போல அவனுடைய சகோதர இணையரசர்கள் பேரரசு எங்கும் பரவி நின்ற அந்தந்தப் பகுதிகளை நேரடியாக ஆட்சி செய்தார்கள். நேரடி ஆட்சியானது பெருவேந்தனுடைய இணையரசர்களின் மூலம் ஆங்காங்கே நிலை பெற்று இருந்தது. அடிக்கடி இடமாற்றம் செய்யப்பட்ட இந்த இணையரசர்களின் நேரடிக் கண்காணிப்பில் மற்றைய ஆட்சியாளர்கள் அவர்களுக்கு உரிமையான புலங்களில் ஆட்சி செய்தார்கள். சான்றாக, சடையவர்மன் வீரபாண்டியனும் மாறவர்மன் விக்கிரமபாண்டியனும் தஞ்சை மண்டலத்தையும் தொண்டை மண்டலத்தையும் தனித்தனியே ஆட்சி செய்தபோது, அந்தப் பகுதிகளில் அடங்கி இருந்த காடவராயர், சாம்புவரையர், யாதவராயர் போன்ற குறுநில மன்னரின் நிலை உடையோரைக் கண்காணித்தார்கள். இந்த வகைக் குறுநில மன்னர்கள் மரபுரிமையாகத் தங்கள் பகுதிகளை ஆட்சி செய்து வந்தார்கள். முந்தியகாலத்து வழக்காற்றின்படி, மேலாண்மை அரசு (மதுரை அரசு) அவர்களிடமிருந்து கப்பம் வாங்கி இருக்க வேண்டும்.

குறுநில மன்னர்களின் ஆட்சிப் பகுதியில் ஏற்படுத்தப்பட்ட எல்லா ஆவணங்களிலும் மேலாண்மையான மதுரைப் பாண்டியன் அல்லது அதே நிலையில் இருந்த இணையரசன் ஆகியவரின் ஆட்சியாண்டு குறிக்கப் பெற்றது. அதன்படிச் சட்டத் தகுதியை அந்த ஆவணங்கள் பெற்றன. போசளரின் அரசியல் குறுக்கீடு காரணமாக மதுரைப் பாண்டியரின் மேலாண்மை தொண்டை மண்டலத்தில் மங்கிய காலங்களில் (கி.பி. 1235 அளவில்) காடவராயனான கோப்பெருஞ்சிங்கன், காஞ்சி - நெல்லூர் மன்னன் கண்டகோபாலன் ஆகியோர் தங்களை உயர்த்திக் கொண்டார்கள்; திரிபுவனச் சக்கரவர்த்தி எனக் கல்வெட்டு ஆவணங்களில் தங்களை அழைத்துக் கொண்டார்கள்;

அரச நிலையில் உரிமை கொண்டாடினார்கள். கி.பி. 1258 அளவில் முதலாம் சடையவர்மன் சுந்தரபாண்டியன் நடத்திய திசை வெற்றியில் (திக் விஜயத்தில்) ஏற்பட்ட போர் வெற்றியின் விளைவாக இந்த இரண்டு மன்னர்களும் மறுபடியும் பாண்டியரின் மேலாண்மையை ஒப்புக்கொண்டு பாண்டியரின் பெயரால் ஆட்சி செய்யத் தலைப்பட்டார்கள். இடைக்கால ஆட்சி முறைமையில் காணப்பட்ட நடைமுறை வழக்கந்தான் இது. முதலாம் குலோத்துங்க சோழன் (கி.பி. 1070) ஆட்சி செய்த போது அவனுடைய ஆட்சியாண்டைக் குறிக்கின்ற வகையில் அதே எண்ணிக்கையுள்ள மணிகள் கோத்த கழுத்து மாலையைக் குறுநிலமன்னர் அணிந்து கொண்டார்கள்.

எல்லையோரப் பகுதியில் அல்லது எல்லைகளில் இருந்த குறுநில மன்னர்களின் நிலை அளப்பரிய அவலத்துக்கு உள்ளாகியது. சான்றாக, மதுரைப் பாண்டியருக்கும், கங்காபுரிச் சோழருக்கும் உரிய நாடுகளின் இடையே காணப்பட்ட (எல்லைப்புறமான) புதுக்கோட்டைப் பகுதியை ஆண்ட நிஷாதராசன் என்ற குறுநிலமன்னர் மரபினர் பாண்டியருடனோ சோழருடனோ மாறிமாறி அணி சேர்ந்து கொள்ள வேண்டியதாயிற்று. மேற் சொல்லப்பட்ட அத்தனைச் செய்திகளிலும் உள்ளுறைப் பொருளாகக் காணப்படுவது என்ன? குறுநில மன்னர்கள் தங்களது பகுதிகளில் தங்களுடைய ஆட்சி முறையைத் தாங்களே மரபுரிமையாகக் கைக்கொண்டிருந்தார்கள். மதுரை (மைய) அரசிற்கு மரியாதையும் ஆங்காங்கே காணப்பட்ட இணையரசர்களுக்குக் கீழ்ப்படிதலுள்ள இணக்கத்தையும் அவர்கள் கொண்டிருந்தார்கள். ஆகவே மைய அரசின் ஆட்சிமுறை நேரடியான இறைமையைப் பின்னணியாகக் கொண்டு குறுநில மன்னர்களின் ஆட்சிப் பகுதியில் காணப்படவில்லை; அதற்கு அவசியமும் இல்லை. இடைக் காலத்துப் பாண்டியர் அரசாட்சியில் காணப்பட்ட இயல்பான கூறுபாடு என்றளவில் கருநாடகப் போசளருடன் உறவாடிய பாண்டிய ஆட்சியாளர்கள் நாடெங்கிலும் போசளரை இணையரசுக்காரர்களாக ஏற்றுக் கொண்டார்கள். ஆகவே மாநில அளவிலான ஆட்சி முறையில் இரட்டையாட்சிக்கான வரைமுறைகள் கி.பி. 1235 முதல் 1251 வரை, 13 ஆண்டுகள் நடைமுறைப்படுத்தப் பட்டன. 'அரசுக்குள் அரசு' என்பது கிடையாது. என்றாலும் போசளக் கன்னடியரின் படைத் தளபதிகள் 'கன்னாட்டரசர்' என்ற பெயரில் நெல்லைப்பகுதி காருசேரி போன்ற புலங்களில் காணப்பட்டனர் என்பதைத் தவிர வேறு தகவல்கள் கிடைக்கப் பெறவில்லை.

'நாட்டு விநியோகம்' அல்லது 'நாட்டுப்பாடி' என்ற வரியைப் பாண்டிய, போசள தளபதிகள் தங்களுக்குள் சமமாகப் பங்கிட்டு வாங்கினார்கள். இது இராமநாதபுரத்து இளையாங்குடிப் பகுதியில் நடந்தது. பாண்டிய ஆட்சிமுறையில் ஏற்பட்ட புதுமையான கூறுபாடு இது. பாண்டியரைப் போலவே (கி.பி. 1233 அளவில்) போசளருடன்

உறவு கொண்டிருந்த சோழர், பாண்டியரின் இரட்டையாட்சியைப் போன்ற புதுமையைத் தங்களுடைய ஆட்சி முறையில் புகுத்தவில்லை. பாண்டியரின் உள்ளாட்சி முறையில் புதுமை (வம்பு) புகக்கூடிய அளவில் மதுரைப் பாண்டியரின் ஆட்சிமுறை நெகிழுந் தன்மையுடன் விளங்கியது. இன்னொரு புதுமையும் காணப்பட்டது. குதிரை வாணிபத்தில் ஈடுபட்டிருந்த 'சோனகர்' என்றழைக்கப்பட்ட முகமதிய வணிகர்களில் முதன்மையானவனான அப்துல்ரகுமான் என்பவனுக்கு இராமநாதபுரக் கடற்கரையோரத் தேவிபட்டினப் பகுதியானது காணியாக (தனியாணைப் பகுதியாக) விடப்பட்டிருந்தது. டெல்லி சுல்தானுக்கு வெள்ளிக் கிழமை தோறும் மசூதியில் 'குட்பா' என்ற அரசு அங்கீகார மடல் வாசித்தளிக்கப்பட்டது. அதுபோன்ற அரச மரியாதை இந்த அரபு வணிகர்களுக்கும் உள்ளூர் மசூதியில் வழங்கப்பட்டது.

மலை மண்டலம் என்று வழங்கப்பட்ட அந்நாளைய வடகேரளப் பகுதியில் குதிரைச் செட்டிகள் என்ற குதிரை வணிகர் இருந்தனர். தமிழகத்தில் குதிரை வாணிபம் செய்தனர். ஆனாலும் சோனகர் என்ற அரபு வணிகர்க்கு வழங்கப்பட்டிருந்த சலுகைகளை இந்தக் குதிரைச் செட்டிகள் பெறவில்லை. குதிரை (அதுவும் அரபுக் குதிரை) படைப்பொருளாக அந்நாளில் கருதப்பட்டது.

கி.பி. 1070இல் தொடங்கிய பாண்டியரின் விடுதலைப்போர் சோழர்களையும், கி.பி. 1238க்குப் பின்பு போசளரையும் நோக்கி நடத்தப்பட்ட போது இடையறாமல் நடந்து வந்த போர் ஆயத்தம் மாநிலத்து ஆட்சி முறையைப் பெரிதும் பாதிக்கவில்லை. 'சாமந்தர்' என்ற தானைத் தளபதிகள் அதிகமான எண்ணிக்கையில் காணப்படவில்லை. சாமந்தர் என்பவர்களைப் பற்றிய சிறு குறிப்புகள் மட்டும் ஆங்காங்கே கல்வெட்டுகளில் தலைநீட்டுகின்றன. ஆரியச் சக்கரவர்த்தி, மழவச் சக்கரவர்த்தி ஆகியோரின் தனிப்பட்ட தகுதி இன்னும் கணிக்கப் பெறவில்லை. இராமநாதபுரம் கடற்கரையையும், ஈழத்தின் மேற்பகுதியையும் இணைத்துச் 'சேது காவலன்' என்ற பெயரில் பாண்டியர்கள் கி.பி. 1280 அளவில் ஓர் ஆட்சிப் பகுதியை உருவாக்கினார்கள். இம்மாநிலப் பகுதிக்கு ஆரியச் சக்கரவர்த்தி என்ற சாமந்தர் (அந்தணத் தளபதி) பொறுப்பு வகித்தார்.

போர் மனப்போக்கும், வலிமையும் கொண்ட மாநிலப் பகுதிகளின் அதிபர்கள் தங்களுக்குள் போரிட்டுக் கொள்ளப் பாண்டியரால் அனுமதிக்கப்பட்டார்கள். ஒருவர்க்கொருவர் உத்திக்கு உத்தி வாள் சண்டையிட்ட போது அவரவர்களுடைய வாள் நுனியைப் பயன்படுத்தக் கூடாது என்ற சட்டம் நடைமுறையில் இருந்தது. முதலாம் குலோத்துங்கன் (கி.பி. 1070) காலந் தொடங்கி மாநிலப் பகுதிகளின் ஆட்சியாளர்கள் தனித் தனியாகவோ, கூட்டாகவோ போர்

ஒப்பந்தங்களைத் தங்களுக்குள் செய்து கொள்ள அனுமதிக்கப் பட்டார்கள். ஆனால் பாண்டியராட்சி முறையில் இந்த அனுமதி மறுக்கப் பட்டிருந்தது. எவரும் ஒப்பந்தங்களைச் செய்து கொள்ளவில்லை. மாநிலங்களை நிறைவான கட்டுப்பாட்டிற்குள் பாண்டியரின் மத்திய அரசு வைத்திருந்தது என்பதை இந்தச் செய்தி நமக்குப் புலப்படுத்தும்.

## ஐவர் பாண்டியர் - ஆட்சி நிறுவனம்

மதுரைப் பாண்டிய மன்னர்களை ஐவர் பாண்டியர் என்று அழைப்பர். ஐவர் பாண்டியர் என்ற சொற்றொடர் தனி நபர்களைக் குறிப்பதல்ல; மாறாக, பாண்டிய அரசியலுக்கே உரியதான ஒரு நிறுவனத்தைக் குறிக்கும். முதலாம் குலோத்துங்க சோழன் கி.பி. 1095இல் அமைத்த திருவாரூர்க் கல்வெட்டில் (633 / XVI) ஐவர் பாண்டியர் என்ற குறிப்பு வருகிறது. ஐந்து மன்னர்கள் ஒரே நேரத்தில் பாண்டிய நாட்டை ஆண்டதைத்தான் அந்தக் குறிப்பு விளக்கும். எந்தவொரு நாட்டிற்கும் ஓர் அரசும், ஓர் அரசனும் என்பதுதான் அரசியல் நியதி.

ஆனால் இதற்கு மாறாக, ஐவர் பாண்டியர் அமைப்பு அரசியல் தமிழகத்துப் பாண்டியரின் வரலாற்று மரபின் அடிப்படையில் தோன்றியது என்பது தெளிவு.

கி.பி. 1294இல் திருச்செந்தூர் அருகிலுள்ள காயல் என்ற தென்பாண்டித் துறைமுகத்தில் சுந்தரத்தேவர் என்ற பாண்டிய மன்னன் இருந்தான் என வெனிசு நகர வணிகப் பயணி மார்க்கோபோலோ தனது பயண நூலில் கூறியுள்ளார். அதே நாட்களில் மதுரையில் இருந்த பாண்டிய மன்னன் மாறவர்மன் குலசேகரன் (1268) ஆவான். 'கம்ல்ஸ் தேவா' என இவனை (மார்க்கோபோலோ காலத்தைச் சேர்ந்த) முகமதிய ஆசிரியர்கள் அழைக்கிறார்கள். இவன் காலத்தில் பாண்டிய நாடு ஐவரால் ஆளப்பட்டதாகவும் அவர்களில் மூத்தவன் இவனே என்றும் மார்க்கோபோலோ குறித்துள்ளார். மேலும் பாண்டிய சகோதரர்கள் சண்டை போட்டுக் கொள்ளாதவாறு அவர்களது தாயார் அமைதி காத்து வருகிறார் என்றும் அவர் குறிப்பிட்டுள்ளார். ஒரே சமயத்தில் பல பாண்டிய சகோதரர்கள் ஆட்சி செய்ததை வாசாபின் குறிப்புகளும் மகாவம்சமும் குறிக்கின்றன. ஆகவே பாண்டியர் பன்மையில் ஆட்சியிலிருந்தார்கள் என்பது உறுதி. கி.மு. மூன்றாம் நூற்றாண்டு முதல் கி.பி. பதினான்காம் நூற்றாண்டு வரை அதுவே நடைமுறை அரசியலாக இருந்தது; அதாவது 1600 ஆண்டுகளாக இந்தப் பன்மை முறை பாண்டியருக்கு அறிமுகமாகி இருந்து வந்துள்ளது.

மதுரையைக் கி.பி. 1323 அளவில் முழுமையாக ராணுவ முறையில் இழந்து பின்பு மதுரைப் பாண்டியர் மதுரை நீங்கலான ஏனைய தமிழகப் பகுதியை (குமரி முனை முதல் சென்னை வரை) கி.பி. 1375 அளவில் ஆண்டார்கள்; பாண்டிய ஆட்சி முறையைப் பின்பற்றினார்கள்.

திருநெல்வேலி - தென்காசிப் பாண்டியர்களும் ஐவராக அந்தப் பகுதிகளை 1675 வரை ஆண்டதாக வரலாறு உண்டல்லவா? ஆகவே இந்த ஐவர் பாண்டியர் என்ற பன்மைப் பாண்டியர் ஆட்சி, சுமார் 2000 ஆண்டுகளாகத் தொடர்ந்து நடைமுறையில் இருந்துள்ளது என்பதும் வரலாற்று ஆய்வுக் கருத்தாகும்.

வைகையின் மதுரையில் வழுதி, மன்னார் கடற்கரைக் கொற்கையில் செழியன் என்றாகித் தென்னகத்தில் பாண்டிய மரபினர் எனக் கூறப்பட்டனர். சிலப்பதிகாரம் சொல்வது போல மதுரை மன்னன் மாய்ந்த போது, கொற்கையின் வெற்றிவேல் செழியன் மதுரையின் ஆட்சியைத் தொடர்ந்து நடத்தலானான். அப்படியானால் ஒரே காலத்தில் மதுரையிலும், கொற்கையிலும் பாண்டிய மன்னர்கள் காணப்பட்டார்கள் என்பது பொருள். 'ஐவர் பாண்டியர்' என்பது கருத்தளவில் பாண்டிய நாட்டுக்கு உரியதுதான். ஐந்து அரச பீடங்கள் என்ற கருத்து சங்க காலத்திற்கு - அதாவது அதன் தொடக்க காலத்திற்கு - அறிமுகமானது தான். ஆதி காலத்துச் சோழ மரபுவழியினர் காவிரிப்படுகையில் காணப்பட்ட உறந்தை, வல்லம், குடந்தை, பழயூர், பெருந்துறை ஆகிய ஐந்து இடங்களில் அரச பீடங்களை நிறுவி அரசாட்சி செய்யத் தொடங்கினார்கள். ஐவர் பாண்டியரில் ஐந்து இடங்கள் சொல்லப்படவில்லை. ஆனால் ஐந்து சகோதர அரசர்களை ஆட்சியுரிமை இணைப்பில் காண முடிகிறது.

## ஐவர் பாண்டியர் நிறுவனமாகத் தோன்றியது ஏன்? எவ்வாறு?

விசயாலயச் சோழர்களின் ஏகாதிபத்திய ஆக்கிரமிப்புக் கொள்கைக்கு எதிர்ப்பு தெரிவிக்க முனைந்த பாண்டியர், 'ஐவர் பாண்டியர்' ஆனார்கள்; அவ்வளவே. கி.பி. 1018 அளவில் முதலாம் இராசேந்திர சோழன் மதுரையைச் சோழ நாட்டோடு சேர்த்துக் கொண்டான். அங்குச் சோழரின் நேரடி ஆட்சி முறையை நிலைநாட்டினான். ''சோழ பாண்டியர்'' என்ற பட்டத்தோடு தனது மகன்களை அரசப் பிரதிநிதிகளாக (படி நிகராளியாக) ஆட்சி செய்ய அவன் பணித்தான். புதுக்கோட்டையின் பொன்னமராவதி, நெல்லைப் பகுதியின் சேரமாதேவி, நாகர்கோவில் நகரின் கோட்டாறு போன்ற இடங்களில் இராசேந்திரனின் நிலைப்படைகள் நிறுவப்பட்டன. ஆங்காங்கே சோழரின் அடக்குமுறை மையங்களையும், சோழரின் ஆதரவாளர்களையும் பாண்டியர் எதிர்க்க வேண்டியதாயிற்று. ஆகவே பல பாண்டியர்கள் தோன்ற வேண்டியது என்பது காலத்தின் கட்டாயமாயிற்று.

கி.பி. 1018இல் தொடங்கி 50 ஆண்டுகள் வரை பாண்டியர் பலர் சோழரின் நேரடி திருவாகத்தை எதிர்த்துப் போராடினார்கள். முதலாம் இராசேந்திர சோழன் தன்னை எதிர்த்த பாண்டியனைத் 'தென்னவன்'

என்று ஒருமையில் தான் அழைக்கின்றான். 'தென்னவன் வைத்த சுந்தர முடியும், இந்திர ஆரமும்' என்பது கல்வெட்டுத் தொடர். சோழன் இராசாதிராசனுடைய கி.பி. 1040ஆம் ஆண்டுக்குரிய (சித்தூர் மாவட்டம்) கல்வெட்டு ''ஸ்வஸ்தி ஸ்ரீவீரபாண்டியன் தலையும் சேரலான் சாலையும் இலங்கையும் தண்டால் கொண்ட'' என்று தொடங்குகிறது. வீரபாண்டியன் என்ற ஒரு பாண்டிய அரசனைத்தான் இச்சோழன் வென்றான் என்பதுதான் இதன் குறிப்பாகும். ஐந்து ஆண்டுகள் கழிந்த பின்னர் இதே சோழனின் மேல சேலூர்க் கல்வெட்டு (209 / 1904) பின்வருமாறு கூறுகிறது. ''தென்னவர் குல மகன் மானாபரணன் பொன்முடியானைப் பருமணி பசுந்தலை பொருகளத்து அரிந்து வீரகேரளனை ஆனைக்கு இடுவித்து அசைவில் சுந்தரபாண்டியனை திசை கெடத் தொல்லையில் முல்லையூர் துரத்தி'' என உரைக்கிறது. அதே சோழனின் இன்னொரு கல்வெட்டில் (537/) ''தென்னவர் மூவருள் மானாபரணன்'' என்று வருகிறது. ஆக, தென்னவர் என்றும் ''தென்னவர் மூவருள்'' என்றும் இராசாதிராசன் பாண்டியரைச் சித்திரிக்கிறான். கல்வெட்டுகளில் ''தென்னவர் மூவருள்'' என்றுதான் வருகிறது. ''பாண்டியர் ஐவர்' என வரவில்லை. குலோத்துங்கனின் கி.பி. 1070ஆம் ஆட்சி ஆண்டளவில் தான் 'பாண்டியர் ஐவர்' என்ற தொடர் சோழரின் கல்வெட்டுகளில் பல இடங்களில் வருகிறது. ஒன்றுக்கு மேற்பட்ட பாண்டியர் தோன்றினால் தான் சோழப் பேரரசிலிருந்து விடுதலை கிடைக்கும் என்ற அரசியல் உண்மை நிலவிய காலம் அது. கலிங்கத்துப் பரணியில் செயங்கொண்டார் தனது பாட்டுடைத் தலைவனான முதலாம் குலோத்துங்கனுடைய புகழ்பாடும் முகமாகக் கீழ்க்கண்ட செய்திகளைக் கூறுகிறார். ''விட்டதண்டெழ மீனவர் ஐவருங் - கெட்ட கேட்டினைக் கேட்டிலை போலு நீ'' (பரணி - 11 தாழிசை - 70). மேலும், திருவாரூர்க் கோயிலின் கல்வெட்டு (577 / 1904) இதே சோழ மன்னனை எதிர்த்து 'பஞ்சவர் ஐவரும் பொருத போர்க்களத் தஞ்சி'' விலகியதாக பாண்டியரைக் குறிக்கிறது. பஞ்சவர் ஐவராக இருந்தார்கள் என்பது தெளிவாக அறியப்படுகிறது.

## ஐவர் பாண்டியர் நிறுவனத்தின் அமைப்பு

ஐவர் பாண்டியர் நிறுவனம், மதுரைப் பாண்டியனைத் தலைவனாகக் கொண்டிருந்த பன்மையியல் ஆட்சி முறையாகும். ஒரே நேரத்தில் ஐவர் ஆட்சியில் இருந்ததால் இத்தகைய தலைமையாளன் தேவைப்பட்டான். மதுரைப் பாண்டிய மன்னனுடைய நேரடி மரபில் வந்த மகன் இந்தத் தலைமையாளனாக வந்ததாக நேரடிச் சான்றுகள் இல்லை. வலிமையற்ற மன்னன் மதுரையில் இருந்ததால் வலிமையாள னொருவனை முன்னிறுத்தி மதுரைப் பீடத்தின் அரசியலை முனைப்புடன் நடத்துகின்ற வழக்கமான நடைமுறையில் இருந்தது எனலாம். இருவர்

பாண்டியர் முடித்தலைக் கொண்டருளி என்ற பட்டத்தைச் சோழன் சூடிக் கொள்கின்ற நிலை ஏற்பட்ட போது ஆட்சியிலிருந்த வலுவற்ற மன்னனை அகற்றி விட்டு இன்னொரு வலிமையாளனைப் பதவி ஏறச் செய்தார்கள். ஐவர் பாண்டியர் ஆட்சி செய்ததைப் பின்வரும் அட்டவணை விளக்கும்:

1. மாறவர்மன் குலசேகரன் (ஆட்சித் தொடக்கம் கி.பி. 268)
2. சடையவர்மன் வீரபாண்டியன் (கி.பி. 1295)
3. மூன்றாம் சடையவர்மன் சுந்தரன் (கிபி 1304)
4. சடையவர்மன் சீவல்லவன் (கி.பி 1308)
5. மாறவர்மன் சீவல்லவன் (கி.பி 1308)

மதுரை மாமன்னனோடு காணப்பட்ட இணையரசர் நான்கு பேர்களாகத்தான் இருந்தாக வேண்டிய கட்டாயமில்லை. ஆனால் பாண்டிய குலத்து இளவல்கள் தாம் இணையரசப் பதவிக்கு வந்தார்கள். அவர்களுடைய மரபினர் அப்பதவிகளை அடைந்தார்களா என்பது தெளிவாகவில்லை. மதுரையின் முதன்மையாளன் வயதில் மற்றைய இணையரசர்களை விட இளையவனாகக் கூட இருக்கலாம். முதலாம் சடையவர்மன் சுந்தர பாண்டியன் கி. பி. 1251 இல் தனது இணையரசனான மாறவர்மன் விக்கிரம பாண்டியனை (அண்ணா ஸ்ரீ என்பதன் தமிழாக்கமான) அண்ணாழ்வி (தமையன்) என்று தனது கல்வெட்டுகளில் அழைக்கிறான். ஆகவே வயது ஒரு பொருட்டல்ல. ஆனால் மதுரையின் தலைவன் 'உலகுடைய பெருமாள்' என்றும் 'பெரிய தேவர்' என்றும் அழைக்கப் பெறுவான். இணையரசர்கள் ' பெருமாள்' என்று மட்டும் விளிக்கப்படுவர்.

மதுரை மாமன்னன் இணையரசர்க்குப் பேரரசின் பகுதிகளைப் பிரித்துக் கொடுத்தான். முதலாம் மாறவர்மன் குலசேகரன் இவ்வாறு செய்ததைப் பின்வரும் கி.பி. 1302ஆம் ஆண்டுக்குரிய கல்வெட்டின் தொடர் விளக்குகிறது. ''உலகுடைய பெருமாள் திரு. தம்பிமார்க்கு திருக்கை வழக்கமாக செய்தருளுகையானும்'' (46/1906) இணையரசர்க்கு வழங்கப்பட்ட சரகங்கள் மாறுவதற்கு வழியுண்டு. அதாவது இணையரசர்கள் முதன்மையாளனால் இடம் மாற்றப்படுவார்கள். பாண்டிய மண்டலத்தில் அம்பை- கல்லிடைகுறிச்சியிலும், நடுவில் மண்டலத்தில் சிதம்பரத்திலும் சோழ மண்டலத்தில் திருச்சிப் பகுதியிலும் மாறவர்மன் விக்கிரமனின் கல்வெட்டுகள் புகனேகவீர என்ற மெய்க் கீர்த்தியோடு காணப்படுகின்றன. சோழ மண்டலத்தைச் சேர்ந்த கிராமங்கள், நாட்டார்கள் ஆகியவர்கள் ஒன்று சேர்ந்து கூட்டம் போட்டு இணையரசனின் ஆட்சியை மாற்றுமாறு மதுரைப் பெருவேந்தனைக் கேட்டுக் கொண்டார்கள்(46/1906).

மதுரையின் முதன்மையாளனை எடைக்கு எடை கோயிலில் நிறை பார்ப்பதற்குத் துலாபாரவரி வாங்கப்பட்டது. இணையரசருக்குத் துலாபாரம் செய்யும் தகுதி அளிக்கப்படவில்லை எனத் தெரிகிறது. 'எம் மண்டலமும் கொண்டருளிய' என்ற பட்டத்தை மதுரைப்பதி முதலாம் சடையவர்மன் சுந்தரனும் அவனது அண்ணாழ்வி (வயதில் மூத்தவன்) மாறவர்மன் விக்கிரமனும் கொண்டிருந்தாலும் சுந்தரன் தன்னை மகாராசராச பரமேசுவரன் என்றழைத்துக் கொண்டான். இராசராச பரமேசுவரன் என்ற பட்டம் விக்கிரமனுக்கு உரியதாயிற்று. 'மகா' என்ற உயர் பட்டம் மதுரையின் தலைவனுக்கு மட்டும் உண்டு. ஆனால் ஆட்சியாண்டு இருவருக்கும் தனித்தனியே உண்டு.

## உள்ளாட்சித்துறை - தன்னாட்சி முறை

ஊரவர், சபா, நகரத்தார், நாட்டார் போன்ற உள்ளாட்சி மன்றங்கள் எல்லாம் வருவாய்த் துறைக்கான புலங்களைச் சார்ந்தவை ஆகும்; அதாவது ஊர், கூற்றம், நாடு, வளநாடு, மண்டலம் போன்ற வருவாய்த் துறைப் பகுப்புகளில் அவை உள்ளடங்கி இருந்தன.சமூக வாழ்க்கை மேற்கொள்ளப்பட்ட ஊர், பிரம்மதேய கிராமம், நகரம், நாடு என்ற புலங்களில் எல்லா மக்களின் கூட்டு வாழ்க்கை ஏற்றுக் கொள்ளப்பட்டது. செய்தொழில் கொண்டு தனிக் கூறுகளாக விளங்கிய வணிகர், வேளாண்மையாளர் தங்களுக்கெனப் பதினெண் விஷயத்தார். (பதினெட்டு நாடுகள்) சித்ரமேழி நாட்டார் என்ற அமைப்புகளைக் கொண்டிருந்தார்கள். உழவுத் தொழிலும், அதற்குச் சார்புடைய ஏனைய கைத்தொழில்களும் நடைபெற்று வந்த இடங்கள் ஊர்கள் அல்லது கிராமங்கள் ஆகும். இவைதாம் பாண்டியப் பேரரசில் எங்கும் பெரும்பான்மையாகக் காணப்பட்டன. 'ஊர் உலகம்' ஆகும் வேளாளர் என்ற பாரம்பரிய நிலவுடைமையாளர்கள் அங்குத் தான் இருந்தார்கள். இவர்கள் குடியானவர்களை வேலைக்கும், குத்தகைக்கும் அமர்த்திக் கொண்டார்கள். இவ்வாறுதான் வேளாண்மை செய்யப்பட்டடது. இந்தக் கிராமங்கள் (ஊர்கள்) வெள்ளான் வகையைச் சேர்ந்தவை ஆகும். ஊரில் காணப்பட்ட தன்னாட்சி அமைப்பு 'ஊரவர்' என்ற பொதுச் சபையாக அழைக்கப்பெற்றது. ஊரவர் அவை ஒவ்வொரு கிராமத்திலும் காணப்பட்டது. பல கிராமங்களை ஒன்று சேர்த்து அக்கிராமங்களை அங்குள்ள நிலங்களோடு. அரசர்களும் ஏனைய பெருங்குடியாளரும் விலைக்கு வாங்கினார்கள். அந்நில உரிமையாளரான வேளாளரிடம் இருந்து விலை கொடுத்து வாங்கினார்கள். அவற்றைச் சதுர்வேதி மங்கலமாக (பிரம்மதேயமாக) மாற்றியமைத்தார்கள். இந்த மங்கலங்களை அறவாழி அந்தணருக்குத் தானமாக வழங்கினார்கள்; தங்களுக்கெனப் புண்ணியத்தையும், நாட்டிற்கான நலத்தையும் இவ்வாறு அவர்கள் தேடிக் கொண்டார்கள். அப்போது ஊர்களின் கட்டுக் கோப்பு (வெள்ளான் வகை) பாதிக்கப்பட்டது என்பது உண்மை தான். இவ்வாறு

தோற்றுவிக்கப்பட்ட மங்கலக் கிராமங்களில் அந்தணர் நிலவுடைமை யாளராகக் குடியேற்றப்பட்டார்கள். இவர்களுக்கென வாய்த்த கிராம மன்றம் 'சபா' எனப்படும். பெருங்கோயில்களைச் சார்ந்து தோன்றிய நகரங்களில் வணிகர் ஆதிக்கம் உண்டு. அங்கே 'நகரத்தார்' என்ற தன்னாட்சி மன்றம் இயங்கியது. பல ஊர்கள். பல அகரங்கள். பல நகரங்கள் ஆகியவை அடங்கிய பெருநிலப் பகுதிக்கு 'நாடு' எனப் பெயர் தரப்பட்டது. அதற்குத் வாய்த்திருந்த தன்னாட்சி மன்றமாக 'நாட்டார்' விளங்கியது. அது இந்நாளைய ஊராட்சி ஒன்றியம் போலச் செயற்பட்டது.

**ஊரார்** :- ஊர் என்ற கிராம அமைப்பு, பல்லவர்-பாண்டியர் காலந் தொடங்கி (கி.பி. 600) விசய நகரத்தாரின் ஆட்சியின் உச்சகட்ட நாட்கள் வரை (கி.பி. 1565) தன்னாட்சி அமைப்பாகத் தமிழகத்தில் விளங்கியது. கி.பி. 9ஆம் நூற்றாண்டில் பாண்டிய மண்டலத்தில் ஊர்கள் தாம் அதிகம். சோழர்கள் ஆட்சியின் போது 'ஊரோம்' என்றும் 'ஊராய் சமைந்த ஊரோம்' என்றும் அழைக்கப்பட்ட ஊர் நாடெங்கிலும் நன்கு செயற்பட்டது. 'ஊரோம்' என்று அவ்வூர்ப் பொது மன்றம் 'பெயர் கூறப்பட்டது. விசய நகரத்தாரின் முதலாம் சீரெங்காவின் கி.பி. 1575ஆம் ஆண்டுக்குரிய நாகலாபுரம் கல்வெட்டு (620/1904) அவ்வூர் மன்றத்தை 'ஊரார்' என்றுதான் அழைக்கிறது. இவ்வாறு ஊரார் என்ற தன்னாட்சித் திறன் கொண்ட ஊர் மன்றமானது அதே பெயருடன் கி.பி. ஏழாம் நூற்றாண்டு முதல் பதினாறாம் நூற்றாண்டு வரை தமிழகத்தில் தொடர்ந்து உள்ளாட்சி மன்றமாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. ஆனால் இந்த ஊரார் மன்றத்தினுடைய உறுப்பினர் யாவர்? எவ்வாறு அவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்? என்பன போன்ற செய்திகளைத் தருகின்ற வரலாற்றுத் தடயங்கள் இதுவரை நமக்குக் கிடைக்கவில்லை. பாண்டியர் ஆட்சியாளராகத் தமிழகத்தில் ஆயிரம் ஆண்டுகள் தொடர்ந்து இயங்கி வந்தார்கள். ஆனாலும் இந்தக் கிராம மன்றங்களைப் பற்றிய மேற்படி விவரங்கள் கிடைக்காமல் இருப்பது ஒரு குறைபாடாகவே உள்ளது. நாட்டார், சபை போன்ற அமைப்புகளுடன் இணைந்து தனியாகவோ இரட்டையாகவோ 'ஊரவர்' என்ற ஊர் மன்றங்கள் செயற்பட்டன.

**சபை** :- அந்தண வேதக் கல்வி விற்பன்னருக்கு முதலில் ஞானபோகமாக (பிரம்மதானம்) வழங்கப்பட்ட நிலம் பின்பு ஏக போகமாக (பிரம்மதேயம்) விரிவாக்கப்பட்டது. சான்றாகத் திருவில்லிபுத்தூர் பகுதியிலுள்ள சோழபுரம் கல்வெட்டு (520/1962-63) கூறுவது போல, முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியனின் (கி.பி. 1216இல்) அரசாணைப்படி தனது மச்சினனார் அழகப் பெருமாள் கேட்டுக் கொண்டபடி கிராமபட்டர் சோமயாஜி என்பவருக்கு ஏகபோகப் பிரம்மதேயத்தை, ஏற்கனவே சாகுபடி செய்தவர்களை விலக்கி உருவாக்கினான். (குடிநீங்கி) வெள்ளான் வகையிலிருந்து அவர்களை

நீக்கியும் இந்த ஏகபோகப் பிரம்மதேயம் உருவாக்கப்பட்டது. நிலவுடைமையும், நீதி பரிபாலன அதிகாரமும், அந்தணர்க்குரிய கடமையும் உரிமையும் கலந்த சமூக அல்லது அரசியல் பணியாயிற்று. சுற்று வட்டாரத்து வழக்குகள் அனைத்தும் சபாவில் எடுத்து ஓதப்படும். சபாவின் உறுப்பினர்கள் வேதவழி தருமசாத்திரத்தை விளக்கி அந்த வழக்குகளுக்குத் தீர்வு காண்பார்கள். அவர்களால் சொல்லப்படும் இந்தத் தீர்வுகள் நாட்டிற்கான நீதி நிருவாகமாகவே அமைந்தது. அந்தணர்கள் நிலவுடைமையைத் தனி நபர்களாகப் பெற்றார்கள். நீதி நிர்வாகத்தைச் சபை மேற்கொண்டது.

பாண்டியப் பெருவேந்தர் புதிய பிரம்மதேயங்களை அதிக எண்ணிக்கையில் உருவாக்கவில்லை. அந்தந்தப் பகுதியின் தலையாய சேவையைப் பொறுத்தமட்டில் இத்தகைய பிரம்மதேயங்கள் (அவைகளுக்குரிய சபாக்களோடு) உருவாக்கப்பட்டன. சான்றாக, முதலாம் சடையவர்மன் சுந்தர பாண்டியன் கி.பி. 1257இல் தமிழக மீட்புக்கான திசைவெற்றிக்குப் பிறகு (திக்விஜயம் வெற்றியான பின்பு) எல்லா வெற்றியாளரையும் போலத் தில்லைக் கோயிலுக்கு உரிய பிரம்மதேயத்தை உருவாக்கியதாகச் சிதம்பரம் கோயில் கல்வெட்டு (306 / 1958 - 59) பின்வருமாறு கூறுகிறது : கழுமலம், செம்பியம், சேற்றூர் போன்ற பல கிராமங்களை வேண்டுமென்றே நத்தம் (புறம்போக்கு நிலம்) ஆக்கிப் பின்பு சுந்தர பாண்டிய சதுர்வேதி மங்கலம் என்று அந்த அரசன் பெயரால் உருவாக்கப்பட்டது. அதற்கான அரசாணையும் வெளியிடப்பட்டது. மேலும் 200 வேலி நிலம் 121 வேதம் சுருதி படித்த அந்தணர்க்கு வழங்கப்பட்டது. மருத்துவர், அம்பட்டர், கணக்கர், தச்சர், குயவர், கொல்லர், உவச்சர் (மேளக்காரர்) முடி திருத்துவோர், பாடிக் காப்பான், (காவல் துறையினர்) பிள்ளைப்பேறு பார்க்கும் மருத்துவச்சி, வெட்டியான் (கிராம ஊழியன்) போன்றோர் பிரம்மதேயத்திற்காக நியமனம் செய்யப்பட்டார்கள்; அங்கே குடியமர்த்தப்பட்டார்கள். மேலே சொல்லப்பட்ட 200 வேலி நிலத்தின் சில பகுதிகள் இவர்களுக்கான ஊழிய நிலங்களாக (ஜீவிதம்) வழங்கப்பட்டன. மாடு மேய்ச்சல் நிலம், சுடுகாட்டுக்கு இடம் ஆகியவை தனியாக ஒதுக்கப்பட்டன. நிலங்கள் அனைத்தும் இறையிலித் தகுதி பெற்ற (வரிவிதிக்கப் பெறாத) வகைக்குரியதாக ஆக்கப்பட்டன. ஆனாலும் ஒரு குறிப்பிட்ட அளவு நெல் 'தில்லை நாயகன் பெரும் பண்டாரம்' எனப்பட்ட சிதம்பரம் கோயிலின் கருவூலத்தில் செலுத்தப்பட்டது; அதற்கான உத்தரவு ஏற்கனவே வெளியிடப் பட்டிருந்தது. வேளாண்மைத் தொழிலைச் செய்ய வேளாளர் கொண்டு வரப்பட்டுக் குடியமர்த்தப்பட்டார்கள்.

விலையேதும் கொடுக்காமல் விளைநிலமும், குடியிருப்பும் கிராமச் செட்டுமையில் தானமாகப் பெற்றுக் கொண்ட வேதஞான அந்தணப் பெருமக்கள், அரசியலுக்கு அப்பாற்பட்டு நின்றனர். சோழரோ

பாண்டியரோ போசளரோ எவர் ஆட்சிக்கு வந்தாலும், தற்காலத்து அரசுக்குரிய அதிகாரிகள் போல அரசியல் பற்றற்று அந்த அந்தணர்கள் விளங்கினார்கள்.

கி.பி. 1200க்குப் பின்பு வந்த நூறு ஆண்டுகள் இரண்டாம் பாண்டியப் பேரரசுக்குரிய முனைப்பான ஆட்சிக் காலம் ஆகும். இந்த நூறு ஆண்டுகளில் பாண்டியப் பேரரசர்கள் அந்தணர்க்கெனப் பிரம்ம தேயங்களைக் குறைந்த எண்ணிக்கையில் தான் நிறுவினார்கள். ஆனால் கோயில்களின் பல பரிமாண வளர்ச்சியின் காரணமாகக் கம்மாளர் போன்ற கைவினையோரின் எழுச்சி ஏற்பட்டது. வலங்கை - இடங்கை போன்ற வகுப்பாரின் முரண்பாடு சாதி ஆசாரத்தையும் தாண்டிச் செய்தொழில் வகுப்பாருக்கு உயர் சமூகத் தகுதி கிடைக்கச் செய்தது. இந்தச் சூழ்நிலையில் நகரங்களில் கைவினையோரும், வணிகரும் சமூகத் தகுதி நிலையில் வளர்ந்தனர். நகரத்தில் 'நகரத்தார்' என்ற நகர் மன்றம் புதுப் பொலிவோடு செயற்படத் தொடங்கியது. ஊர்களையும் நகரங்களையும் போல நாடு என்ற மாவட்ட ஒன்றியம் நன்கு வளர்ச்சி பெற்றது. ஊரவர், நகரத்தார் போன்ற தன்னாட்சி மன்றங்கள் தோன்றிய காலத்திலிருந்தே 'நாட்டார்' என்ற பொது மன்றம் வளர்ந்தது.

''சோழர்கள் ஆட்சி செய்தபோது, ஒவ்வொரு உள்ளாட்சி மன்றத்திலும் 'மத்தியஸ்தன்' என்ற அதிகாரி நடுவராக வீற்றிருந்தான். சோழரது மத்திய அரசினுடைய நேரடிப் பிரதிநிதியாக இவன் தொலைதூர ஊர் மன்றங்களில்கூடச் செயற்பட்டான். மைய அரசின் இறையாண்மைக்கு உகந்த முறையில் ஊர் மன்றம் பொதுக்காரியங்களை மேற்கொள்ளுமாறு இந்த மத்தியஸ்தன் அதன் நடவடிக்கைகளை ஆற்றுப்படுத்தினான். மத்தியஸ்தன் என்ற அதிகாரியைக் கொண்ட ஆட்சி முறையைப் பாண்டியர் ஆதரிக்கவில்லை; அதைத் தொடரவும் இல்லை. சாதி ஆசாரத்தின் கெடுபிடிமாறிக் கைவினையோர் - வணிகர் எழுச்சி ஏற்பட்ட போது மேற்படி உள்ளாட்சி மன்றங்களில் அரசியல் அதிகாரப் பிடிமானங்கள் ஏற்படத் தொடங்கின. ஊர் மன்றத்தில் ஊர் முதலிகளும், சபாவில் சபாமுதலிகளும் பாண்டிய அரசின் சார்பாக இயங்கினார்கள். சோழர் காலத்து அந்தணர் சபா போன்று பாண்டியரின் கோயில்கள் வளர்ச்சி பெற்றன. பாண்டியர் காலத்தில் 13, 14ஆம் நூற்றாண்டுகளில் கோயில்களின் வளர்ச்சிக்குச் சபாவால் ஈடுகொடுக்க முடியவில்லை. கைவினையோர், வணிகர் போன்ற நடுத்தர வகுப்பினரைக் கொண்டு தனது பொருளாதாரத் தேவைகளை நிறைவு செய்து கொண்ட கோயில், அவ்வகுப்பாரின் துணைக் கொண்டு வளர்ந்த போது நிலவுடைமை, சமூகத் தலைமை போன்றவற்றில் சபாக்களையும் விஞ்சி நின்றது. இந்தச் சூழ்நிலையில் ஊர், சபை, நகரம், நாடு போன்ற தன்னாட்சி அமைப்பு களுக்கு இணையணி தோன்றியது. அதாவது கோயில்களில் காணப்பட்ட மகேசுவரர், ஸ்ரீவைணவர் போன்ற செய்முறை விளக்கக் குருமார்கள்

அணி திரண்டனர். மற்றும் நானா தேசியர், வீர வளஞ்சியர் போன்ற நகரியக் குழுக்கள் இந்த அணியோடு கைகோத்துக் கொண்டன. இந்த இணையணியைச் சமமாகப் பாவிக்கின்ற நிலைமை பாண்டியப் பேரரசுக்கு ஏற்பட்டது.

வேதமுறைச் சாதி ஆசாரத்தின் பிடிப்பு உள்ளூரத் தளரத்தக்க அளவில் நகரிய சக்திகளின் வளர்ச்சியும், வைணவத்தின் மனிதநேய வாதமும் அரசினுடைய ஒப்புதலைப் பெற்றிருந்தன. காலப்போக்கில் இதனை ஏற்றுக் கொண்ட பாண்டியப் பேரரசு தன்னாட்சி மன்றங்கள் மேற்படி புதிய சக்திகளுக்குத் தக்கபடி மாறிக் கொள்வதற்காகத் தன்னுடைய அதிகாரப் பிடிப்பை வலுப்படுத்திக் கொண்டது. ஆனாலும் உள்ளாட்சி மன்றங்களின் உருவாக்கம் நிலைக்கவில்லை. பாண்டியருக்குப் பின்பு தமிழகத்தை ஆளவந்த தெலுங்கு விசய நகரத்தாரின் ஆட்சியில் தன்னாட்சி அமைப்புகள் தொடர்ந்து இயங்கின; பாண்டியர் இந்த அமைப்புகளுக்கு எந்தவிதமான ஊறும் ஏற்படுத்தவில்லை. மைய அரசின் ஆட்சிப் பொறுப்பைத் தாங்களே கிராம அளவில் ஏற்றுக் கொண்டு மைய அரசுக்கு உரிய கடமை, குடிமை, வரி வகைகளை வசூலித்துக் கொடுத்துக் கொண்டிருந்த இந்த உள்ளாட்சி அமைப்புகள், அந்தந்தக் காலங்களில் சமூக ஏற்றம் பெற்றிருந்த வகுப்பினரின் செல்வாக்குக்கு உட்பட்டது என்னவோ உண்மைதான். ஆனால் அவைகளின் தோற்றம், செயல்முறை ஆகியவற்றில் மாற்றம் ஏற்படவில்லை. இதனைப் பின்வரும் நாடு (நாட்டார்) பகுதியில் காணலாம்.

நாடு : உள்ளாட்சி அமைப்பில், உயர்மட்ட நிலையில், மாவட்ட அளவில் காணப்பட்ட அமைப்பு 'நாடு' என்றும் அதனுடைய தன்னாட்சி மன்றம் 'நாட்டார்' என்றும் வழங்கப்பட்டன. இந்த அமைப்புக்கும் மேலாக அமைந்திருந்த மண்டலம் என்ற மாநில அமைப்புக்கு மண்டல மன்றம் எதுவும் ஏற்படவில்லை.

நாடு (நாட்டார்) என்ற அமைப்பு நாட்டின் மக்களைச் சோழரின் மைய அரசோடு இணைக்கின்ற இணைப்புச் சங்கிலி ஆகும் என்று ஆய்வாளர் கருதுவர். விசயநகரத்தாரின் ஆட்சி முறையில் செல்வாக்குடைய மக்களைக் கொண்டது 'நாட்டார்' அமைப்பாகும். மக்களின் குரலாக நாட்டார் (மன்றம்) செயற்பட்டது. (தற்காலத்துப் பாராளுமன்றத் தொகுதி போல் இடைக் காலத்து நாடு என்ற அமைப்பு மைய அரசைச் சார்ந்து நின்ற காந்தக் கல்லாகக் காணப்பட்டது எனலாம்) . நாட்டார் கொண்ட நாடு என்பது மக்கள் தொகைப் பெருக்கத்தால் ஏற்பட்டது. 12ஆம் நூற்றாண்டின் நடுப் பகுதி வரை இத்தகைய நாடுகள் அதிவேக கதியில் வளர்ச்சியுற்றன. மக்கள் பெருக்கத்தோடு இணைத்துச் சொல்லப்பட்ட இந்த வளர்ச்சியின்போது ஊர்களாக இருந்தவை எல்லாம் கடைசிக் கருத்துக்கு உரிய விளக்கமாகக் - கீழ்க்கண்ட எல்லைகளை

விரிவாக்கி நாடு ஆயின. சான்றாக, சைவ நாயனார் மாணிக்கவாசகர் மதுரைப் பாண்டியனுக்கு அமைச்சனாக இருந்த காலத்தில், கி.பி. 870 அளவில் வழுதி வள நாட்டில் மான வீர பட்டினம் என்றிருந்த ஊர் கி.பி. 1200 அளவில் மானவீரவளநாடு என்ற பெயரில் பெரும்பதியாயிற்று. (155 / 1903)

எல்லாக் காலங்களிலும் கடமை என்ற நிலவரி மைய அரசைத் தவறாமல் சென்றடைய வேண்டும் என்ற அந்நாளைய அரசு ஒழுகலாறு 'நாட்டார்' மன்றத்தால் கடைப்பிடிக்கப்பட்டது. நிலங்களுக்கு வேண்டிய கடமை வரியைச் செலுத்துவதற்காக உள்ளூர் நாணயச் சாலையில் நாணயம் அச்சிடுவதை 'நாட்டார்' மன்றம் செய்தது. இது மட்டுமல்ல; 'முகம் பார்வை' (முகம் பார்க்கும் கண்ணாடி), சுற்றாடை (முகூர்த்தப்பட்டு) போன்றவற்றின் மேல் போடப்பட்ட சிற்றாய வரிகளையும் நாட்டார் மன்றம் நீக்கியது எனப் பெரம்பலூர் பகுதிப் கண்டபுரம் கல்வெட்டு (286 / 1943 - 44) கூறுகிறது. கொங்கு மண்டலம் கோபிச்செட்டிப் பாளையம் அருகில் உள்ள பெருந்தலையூரில் சடையவர்மன் சுந்தரபாண்டியன் கல்வெட்டு (372 / 1954 - 55) கூறுவதுபோல கி.பி. 1273இல் 'காஞ்சி கூவல் நாட்டார்' தங்களுடைய மருதூர் என்ற கிராமத்தையே இறையிலி நிலப்பகுதியாக்கிப் பெருந்தலையூர் கோயிலுக்குத் தானமாகக் கொடுத்தனர். நாட்டாரும் அகரத்துச் சபையோரும் இணைந்து வரிவிதிப்பு செய்வது அக்காலத்திய பழக்கம் தான். சான்றாகக் கடலூர் அருகில் உள்ள தீர்த்தாநகரிக் கல்வெட்டு (121 / 1904) கூறுவது போல, அந்தப் பகுதியின் அந்தணரடங்கிய சபையோரும் நாட்டாரும் சேர்ந்து உள்ளூர்க் கோயிலில் 'பெருமாள் திருமேனிக்கு நன்றாக' என்றளவில் பாண்டிய அரசனுடைய உடல்நலக் குறைவு நீங்குவதற்கு வழிபாடு செய்வதற்காக உள்ளூர்க் கருவாடு போன்ற கடல்வரத்து சரக்குகளில் தலைச்சுமை, எருதுப் பொதி ஆகியவற்றிற்கு வரி விதித்தார்கள்.

அகத்தியன் பள்ளிக் கல்வெட்டின்படி (506 / 1904) முன் சொன்ன கடலூர்ப் பகுதி போன்று, தஞ்சை, திருத்துறைப்பூண்டி பகுதியிலும் பாண்டிய அரசனுடைய உடல் தேறுவதற்கு வழிபாடு நடத்தச் செலவுத் தொகைக்காக வரிச் சலுகைகளை அப்போது நாட்டார் அதிகார முறைப்படி அறிவித்தார்கள். நாட்டார் அமைப்புகள் பல ஒன்று சேர்ந்து பொதுக் காரியம் செய்ததைச் சென்னை, சைதைப் பகுதியின் திருமுல்லை வாயில் கல்வெட்டு (666 / 1904) பின்வருமாறு தெரிவிக்கிறது. ''கானப் பேரூர் நாடு... புழற் கோட்டத்து நாட்டவரும் ஈக்காட்டு கோட்டத்து நாட்டவரும் புறக்கலனை இறுக்கும் பலகலனைப் பெயரால் ஊர் கடமை... வரிகளை சர்வ மானிய இறையிலியாகப் பண்ணிக் கொடுத்தோம். நாட்டவரோம் இவை பணியால் ''சித்திரமேழி வேளான் எழுத்து''. எழுமூர் (எழும்பூர்) போன்ற இந்நாளைய சென்னை மாநகரின்

பகுதிகளை உள்ளடக்கிய கோட்டங்களைச் சேர்ந்த நாட்டார்கள், சித்திமேழி வேளான் என்ற வேளாண்மை மன்றத்தின் தலைவனுடைய ஒப்பம் பெற்று மேற்படி வரிகளை உள்ளூர்க் கோயிலுக்கு வழங்கியதை மேலே சொன்ன கல்வெட்டு விளக்குகிறது. 'நாட்டுக் கண்காணி செய்வார்' நாட்டார் அமைப்பை மேற்பார்வை செய்தார்கள் எனலாம். நாட்டுக் கணக்கு (கணக்காயர்), நாட்டுத் தட்டான் (நாட்டார் பணியில் பொற்கொல்லர்), நாட்டு முதலி போன்ற பணியாளர்கள் நாட்டார் அமைப்பில் காணப்பட்டார்கள்.

## பாண்டியஅரசின் வருவாய்த்துறைச் செயற்பாடுகள் : வரி விதிப்பு, வரிகள், செலவினங்கள்

**வரிவிதிப்பு** : திருமாவளவரான சோழர்களைப் போலவே மதுரைப் பாண்டியரும் தங்களுடைய அரசு வருவாயைத் திறம்பட ஈட்டினார்கள். பெரும்பாலும் வரிகள், வரி விதிப்பு ஆகியவை சோழருடையதைப் போலத்தான் பாண்டியர் காலத்திலும் காணப்பட்டன. பாண்டியருக்கு என வரிவசூல் ஆட்சிமுறை மரபுரிமையாக ஆயிரங்காலத்துப் பயிராக ஏற்கெனவே வளர்ந்திருந்தது. வரிவிதிப்பில் தாராளமயக் கொள்கையும், வரிவசூலில் கெடுபிடியும் சோழர்கள் கைக் கொண்டார்கள். பாண்டியர் தரப்பில் இந்த இரண்டும் இல்லை. முன்பு பேசப்பட்ட ''கடமை'' என்ற முன்னுதாரணத்தைக் கொண்டு பெரும்பாலும் வரிவசூல் நடைபெற்றது. தரிசு நில மீட்பு இயக்கம் நடைபெற்ற பாண்டியர் நாளில் 'பயிர்பார்த்து' என்றளவில் நிலத்தின் விளைச்சலைக் கணக்கிட்டு வரிவிதிப்பு முறை அமைந்திருந்தது. வரிவசூலில் கடுமை இருந்தது. கொடுமை கிடையாது. 'நாட்டு மரியாதைப் படி', 'பேசின கடமை' என்ற சொற்றொடர்கள் (வரிவிதிப்பு பற்றிய செய்திகளைத் தாங்கிய) கல்வெட்டுகளில் காணப்படுகின்றன. அரசுக்கு நேரடியாகச் சேர வேண்டிய நிலவரி 'கடமை' என்றழைக்கப்பட்டது. 'நாடிந்த மரியாதை உள்ள அச்சம்' (அந்தந்த நாட்டுப் பகுதிகளுக்குத் தக்க அமைந்த பணவரியும்), முன்பு 'பேசப்பட்ட பொன்வரியும்' (ஏற்கெனவே ஒப்புக்கொள்ளப்பட்ட பொன்வரி) என்ற கல்வெட்டுத் தொடர்களைக் கொண்டு மக்களின் ஒப்புதலுக்கு உட்பட்டுத்தான் அவ்வரிகள் வசூலிக்கப்பட்டன என்பதை உய்த்துணரலாம். 'அந்தராயம்', 'சிற்றாயம்', 'புறவரிகள்' என அழைக்கப்பட்ட சிறிய வரிகள் பெரும்பாலும் அந்தந்தப் புலங்களைச் சார்ந்த கோயில்களுக்கும் கிராமத் தன்னாட்சி மன்றங்களுக்கும் குடிமை (வரி) என உரிமையாக்கப்பட்டன. கடமை மட்டும் கண்டிப்பாக மைய அரசைச் சென்றடைய வேண்டும். பாண்டியரும் சோழரும் கடமை வரி வாங்குவதில் கடின சித்தம் காட்டினர்.

**வருவாய்த்துறைக் கூறுபாடுகள் :** பாண்டியப் பேரரசுப் பகுதிகள் அனைத்தும் ஒரே அமைப்பாகக் கருதப்பட்டு, பல மண்டலங்களாகப் பிரிக்கப்பட்டன. கி.பி. 7ஆம் நூற்றாண்டிலேயே அதாவது 600 ஆண்டுகளுக்கு முன்பே பல்லவர் - பாண்டியர் அரசுகளின் இந்த முறையைத் தமிழக அரசியலமைப்பில் காணலாம். மண்டலம், நாடு, வளநாடு எனப் புலங்கள் பிரிக்கப்பட்டன. வளநாடு என்பது கோட்டம் அல்லது கூற்றம் எனவும் பிரிக்கப்பட்டது. கூற்றத்தில் பல கிராமங்கள் அடங்கும். இவை எல்லாம் வருவாய்த்துறை சார்ந்த பிரிவுகள் ஆகும். ஊர்கள், விளை நிலங்கள், கோயில்கள் ஆகியவைகளைப் பற்றிய ஆவணங்கள் இந்தப் பிரிவின் பின்னணியில் எழுதித் தயாரிக்கப்பட்டன; உள்ளூர்க் கோயில் சுவர்களின் கற்றூண்களில் அவை பதிப்பிக்கப்பட்டன; உள்ளூரில் வருவாய்த் துறையைச் சார்ந்த ஆவணங்கள் பேணிப் பாதுகாக்கப்பட்டன; செப்புப் பட்டயங்களில் அவை எழுதி வைக்கப்பட்டன. இத்தகைய அரசு வருவாய் தொடர்பான ஆவணம் 'புரவு' என்றழைக்கப் பெற்றது. இடைக் காலத்து மன்னர்கள் - சோழர், பாண்டியர் தங்களுடைய செயற்பாட்டு அதிகாரத்தைப் பயன்படுத்தி நிலவரி வசூல், இறையிலி என்ற வரியிலாச் சலுகை, நிலவுரிமை மாற்றம் ஆகியவற்றுடன் தொடர்பு கொண்ட ஆவணங்களைக் ''கோனேரின்மை கொண்டான்'' என்ற அரச முத்திரைப் பெயருடன் வெளியிட்டார்கள். இந்த ஆணைகள் 'கல்லிலும் செம்பிலும் வெட்டிக் கொண்டு புரவிலும் கழிப்பதாக ' என்று முற்றுப் பெற்றன.

கி.பி. 1090 முதல் 1190 வரையிலான நூறாண்டுகள் பாண்டிய நாட்டில் சோழரின் மேலாண்மை நிலவியபோது பாண்டிய நாட்டு ஆவணங்களில் சோழரின் ஆட்சிமுறைப் பாணியில் புரவுவரித் திணைக்களம், புரவுவரித் திணைக்கள நாயகம் என்ற சொற்றொடர்கள் தாராளமாகக் காணப்படுகின்றன. 'சோழ பாண்டியன்' என்ற விருதுப் பெயருடன் சோழ இளவல்கள், மேற்படி புரவுவரித் திணைக்கள நாயகம் போன்ற வருவாய்த்துறை அலுவலர்கள் துணையுடன் சோழநாட்டு வளமையோடு (கி.பி. 1020இல் தொடங்கி 1070 வரை) பாண்டிய நாட்டை 50 ஆண்டுகள் ஆண்டார்கள். சோழர் ஆட்சிமுறையின் தாக்கம் அப்போது ஏற்பட்டது. அதன்பின்பு கி.பி. 1070 முதல் 1190 வரையுள்ள 100 ஆண்டுகளாகச் சோழரின் மேலாண்மை ஆட்சி தொடர்ந்து வந்த போதிலும் புரவுவரித் திணைக்களம் போன்ற நிறுவனங்கள் பாண்டிய நாட்டில் காணப்படவில்லை. பாண்டியரின் ஆட்சிமுறைக்குத் தனித் தன்மையும் தனி மரபும் உண்டு என்பது தெளிவு. வருவாய்த்துறைக்கு எனத் தனி அரசு அமைப்பு பாண்டியர் ஆட்சியில் இல்லாத போதிலும் வருவாய்த்துறைச் சார்பான அத்தனை நடவடிக்கைகளும் திறனுடன் நடைபெற்றன. ஆங்காங்கே காணப்பட்ட ஊர்மன்றங்கள், கோயில் நிருவாக அமைப்புகள் போன்றவைகளால் இவை மேற்கொள்ளப்

பட்டன. அரசு ஊழியர்களில் சமுதாயம் (ஒருங்கிணைப்பு அலுவலாளன்), மேய்ப்பு (மேய்ச்சல் நிலக் கண்காணிப்பாளன்), அதிகாரம் (கண்காணிப்பாளன்) ஆகியோர் கிராமங்களில் பணியாற்றினார்கள். 'வரிக்கூறு செய்வார்' என்ற அலுவலாளர் ஊர் அளவில் காணப்பட்ட கணக்காயர் ஆவர்.

## எந்தெந்த வரிகளின் வருவாய் எவரெவர்க்கு உரிமையுடையது? -ஒரு விளக்கம்

**அரசு :** (அரசன்) அரசாங்க ஆட்சிமுறையையே கடமைகாரியம் (வரிக்காரியம்) என்று பாண்டியர் அழைத்தார்கள். அரசு வருவாய்த்துறை சார்பாக ஊர்மன்றங்கள், கோயில்கள் போன்ற பொது நிறுவனங்கள் மைய அரசுக்கு உரிய கடமை என்ற நிரந்தர நிலவரியைக் கட்டாயமாக வசூல் செய்தன. தவறாமல் அதனைப் பாண்டிய அரசனுக்கு வழங்கின. ஆகவே இந்த வரி 'இறை' என்றழைக்கப்பட்டது. எந்தச் சூழ்நிலையிலும் ஆண்டுதோறும் பயிர் வரவிற்குத் தக்க இந்தக் 'கடமை வரி' வசூல் செய்யப்பட்டது. தேவதானக் கோயில்களும், காணியாளர் என்ற பெரிய நிலவுடைமையாளரும் தங்களுடைய சொத்துகளை விற்றும்கூட இந்தக் கடமையைத் (வரியை) தவறாமல் தாங்களாகவே அரசுக் கருவூலத்தில் செலுத்தினார்கள். வெள்ளம் போன்ற இடர்களின் போது கடமைவரி அரசினரால் தள்ளுபடி செய்யப்பட்டது. ஆனால் இது அடிக்கடி நிகழவில்லை. கடமைவரி கட்டாயமாக்கப்பட்டதால் இதைத் தவறாமல் கட்டுவதற்காக, வைப்பு நிதியாக உள்ளூர்க் கோயிலில் ஒரு பெருந்தொகை தொடர்புடையவர்களால் வைக்கப்பட்டது. அதனை 'வாடாக்கடமை' என்றழைத்தனர். இதனுடைய வட்டி (பலிசை) ஆண்டுதோறும் ஈட்டப்பட்டு, அதனையே கடமை வரியாகத் தவறாது செலுத்தினார்கள். அளவிற்கு அதிகமான வரிவிதிப்பினால் நசுக்கப்பட்ட நிலவுடைமையாளர் தங்கள் நிலங்களைப் புறக்கணித்து அயலிடம் சென்ற நிகழ்ச்சிகளும் சில சமயங்களில் நடந்தன.

மழைக்காலத்துப் பயிர் - கார்ப் (மேகம்) பாசனம் என்றும் கோடைப்பயிர் - குறுவைப் பாசனம் என்றும் வழங்கப்பட்டன. தனித்தன்மைகளோடு பயிர் விளைச்சலைப் பார்த்து வரி விதிக்கப்பட்டது. 18 அடி கோல் கொண்டு அளக்கப்பட்ட நிலம் 1 குழி ஆகும். 25 குழி கொண்டது 1 மா ஆகும். ஒவ்வொரு மா நிலத்திற்கும் ஆறு கலம் நெல் (1/3 பாகம்) வரியாகப் பாண்டிய அரசால் வாங்கப்பட்டது. புன்செய்நிலம், தோட்டம் போன்றவற்றுக்கும் இதே பங்கு முறையில் வரி வாங்கப்பட்டது. சென்னை மைலாப்பூரிலுள்ள தூய தாமஸ் கல்லறைத் தோட்டத்துத் தென்னை மரங்களுக்குப் பாண்டிய இணையரசன் வரி விதித்திருந்தான். இந்தக் கடமைவரி பொதுவாகச் சோளப் பயிர் விளைச்சலில் நான்கில் ஒரு பங்காக இருந்தது. இடைக்

காலத்துத் தென்னிந்தியாவிலிருந்த சோழர், பாண்டியர், போசளர், விசயநகரத்தார் போன்ற அனைத்து அரசுகளும் ஏறக்குறைய இதே அளவிலான நிலவரியை வாங்கினார்கள் என்பது தெளிவு. கடமை தவிர அரசனுக்குரிய மற்ற வரிகள் பின்வருவன : 1. துலாபாரவரி : (அரசனுடைய எடைக்கு எடை நிறுத்தல் என்ற சடங்கு நடத்த தென்னார்க்காடு பகுதிகளில் கி.பி. 1260 அளவில் மாறவர்மன் விக்கிரம பாண்டியனால் வசூலிக்கப்பட்டது) 2. அபிசேகக் காணி (அரசனின் முடி சூட்டு விழாவிற்கான வரி) 3. பிரசாதவரி (அரசனுடைய ஆணை-திருமுகம்- அதனுடைய இலக்கை சென்றடைய ஆகும் செலவு) 4. சந்தி விக்கிரமப்பேறு (உடன்படிக்கை போன்ற ஆவணங்களை அரசவையில் எழுதுகின்றவருக்கான ஊதியம்) 5. வாசல் பேறு அல்லது வாசல் விநியோகம் அல்லது வீட்டுத் தேவை (அரண்மனைக்குரிய வரி) 6. ஆளமஞ்சி (அமைஞ்சி), வெட்டி முட்டாள் (வேலை என்பது அவரவர்க்கு இயல்பாக உரியது. வெட்டி என்பது அரசுக்குப் பொது மக்கள் அளிக்கும் கட்டாய சேவை) முட்டுக்கு ஆள் (முட்டாள்) (தானே போகாமல் தனக்குப் பதிலாக நிலவுடைமையாளர் கர சேவை அல்லது அமைஞ்சி செய்ய அனுப்பப்படும் ஆள்) 7. ஆனைச் சாலை (யானை வாங்கவரி) 8. குதிரைப்பந்தி (குதிரை வாங்க, வளர்க்க வரி) மதில் தேவை (கோட்டை கட்ட வரி) 9. அரை சுவரி (பாண்டி மண்டலத்தில் காணப்பட்ட அரசுச் சொத்துக்களை நிருவாகஞ் செய்தவர்களுக்கு ஊதியம் வழங்குவதற்கான வரி) 10. முத்துச் சலாபம் (தென் பாண்டிக் கடற்கரையில் முத்து குளித்தலின்போது சேகரிக்கப்பட்ட முத்துக் கிளிஞ்சல்களில் பத்தில் ஒரு பாகம் பாண்டிய மன்னனுக்கு வழங்கப்பட்ட கலால்வரி). கன்னடியப் போசள மன்னனான வீர சோமேசுவரன் கி.பி.1250 அளவில் ஆண்மக்கள் தலையில் வைத்திருந்த குடுமிகளுக்கு வரி போட்டான். இந்த வரியினால் வந்த வருவாயில் திருச்சி - கண்ணனூர்க்கு அவன் வந்து போனான். இதுபோன்ற வரியைப் போசளரின் சமகாலத்தவரும், அரசியல் கூட்டணியாளரான மதுரைப் பாண்டியர், மக்களிடமிருந்து வசூலிக்கவில்லை. பாண்டியர் எப்போதுமே பழமையை விட்டு மாறவில்லை.

**வருவாய்த்துறையின் அரசு அதிகாரிகளுக்கு ஊதியம் அளிக்க வாங்கப்பட்ட வரிகள்:**

வருவாய்த்துறை அரசுப் பணியாளர்க்கு ஊதியம் வழங்குவதற்காகப் பொது மக்களிடம் வாங்கப்பட்ட வரிகளில் சில பின்வருமாறு: 1. தண்டிலக்கை (வரி வசூலிப்பவர்களுக்காக) 2. பணிக்கொத்து (கிராமச் சிறுதரம் ஊழியருக்காக) 3. குற்றிலக்கை அல்லது தண்டக் குற்றிலக்கை (வரிக்கூறு செய்வார் போன்ற வருவாய்த் துறைப் பெருந்தரம் அதிகாரிகளுக்காக) 4.எச்சோறு (கிராமத்தில் வருவாய்த்துறையினரில் உடலுழைப்பு வேலையாட்களுக்காக)

5. மடப்பாடி (உயர் அரசு அதிகாரிகளுக்காக) 6. பிள்ளையார் நோன்பு (வரிப் பொத்தகம், புரவு என்ற வருவாய் ஆவணங்களை எழுதுமுன்பு செய்யப்படும் கடவுள் வழிபாட்டுக்காக) 7. காரிய ஆராய்ச்சி (அரச ஆவணங்களில் அரச முத்திரையைப் பதிப்போருக்காக) மேலே சொல்லப்பட்ட இந்த வரிகளை ஊர்ச்சபைகள், உள்ளூர்க் கோயில்கள் போன்றவை வசூலித்து மேற்படி ஆட்களுக்கு வழங்கின.

## கிராம மன்றங்கள் போன்ற தன்னாட்சி அமைப்புகளுக்குச் சென்ற வரி வருவாய்

மக்கள் வரிப்பணம் தன்னாட்சி மன்றங்களுக்கும் சென்றது. அவைகளில் சில 1. நாட்டு விநியோகம் அல்லது நாட்டுவரி (நாடு என்ற பெரிய கோட்டத்தை நிருவாகஞ் செய்த நாட்டார் என்ற சுயாட்சி மன்றங்கள் பெற்றன) 2. ஊர்வரி (கிராம மன்றத்திற்கு) 3. சபா விநியோகம் (அந்தணர் மட்டும் வாழ்ந்த பிரம்மதேயக் குடியிருப்புகளின் சபாக்களை நடத்துவதற்காகப் பெறப்பட்டது) 4. சுங்கவரி: (சபா, நாட்டார் கடல்வழி வரத்துப் பொருட்களின்மேல் சுங்கவரி போன்ற வரிகளை விதித்தார்கள். சான்றாகக் கடலூர் வட்டம் தீர்த்தாநகரி கல்வெட்டு (121/1904) பின்வருமாறு கூறுகிறது... 'சபையாரும் நாட்டாரோம்... நம்நாட்டில் வழிச்சாரிய... துறைகளிலே தலைச் சுமைக்கும் எருது பொதிக்கும் பேர் ஒன்றுக்கு வந்த காசு எனவும் கடற்கரையில் கோவில் அங்காடியார் வந்து கொள்ளும் பச்சை மிளகும் கூடைக்கும் ஒன்றாக வந்த காசும் கருவாட்டு தலைச்சுமைக்கு இரண்டாக வந்த காசு பெறவும்.'

## மற்றைய வரிகள்-பட்டியல்

**அரசுத் தொடர்புடைய வரிகள்** 1. காணிமைப் பேறு- (நிலம்-ஆட்சியாளர் குறுமன்னர் செலுத்திய வரி) 2. ஒழுகுநீர்ப்பாட்டம் (நீர்ப்பாசனவரி) 3. அரிசிக்காணம் (அரிசியின் மேல்வரி) 4. மகமை (தொழில் செய்பவர்கள் செலுத்திய வரி) 5. குற்றரிசி (தவிடு நீக்கிய அரிசி மேல் வரி) 6. தலைவரி அல்லது ஆள்விலை (தனிநபர் செலுத்தியது) 7. இனவரி (சாதி அல்லது இனத்தவர் கொடுத்தவரி) 8.குற்றத்தண்டம் (அபராதம்) 9. காடுகாவல் (காட்டைப் பாதுகாத்தோருக்கு வழங்கப்பட்ட வரி) 9. பாடிக்காவல் - (காவல் செய்பவர் பெற்ற வரி) 10. நத்தவரி (கிராமத்தின் நத்தம்- ஒதுக்குப்புற இடத்தில் வீடுகட்டிக் குடியிருக்கும் நிலத்திற்கு வரி).

## கைத்தொழில் செய்வோர் செலுத்திய வரிகள்

1. செக்காயம், செக்கிறை, செட்டிறை, வாணியர் பேர்கடமை (எண்ணெய் ஆட்டுபவர்) 2. வீசு வலைப்பாட்டம் (மீன்பிடிப்போர்) 3.ஏரிமீன் பாட்டம், குளவடை (மீன்பிடி குத்தகையாளர்) 4. ஈழம் புஞ்சை

சாற்றுவரி (கள்ளிறக்குவோரிடமிருந்து வாங்கப்பட்டது.) பிரம்ம தேயங்களில் இது கிடையாது. ஏனென்றால் அங்குக் கள்ளிறக்குவது கிடையாது. 5. தறியிறை (நெசவாளர்) 6. ஆட்டிறைப்பாட்டம் (ஆடுவளர்ப்போர்) 7. அங்காடிப்பாட்டம் (சந்தையாளர்) 8. கடையிறை (கடைக்காரர்) 9. தச்சுத்தாழ்வு (தச்சர்) 10. தட்டார்பாட்டம் (பொற்கொல்லர்) 11. விடைப்பேறு (பொலிக்காளைகள்) 12. மரவடை (பழ மரங்களின் மேல்வரி) 13. அழுகல் சரக்கு ஆயம் (அழுகும் பொருட்களின் மேல் வரி) 14. பஞ்சுபீலி (பஞ்சுவணிகர்) 15. நற்பசு (எடுத்துக்காட்டாக விளங்கக் கூடிய பசுவை வைத்திருப்பதற்குச் செலுத்தும் வரி) 16. பட்டிறை (பட்டு நூல் நெசவாளர்)17. பச்சை (கிராமத் தொழிலாளர்க்கு விழாக்காலங்களில் இனாமாகக் பெரும்பாலும் தானியமாகக் கொடுக்கப்படும் வரி).

**சமூகச் சடங்குகளின் மேல்வரி** 1.ஆடைக்காசு அல்லது இடைக்காசு (திருமணத்தின் போது மணமகள் வீட்டார் செலுத்திய வரி) 2. தட்டொலிப் பாட்டம்(மேளம் மேல்வரி) 3.கீற்றுவரி (ஓலை வீட்டின் மேல்வரி) 4. உவகை வரி (பொது மகளிரை நாடியவர் கொடுத்தவரி) 5. சூறை வரி (போசளரைப் பின்பற்றிக் கி.பி.1311க்குப் பின்பு பாண்டியரின் படைத் தாக்குதலிலிருந்து தப்பித்துக் கொள்வதற்காக மக்கள் இந்த வரியைக் கொடுத்தார்கள். பதினேழாம் நூற்றாண்டில் மராட்டிய சத்ரபதி சிவாஜி வாங்கிய சவுத் போன்ற வரியாகும்). இதனைத் தஞ்சை மன்னார் குடிப்பகுதி திருக்களூர் கல்வெட்டு (642/1902) பின்வருமாறு கூறுகிறது: (முன்னாள் ராசராசன் சுந்தர பாண்டியன்... துலுக்கருடன் வந்த நாளிலே நக்கூருடையாரும் இவருடைய தம்பிமாறும்... செத்தும் கெட்டும் பொய அலைந்து ஊரும் வெள்ளத்தாலும் கலகத்தாலும் பாழாய் இருக்கிற அளவிலே... கீழநல்லூர் கிழவரையும் சாமந்தனார் காரியப்பேர் மறித்துக் கொண்டு போய் தணிக்கை தரவேணும் சூறைவரி தரவேணுமென்றும் கிரையுட்பட எண்ணூறு பொன் தர வேணுமென்றும்- இவர்களைச் செலகலிவெ கொண்டு போய் சிறையிலே வைத்து) 6. சூளைத் திறை (படைவீடுகள், பாசறை போன்றவற்றில் காணப்படும் பண்டகசாலைக் கடைகள், படையெடுப்புக் காலங்களில் படையுடன் செல்லும் அங்காடிகள் ஆகியவற்றின் மீது விதிக்கப்படும் வரியாகும். பரத்தையர் கொடுத்த வரியும் சூளைத்திறை என்றழைக்கப்பட்டது.)

## பாண்டியராட்சியின் போது வரிவசூலில் மாற்றங்கள் உண்டா?

பொதுவாகக் கெடுபிடியான வரிவசூல் பாண்டியரின் ஆட்சி முறையில் காணப்பெறவில்லை. காணியாளர் என்ற நிலவுடைமையாளர்கள் அரசியல் செல்வாக்குடன் இருந்த போதிலுங்கூட, கடமை போன்ற வரியை அவர்கள் கொடுத்தாக வேண்டும். இதற்கான அரசாணையை (திருமுகம்) அந்தப் பகுதியின்

நாட்டார் (மாவட்ட மக்கள் மன்றத்தினர்) மற்றும் அந்தணரடங்கிய சபாக்கள் என்ற அந்தண கிராம (அகரம்) மன்றங்களும் நிறைவேற்றின. இதற்குச் சான்றாகத் திருப்பரந்துறைக் கோயில் கல்வெட்டுச் (591/ஏ111) செய்தியினைக் கூறலாம். ''ராஜ கம்பீர வளநாட்டு நாட்டவரும் அகர பிரம்மதேசங்களாகும் இவ்வனைவோம்... இன்னாட்டு உறையூர் கூற்றத்து கருப்பூடுடையான் அரையன்... கடமை செலவாக்காத படியாலே... நாலாயிர விழுப்பரையன் வசமாகச் சிறையில் இருந்து கத்தளை முறித்து ஓடிப்போனபடியாலெ, இக்கேரளாந்தக விழுப்பரையர் பேரால் வரும் கடமை இவர் காணியான ஊர்களில் விளைநிலமும் நத்தமும் ஆய்குடி உள்ளிட்டு உற்பத்தி உள்ளது. அறவிலை பாக்கி கொள்வார்க்கு விற்றுக் கடமை செலவாக்குவிப்பதென்று எங்களுக்குத் திருமுகம் வருகையில்...'' இதன்படி மேற்படி நிலம் அந்த ஊரின் சிவன் கோயிலுக்கு விற்கப்பட்டது. விற்ற முதலானது பாண்டிய அரசனுக்குரிய கடமை வரியாகக் கி.பி.1311இல் கொடுக்கப்பட்டது. இவ்வாறு வரி கொடாதவரின் சொத்துகள் வரிக்காக விற்கப்பட்ட போது உள்ளூர்க் கோயில்கள் அந்தச் சொத்துகளை விலைக்கு வாங்கிக் கொண்டன. காணியாளன் என்ற பெருங்குடியாளனுடைய நிலத்தை விற்றுக் கடமைவரி செலுத்தப் பாண்டிய மன்னனிடமிருந்து மேற்கண்ட கல்வெட்டுத் தொடரின்படி அரசாணை வந்து சேர்ந்தது.

வரிவசூலில் கடுமையைக் கைவிடச் சில சமயங்களில் வரிவிதிப்பு முறையில் பல மாற்றங்கள் செய்யப்பட்டன. நடைமுறையில் இருந்த வரி விகிதங்களைக் குறைப்பதும் நிலம் அளக்கின்ற அளவுகோல் போன்றவைகளின் அளவுகளை அதிகரிப்பதும் அத்தகைய மாற்றங்களில் முக்கியமானவை. சான்றாகத் திருப்பத்தூர் வட்டம் குன்றக்குடியில் வரிவிதிப்பு விகிதங்கள் குறைக்கப்பட்டன (395/1955-56). இதன்படி காங்கேயன் என்ற அமைச்சப் பெருங்குடியாளன் கி.பி.1219இல் உத்தரவு செய்தான். கி.பி.1279இல் பெரிச்சி கோயில் கல்வெட்டு (731/1924) குறிப்பிடுவது போல, அளவுகோல் 18 அடியிலிருந்து 26 அடியாக அதிகரிக்கப்பட்டது. இதன் மூலம் அதே வரிவிகிதத்திற்கு முன்பிருந்ததை விட அதிகமான நிலம் உட்படுத்தப்பட்டது. வரி கொடுப்போர்க்கு இது வரிக்குறைப்புச் சலுகையாக அமைந்தது.

சங்க நாட்களிலேயே தமிழர்கள் வேத ஞான மெய்ப் பொருள் முறையைத் (தத்துவார்த்தத்தை) தாங்களாகவே வரித்துக் கொண்டனர். அத்தகைய வேத வழி முறையின்படி, சமூக பேதங்கள் சாதி ஆசாரமாகக் காலப் போக்கில் நிலைநாட்டப்பட்டன. அந்தந்தச் சாதிகளுக்கு அவரவர்க்குரிய கட்டுப்பாடுகளும், குடியிருப்புகளும் தனித்தனியே ஏற்பட்டன. அவரவர் சாதிக்குள்தான் மண முறை அனுமதிக்கப்பட்டது. அவரவர் சாதிக்கென அமைந்த சாதிக் கட்டுப்பாட்டுக்குள் அவர்கள் அடங்கிக் கொள்ள வேண்டும் என்பது பொதுச் சட்டமாயிற்று.

மீறியவர்களைச் சாதிப் பஞ்சாயத்தாரும், ஊர்ப் பஞ்சாயத்தாரும் முதல் சுற்றிலேயே தண்டித்து விடுவார்கள். இந்தச் சூழ்நிலையில் தமிழ் நாட்டுக்கு எனத் தனிச்சட்டம் அரசினரிடமிருந்து பெற வேண்டிய தேவை இல்லாமல் போய்விட்டது. தென்னிந்தியா முழுமைக்கும் இந்த நிலைதான். அதாவது மனுநெறிதான். ஆனாலும் மேற்குடியாளராக மாறிக் கொண்ட அந்தணரும், நிலவுடைமை கொண்ட வேளாளரும் இணைந்து செயற்பட்டனர். நிலத்தின் வருமானத்தை ஆயம் என்று பகுப்பிட்டுப் பார்த்த தமிழர் அந்த ஆயத்தை மக்கள் அனுபவிக்க வேண்டித் தாயம் என்ற வரைமுறையைச் சமூக நெறியாக்கினார்கள். அப்போது சமதாயம் என்ற கருத்து தோன்றியது. அதுவே சமுதாயமாயிற்று. ஆனால் மனுதர்மத்தின்படி சமதாயம் என்ற சமுதாயம் அந்நாளைய தமிழகத்தில் ஏற்பட்டிருக்கவில்லை. சாதி பேதங்கொண்ட சமூகம் தோன்றியது. அதுவே நிரந்தரமாக்கப்பட்டது.

தனிச்சாதி, தனிக் குடியிருப்பு, தனிமைப்பட்டுப்போன சமூக - உணர்வு நிலை என்று உழவுத் தொழில் செய்த உழவரும், குடிசைத் தொழில் தரத்திலிருந்து செய்தொழிலைச் செய்த கைவல்லுநரும் சாதி வரம்பிற்கு அப்பால் உள்ள வாழ்க்கை நலன்களை நினைத்துக் கூடப் பார்க்க முடியாது. மனித உரிமைக்குட்பட்ட செய்முறைக் கருத்தாகக் கூட அதைப்பற்றி எண்ணிப் பார்க்க இயலாத மனமுடைபட்டு 'திருநாளைப் போவார்' ஆக அவர்கள் வாழ வேண்டியதாயிற்று. ஆங்காங்கே சாதிக்கட்டுப்பாட்டுப் பணியில் அவர்கள்அனைவரும் உறைந்து போய் நின்றார்கள். இத்தகைய சாதிக் கட்டுப்பாடே சட்டம் என்றாயிற்று. சோழரும், பாண்டியரும் இந்த வகையான சாதி முறையை, மனு தருமச் சமுதாயத்தின் கட்டுக் கோப்பை அந்தணரின் வேத வேள்வி நெறியின் பெயரால் நிலைநாட்டினார்கள். இதைத் தங்களுடைய கல்வெட்டுப் பகுதியான மெய்க்கீர்த்திகளில் ஏற்றுக் கொண்டார்கள்.

தமிழர் நாகரிகத்தின்பொற்காலம் கி.பி. 1150 அளவில் இரண்டாம் குலோத்துங்கச் சோழன் காலத்தில் தமிழகத்தில் நிலவிய போது ''மனு ஆறு விளங்க மாதவர் தவமும்-மங்கையர் கற்பும் சாதி ஒழுக்கமும் நீதி அறமும்-ஆதி அந்தணர் ஆகுதிக் கனலும் மீ தெழ'' அச் சோழன் ஆண்டான் எனஅவனுடைய திருவாரூர்க் கல்வெட்டு [595/XVII] கூறுகிறது. யாகங்களின் நெருப்புக் கனல் வேள்விக் குழியில் இருந்து புகையோடு பொங்கிப் புண்ணியம் சேகரித்த நிலையில் சாதி ஒழுக்கமும், நீதி அறமும் நாட்டின் - தமிழகத்தின் - சட்டத்திற்கான உயிராக்கக் கூறுபாடுகளாக உருவெடுத்தன என்பது தத்துவ விளக்கமாகும். முந்நூறு ஆண்டுக்காலக் களப்பிரரின் இருளாட்சியில் ஆதித் தமிழரின் சட்டம் மறைந்து ஒழிந்தது எனக் கொள்ளலாம். இடைக்காலத்தில் வேளாண்மைப் பொருளாதாரமும், கோயில் பண்பாடும் விரிவாகிய போது, மனுவைச் சட்டமாகச் சொல்ல நாட்டின் மன்னன் கூடத்

தேவையில்லை என்றான பின்பு, சமஸ்கிருத மனுச் சட்டத்திற்கு விளக்கஞ் சொன்ன அந்தணரே அச்சட்டத்தினை உருவாக்கியவர் ஆனார்கள். சோழரும், பாண்டியரும் அந்தணருக்குப் பிரம்மதேயங்களை வழங்கி அவர்களை நிலவுடைமையாளராக ஆக்கினார்கள். அப்போது சபா என்ற ஊராட்சி மன்றங்களின் மூலம் அவர்களது கிராமங்களின் நிருவாகம் அமைந்தது. இந்தச் சபா அமைப்பு கி.பி. 600இல் தொடங்கித் தமிழகம் எங்கும் காணப்பட்டது.

அந்தணர் குடியிருப்பு அகரத்தின் சபாவால் அந்தந்தப் பகுதிகளில் இந்தச் சட்டம் அனைவருக்கும் எடுத்து ஓதப்பட்டது. அகரத்தைச் சுற்றியும் அடுத்தும் இருந்த அத்தனை ஊர்களின் (ஊர் பஞ்சாயத்துகள் என்ற) 'ஊரவர்' அனைவரும் சபாவின் நீதி பீடமான தருமாசனம் என்பதை நாடி வந்து சட்ட விளக்கம் பெற்றார்கள். அதன் அடிப்படையில் நீதியை ஆங்காங்கே ஊரவர் ஏனைய மக்களுக்கு வழங்கினார்கள்.

## குற்றவியல் (கிரிமினல்) நீதி மன்றங்கள்

குற்றவியல், உரிமையியல் எனப் பகுத்துப் பார்க்கின்ற சட்ட அணுகுமுறை இடைக்காலத்து அரசுகளில் எப்போதுமே காணப் பெறவில்லை. சான்றாக இராமநாதபுரப் பகுதி - திருப்பத்தூர் வட்டம் - வேலங்குடிக் கல்வெட்டு (505/1958-59) கூறுவது போல ஒரு குற்றவாளி கத்தியால் இன்னொருவனைக் குத்திக் கொன்று விட்டு எங்கோ காணாமற் போனான். அவனுடைய சொத்துகளுக்கு வரி செலுத்தப்பட வில்லை. அதைக் காரணம் காட்டி வேலங்குடியிலுள்ள அரச கருவூலக்கிளைக்கு வரிக்காக அச்சொத்துகள் ஊராரால் விலைக்கு விற்கப்பட்டன. இந்தச் செய்திப்படி, குற்றவியல் (கிரிமினல்) குற்றமிழைத்துக் கொலையாளி யானவன் தனது சொத்துகளை உரிமையியல் (சிவில்)சட்டப்படி இழந்து விடுகிறான். குற்றத் தடுப்பு ஒன்றே குறியீடாகக் கொண்டு சட்டம் நடைமுறைப்படுத்தப்பட்டது. அந்தண அர்ச்சகர் ஒருவரை கூலிப் படை வைத்து ஒருவன் கொலை செய்தான். உள்ளூர் மன்றத்தாரின் ஒப்புதலோடு, அவனால் பாதிக்கப்பட்டோர் தனிநபர் நீதியின்படி அவனைக் கொன்றார்கள். இந்தஇடத்தில் உயிருக்கு உயிர் என்றாகிப் போன நீதி நிலைநாட்டப்பட்டது. மேலும் இந்த வழக்கில் இவ்வாறு கொலையுண்டு போன கொலையாளியின் சொத்துகளை ஊர் மன்றத்தினர் பறிமுதல் செய்தனர். பின்பு அக் கொலையாளியின் சொத்துகள் அவனுடைய மகனுக்கே திருப்பிக் கொடுக்கப்பட்டன. (302/ 1929) அதன் விளக்கம் என்ன? ஒரே குற்றத்திற்கு உயிருக்கு உயிர், சொத்து அபகரிப்பு என்ற இரட்டைத் தண்டனை கொடுக்கப்படக் கூடாது என்பது தான் இதன் பொருள். இது அந்நாளைய நீதியின் சாரம் ஆகும். வழக்கின் முடிவில் இது நிலை நாட்டப்பட்டது என்பது தெளிவு.

## குடுமியான் மலை வழக்கு

கி.பி. 1255இல் குடுமியான் மலைக் கல்வெட்டில் (372/1906) இந்தப் பகுதியிலுள்ள கோயிலில் பணியிலிருந்த சிவப் பிராமணர் என்ற அர்ச்சகர்களில் சிலர் கோயிலில் நகைகளைத் திருடியதால் வந்த வழக்கு குறிப்பிடப்பட்டுள்ளது. இதை விசாரிக்கச் சாமந்தர் என்ற பாண்டியப் பேரரசின் தலைமைப் படைத் தளபதி நேரில் வந்திருந்தான். 'தருமாசனம்' என்ற பெருங்கூட்டம் கூட்டப்பட்டது. 'சாமந்தார்' திருமுன்பு தார ஜனத்துப் பட்டர்கள் பக்கலிலே கேட்டு' என்று கல்வெட்டு சொல்வது போலப் பட்டர்கள் (வேதஞான வல்லுநர்) இந்தத் தருமாசனத்தில் நீதிப் பீடத்தில் காணப்பட்டனர். பல மாவட்டங்களின் 'நாட்டார்', பல நகரங்களின் ஆட்சி மன்றத்தினரான 'நகரத்தார்', பல ஊர்களின் 'ஊரார்', அந்தண அகரங்களின் 'சபையார்' ஆகிய அனைவரும் ஒன்று கூடித் தருமாசனம் என்ற நீதி விசாரணை மன்றத்தாராக அமர்ந்திருந்தனர். பட்டர்களின் ஆலோசனைப்படி தீர்ப்பு வழங்கப்பட்டது. அதன்படி, முதலில் குற்றம் சாட்டப்பட்டவர்களில் மூவர் தவிர மற்றவர்களைப் பழுக்கக்காய்ச்சின கலப்பைக் கொழுவைத் தொடுகின்ற அனல் சோதனைக்கு உட்படுத்தினர். (இச் சோதனை சோழர் காலத்தில் குறுகி இருந்தது. பாண்டியராட்சியில் பல்கியது. பின்பு விசய நகரத்தாரின் ஆட்சியில் இது நாடெங்கிலும் மலிந்தது)இதன்படிப் பழுக்கக் காய்ச்சின இரும்பை அல்லது கொதிக்கின்ற எண்ணெய் அல்லது நெய்யைக் குற்றஞ் சாட்டப்பட்டவர்கள் கைவிரலால் தொடுவர். மூன்று அல்லது நியமிக்கப் பட்ட நாட்களுக்குள் அந்த அனல்புண் ஆறிவிட்டால் அவர்கள் குற்றமற்ற வர்கள் எனக் கருதப்படுவர். பெருங்குடியாளர் இடையில் இந்த அனல் சோதனை பாண்டியராட்சியில் பெருமளவிற்கு மேற்கொள்ளப்பட்டது. கைப்புண் ஆறாத நிலையில் மேற்படி அர்ச்சகர்கள் தங்கள் குற்றங்களை ஒப்புக் கொண்ட போது அவர்கள் 'சிவத்துரோகிகள்' என்று அழைக்கப் பட்டார்கள். அவர்களுடைய நிலவுடைமைச் சொத்துகள் அனைத்தும் உள்ளூர்க் கோயிலுக்குத் திரு நாமத்துக் காணியாகக் கொடுக்கப்பட்டது. தருமாசனம் என்றளவில் நாட்டார், நகரத்தார், ஊரார், சபையார் என்று அத்தனை உள்ளாட்சி மன்றத்தாரும் கூடி நின்று இந்த விசாரணையில் கலந்து கொண்டாலும் சாமந்தா என்ற பாண்டிய மைய அரசின் தலைமைப் படைத் தளபதி 'மற்றைய பட்டர்கள்' என்ற அந்தண வேதஞான அறிவாளிகளின் ஆலோசனையைக் கேட்டான். அதன் பின்புதான் உள்ளாட்சி மன்றத்தாரின் இணக்கத்தோடு இந்த வழக்கில் நீதி வழங்கப்பட்டது. வழக்கும் முடிந்தது.

சிதம்பரம் பகுதி, காட்டு மன்னார்கோயிலில் கூட்டப்பட்டிருந்த வழக்காடு மன்றத்தில் அந்தக் கோயிலுக்கு வந்த பயணிகளான தேசாந்திரிகளைச் சேர்த்துக் கொண்டார்கள் என்பது கல்வெட்டு ஆண்டறிக்கை 1921இல் காணப்படும் அரிய செய்தியாகும். கோயில்

அர்ச்சகர்களில் சிலர் களவுக் குற்றவாளிகளாக விசாரணை செய்யப்பட்ட வழக்காடு மன்றத்தில் இத்தகைய முறையில் ஊர் வழிப்போக்கர்களையும் சேர்த்துக் கொண்டது எதைக் காட்டுகிறது? பாண்டியப் பேரரசில் நீதி வழங்குதலில் பொதுமக்கள் பங்கு பெறுகின்ற வழக்கம் இருந்தது என்பது இதன் மூலம் தெரிய வருகிறது. கள்ளுண்டவரை நீதி மன்றங்களில் பிணையாளர்கள் என்ற சாமின்தார்களாகப் பாண்டியராட்சியில் ஏற்றுக் கொள்ளவில்லை. உள்ளூர்க்களியாளரைத் தவிர்த்து ஆன்மீய தேசாந்திரிகளைக் கொண்டு வெளிப்படையான விசாரணை நடத்துதல், வெளிப் படையான தீர்ப்பு வழங்குதல் என்பன காணப்பட்டன.

பாண்டியப் பேரரசில் மரண தண்டனை விதிக்கப் பெற்றவர்கள் உள்ளூர்க் கோயிலின் முன்பு மண்டியிட்டுக் கொண்டு கொடுவாளால் தம் தலையைத் தாமே அரிந்து அக் கோயிலுக்குக் காணிக்கையாகக் கொடுக்கின்ற பழக்கம் இருந்தது. (359/1914) விசய நகரப் பேரரசனான கிருட்டிண தேவராயர்(கி.பி. 1509) ஆணையிட்டபடி, விசய நகரின் தலை நகரில் குளம் வெட்டி முடித்த பின்பு ஏற்கெனவே மரணதண்டனை பெற்றுச் சிறையிலிருந்த கைதிகளை அக்குளத்திற்கு நரபலி கொடுத்தார்கள். அவ்வாறு கழுவாய் (பிராயசித்தம்) செய்யப்பட்டது. இதற்கு இருநூறு ஆண்டுகளுக்கு முன்பிருந்த பாண்டியராட்சியில் இது போன்று நடந்ததாகத் தகவல் இல்லை. இடைக்காலத் தமிழ் நாட்டில் சோழ மன்னர்கள் மரண தண்டனை வழங்குதலில் முனைப்பு காட்டவில்லை. இந்த நிலை பாண்டியர் ஆட்சியில் காணப்பெறவில்லை. மரண தண்டனைக்குப் பதிலாகக் கோயில்களில் நெய்விளக்கு எரிக்கச் சோழர் பணித்தார்கள். இதற்காகச் 'சாவா மூவாப் பேராடு'என்றமைந்த ஆட்டுக்கிடையை அல்லது மாடுகளைக் குற்றவாளி உள்ளூர்க் கோயிலுக்கு நிவந்தமாக வழங்குமாறு ஆணையிடப்பட்டான். அதுவே அவனுக்கு உரிய தண்டனையாகக் கருதப்பட்டது. பாண்டியர் ஆட்சியாலும் இத்தகைய சாவா மூவாப் பேராடு அல்லது பசுக்கள் உள்ளூர்க் கோயில்களில் நந்தா விளக்கு எரிப்பதற்காகக் கொடுக்கப்பட்டன. ஆனால் கொலை போன்ற குற்றங்களைச் செய்தவர்களுக்கு உரிய தண்டனையாக அத்தகைய தானம் கொடுக்கப்படவில்லை. குற்றவாளிகள் (அதிலும் கொடுமையான குற்றவாளிகள்) கொடுமையாகவே தண்டிக்கப்பட்டார்கள்.

கிராமங்களில் குற்றங்கள் நடைபெறாத வண்ணம் பாடிக்காவல் முறைமையாளர் கவனமாக இருந்தனர். அதற்குரிய பாடிக்காவல் என்ற வரியும் பாடிக்காவல் காணி என்ற நிலமும் இவர்களுக்கு ஊதியமாக வழங்கப்பட்டிருந்தது. காவலர் பெருந்தெரு என்பது இவர்களின் குடியிருப்பு ஆகும். இவர்களுடைய பணி, கிராமங்களில் நிரந்தரமாகக் காணப்பட்டது. குற்றத் தண்டம் என்ற தண்டனையைத் தனி நபர் குற்றவாளி அல்லது சமுதாயம் கொடுக்க வேண்டியதாயிற்று. அதே

போல் பட்டித்தண்டம் என்பது பொதுச் சமூகத்தையே தண்டித்து வாங்கிய குற்றத் தண்டனை வரியாகும். இவ்வாறு பட்டித் தண்டம் விதிக்கப்பட்ட கிராமச் சமுதாயம் இந்த வரியைக் கொடுக்க மறுத்து, தங்களுடைய குடியிருப்புக் கிராமம், உரிமையான விளைநிலம் போன்றவற்றைத் துறந்து அந்நிய இடம் பெயர்ந்து சென்றது எனப் பெரம்பலூர்க் கல்வெட்டு (21/1928-29) அறிவிக்கிறது. நகரங்களில் உள்ள இரவுக் காவலர் கள்வரும், கயவரும் அச்சப்படுகின்ற அளவில், உரத்த குரலில் அதட்டிக் கொண்டு அங்குமிங்கும் அலைந்து திரிந்து இரவுக் காவல் காத்து குற்றங்களைத் தடுத்தார்கள் எனத் தஞ்சைவாணன் கோவை (பக்கம் 183,189) என்ற பாண்டியப் பெருவேந்தர்கால இலக்கிய நூல் கூறுகிறது.

## காவல்-பாண்டியரின் மரபுநிலைக் கண்ணோட்டம்

அரசின் இலக்கணம் பற்றிக் கூற வந்த திருவள்ளுவர் படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு, அரண் ஆறும் உடையான் அரசருள் ஏறு என்று சொல்லிப் படைக்குத்தான் - அதாவது நாட்டின் பாதுகாப்பிற்கான காவலுக்குத் தான்- முதலிடம் கொடுத்துள்ளார். படை உட்பட்ட ஆறு கூறுபாடுகளையும் பெற்றிருந்த மதுரைப் பாண்டியர் தென்புலம் காவல் செய்த அளவில்தான் அரசருள் ஏறு ஆனார்கள். காவல் செய்வதாகத்தான் அறிவித்தார்கள். இந்தக் காவல் தத்துவம் சங்க காலந்தொட்டு இரண்டாவது பாண்டியப் பேரரசு முடிவு வரை பாண்டிய மன்னர்களின் தலையாய அரசுக் கடமையாகக் கருதப்பட்டு வந்த மரபு உண்டு. சங்க காலத்துப் பூதப்பாண்டியனின் புறப்பாடல்- 71இல் ''மன்பதை காக்கும் நீர் குடிச் சிறந்த தென்புலங்காவல்'' எனக் கூறும். இந்த வகையான 'தென்புலங் காவல் என்முதல் பிழைத்தது' என அரற்றித்தான் நெடுஞ்செழியப் பாண்டியன் மாய்ந்தான் எனச் சிலம்பும் சொல்லும். இந்த நெடுஞ்செழியன் ''தலையாலங்கானத்து அமர்வென்று ஞாலங்காவல் நன்று எய்தியும் ஆண்டான்'' எனச் சீவா மங்கைச் செப்பேடுகள் (கி.பி.800) சொல்லுகின்றன. முதல் பாண்டியப் பேரரசுக் காலத்திலும் இந்தக் காவல் தத்துவம் பாராட்டப்பட்டது என்பதை அறிகிறோம். இரண்டாம் பாண்டியப் பேரரசில் கொல்லம் முதல் நெல்லூர் வரை ஆண்ட மாறவர்மன் குலசேகரன் (கி.பி.1268) தனது 'தேர்போல்' எனத் தொடங்கும் மெய்க்கீர்த்தியில் தன்னைப் 'பழுதறு சிறப்பிற் செழுவைக் காவலன்' என அழைத்துக் கொள்கிறான். காவல் காப்பது தான் அரசருக்கான முதற்கடமை என்றான். மரபுரிமையாகப் பேரரசு எங்கும் அத்தகைய காவலை மேற்கொள்ளப் பாடிக்காவல் என்றழைக்கப் பட்ட காவல்முறை ஏற்படுத்தப்பட்டது.

பாண்டியரின் ஆட்சிமுறைக்கு அவர்களுடைய படை உறுதுணையாக நின்ற நிலையில் அதே படை மேற்கொண்டிருந்த காவல் பணி பாடிக்காவல் முறைமையாகத்தான் காணப்பட்டது. கொல்லம் முதல்

நெல்லூர் வரை விரிவாகி நின்ற பேரரசு பாடிக்காவல் முறையைச் சார்ந்து இருந்தது. காவலர் பணியில் பாடிக்காவல் வரியை ஊதியமாகப் பெற்றவர்களை அரசு அமர்த்தி இருந்தது. கிராம- நகரப் பகுதிகளில் சட்ட மீறலைத் தடுக்கின்ற பணியை இந்தப் பாடிக்காவல் அமைப்பைச் சார்ந்தவர்கள் மேற்கொண்டிருந்தார்கள். தற்காலத்துக் காவல் துறையினர் ஆற்றும் அதே பணியை இவர்கள் ஆங்காங்கே செய்து வந்தனர். தங்களுடைய பணிக்கு ஊதியமாக அந்தந்தப் பகுதிகளில் பாடிக்காவல் என்ற காப்புவரியைத் தாங்களாகவே குடிமக்களிடமிருந்து வசூலித்தார்கள். உள்ளாட்சி அமைப்புகளான கோயில் நிருவாகம், அகரம், நகரம், நாடு, ஊர் ஆகியவற்றின் தன்னாட்சி மன்றங்கள் அனைத்தும் இந்தப் பாடிக்காவலர் வரியை அரசின் சார்பில் மக்களிடமிருந்து வாங்கின. பாடிக்காவலருக்கு அதை வழங்கின. இவ்வாறு உள்நாட்டுக் காவலுக்கு வழி வகுத்தார்கள்.

பாடிக்காவல் வரியும், காவல் முறையும் ஏற்கனவே கி.பி.600 அளவிலிருந்து தமிழகத்தில் காணப்பட்டவைதான். ஆனாலும் சோழர் காலத்தில் அந்தணர்க்கு ஏராளமான எண்ணிக்கையில் பிரம்ம தேயங்கள் வழங்கப்பட்ட போது சாகுபடி செய்யாத அந்தணரை அரசுச் சலுகையில் நிலவுடைமையாளராக ஆக்கினார்கள். அப்போது கிராமக் காவலர்களின் பணி இன்றியமையாததாக விளங்கிற்று. ஆங்காங்கே உள்ள கோயில் நிருவாகங்கள் பாண்டியராட்சியில் தன்னாட்சி நிறுவனங்களாக வளர்ந்த பின்பு அக்கோயில் நிருவாகங்கள் பாடிக்காவல் வரியையும் வாங்கின. பாண்டியராட்சியில் நீதி என்பது எல்லோருக்கும் கைக்கெட்டும் அளவில் இயங்கி வந்தது. இதற்குச் சான்றாக வெளி நாட்டுச் சுற்றுலாப் பயணியான மார்க்கோபோலோ கி.பி.1294இல் கொற்கை அருகில் முத்துச் சலாபத் துறை நகரான காயலில் கண்ட காட்சியைக் கூறலாம். அதன்படிச் சுந்தரபாண்டியன் என்ற பாண்டிய மன்னன் (குலசேகரப் பாண்டியனின் தம்பி) நகரத்தின் விலையளவு மதிப்புள்ள சேணமுடைய குதிரையில் வந்தபோது அவனிடம் பணம் வாங்க இருந்த வணிகன் ஒருவன் அக் குதிரையைச் சுற்றித் தரையின் மேல் வட்டம் வரைந்தான். அவ்வாறு வட்டக்கோடு கிழித்தவனுக்கு வழி வகை சொல்லாது அவ்விடம் விட்டு யாரும் நகர்வதற்கில்லை. பாண்டிய அரசனும் அப்போது அவ்விடம் விட்டு தனது குதிரையை நகர்த்த வில்லை. பதவியிலிருந்த பாண்டிய அரசனே பொதுமை நியாயத்திற்குக் கட்டுப்பட்டிருந்ததை இந்நிகழ்ச்சி விளக்குகிறது.

பொருளாதாரத்தில் நிலவுரிமை என்பது சமூக வாழ்க்கையின் உயிர் நாடியாகும். ஆகவே ஆவணங்கள் (பத்திரங்கள்) உரிய முறையில் எழுதப்பட்டன. எல்லா ஆவணங்களிலும் பாண்டிய மன்னனின் மெய்க்கீர்த்தி முன் பகுதியாகச் சொல்லப்படும். அந்த நேரத்தில் ஆட்சியிலிருந்த பாண்டிய மன்னரின் ஆட்சி ஆண்டானது

பாண்டியருக்கே உரித்தான எதிராம் ஆண்டு கொண்டு குறிப்பிடப்படும். பழகு தமிழில் அல்லது பண்டிதச் சமசுகிருதத்தில் ஆவணம் எழுதப்பட்டது. வட்டெழுத்து அல்லது கிரந்த லிபியில் கோவில் கற் சுவர்களில் இந்தப் பத்திரங்கள் ஊராட்சியாளரால் அல்லது கோயில் நிருவாகத்தால் செதுக்கி வைக்கப்பட்டன. ஊருக்கென அமைந்த ஆவணக்களரி என்ற ஆவணக் களஞ்சியம் காணப்பட்டது. பனை ஓலை, தாமிரத் தகடு ஆகியவற்றில் ஆவணம் எழுதி வைத்தார்கள். சிவன் கோயிலுக்குக் கொடுக்கப்பட்ட நிலம் சண்டேசுவரர் விலை கொடுத்து வாங்கப்பட்டது. அப்போது அது திருவிடையாட்டம் என்ற நிலமாகியது. எல்லைகளில் திரிசூலங்கள் நாட்டப்பட்டு அந்நிலம் கோயில் நிலமாகியது. விண்ணகரம் என்ற வைணவக் கோயில்களில் வழக்கத்தின்படி நிலம் ஏற்கப்பட்டது. கோயில் விளக்கெரிக்கச் சாவா மூவாப் பேராடு கொடுக்கப்பட்டன. இத்தகைய அறக் கொடையின் (தருமத்தின்) நிரந்தரத்தை வலியுறுத்தச் 'சந்திராதித்தர்(சந்திரன்+ ஆதித்தன்) உள்ளவரை செல்லுவதாக' என்றெழுதினார்கள். உதகம் பண்ணி அல்லது நீரோட்டிக் கொடுக்கப்பட்டது. ஊர்த்தச்சனால் குறிப்பிட்டு எழுதப்பட்டு நன்கொடைக்கான சாட்சிகளும் ஆவணத்தில் கையெழுத்திட்டனர்.

ஆவணங்கள் பிடிபாடு எனவும் பிரம்மாண இசைவுத் தட்டு எனவும் வழங்கப்பட்டன. சொல்லாட்சியும் எல்லைகளைக் குறிக்கின்ற விதமும் தற்போது உள்ளது போல் அப்போதும் இருந்ததைப் பின்வரும் சான்று கொண்டு விளக்கலாம். சென்னை - திருவல்லிக்கேணியின் பார்த்த சாரதிக் கோயில் கல்வெட்டு (238/1903) பாண்டிய மன்னன் இரண்டாம் மாறவர்மன் குலசேகரப் பாண்டியனுடைய 49ஆம் ஆட்சியாண்டில் (அதாவது கி.பி.1316இல்) செதுக்கப்பட்டது. ஆவண முறையில் கீழ்க் கண்டவாறு இக்கல்வெட்டின் சொல்லாட்சி அமைகிறது.

''திருவாய் கேள்வி முன்னதாக கோபன்மரான திரிபுவனச் சக்கரவர்த்திகள் ஜெயங்கொண்ட சோழ மண்டலத்து புலியூர் கொட்டமான குலோத்துங்க சோழ....திரு மயிலாப்(பூர்) இம் மண்டலத்து புழற் கோட்டமான அயனபுரத்து அயனபுரங்கிழவன் செழியதரையனும் மேற்படி நின்ற நம்பியும் இவ்விருவொம் நிலவிலை பிரமாணம் பண்....த்த பரிசாவது புலியூர் கொட்டத்தில் எழுமூர் நாட்டில்.... புதிர் பாக்கத்தில் எங்கள் காணியான கரை நிலத்திலும் அயனபுரங்கிழ(வன்) விரகாங்கையராயர்.... எல்லைக்கும் திருவல்லிக்கேணி எல்லைக்கு மேற்கும்.... உதகம் பண்ணிவிட்ட பாங்கு ஒன்று.... விலைப்பொருள் அன்றாடு நற்பணம்.... சம்மதித்து விற்றுவிலை கு(டு)த்தோம். திருமயிலாப்பூர் ஊரவற்கு.. இவை அயன்புரக் கிழவ.. ரையன் எழுத்து .. அரையின் நின்ற நம்பி எழுத்து'' இவ்வாறு கல்வெட்டுச் சாட்சிகளைக் குறிப்பிட்டு விட்டு முடிவடைகிறது. நன்கொடையாளன் கையெழுத்திட

இயலாதவனானால் (தற்குறியானால்) என்ன செய்வது? பரிகாரம் பின்வருமாறு அமைந்தது. ''ஓலைக் குற்றம், எழுத்துக் குற்றம், சொல் குற்றம், பொருட் குற்றம் மற்றும் எ(க்) குற்ற (மு)ங் குற்றமன்றியெ விற்றுவிலை பிரமாணம் பண்ணிக் குடுத்தேன் இப்படிக்கு மாளவ தேவேந்திரயரையன் தற்குறி மாட்டான். மையும் இட்டு நானுமறிவேன் சக்கரவர்த்தி காளையர் எழுத்து'' என்று சாட்சி அமைத்து ஆவணம் இடப்பட்டது. பத்திரம் (ஆவணம்) எழுதுவோருக்கு உரிய ஊதியத்திற்காகச் சந்தி விக்கிரகப்பேறு என்ற வரி (ஆங்காங்கே குடிமை வகையில்) சிற்றாயமாக (சின்ன வரிகள்) வசூலிக்கப் பட்டது. ஊரில் ஆவணக்களரி (பத்திரக் களஞ்சியம்) போன்று அபராதத் தொகையைச் செலுத்திட ஊர்க் கருவூலம் இருந்தது.

சோழர், பாண்டியர் ஆகிய எல்லா அரசர்களும் கோனேரின்மை கொண்டான் என்ற ஆவணப் பெயரில் செயற்பட்டு அரசாணையை அரசவையிலிருந்து முத்தாய்ப்போடு வெளியிட்டார்கள். இந்த வகை கோனேரின்மை கொண்டான் ஆணையானது உரிமையியல் சட்டப்படி கல்லிலும், செம்பிலும் வெட்டுவிக்கப் பெற்றது. புரவிலும் (வருவாய்த் துறைப் பொத்தகம்) கழித்துக் கொள்ளப்பட்டது. குடிநீங்கா என்று சொன்னால் ஏற்கனவே நிலத்தில் உள்ள குடியானவர்களை அப்புறப்படுத்தாமல் எனப் பொருள்படும். குடியுமிட்டு என்பது வெளியிடத்திலிருந்து குடியானவரைக் கொண்டு வந்து மேல்வாரம் கொடுக்கின்ற உழவராக (காராண்மை என்ற காணியின்) சாகுபடியில் பங்கு பெற வைத்த முறையாகும். ஊர்கீழ் இறையிலி என்பதில் வரியிலாச் சலுகை உண்டு. உள்ளூர்க் கோயிலுக்கு ஊர் மன்றம் இந்தச் சலுகையைக் கொடுத்திருந்தது. அரசனுக்குத் தவறாமல் கொடுக்க வேண்டிய கடமை போன்ற வரிகளை அந்த ஊரவர் செலுத்திக் கொள்கின்ற முறையை ஊர் கீழ் இறையிலி குறிப்பிடும். இவ்வாறு உரிமையியல் சட்ட ஆவணங்களில் பதிவு செய்யப்பட்டன. பூசலுக்கு இடமில்லாமல் தெளிவு இருந்தது. பெருநிலக்கிழார்கள் தண்டனை பெற்ற விதம் பற்றிய ஆவணக் குறிப்பைப் பின்வரும் கல்வெட்டுச் சான்று கொண்டு விளக்கலாம்- ''கீழ்க் கண்ட விளை நிலமும், நத்தமும் ஆய்குடி உள்ளிட்டு உற்பத்தி உள்ளது. அறவிலையாக்கிக் கொள்வார்க்கு விற்றுக் கடமை செலவாக்கு விப்பதென்று எங்களுக்கு திருமுகம் வருகையில்.. இவர் பெ(ரா)ல் தரகத்துக்குப் பிரித்துக் கொடுத்து குறையால் நிற்கும் பணம் இவர் உடலிலே குடுப்பதென்று உடையார் பூபாலராயர் எழுதின் திருமுகப்படி பணத்திற்கும் காவிரி ஆற்றுத் தென்னாற்றங் கரையில் (தி) நப்பனுவாரத்து இவர்க்கு இட்ட கொலறைக்கு ஆள் ஏற்றா குற்றத்திற்கு தெண்டமா(க) நிச்சயத் தருளி... பணமாங்'' என்று கி.பி.1303இல் ஏற்பட்ட இந்தக் கல்வெட்டு (591/VIII: 283/1903) குறிக்கிறது. கடமைவரி இறுக்காமலிருந்ததால் பிணைப்பட்டுப் போன பின்பு சிறை

முறித்துச் செல்லல், காவிரிக்குக் கரை ஏற்றுவதில் முட்டாள் (முட்டுக்கு ஆள்) என்ற பதில் ஆள் அனுப்பாமலிருந்ததால் வந்த குற்றத் தண்டம் (தண்டனைவரி) செலுத்தாமலிருத்தல் போன்ற குற்றங்களை வகைப் படுத்தினார்கள். குற்றவாளியான விழுப்பரையனுடைய சொத்துகளை விற்று உடலாக்கி (முதல்) அரசுக்கு வழங்கினார்கள்: நாட்டவரும் அகர பிரம்மதேயத்தார்களும் ஒன்று கூடி உரிமையியல் நீதி மன்றமாகச் செயற்பட்டு இந்தத் தீர்ப்பை ஒருமுகமாக அளித்தார்கள். அதை நிறைவேற்றவும் செய்தார்கள்.

சமூக மன்றங்கள் கூட உரிமையியல் சட்டத்தை நிலை நாட்டுகின்ற தண்டனையைத் தாராளமாக வழங்கின எனலாம். சான்றாகக் கல்லிடைக்குறிச்சி கம்மாளர் என்ற கைவினையோர் உள்ளூர்க் கோயிலுக்குரிய வழிபாட்டுச் செலவுக்கு வரி கொடுக்காத அதே சமூகத்தவரின் வீடுகளில் புகுந்து மண்கலம் உடைத்தும், வெண்கலம் பறித்தும் தண்டனை வழங்கினார்கள் என அவ்வூரில் கி.பி.1301இல் அமைக்கப்பட்ட கல்வெட்டு (98/XVIII) கூறுகிறது. வாசல்பேறு, வாசல் விநியோகம், வீட்டுத் தேவை, வெட்டி முட்டாள், வேட்டை வரி, அபிசேகக் காணி போன்ற வரிகளின் வருவாய் அரசனுக்குரியது ஆகும். இதைக் கொடுக்க மறுத்து உரிமையியல் நடவடிக்கையாக மக்கள் இடம் பெயர்ந்த நிலைமைகளும் காணப்படுகின்றன.

## படை அமைப்பும் படைத் தேவைகளும்

சோழரை முன்னிருத்திக் கருநாடகப் போசளரின் நில ஆதிக்கத்தை அகற்றுகின்ற விரதத்தை முடித்து வைப்பதற்காக ஒரு மாபெரும் படையை இப்பாண்டியர் சேகரித்தார்கள். அப்போது தங்களுடைய குதிரைப் படையின் அளவை விரிவு செய்தார்கள்: 'அசுவகோடி' என்று அது அழைக்கப்பெற்றது. அரசுக்கு மட்டும் குதிரைகளை விற்ற அரபு வணிகருக்குத் தேவிப்பட்டினம் போன்ற தனிக்காணி (புலம்) வைத்துக் கொள்ளும் அரசாங்கச் சலுகைகளை வழங்கினார்கள். பேரரசுப் பாண்டியரின் படை நிருவாகமானது இடைக் காலத் தென்னிந்தியாவில் காணப்பட்ட மரபுவழி நடைமுறைகளைக் கொண்டே இயங்கியது. ஆனாலும் சில புதிய வளர்ச்சிப் படலங்கள் தோன்றத்தான் செய்தன. கடற்படையுடன் இணைந்து நின்ற காலாட்படை, யானை, குதிரை பகுப்புகளுடன் வில்லாளிகள் (தற்காலத் துப்பாக்கி வீரர்களுக்கு ஒப்பானவர்கள்) பாண்டியரின் படையில் கணிசமான எண்ணிக்கையில் காணப்பட்டார்கள். தமிழகத்தை மீட்பதற்குக் கருநாடகப் போசளர், கலிங்கர் (ஒரிசா), காகேதியர் போன்றவர்களோடு பாண்டியர் படை போராடியது. குறிப்பாகக் காகேதியரின் வில்லாளிகளுக்குப் பாண்டியர் ஈடுகொடுக்க வேண்டிய தாயிற்று. ஏனென்றால் படை மானியத் திட்டத்தின் மூலம் திரட்டப்பட்ட 90,000 வில்லாளிகள் காகேதிய இராணுவத்தில் காணப்பட்டனர், என பர்ட்டன் ஸ்டீன் அறிவிக்கிறார்.

தக்காணப் பீடபூமியின் காடுகளை விட்டு நீங்கி வந்து காவிரிப் படுகையின் வழியே தமிழகத்தைத் தத்து எடுத்து நின்ற கருநாடகப் போசளரைத் திரும்பக் கருநாடகத்திற்குள் விரட்டுவதற்குப் பாண்டியர் முனைந்தனர். மேற்கு மலைக்கு அப்பால் போசளரை அனுப்பி வைக்கப் பாண்டியருக்கு ஏராளமான குதிரைகள் தேவையாயிற்று. பாண்டியருக்கு முன்பு தமிழகத்தை ஆண்ட சோழர் தங்கள் படைகளைக் கி.பி.1007இல் (இரட்டப்பாடி படையெடுப்புடன்) தொடங்கிக் கி.பி.1067 வரையுள்ள 60 ஆண்டுகளாகத் துங்கபத்திரை - கோதாவரி பகுதிகளுக்கு வழி நடத்திச் சென்றார்கள். சோழருக்குத் தங்களுடைய வலுவான எதிரிகளைத் தமிழ் மண்ணில் எதிர்க்க வேண்டிய சூழ்நிலை ஏற்படவில்லை. ஆனால் பாண்டியர் அயலாரை அகற்றுகின்ற பணியை மேற்கொண்டனர். வில், குதிரை போன்றவற்றைக் கணிசமாகக் கையாளுகின்ற போர் நுட்பத்தினை அவர்கள் கையாள வேண்டியதாயிற்று.

## யானைப்படை (சகஸ்ரகரி)

இடைக் காலத்தின் யானைப்படை இந்நாளைய 'டாங்கு' படை போன்றது. காட்டிற்குள் பெண் யானையைச் செல்ல வைத்து ஆண் யானையை நாட்டிற்குள் கூட்டிக் கொண்டு வரும் எளியமுறையை வடவர் பயன்படுத்தி யானை பிடித்ததாகச் சங்க நூலான அகநானூறு (பாடல் 276) கூறுகிறது. காட்டில் குழி வெட்டி யானையை அதனுள் விழச் செய்து சங்கத் தமிழர் யானையைப் பிடித்தனர் என்று அகம் (பாடல்-211) கூறுகிறது. சோழ மண்டலம் போலல்லாமல் மலையும், காடும் கொண்ட பாண்டிய நாட்டில் யானைகளுக்குப் பஞ்சமில்லை. அங்குக் குதிரைக்குத் தான் விலையுண்டு: யானைக்கு இல்லை. ஆகவே பாண்டியர் படையில் யானைக்கு உரிய பங்கு கணிசமானதாகத்தான் இருந்தது. சகஸ்ரகரி என்ற நூற்றுக்கணக்கான யானைகள் கொண்ட யானைப் படையை மன்னர்கள் போர்க்களத்தில் ஈடுபடுத்தினார்கள்.

தோற்றுப்போன இடைக் காலத்து மன்னரிடமிருந்து (போர்க் களத்தில் யானை மேலிருந்து போரிட்டு வெற்றி பெற்ற மன்னன்) போர் யானைகளைப் பிடுங்குவதில் முனைப்பாக இருந்தான். தோல்வியுற்ற மன்னன் ஆண்டுதோறும் செலுத்துகின்ற கப்பத் தொகையில் யானையும் இடம் பெறும்.

## குதிரைப்படை (அசுவகோடி)

பாண்டியர் படையில் குதிரைப் படையின் எண்ணிக்கை கணக்கிலடங்காது பெருகிக் கொண்டே இருந்தது. மேற்படி சுந்தர பாண்டியனுடைய சிதம்பரம் கோயில் கல்வெட்டுகள் அசுவகோடி (குதிரைகள் கோடி எண்ணிக்கை) குதிரைப் படையை அவன் வைத்திருந்தான் எனக் குறிப்பிடுகின்றன(178,179/1892). மன்னர்கள் போர்க்களங்களில் கையாண்ட போர்த் தந்திர முறைகளைப் பற்றிக்

கல்வெட்டுகள் பொதுவாகவே பேசுவதில்லை. ஆனாலும் போசளர் போன்ற ஆக்கிரமிப்பாளர்களை மேற்கு மலைக்கு அப்பால் விரட்டி விடுவதற்கு மலை ஏறும் குதிரைப்படை வேண்டியதாயிற்று என்பதைத் தஞ்சைவாணன் கோவையில் 17ஆவது சருக்கத்திலிருக்கும் இலக்கியச் சான்று கொண்டு அறியலாம். குதிரைகளுக்கு நெய்ச்சோறு கொடுத்துக் கொழுக்க வைத்த பின்பு பிசாசுகள் போல அவைகளின் மேல் தமிழ்ப் போர்வீரர்கள் சவாரி செய்கிறார்கள் என இத்தாலி நாட்டவரான மார்க்கோபோலோ கூறுகிறார்.

குதிரைகளின் காலில் லாடம் அடிப்பது போன்ற குதிரை வளர்ப்பு முறைகளைத் தமிழருக்கு அரபு வணிகர் கற்றுத் தர முன் வரவில்லை. ஆகவே ஆண்டுதோறும் குதிரை இறக்குமதியில் பாண்டியரின் பணம் அளவில்லாமல் இறைக்கப்பட்டது. அதுவே அரபு நாடுகளின் அக்காலச் செல்வச் செழுமைக்குக் காரணமாயிற்று என்ற குற்றச்சாட்டு உண்டு. குதிரை வாணிகராகக் கேரளத்து மலை மண்டலக் குதிரைச் செட்டிகளும் காணப்பட்டனர். ஆனாலும் அரபு வணிகர்கள் தான் முதன்மையாளராக விளங்கினர். அரபு வணிகன் சியாடிபீன் என்பவனுக்கு இராமநாதபுரத்துத் தேவிப் பட்டினம் என்ற நகரப் பகுதியைப் பாண்டிய அரசு காணிக்கையாகக் கொடுத்திருந்தது. குதிரை இறக்குமதியில் முடக்கமோ, முறிவோ இல்லாமல் பாண்டிய மன்னர்கள் பார்த்துக் கொண்டார்கள் என்பதை மறக்கலாகாது. ஆனாலும் அளவை மீறியது ஆக்கமாகி விடுமா? பெற்ற செல்வத்தைப் பேணிக் காக்கத் தெரியாத பாண்டிய அரசுக்குக் கடைசியில் இழப்புத்தான் ஏற்பட்டது.

கி.பி.1311இல் மதுரை அரசைக் கொள்ளையடித்த மாலிக்காபூர் டெல்லிக்கு 612 யானைகளையும், 20,000 குதிரைகளையும் கொண்டு சென்றதாகப் பரனி என்ற வரலாற்றாசிரியர் குறிப்பிடுகிறார். போரில் பெற்ற தோல்வியின் காரணமாகப் பாண்டியப் பேரரசு மதுரையம்பதியில் அறவே அற்றுப் போய் விட்டது. மதுரையைத் தவிர்த்து ஏனைய தமிழகத்தை மேலும் ஒரு நூற்றாண்டு வரை இப்பாண்டியர் ஆண்டனர். ஆனாலும் அக்காலத்தில் (முகமதியர் வயப்பட்டுப்போன) மதுரையைப் போர் முறையில் மீட்கின்ற வேட்கையை வேர்விட வைக்கும் அளவுக்குப் படை நிருவாகத்திறன் அப்பாண்டியரிடம் தொடர்ந்து காணப்படவில்லை எனலாம். எனவே டெல்லியாளருடைய படை நிருவாகம் மேம்பட்டது என உறுதியாயிற்று. இப்படிப்பினைகளின் தாக்கம் பாண்டியரின் யானை -குதிரைப் படை நிருவாகத்தில் ஏற்படவில்லை. அதற்கான முறையில் அந்த நிருவாக அமைப்பு நெகிழ்ச்சியுடையதாகவும் அமைந்திருக்க வில்லை.

## கப்பற்படை

தென் கேரளத்து விழிஞம் முதல் கோதாவரி முகத்துவாரம் வரையுள்ள நீண்ட கடற்கரையைப் பாதுகாக்கவும், கடாரப் படையெழுச்சி நடத்தவும் சோழர்கள் கடற்படையை மேம்படுத்தி நிருவாகஞ் செய்தனர். அந்த அளவிற்குப் பாண்டியர் கடற்படையைக் கவனிக்கவில்லை. அந்நாளில் வணிகக் கப்பலும், கடற்படைக் கப்பலும் வெவ்வேறாகக் கருதப்படவில்லை. கி.பி. 916இல் அபுசாயத் என்ற அரபு வணிகன் தரும் குறிப்புகளுக்குப் பின்பு கி.பி.1294இல் தான் மார்க்கோபோலோவின் தமிழர் கப்பல்கள் பற்றிய குறிப்புகள் தெரிய வருகின்றன. வெறும் மரக்கட்டைகளைச் சேர்த்து வைத்துக் கயிறுகளால் பிணைத்துக் கொண்ட தமிழகக் கப்பல்களை ஈழக் கப்பல்கள் தென் பாண்டிக் காயல் துறைமுகத்தில் தாக்கியபோது பாண்டிய நாட்டுக் கப்பல்கள் தளரவில்லை என மார்க்கோபோலோ குறிப்பிடுகிறார்.

## காலாட்படை

பாண்டிய அரசில் குதிரையோ கோடி எண்ணிக்கை; யானையோ நூறு எண்ணிக்கை; பாண்டியரின் காலாட்படையில் எத்தனை பேர்? இது பற்றித் தெளிவான செய்தி இல்லை.

பெரும் எண்ணிக்கையில் குதிரைகளும், பல நூற்றுக்கணக்கில் யானைகளும் கொண்ட பாண்டியப் படையில் குதிரை, யானை மேலிருந்து போரிட்ட போர் வீரர்களும் அவ்விலங்குகளின் பராமரிப்பாளர்களும் எத்தனை பேர்? காலாட்படையில் காணப்பட்ட வில்லாளர், வாளினர் போன்றவர்கள் எத்தனை பேர்? இவை பற்றித் தெரியவில்லை. முன்பு சொன்னபடி, காகேதியரின் (சுமார்) ஓர் இலட்சம் வில்லாளிகளை எதிர்த்து மாறவர்மன் விக்கிரம பாண்டியன் கோதாவரிப் பகுதிக்குச் சென்ற போது பாண்டியரின் வில்லாளிகளின் எண்ணிக்கையும், காகேதிய வீரர்களைப் போன்று இலட்சத்தை அடுத்து இருந்திருக்க வேண்டும்.

## வலங்கை மகாசேனை

தமிழ்ச் சமூகத்தில் மேற்குடியாளர் வலங்கை வகுப்பினர் எனப்பட்டனர். இவர்கள் படைஞராகப் பணியாற்றினர். பாண்டியரின் ஒரு படை அமைப்புக்கு வலங்கை மகாசேனை எனப் பெயர். செங்கல்பட்டுப் பகுதி திருக்காச்சூரில் சில அந்தணக் குற்றவாளிகளை ஒடுக்க மலையாளர் என்ற படையினரைப் பாண்டிய இளவரசன் பயன்படுத்தினான். (315/1919) இவர்கள் இடங்கை வகுப்பினர் என்ற கருத்தும் உண்டு. வலங்கை வேளைக்காரர் என்ற அரச மெய்க் காப்பாளர்களைச் சோழர்கள் பணியில் வைத்திருந்தார்கள். பாண்டியர் படையில் இத்தகைய வகுப்புப் பிரிவுகள் அவ்வளவாகக் கிடையாது.

## முப்பேர்ப் படை

இந்தப் படை 'மூன்று கை மகாசேனை' எனச் சோழர் காலத்திலேயே அம்பாசமுத்திரம் பகுதி திருவாலீசுவரம் படைப் பற்று என்ற படைத் தளத்தில் காணப்பட்டது. உள்ளூர்க் கோயிலுக்குப் பல நிவந்தங்களைச் சோழர் காலத்தில் இப்படை கொடுத்திருந்தது. முப்பேர்ப் படை எனப் பாண்டியரின் காலத்தில் இதே படைக்குப் பெயர் வழங்கியது. திருநெல்வேலிப் பகுதி பெருங்குளம் என்ற படைப் பற்றில் காணப்பட்ட முப்பேர்ப் படைகளில் ஆராய்ச்சி நாயகம் என்றழைக்கப் பட்ட ஆட்சிக் குழு செயற்பட்டது. கி.பி.1228 அளவில் அது அவ்வாறு செயற்பட்டதாகப் பெருங்குளம் கல்வெட்டு (229/1932-33) கூறுகிறது. அந்தப் படைப்பற்று கிராமத்தை (பெருங்குளம்) நிருவாகம் செய்வதற்காக அமைக்கப்பட்டிருந்த பொது ஆட்சி மன்றத்தில் உள்ளூர் மக்களும், கோயில் நிருவாகிகளும் பதியிலார் (திருமணம் மறுத்தவர்) என்ற ஆடல் மகளிரும் உறுப்பினர்களாக நியமிக்கப்பட்டிருந்தார்கள்.

## பெரும் படையார்

மேலே சொல்லப்பட்ட அதே பெருங்குளத்தில் முதன்மைப் படையாகக் கருதப்பட்டது பெரும்படையார் என்ற படை அமைப்புதான். இந்தப் படை அமைப்பைத் 'தண்டல் நாயகம் செய்வார்' என்ற படைத் தலைவர்கள் போர்க்களத்தில் வழி நடத்தினார்கள் (275/1938-39). இந்தப் பெரும் படையாரில் உட்படைகள் உண்டு. இவைகளின் எட்டுத் தலைவர்கள் கையெழுத்திட்டு உள்ளூர்க் கோயிலுக்கு ஒரு தெய்வச் சிலையை வழங்கினார்கள். இப் படைப்பற்றின் ஒரு பகுதியில் வாழ்ந்து வந்த பதியிலார் (மணம் மறுத்தவர்) தரப்பில் இது நன்கொடையாகக் கொடுக்கப்பட்டது. இந்தச் சிலைக்கு வழிபாட்டுச் செலவுக்குரிய பணமும் வழங்க ஏற்பாடு செய்தார்கள். நெல்லைப் பகுதி அட்டாலை நல்லூர் படைப்பற்றிலிருந்து பெரும் படையாரில் பத்து உட் படைகள் (இன்றைய ரெஜிமெண்ட்) காண்ப்பட்டன (433 / 1915). மன்னரின் ஆணைப்படி அவ்வப்போது பணியாற்றுகின்ற கடமை கொண்ட படைவீரர்கள் இணைந்து நின்றனர். மக்களின் கிராமத் தன்னாட்சி மன்றத்தில் அவர்கள் பங்கு பற்றியதன் மூலம் தங்களுடைய சமுதாயப்பற்றை வெளிக் காட்டினார்கள். இந்த அளவிற்குப் பாண்டியரின் படை நிருவாகம் சமூக நலனை முன்னிட்டு நெகிழ்ச்சியுடையதாகவே காணப்பட்டது.

## படை அதிகாரிகள்

படை முழுமைக்கும் பாண்டிய மன்னனே தலைவன் ஆவான். காலில் வீரக்கழல் அணிந்து போர்க்களத்தில் பட்டத்து யானை மேல் ஏறி ஆயுதங்களோடு படைகளை வழி நடத்திச் சென்று பகை அரசனுடன் அவன் போர் புரிந்தான். அதன்படி நெல்லூர் மன்னன் கண்ட

கோபாலனை முதலாம் சுந்தரபாண்டியன் உத்திக்கு உத்தியான வாட்போரில் கொன்றான். சாமந்தா என்ற உயர்தர அதிகாரிதான் அனைத்துப் படைகளுக்கும் உரிய சேனாதிபதியாகச் செயற்பட்டான். புலிவலம் என்ற ஊரின் காணியாளனான மழவராயன் கி.பி. 1256 அளவில் அறந்தாங்கிக் கோட்டை அருகே சாமந்தாவாகப் பணியாற்றினான். போர்க்களம் செல்லுகின்ற மன்னன் இத்தகைய சாமந்தாவின் தலைமேல் பாதம் வைத்துப் போர் யானை மேல் ஏறி அமர்வது அந்நாளைய அரசு நடைமுறையாகும். சாமந்தாவிற்கு அடுத்த கீழ் நிலையில் பணியாற்றியவர்களாகத் தந்திரத்தார், மகா தந்திரத்தார், தண்ட நாயகம் போன்றோர் காணப்பட்டார்கள். களவழி நாட்டுச் சிறுகுளம் படைப்பற்றில் (பாசறை) இருந்த படைக்காரணவர் என்ற அதிகாரிகளுக்குப் பாண்டிய மன்னன் நேரடியாகவே அரசு ஆணையை (திருமுகம்) அனுப்பி வைத்தான் என்று திருவாதவூர்க் கல்வெட்டு (477, 479 / 1962 - 63) கூறுகிறது. மன்னனுக்கும், நிலைப்படைத் தளங்களுக்கும் இடையே நேரடித் தொடர்பு இருந்ததையும், படையின் ஒரு பகுதியை மன்னன் தன் நேரடிப் பார்வையில் வைத்திருந்ததையும் இக்கல்வெட்டு உறுதிப்படுத்துகிறது.

## வேளைக்காரப் படையினர்

''தென்னவன் ஆபத்துதவிகள்'' எனவும் ''முனை எதிர் மோகர்'' எனவும் இவர்கள் அழைக்கப்பட்டார்கள். தென்காசிப் பகுதி, கீழப்பாவூரில் இவர்கள் தங்கி இருந்தனர் என அவ்வூர்க் கல்வெட்டுகள் (391, 393, 396 / 1917) கூறுகின்றன. வேளைக்காரப் படை தற்காலத்தில் காணப்படும் மெய்க்காவலர் கொண்ட கருப்புப் பூனைப் படை போன்றதுதான். சோழரும், கருநாடகப் போசளரும் இது போன்ற வேளைக்காரப் படையைத் தங்களுக்கு மிகமிக நெருக்கமாகப் பாண்டியரைப் போல் வைத்துக் கொண்டார்கள். அதிரடிப் போராளிகளாக இயங்கிய மெய்க்காப்பாளர்கள் பாண்டியப் பெருவேந்தனைச் சுற்றிக் காலமெல்லாம் நின்று காவல் காத்தனர். பாண்டிய மன்னவனிடம் தனிப்பட்ட நன்றியுணர்வு கொண்ட போர் வீரர்களான இவர்களைத் 'தென்னவன் ஆபத்துதவிகள்' என்றும் 'முனை எதிர் மோகர்' எனவும் அழைத்தனர்.

பாண்டியராட்சியின் போது காஞ்சியில் வாழ்ந்த பரிமேலழகர் தாம் எழுதிய திருக்குறள் உரையில் மூலப்படை, கூலிப்படை, காட்டுப்படை, துணைப்படை, பகைப் (ரிசர்வ்) படை என்ற ஐந்து வகையான படைப் பிரிவுகளைக் குறிக்கிறார். நடைமுறையில் உள்ளதை அவர் எழுதியுள்ளார் எனில் மூலப் படையைச் சார்ந்தவர்களாக வேளைக்காரப் படை விளங்கியது எனலாம். அரசனுக்கு மட்டுமல்லாமல் கோயில்களுக்கும் வேளைக்காரப் படையினரை நியமனம் செய்வது உண்டு: திருவேளைக்காரர் என இவர்கள் அழைக்கப்பட்டனர்.

கொற்கைப் பகுதிக் குறும்பூரில் அவ்வூர்க் கோயிலின் சொத்துகளைத் திருவேளைக்காரர் ரட்சை (பாதுகாப்பு) என்ற பீடுடன் பாதுகாத்தனர் என அவ்வூர்க் கல்வெட்டு (275 / 1938 - 39) கூறுகிறது. இதேபோல் திருவரங்கம் கோயிலுக்கும் வேளைக்காரப் பாதுகாப்பாளர் உண்டு.

## தேர்ந்த (தெரிந்த) வில்லிகள் என்ற விற்படை

முன்பு குறிப்பிட்டதுபோல 90,000 வில்லாளிகள் கொண்ட காகேதிய ராணுவத்தைப் பாண்டிய மன்னர்கள் கி.பி. 1260 அளவில் எதிர்கொள்ள வேண்டியதாயிற்று. ஆனால் கி.பி. 1230இல் திருநெல்வேலிப் பகுதி, நான்குநேரி சார்ந்த மருகால் குறிச்சியில் வில்லாளிகளின் படை படைப்பற்றுடன் காணப்பட்டது என்றும், அவர்கள் இறைசிங்க வீரன் தெரிந்த வில்லாளிகள் என்றழைக்கப்பட்டார்கள் என்றும் உள்ளூர்க் கல்வெட்டு கொண்டு அறியப்படுகிறது (265 / 1927 - 28). திருவெம்பாவை பாடல்களைக் கோயிலில் பாடுவதற்கு மேலே சொல்லப்பட்ட வில்லாளிகளில் முதன்மை வில்லாளியான சோழன் குன்றன் என்பவன் நிவந்தம் செய்தான் என்பதும் தெரிய வருகிறது. இந்தச் சோழன் குன்றனுக்குப் பல்லவத்தரையன் என்ற அமைச்சரின் தகுதியும் விருதுப் பெயரும் வழங்கப்பட்டிருந்தன. கி.பி. 1260களில் நடைபெற இருந்த திசைவெற்றி (திக்விஜய) பெரும் போருக்கு உகந்த முன்னோடி நடவடிக்கையாக இந்த வில்லாளிகளின் தலைவனுக்கு அமைச்சருக்குரிய மாண்புதனை பெருந்தரமாக வழங்கியமையானது படைநிருவாகத்தில் பாண்டியர் கைக் கொண்டிருந்த தொலைநோக்குச் சிந்தனையைக் காட்டுகிறது.

## பாண்டியர் படை நிருவாகம், போர்த் தருமம், பொது மக்கள்

இரண்டாம் பாண்டியப் பேரரசின் ஆட்சி நடந்த 150 ஆண்டுகள் முழுமைக்கும் பாண்டியர் படைகள் அனைத்தும் போர்களுக்கான ஆயத்தம் செய்வதிலோ போர்க்களங்களுக்குச் சென்று போரிடுவதிலோ ஈடுபட்டிருந்தன. இச் சமயங்களில் பொதுமக்கள் பாதிக்கப்படவில்லை என்பது சிறப்புச் செய்தியாகும். சங்க காலத்திலும் பொதுமக்கள் போர்களினால் பாதிக்கப்படவில்லை எனப் பேராசிரியர் சி.ஈ. இராமச்சந்திரன் தனது ஆய்வுரையில் கூறுகிறார். பாண்டியராட்சியில் சோழர்காலச் சிவத் துரோகம், இராசத் துரோகம் போன்ற மக்கள்வழிக் குற்றங்கள் எல்லாம் மறைந்து தமிழ்நாட்டில் 13ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் அமைதி திரும்பியதற்குப் பாண்டியரது போர்ப்படைகளின் தோற்றமும், நடமாட்டமும் காரணமாயிருக்கலாம். பாண்டிய மன்னர்கள் தங்களுடைய பகைவர்களை வெறுக்கின்ற மனப்பழக்கத்தை வளர்த்துக் கொள்ளவில்லை. ஆனால் பாண்டியருக்கு முன்பு ஆண்ட சோழர் அதைக் கைக்கொண்டிருந்தார்கள். பாண்டிய குலநாசனி (குல அழிவு) என்ற

விருதுப் பெயரை வைத்துக் கொண்ட முதலாம் இராசராச சோழன் தனது ஒரே மகனான இராசேந்திரனுக்கு, அவன் பிறந்தபோது மதுராந்தகன் (மதுரைக்கு யமன் போன்றவன்) என்ற இயற்பெயரை இட்டான். பாண்டிய குலாசனி வளநாடு என்பது தஞ்சைக்கோயில் இருந்த பகுதிக்கு அவன் அளித்த பெயராகும். இந்த நிகழ்ச்சிக்கு 50 ஆண்டுகளுக்கு முன்பே முதலாம் பராந்தகன் பாண்டிய நாட்டை வென்றடிப்படுத்தக் கி.பி. 944இல் 'பாண்டியப் படையார்' என்ற தனிப்படையை உருவாக்க வேண்டித் தனிவரி விதித்தான். (கல்வெட்டு ஆண்டறிக்கை 1912 பத்தி 15) பாண்டியர் தரப்பிலோ சோழர் மேல் படையெடுத்துச் செல்லத் தனிப் படையமைப்போ, வரிவிதிப்போ மேற்கொள்ளப்படவில்லை. படைகளுக்கு வெற்றி ஏற்பட வேண்டி வழிபாட்டுச் செலவுக்கு ஏற்கனவே வசூலான வரிகளின் வருமானம் வசூலான இடத்திற்கே திருப்பி விடப்பட்டது என ஆர்க்காட்டுப் பகுதி அரகண்டநல்லூர்க் கல்வெட்டு (183 / 1934 - 35) கூறுகிறது.

பகைவர்களை மனித நேயமில்லாமல் பேரழிவு செய்கின்ற பேரார்வம் பாண்டியரின் படை நிருவாகத்தில் ஒரு நடைமுறையாகப் பின்பற்றப்படவில்லை. கி.பி. 1206இல் மதுரையில் பாண்டியரின் முடிசூட்டு மாளிகையைத் தரைமட்டமாக்கிக் கழுதை கொண்டு உழுது கள்ளிவிதை விதைத்த மூன்றாம் குலோத்துங்கச் சோழனைப் பழிவாங்குவதற்காகத்தான் முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் கி.பி. 1216இல் நடத்திய படையெடுப்பில் 'தஞ்சையும் உறந்தையும் செந்தழல் கொளுத்திச்' சென்றான். இந்தப் படையெடுப்பில் (சங்க காலத்தில் உருத்திரங்கண்ணனாருக்கு மதிப்பளிப்பதற்காக) உறையூரில் கட்டப் பட்டிருந்த பட்டி மண்டபத் தூண்கள் மட்டும் தப்பின (786 / 1916). இதற்கு இப்பாண்டியனின் தமிழ்ப் பற்றுதல்தான் காரணமா என்பது ஆய்வுக்குரிய செய்தி. உறையூரின் கொல்லிமலைத் துர்க்காதேவி (கொற்றவை) கோயிலிலிருந்து வெற்றியாளனான பாண்டியனுக்குரிய வேப்பம் பூ மாலை வாகைசூடக் கொண்டுவரப்பட்டது; வெற்றிக்குரிய வெற்றி விழாக்களான விசயாபிடேகமும், வீராபிடேகமும் நடத்தப் பட்டன. அப் பாண்டியன் கி.பி. 1231இல் அதே சூழ்நிலையில் சோழ நாட்டின்மேல் படையெடுத்துச் சென்றபோது 'செந்தழல் கொளுத்தாமல்' வெற்றி விழா கொண்டாடினான்.

காஞ்சியைச் சிதறடித்த வாதாபி சாளுக்கியரை அடக்கி வைக்கப் பல்லவர் வாதாபி சென்று அதனை அழித்ததுபோலச் சோழரும் துங்கபத்திரை சென்று எதிரிகளை அவர்களின் புலத்திலேயே அதிரடி கொடுத்து முடக்கி வைத்தார்கள். இது போர் நிருவாக முறையைச் சார்ந்ததுதான். கருநாடகப் போசளரைப் பொறுத்தவரை பாண்டியர் அவர்களின் ஆக்கிரமிப்பை அப்புறப்படுத்தினார்களே தவிர அவர்களுடைய நாடு சென்று தாக்கிச் சோழர்களைப் போல எதிரிகளின்

மூல பலத்தை முறிக்கவில்லை. பாண்டியரின் திசைவெற்றி (திக்விஜயம்) என்னவோ வெற்றிதான். ஆனால் பிழைபட்ட போர்க் கொள்கையின் காரணமாகத் திருவண்ணாமலை வரை போசளரின் ஆட்சிப் பிடிப்பு மறுபடியும் தமிழகத்தில் ஏற்பட்டது. (கி.பி. 1342 அளவில்தான் அது மறைந்தது) பாண்டிய மன்னர்கள் சோழர்களைப் போலப் போரில் கவர்ந்த பொருட்களைப் பொது நன்மைக்காகப் பயன்படுத்தினார்கள். கொங்குநாடு, போசளர், கருநாடகம் போன்ற இடங்களிலிருந்து கொண்டு வரப்பட்ட போர் கவர் பொருட்களைக் கொண்டு திருநெல்வேலி நெல்லையப்பர் கோயிலின் பிரகாரச் சுவர்கள் கட்டப்பட்டன (29 / 1927).

பெண்ணோடு போர் செய்வது பாவம் எனக் கருதி மாறவர்மன் விக்கிரமாதித்தன் காகேதிய நாட்டின் அரசி ருத்ரம்மாவுடன் போரிடாமல் திரும்பி வந்ததால் சிதம்பரம் கல்வெட்டுகளின் மூன்று பாடல்களில் கீழ்க்கண்டவாறு பாராட்டப்படுகிறான் (363 / 1913). ''வெண்கலை மதயானை விக்கிரம பாண்டியனே - பொங்கி வட திசையிற் போகாதே - யங்கிருப்பாள் பெண்ணென்று மீண்ட பெருமாளே''. போர்முறையில் அறம் உண்டு. 'முதுகிடு போசளன் தன்னோடு முனைவது தவறாம்' என்றவாறு புறமுதுகு காட்டிய போசள மன்னனுடன் முதலாம் சடையவர்மன் சுந்தரபாண்டியன் போரிடவில்லை. ஆனால் நெல்லூர் - காஞ்சி அதிபதியான கண்டகோபாலனை இதே மன்னன் உத்திக்கு உத்தி வாட்போரில் வென்று அவனைக் கொன்றான் அல்லவா? தோற்றுப்போன போசளப் படைத் தளபதியை இம்மன்னன் 'யானைக்கு இடுவித்தான்' (யானையின் காலில் இட்டுக் கொன்றான்). 'எம் மண்டலமும் கொண்ட', 'எல்லாம் தலையான', 'அனைத்துலகும் கொண்ட', 'கோதண்டராமன்' போன்ற பட்டங்களைப் போரில் வெற்றி பெற்ற முறையில் இம்மன்னன் சூடிக் கொண்டான். அரசர்களின் போர் வெற்றிகள் இப்பட்டங்களின் மூலம் உலகுக்கு அறிவுறுத்தப்பட்டன.

## கோட்டைகள்

இடைக் காலத்தில் இந்திய மன்னராட்சி அரசுகளுக்குக் கற்கோட்டைகள் தாம் அரசியலதிகாரத்திற்குரிய ஊற்றுக் கண்ணாகவும், நாட்டின் பாதுகாப்புக் கவசங்களாகவும், படையின் உந்து சக்திப் பீடங்களாகவும் பயன்பட்டன. கி.பி. 600 முதல் கி.பி. 1801இல் கட்டபொம்மனின் பாஞ்சாலங் குறிச்சிக் கோட்டையின் வீழ்ச்சி வரையுள்ள 1200 ஆண்டுகளில் பாண்டிய தேசத்தில் கோட்டைகளின் உருவாக்கம் அதிகம். பாண்டிய மன்னரின் மரபினர் நகரங்கள் தோறும் கோட்டை கட்டுவார்கள் என்பதைச் சின்னமனூர்ச் செப்பேடுகள் (கி.பி. 920) விளக்குகின்றன - ''பஞ்சவ என்னும் பெயர் நிதி இயும் - வள மதுரை நகர் காண்டும் மற்றதற்கு மதில் வகுத்தும்'' கோட்டைக்கு எதிர்க்

கோட்டைகள் கட்டிப் போரில் வெற்றிகளை இப்பாண்டியர் பெற்றார்கள் என்பதைப் பின்வரும் சான்று கொண்டு நிறுவலாம். கி.பி. 1250க்கு மேல் தமிழக மீட்புப்போர் (திக் விஜயம்) ''தனித்தனி பார்த்து'' என்றளவில் ஒவ்வொரு கட்டமாக நடைபெற்றது. அச்சமயம் போசளரின் காவிரிப்படுகைக் கோட்டைகளுக்கு எதிர்க் கோட்டைகளைப் பாண்டியர் கட்ட வேண்டியதாயிற்று. மைசூர்ப் பகுதியிலிருந்து காஞ்சிபுரம் வரையுள்ள நேர் கோட்டுப் பாதையில் முடிகொண்டான், கொள்ளேகால், அதம் கோட்டை, ஒசூர், விண்ணமங்கலம் என்ற கோட்டைகளைக் கோட்டை முடிச்சுகளாகப் போசளர் கி.பி. 1245 அளவில் கட்டினார்கள். கண்ணனூர் கொப்பம் (தற்காலத்துச் சமயபுரம்) போசளரின் தென் தலைநகராக விளங்கியது. அந்நாளில் இக் கொப்பத்திற்குக் கிழக்கே போகும் சாரியாகக் கோட்டையூர், பேரையூர், திருமயம் ஆகிய கோட்டைகள் கட்டப்பட்டன. சேதுமுனையோடு இதற்கு இணைப்பு ஏற்படுத்தப்பட்டது. தெற்கே மன்னார்குடி, வடக்கே திருவண்ணாமலை, மேற்கே கண்ணனூர் கொப்பம் எனக் காவிரிப் படுகையை அடக்கி முக்கோண இடுக்கிப் பிடியைக் கோட்டைகளால் போசளர் ஏற்படுத்தி இருந்தனர். இந்தப் போர்ச் சூளுரையைப் பாண்டியர் சமாளிப்பதற்காகக் கோட்டைகள் கட்டுவது உட்படப் பல போர் நிருவாக ஏற்பாடுகளைச் செய்தார்கள். கோட்டைகளைப் பிடிக்க அசுவகோடியும், சகஸ்ரகரியும் திசை வெற்றி நாட்களில் (கி.பி. 1258 - 1264) சேகரித்தார்கள். அதன்படிக் கீழ்க்கண்டவாறு கோட்டைக்கு எதிர்க் கோட்டை அமைப்பு உருவாக்கப்பட்டது. திருப்பத்தூர் - அறந்தாங்கி கோட்டைகளின் நேர்கோட்டுக் கிழக்கு மேற்குச் சங்கிலித் தொடர் ஓர் ஆப்பு போல் பாண்டிய மண்டலத்தையும், சோழ மண்டலத்தையும் இரண்டாகப் பிளந்து பார்த்தது. அறந்தாங்கிக் கோட்டைக்கு எதிர்முட்டாக வேதவல்ல திருக்கை என்ற கோட்டை நகரைச் சூரிய தேவன் என்ற பாண்டிய ஏக மந்திரி (பிரதம மந்திரி) நிருவகித்து அறந்தாங்கியைக் குறி பார்த்து நின்றான். இன்னும் நான்கு கோட்டைகள் அறந்தாங்கியைச் சுற்றி முளைத்து எழுந்தன. இவைகளைக் கட்டிய படைத் தலைமை ஆளுநர்களே அவற்றின் உரிமையாளரானார்கள். இதன் விவரம் பின் வருமாறு :- நியாயம் கோட்டைக்கு உரிய பஞ்சவராயன், வெள்ளூர்க் கோட்டைக்கு உரிய வெற்றியாளன், திருமங்கை ஆழ்வார் புலிவலம் கோட்டைக்கு உரிமையாளனும், சாமந்தா என்ற தலைமைத் தளகர்த்தனும் ஆன மாளவராயன், பனையூர்க் கோட்டையையுடைய காளிங்கராயன் மேலும் தெற்கே போசளனின் திருப்பத்தூர்க் கோட்டையைக் குறி வைத்த சேட மங்கலம் கோட்டையாளர் தன்மராயன், திருக்கோட்டியூர்க் கோட்டையாளன் ஸ்ரீவல்லபன் ஆகியோர் செயற்பட்டனர்.

போசளர் தங்களுடைய படையின் உயர் அதிகாரிகளாக அந்தணர்களை நியமனம் செய்தார்கள். பிரம்மகத்தி (அந்தணரை மாய்ப்பது) பாவத்திலும் பெரிய பாவம் என்று எண்ணப்பட்ட காலம் அது. பாண்டிய மன்னர்கள் அந்தணரைப் போர் முகத்தே அனுப்புவது அருகி வந்த காலம் அது. எனினும் ஆரியச் சக்கரவர்த்தி என்ற அந்தணத் தளபதியைக்கொண்டு ஈழத்தை வெல்லச் செய்து, வட ஈழம் தென் கடல் வட்டத்துத் தமிழகம் ஆகிய இரண்டினையும் இணைத்துச் 'சேதுகாவலன்' என்ற பட்டம் தாங்கியுள்ளனர். திசைவெற்றி நடந்தேறிய காலத்தில் பாண்டியப் பெருவேந்தர்கள் இராச தந்திரத்தை உருவாக்கினர். இவ்வாறு பாண்டியரின் படை நிருவாகம் காலத்தின் தேவையையொட்டி இயல்பான நிலையில் மைய அரசின் மறுபதிப்பாகவும், பெரும் பொறுப்புகளை நிறைவேற்றும் செயலகமாகவும் வளமையான திறத்துடன் இயங்கியது.

## மதுரைப் பெருவேந்தரின் மைய அரசு - ஒரு மதிப்பீடு

பாண்டியப் பேரரசு வலிமை வாய்ந்த ஒரு மைய அரசைப் (பைசாண்டைன் அரசு போன்றதைப்) பெற்றிருந்ததா? இது கேள்வி. அவ்வாறு திண்மையான மைய அரசு காணப்பட்டது உண்மை என்பதுதான் பதில். இந்த ஐயப்பாடு தோன்றுவதற்குக் காரணமாக அமெரிக்க வரலாற்றுப் பேராசிரியர் பர்ட்டன் ஸ்டீன் சொல்லிய கருத்தை இங்குக் குறிப்பிட வேண்டும். தென்னிந்தியாவில் குடியானவச் சமூகமும், அரசும் என்ற நூலில் (ஆங்கிலம்) இதை எழுதியுள்ளார். (அ) அதன்படி இடைக் காலத் தென்னிந்திய அரசுகள் - சோழர் அரசு உட்பட - வலிமை சான்ற மைய அரசைப் பெற்றிருக்கவில்லை; அதாவது பேரரசின் எல்லாப் பகுதிகளையும் ஆள்கின்ற தகுதியிலும், திறத்திலும் மேம்பட்டு நிற்கவில்லை.

(ஆ) இத்தகைய அரசுக்கு உரிய பெருவேந்தன் நேரடியாக ஆண்ட பகுதியில் மட்டுமே தன் இறையாண்மையைச் செலுத்தினான்.

(இ) ஏனைய பகுதிகளில் காணப்பட்ட குறுநில மன்னர் யாவரும் அப்பெருவேந்தனுக்குப் பெயரளவில் அடங்கி இருந்தார்கள். தங்களுடைய படை வலிமையைச் சேகரித்துக் கொண்ட நிலையில், அவர்களுடைய பகுதிகளில் அவர்களாகவே இறைமையுடன் (மரபு உரிமையோடு) ஆண்டு கொண்டார்கள். அதே சமயம் சடங்கு என்ற முறையில் பெருவேந்தனுக்குத் தங்களுடைய வணக்கத்தையும், வழிபடுதலையும் தெரிவித்துக் கொண்டார்கள்; அவ்வளவே. தங்கள் பகுதிகளில் மேற்கொள்ளப்பட்ட சட்ட முறையான பத்திரங்களில், மரியாதை அல்லது அச்சம் நிமித்தம் அப்பெருவேந்தன் ஆட்சிக்கு வந்த ஆண்டிலிருந்து தொடங்கப் பெறும் ஆட்சியாண்டை மறக்காது அல்லது மறுக்காது குறித்து வைத்தார்கள்.

(ஈ) ஆகவே இடைக்காலத் தென்னிந்திய அரசு என்பது ஒரு ஒட்டுப்போட்ட துணி போன்றது ஆகும். பெரு வேந்தனுடைய மையப்பகுதியோடு இணைந்து போனதாகவே அக்குறுநில மன்னர்களின் ஆட்சிப் பகுதிகள் வெளித் தோற்றம் கொண்டிருந்தன. உண்மையில் அஃவ சின்னச் சின்ன, தீவு நாடுகளாகத் தனி இறையாண்மையோடு காணப்பட்டன. பெருவேந்தனே பேரரசு முழுவதையும் ஆட்சி செய்வதாக ஓர் எண்ணம் இருந்தது. அவ்வளவுதான். ஆகவே இந்தப் பேரரசு ஒட்டிணைவு அரசாகக் காட்சியளித்தது. இடைக்காலச் சோழர் - பாண்டியர் அரசுகள் இவ்வகைப்பட்டதே ஆகும்.

மேலே கண்ட நான்கு கருத்துகளும் தவறானவை ஆகும். இரண்டாம் பாண்டியப் பேரரசின் தலை நகரான மதுரையிலிருந்த மைய அரசு எல்லாப் பகுதிகளையும் ஆட்சி செய்கிற உரிமையில்லாத ஒட்டிணைவு அரசாகத்தான் இருந்தது என்று சொல்வதற்கில்லை. அதற்கு முந்தைய சோழப் பேரரசு போன்று மதுரை அரசும் வலிமையான ஒரு மைய அரசைப் பெற்றிருந்தது. வரலாற்றின் அடிப்படையில் படிநிலை (பரிணாம) வளர்ச்சியின் நியதிப்படி இது நடைபெற்றது. இதற்கு ஆதாரமாகக் கீழ்க் காணும் செய்திகளை ஆய்வு செய்யலாம்.

### 1. ''ஏக மந்திரி'' போன்ற உயர்தர அதிகாரிகள் கொண்ட மைய அரசு மதுரையில் உண்டு

பாண்டியப் பெருவேந்தன் 'முனையதரையன்' அரசுக் கட்டிலில் அமர்ந்து கொண்டு 'ஏக மந்திரி' என்ற அமைச்சர் பெருமகன், 'மகா சாமந்தன்' என்ற தலைமைத் தளபதி ஆகியோர் உள்ளிட்ட அலுவலக ஆலோசகர்களைக் கொண்ட குழுவின் துணையுடன் பேரரசை ஆட்சி செய்தான். மைய அரசின் அமைச்சரவை போன்ற அந்த அறிவுரையாளர்கள் செயற்பட்டார்கள். இந்தப் பாண்டியருக்கு முன்பு தமிழகத்தில் பேரரசைக் கட்டிக் காத்த தஞ்சை - கங்காபுரிச் சோழப் பெருவேந்தர் அனைவரும் 'உடன் கூட்டம்' என்ற ஆலோசகர்களை அமைச்சரவையாக வைத்திருந்தார்கள்; தங்களுடைய பெருந்தரம் உயர் வகுப்பு அதிகாரிகளாக அவர்களைப் பணித்திருந்தார்கள். கி.பி. 1453 வரை ஆயிரம் ஆண்டுகள் நிலை பெற்றிருந்த (இத்தாலிய ரோமாபுரி ஆட்சிக்குரிய) ''பைசான்டைன்'' பேரரசு போன்று, சோழப் பேரரசும் அதிகார மிடுக்கும் கடுமையான சட்டத்தின் ஆட்சியும் உடைய ஒரு மைய அரசைக் கொண்டிருந்தது. இந்தக் கருத்து ஆய்வாளர்பலராலும் வழி மொழியப்பட்டுள்ளது. சோழரைத் தொடர்ந்து வந்த மதுரைப் பாண்டியரின் மைய அரசு, சோழ மைய அரசினுடைய மறுபதிப்பு என்று தான் சொல்ல வேண்டும்.

எல்லா நாடுகளிலும் காணப்படும் ஆட்சி முறையிலுள்ள நிறுவனங்கள் யாவும் அந்தந்த நாட்டின் சூழல், அரசியல் சுழற்சி,

பண்பாட்டுப் பிடிமானங்கள் போன்றவற்றின் தாக்கங்களுடன் கூடிய படிநிலை வளர்ச்சியைப் பெற்றாக வேண்டும். இது வரலாற்று நியதி ஆகும். இந்தக் கணிப்பின்படி, பாண்டியப் பேரரசு வலிமை வாய்ந்த மைய அரசைக் கொண்டிருந்தது என்பதில் ஐயமில்லை. முதலில் சங்ககாலம், பின்பு முதலாம் - இரண்டாம் பாண்டியப் பேரரசுகளின் காலம் ஆகிய இவை அடங்கிய சுமார் ஆயிரம் ஆண்டுகளுக்குரிய ஆட்சியை மரபு உரிமையோடு பாண்டியர் தமிழகத்திற்கு வழங்கி வந்துள்ளார்கள். சங்க காலத்தின் 300 ஆண்டுகளோடு, சோழர்கள் கி.பி. 985 முதல் 1216 வரையுள்ள 200 ஆண்டுகள் தமிழகத்தை (இராசராச சோழன் மரபினர்) பேரரசுப் பெருமிதத்தோடு ஆண்டார்கள். ஆனால் பாண்டியரோ சங்க காலத்து 300 ஆண்டுகளோடு சேர்த்து (களப்பிரரின் 300 ஆண்டுகளைத் தவிர்த்து) முதல் பாண்டியப் பேரரசாக மதுரையிலிருந்து கி.பி. 600 முதல் 900 வரை 300 ஆண்டுகள் தென் தமிழகத்தை ஆட்சி செய்தார்கள். சோழருக்கு முதலாம் சோழப் பேரரசு எனச் சிறப்பு எதுவும் வாய்க்கவில்லை. சோழருக்கு ஏற்பட்டிருந்த தொய்வு பாண்டியருக்கு ஏற்படவில்லை. ஆகவே அவர்களுடைய இரண்டாம் பாண்டியப் பேரரசுக்கு வாய்த்திருந்த மைய அரசு இடையறாத ஒரு முழுப் படிநிலை வளர்ச்சியைக் கொண்டிருந்தது.

## 2. நாணயங்கள் அச்சடிப்பு, வழங்கல் - மைய அரசுக்கு என வாய்த்த அதிகாரம் ஆகும்

பாண்டியரின் மதுரை மைய அரசு, பாண்டியப் பேரரசுக்கு உரியதான நாணயங்களை அச்சடித்துக் கொடுத்தது. இரட்டை மீன் சின்னம் பொறிக்கப்பட்ட 'எல்லாம் தலையானான் காசு' போன்ற நாணயங்களை 'அக்கசாலைகள்' என்ற நாணய அச்சடிப்பு மையங்கள் ஆங்காங்கே செம்பு, தங்கம் உலோகங்களில் அரசு சார்பாக அச்சிட்டு வெளியிட்டன. கீழ்த்திசை சீனருடன் கணிசமான அளவுக்கு வாணிகம் செய்த பாண்டியருக்குச் சீனரின் காகிதப்பணம் பற்றித் தெரிந்திருந்தாலும் அவர்கள் தமிழ் நாட்டிற்குள் காகிதப் பணத்தை அறிமுகப்படுத்தவில்லை. வீர பாண்டியன் நாழி (முகத்தலளவு) சுந்தரபாண்டியன் கோல் (நீட்டலளவு) போன்ற பொது அளவுகள் பேரரசுப் பகுதிகள் எங்கும் நாட்டு நடப்பாகக் காணப்பட்டன. இவை அனைத்தும் மைய அரசின் நேரடி அதிகாரத்தை நிலை நாட்டின எனலாம்.

## 3. பாண்டியரின் 'ஐவர் பாண்டியர்' நிறுவனம் - அதன்படி ஐந்து மைய அரசுகள் உண்டல்லவா?

ஒட்டிணைவு அரசு என்ற ஆய்வுக் கருத்தின்படிப் பெருவேந்தனின் நேரடி அரசதிகாரம் அவனுக்கென உரிமையாக அமைந்த நிலப்பகுதியில் மட்டும் செல்லுபடியாகும். மற்றைய பகுதிகளில் பெருவேந்தனுடைய அதிகாரம் காணப் பெறவில்லை.

ஆனால் பாண்டியப் பேரரசில் நிலைமை வேறுவிதமாக இருந்தது. பாண்டியருக்கே என வாய்த்திருந்த 'ஐவர் பாண்டியர்' என்ற நிறுவனத்தின்படி, மதுரைப் பகுதி உள்ளிட்ட எல்லாப் பகுதிகளிலும் ஐந்து மைய அரசுகள் இயங்கின எனலாம். மதுரையில் தலைமையேற்ற பெருவேந்தனுக்கு முதுநிலை அரசுரிமையும், ஆட்சியும் உண்டு. அவனுடைய தாயாதிகளின் - அதாவது இணையரசர்களின் - பொறுப்பில் (மதுரையைத் தவிர்த்த) மற்றைய நான்கு பகுதிகளின் ஆட்சி விடப்பட்டிருந்தது. மதுரை மைய அரசு போன்றே அதிகாரங்கள் கொண்ட நான்கு இணை அரசுகளாக அவை விளங்கின. ஆகவேதான் மொத்தம் ஐந்து மைய அரசுகள் அரசாட்சி செய்தன என்று கருதலாம். பேரரசன் தகுதி இந்த இணையரசர் நால்வருக்கும் உண்டு. அவர்தம் மனைவியர்க்கு 'உலகமுழுதுடையாள்' என்ற பேரரசுத் தரத்தில் அமைந்த பட்டமும் உண்டு. இணையரசர்களின் சொந்தப் பெயரில் நாணய வெளியீடு நடைபெற்றது. அவ்வரசர்கள் பெயரில் கோயில் மூலவரை அழைத்தல், அதே பெயரில் கோயில் கட்டுதல், பிற நாட்டின் மேல் போர்தொடுக்கும் அதிகாரம், புதிய வரிவிதித்தல், வரியிலிச் சலுகை அறிவித்தல், வீராபிடேகம் என்ற வேள்வி (யாகம்) செய்வித்தல் போன்ற (பேரரசனுடைய) மைய அரசிற்கு உரிய அத்தனை அதிகார நலன்களை இணை அரசுகளும் பெற்றிருந்தன. ஆகவே தென்னிந்தியாவில் வேறு எங்கும் காணக் கிடைக்காத, புதுமை ஏற்பாடாக இந்த ஐவர் பாண்டிய ஐந்தரசு ஆட்சி பாண்டிய நாடு முழுமைக்கும் கால் பாவி நின்றது. பாண்டியப் பேரரசின் எல்லாப் பகுதிகளிலும் இணையரசுகள் என்ற நான்கு நிழல் அரசுகள் காணப்பட்டன அல்லவா? ஆகையால் மதுரையைத் தவிர்த்த மற்றைய பகுதிகளில் மத்திய அரசைக் காண்பதற்கில்லை என்பது உண்மை அல்ல.

## 4. 'கோனேரின்மைகொண்டான்' என்ற அரசாட்சி ஆணை, மைய அரசின் இதயத்துடிப்பு ஆகும்

மைய அரசு செயற்பட்டபோது மன்னன் இயற்றிய அரச ஆணைகளை மத்திய அரசின் அரசவை அதிகாரிகள் 'கோனேரின்மை கொண்டான்' என்ற அரசுக் கட்டில் அலுவலக முத்திரைச் சொல்லை மேற்கோள் காட்டி, நாடெங்கும் அனுப்பி வைத்தார்கள். கோ (மன்னன்) நேர் (சமமானவன்) இன்மை (இல்லை என்ற நிலை) கொண்டான் (கையகப் படுத்தியிருந்தான்) என்ற பொருளில் கோனேரின்மை கொண்டான் என்ற சொல்லாட்சி தன்னிலை விளக்கந்தரும். அரசனுடைய இறையாண்மைக்குச் சமமான இன்னொரு சக்தி உள்நாட்டில் இருப்பதற்கில்லை - என்ற தத்துவம் இங்கு நடைமுறைப் படுத்தப்பட்டது. 'கோனேரின்மை கொண்டான்' என்ற முத்திரைச் சொல்லோடு தொடங்கப்படும் அரசாணை பெரும்பாலும் வருவாய்த் துறை

தொடர்பாகவே இருந்தது. சோழரும், பாண்டியரும் தங்களுடைய விதவிதமான பேரரசு நடவடிக்கையின் ஊடே 'நெத்தியடி' அலுவல் நடத்த இந்த வகை 'கோனேரின்மை கொண்டான்' முத்திரை பதித்த அதிகார ஆணையை அனைவருக்கும் அனுப்பி வைத்தார்கள். பொதுவாக மூன்று கட்டங்களாக இந்த அரச ஆணையானது வடிவமைக்கப்பட்டது.

அ. முதலாவதாக, அரசுச் செயலகத்தில் - அதாவது அரசவையில் முதல் கட்டம் எழுதப்பெற்றது. இதன்படி, ஏதாவதொரு அமைச்சர் பெருங்குடி மகனார் 'நமக்குச் சொன்னமையினாலே', அரசனாகிய நான் இந்த ஆணையை வெளியிடுகிறேன் என்று அரசன் வாய்மொழிப் பிரகடனம் செய்வதாக இது அமையும். இந்த ஆணைப் பகுதியில் அவ்வாறு ஆணை வெளியிட்ட தேதி, வெளியிடப்பட்ட இடம், தொடர்புடைய விளைநிலம் பற்றிய விவரம், கடைசியாகப் பயனாளிகளின் பெயர்கள் ஆகியவை குறிப்பிடப்பட்டன.

ஆ. இரண்டாவதாக, இந்த ஆணை சென்றடையும் கிராம சபை அல்லது நகரம் அல்லது 'நாட்டார்' குறிக்கப் பெறும். 'கோனேரின்மை கொண்டான்' என்ற சொல்லாட்சி இங்குத்தான் அவசியம் குறிக்கப்படும். அரசாணை மக்களைச் சென்றடைகின்ற முக்கியமான கட்டத்தை ஆணையின் இந்த இரண்டாம் பகுதி சுட்டிக் காட்டிற்று. அரசனுடைய பெயரை நேரடியாகச் சொல்லித் தொடங்கும் அரச ஆணைகளின் நடுவில் 'கோனேரின்மை கொண்டான்' என்ற பெயரில் தொடங்கி இந்த இரண்டாவது பகுதி எழுதப் பெறுவதும் உண்டு. மத்திய அரசின் ஆட்சி முறையை அப்படியே நிலை நிறுத்தும் அரசாணை இது.

இ. மூன்றாவதாக, அரசாணை சென்றடையும் ஊர்களில் உள்ள மைய அரசின் அதிகாரிகளோடு தொடர்புடையது. வரியிலார் போன்ற வருவாய்த்துறை அதிகாரிகள் அனைவரும் தொடர்புடைய நிலக்கொடை பற்றிய செய்திகளை 'வரிப்பொத்தகம்' போன்ற உள்ளூர் ஆவணப் பதிவேடுகளில் முறையாக எழுதி வைக்குமாறு இந்தப் பகுதியில் அரசன் உத்தரவிட்டான். இதுவே மூன்றாவது கட்டமாக அரசாணையில் அமைந்தது. அரசனுடைய இணக்கக் கையொப்பமும், மத்திய அரசின் பெருந்தர அதிகாரிகளான புரவுவரித் திணைக்கள நாயகம் போன்றோரின் கையெழுத்தும் இங்கே காணப்பெறும். இந்த மூன்று கட்டங்களிலும் அரசனுடைய கையொப்பம் வாங்கப்பட்டது. ஆகவே இந்த ஆணையை மைய அரசின் இதயத் துடிப்பாகக் கருதலாம்.

அரசவையிலிருந்து வெளியான இந்த வகை அரசுக் கட்டில் ஆணையானது பேரரசின் எந்தப் பகுதிக்கும் செல்லும் தன்மை உடையது. அரசனுடைய நேரடிப் பார்வையில் உருவான ஆணை இது; ஆகவே அரசனை ஆட்சி முறைக்கு உரிய தலைமையாளன் என்று அடையாளங் காட்டியது; அரசுரிமையை நேரடியான இறைமையாக நிலை நாட்டியது.

இந்த வகை 'ஆணை' முழுக்க முழுக்க அரசு அலுவலிலும் அல்லது நிருவாகத்திலும் தொடர்புடையதாக நாடெங்கிலும் சென்று ஊன்றி நின்றது. இது அரசாங்க இயந்திரத்தை உடனுக்குடன் இயங்க வைக்கின்ற ஆணை ஆகும். தற்காலத்து அவசரச்சட்டம் போன்ற தோற்றம் கொண்ட செயல்முறை ஆணை இது. இந்த ஆணையில் கண்டவாறு அனைத்துச் செயல்களையும் உடனடியாகத் தன்னாட்சி மன்றங்களும் அதிகாரிகள் அனைவரும் நிறைவேற்ற வேண்டும். அதற்கு அவர்கள் கடமைப் பட்டவர் ஆவர். இந்நிலையில் பாண்டியரின் மைய அரசு வலிமையுடன் செயற்பட்டது என்பதற்குக் 'கோனேரின்மை கொண்டான்' என்ற அரச முத்திரைச் சொல்லதிகார ஆணை ஒன்றே சான்றாகும். இந்த ஆணைகளின் தொடர்களை அப்படியே தருகின்ற பாண்டியர் கல்வெட்டுகள் ஏராளமாகவே கிடைக்கின்றன.

## 5. படை நிருவாகம் என்பது மைய அரசுக்கே உரிய உயர்நலம் ஆகும்

தென்னிந்திய அரசுகள் அனைத்தும் படையை முதுகெலும்பெனக் கொண்டவைதாம். ஏராளமான பொருட் செலவில்தான் பேரரசுக்கான பெரிய அளவில் படையை எந்தவொரு மைய அரசும் தன்னளவில் உருவாக்க முடியும். அசுவகோடியும், சகஸ்ரகரியும் கடல் போன்ற காலாட் படையும் கொண்டிருந்த பாண்டியரின் மைய அரசு ஏராளமான பொருட் செலவில் நிலைப்படை, வேளைக்காரப்படை போன்றவைகளையும் தனிப்பட்ட முறையில் வைத்திருந்தது. நில மானியம் பெற்றிருந்த படைஞர் நாடெங்கிலும் குறுநில மன்னராகச் செயற்பட்டு மைய அரசுக்குத் தங்களுடைய படைகளை அவ்வப்போது அனுப்பி வைத்தார்கள். போர்க்களத்தில் போர்ப் பணியை அவர்கள் நேரில் மேற்கொண்டார்கள். கடமை என்ற தலையாய நிலவரியைப் பஞ்சம், வறட்சி, இயற்கைச் சீற்றங்கள் முதலியன நேர்ந்த காலக் கட்டங் களிலும் சோழரும், பாண்டியரும் கட்டாயமாகவே வசூலித்துக் கொண்டார்கள். ஆகவே மைய அரசுக்கு வருவாயும் அதிகம். வடகடலும், தென்கடலும் இணைந்தது போன்ற பெரும் படைகளை வழி நடத்தித் தென்னகத்தில் பாண்டிய நாட்டை (கி.பி. 966 முதல் 1216 வரையுள்ள 250 ஆண்டுகள்) சோழ வேந்தன் அடக்கி வைத்தான். திருச்சி-சமயவரம் தலைநகரிலிருந்துஆட்சி செய்து வந்த கருநாடகப் போசளரிடமிருந்து தமிழ்நாட்டை மீட்கக் கி.பி. 1251 முதல் எட்டாண்டுகள் மதுரைப் பாண்டியர் போர் ஆயத்தம் செய்தார்கள். ஏராளமான பொருட் செலவில் அதனைத் ''திக்விஜயம்'' என்றழைத்தார்கள். முதலாம் பாண்டியப் பேரரசு காலத்தில் (கி.பி. 850 அளவில்) காவிரிக்கரை கடந்து இடவைஎன்ற இடத்தைச் சென்றடைய 'இடவையாத்திரை' என்ற பயபக்தியான பாண்டியப் படையெடுப்புத்

திட்டம் செயலாக்கம் பெற்றது. அது போன்று 'திக்விஜயம்' கி.பி. 1258இல் செயற்படுத்தபட்டது. கடமையை வசூலித்துப் பெரும் பொருளைக் கைக் கொண்டிருந்த மைய அரசைத் தவிர வேறு யாரும் இத்துணை அளவிற்குப் படைகளை உருவாக்கவோ, வழி நடத்தவோ முடியுமா? அசுவ கோடி (கோடி அளவில் குதிரை) சகஸ்ரகரி (நூற்றுக்கணக்கில் யானை) போன்றவைகளோடு ஒரு மாபெரும் படையைப் பாண்டியர் (முன்னாளைய இடவை அர்ப்பணிப்பு உணர்வோடு) வழி நடத்தினார்கள்.

காவிரிமலைமேல் தோன்றுமிடம் தொடங்கி அது கடலடையும் திருமரைக்காடு (வேதாரணியம்) வரை பல கற்கோட்டைகளைப் போசளர் கட்டி வைத்திருந்தார்கள். போசளரை இந்தக் கோட்டைகளிலிருந்து கிளப்பி மேலை மலைமேல் விரட்டிச் செல்லப் பாண்டியர்களுக்கு ஏராளமான குதிரைப்படை தேவைப்பட்டது. ஆகவே அரபுக் குதிரைகளைக் கேட்ட விலை கொடுத்துப் பாண்டியர் வாங்க வேண்டியதாயிற்று. வலிமையுள்ள மைய அரசுதான் இதைச் செய்திருக்க முடியும் என்பது தெளிவு. வேங்கியைச் சார்ந்த கோதாவரி ஆற்றுப் பகுதிக்கு அப்பாலுள்ள ஒரிசா (கட்டாக்) பகுதி, பாண்டிய இலச்சினையான இரட்டை மீன் பதிக்கப்பட்ட (இலங்கையின்) திரிகோண மலை,'கொல்லங்கொண்டான்,' பட்டத்தைப் பெற்றுத் தந்த கேரளத்துக் கொல்லம், கிழக்குக் கடற்கரையின் நெல்லூர், கச்சி மாநகர் ஆகிய இவை போன்ற இடங்களை வென்றடிப்படுத்திய பாண்டியருக்கு வலிமையான மைய அரசுதான் மூல பலமாக விளங்கியது. இந்தச் சூழ்நிலையில் போர்வரி எதையும் பாண்டிய மன்னர் வசூலிக்கவில்லை. சத்ரபதி சிவாஜியைப் போலப் படைகளால் அல்லல் இல்லாமல் பாண்டியர் பொது மக்களைப் பாதுகாத்தார்கள். படைச் செலவு அரசுச் செலவாகியது. போர் வெற்றியைக் கொண்டாடத் 'துலாபாரவரி' தொண்டை மண்டலத்தில் பாண்டியரால் வாங்கப்பட்டது. கி.பி. 1230களில் இராமநாதபுரம் பகுதியிலுள்ள இளையாங்குடியில் அரசியல் நேசத்திற்கும், திருமண உறவுக்கும் பிறந்த பந்த பாசத்திற்கும் போசளர் உரியவராயிருந்தனர். அவருடைய படை 'நாட்டுப்படி' என்ற படை வரியை அப்பகுதி மக்களிடமிருந்து கி.பி. 1240 அளவில் வசூல் செய்தது. வைணவர் - சைவர் பிணக்குகளை அவர்கள் விசாரித்து அந்தப் பகுதிக்கான தீர்ப்பாயமாக (பஞ்சாயத்து) விளங்கினார்கள். எனினும் 'அரசுக்குள் அரசு' (அதிலும் வேற்று நாட்டு அரசு) என்ற அரசியல் அவலம் அப்போது ஏற்பட்டு விடவில்லை. 'கன்னாட்டரசர்' என்றளவில் கன்னடியரின் அதிகாரப் பிடிப்புகள் நெல்லைக்கு மேற்கே சில காலம் மட்டும் காணப்பட்டது என்பது உண்மைதான். ஆனாலும் மைய அரசின் அதிகாரம் நிலைகுலையவில்லை. பின்னர் திசை வெற்றி கி.பி. 1258இல் நடந்தபோது இந்த அதிகாரம் பன்மடங்கு பெருகியது. முதலில் (கி.பி.

1216இல்) ''சோணாடு கொண்டருளி'' அடுத்து (கி.பி. 1260 அளவில்) 'எல்லாம் தலையானான்' ஆகிப் பின்பு (கி.பி. 1280 அளவில்) 'எம் மண்டலமும் கொண்டருளி' தென்னிந்தியாவையே வென்றடிப்படுத்திய பாண்டியரின் பெரும்படை மதுரை மைய அரசின் மறுஉரு எனக் கொள்ளப்பட வேண்டும். மைய அரசின் வல்லமை இல்லாமல் இது இயலுமா?

கி.பி. 1310 அளவில் பாண்டிய இளவரசர்களிடையே நடந்த உள்நாட்டுப் போரில் பாண்டியரின் படை இரு பிரிவுகளாகப் பிளவுபட்டு எதிரெதிர் அணிகளாகிப் போயின. மதுரை அரசு ஏற்கனவே இரண்டாக விரிசல் கண்டிருந்த அந்நிலையில்,கி.பி. 1311இல் நிகழ்ந்த டெல்லி மாலிக்காபூரின் படையெடுப்புக்கு ஈடு கொடுக்க முடியாமல் ஏற்கனவே உடைபட்டுப்போன பாண்டியர் படை சுருண்டு விட்டது. இரு போர் அணிகளும் தோற்றன; பேரரசு வீழ்ந்தது. உட்சிதைவின் காரணமாக மைய அரசு வலுவிழந்ததனால் வந்த வினை இது. படை அமைப்பின் அல்லது படை நிருவாகத்தின் குறைகளால் இந்த வீழ்ச்சி ஏற்படவில்லை.

## 6. மைய அரசு இல்லையேல் வெளிநாட்டுறவும் அயல் துறை வாணிகமும் நாடு தழுவிய விருதுகளும் அரசுக் கருவூலமும் ஏது?

தமிழ்நாட்டு மருந்துகளை அனுப்பும்படி மதுரைப் பாண்டியரின் மைய அரசைச் *சீனப்* பேரரசன் கேட்டுக் கொண்டான். 'மாபார்' என்று அரேபியரால் அழைக்கப்பட்ட தமிழ் கூறும் நல்லுலகமானது பாண்டிய அரசாகத்தான் *சீனருக்குக்* காட்சியளித்தது. பாண்டியரின் வணிகத் தூதுக் குழுக்கள் (கயிற்றுப் பிணைப்பில் கட்டுண்ட மரக்கட்டையாலான) கப்பல்களில் கீழ்த்திசை வல்லரசான *சீனம்* (பீகிங்) சென்றன. மேல் திசையில் இருந்து வந்த அரபுக் கடற்கொள்ளையரை அடக்கச் சடையவர்மன் வீரபாண்டியன் என்ற இணையரசன் கி.பி. 1260 அளவில் மேற்குக் கடற்கரை மங்களூர்ப் பகுதியைக் கைப்பற்றினான். *சீனத்துடன்* நல்லிணக்கத்தையும், அரபுகளிடம் அடக்கு முறையையும் பாண்டியர் கையாண்டனர். இவ்வாறு பாண்டியரின் வெளிநாட்டுறவு இயல்பாக விளங்கியது. சோழப் பேரரசை அதன் பேரரசுத் தகுதியிலிருந்து கீழிறக்கவும், சோழப் பேரரசனைப் பதவி இறக்கம் செய்து 'சோளபதி' என்ற எளிமைக்கு உட்படுத்தவும் 'சோணாடு கொண்டருளி' என்ற பட்டத்தை சட்டப்பிரமாணமாக (போர் வெற்றியாளனான) முதலாம் சுந்தரபாண்டியன் தனக்கென வரித்துக்கொள்ளவும் என அமைந்த மூன்று நிகழ்ச்சிகளுக்குக் கி.பி. 1218 அளவில் சட்ட முறையான எழுத்து வடிவங் கொடுக்கப்பட்டது. அதுவே பிடிபாடு (பத்திரம்) என எழுதப்பட்டது. இசைவுத் திட்டு எனவும் இது வழங்கப்பட்டது. ஒப்பந்தம் மீறப்பட்டால் திட்டு மட்டும் கிடைத்தது.

இலங்கையின் வீரவளஞ்சியர், பல நாட்டு நானாதேசியர், சோனகர் (முகமதியர்) அடங்கிய அஞ்சு வண்ணத்தார், உள்நாட்டுத் திசையாயிரத்து ஐந்நூற்றுவர் போன்றோர் மதுரை மத்திய அரசின் மாமன்னனை முன்னிறுத்தித்தான் உள்நாட்டு, வெளிநாட்டு வணிகத்தை மேற்கொண்டார்கள். மைய அரசைத் தான் இவ்வணிகர்கள் சார்ந்து நின்றார்கள். இந்நிலையில் மைய அரசின் அதிகாரம் இவர்களின் பல எதிர்பார்ப்புகளின் இடையில் நிலைபெற்று விளங்கியது.

மதுரை மைய அரசின் மேலாண்மைக்குக் கட்டியங்கூறி நின்ற பாண்டியப் பெருவேந்தர் பெயர்களைக் கொண்டு அரசவையிலிருந்த அறிஞர்களையும், அரசு அதிகாரிகளையும், அரசனின் ஆதரவாளர்களையும் அழைக்க வேண்டியதாயிற்று. அதுவே அவரவர்க்கு உரிய விருதுப் பெயராகவும் விளங்கிற்று. சுந்தரபாண்டியன் பிரம்மாதிராசன் என்ற அந்தண அதிகாரியும், சுந்தர பாண்டிய தலைக்கோலி என்ற நடனக் கலையுலகப் பெண்பாற் புலவரும் பாண்டிய மன்னவனுடைய பெயரைத் தாங்கும் சலுகையைப் பெற்றுச் சிறப்படைந்தார்கள். தற்காலத்துக் 'கலைமாமணி' அல்லது 'பாரத ரத்னா' பட்டம் போன்றமைந்த இந்தப் பாண்டிய விருதுகளைப் பாண்டியனுடைய பெயரால் வழங்கியிருந்தார்கள். பிரம்மதேயங்கள் என்ற அந்தணர் குடியிருப்புச் சதுர்வேதி மங்கலங்கள், ஊட்டுப்பிறைகள், தவமியற்றும் மடங்கள், கோயில்கள், கோயிலின் படிப்பகம், கோயிலின் மூலவர் (விக்கிரகம்), கல்லூரிகள், சோலைவளர் நந்தவனங்கள், கோயில் கோபுரங்கள், மண்டபங்கள் ஆகியவை பாண்டிய மன்னர்களின் பெயரால் அழைக்கப் பெற்றன. ஒரு நாட்டின் பெருவேந்தனானவன் இறைவனுக்குச் சமம் எனவும், அவனும் இறைவனே (பரமபாகவதர்) ஆவான் எனவும் (கி.பி. நான்காம் நூற்றாண்டுக்கு உரிய வட இந்திய) குப்தப் பேரரசுக் காலத்தில் வலியுறுத்தப்பட்டது. சோழர்கள் இந்த வழக்கத்தை ஒப்புக் கொண்டு தஞ்சை இராசராசேச்சுவரம் போன்ற கோயில்களைத் தங்கள் பெயரிட்டு அழைக்கத் தொடங்கினார்கள். பாண்டியனைப் பரமேசுவரன் (கடவுள்) என்றே கி.பி. 1260 அளவில் 'ஜெகத் ஆதாரர்' என்ற வடமொழிப் பிராசஸ்தி (மெய்க்கீர்த்தி) அழைத்தது. கடவுள் நிலைக்கு உயர்த்தப்பட்ட தென்னிந்தியப் பெருவேந்தனுக்கு அவனால் படைஞராக மாற்றப்பட்டுவிட்ட அந்தணர்குலத் தானைத் தலைவர்கள் பெரிதும் துணை நின்றார்கள். இவ்வாறு மைய அரசுக்கு உரிய வல்லமையானது கி.பி. 1300 அளவில் அளப்பரிய வளர்ச்சியை அடைந்தது.

தென்பாண்டிக் கடலில் முத்துக்குளிப்பு (சலாபம்) நடந்த போது உயர்தரமான முத்துகள் அனைத்தும் பாண்டிய மன்னனுக்கே உரிமையாகி விடும் அரச நியதி அந்நாளில் (அக்கடல் முகத்தே) நடைமுறையில் இருந்தது. கடமை என்ற கட்டாய வரியிலிருந்து வந்த

மொத்த வருவாயின் மிகுந்த அளவு போசளரை வியப்பில் ஆழ்த்தியதைக் கல்வெட்டுச் செய்தியாக அறியலாம். காவிரிப் படுகையின் வருமானம் மட்டும் போசளருக்குக் கிடைத்தது. அப்படியானால் தென்னிந்தியா முழுமைக்கும் உரிய கடமை வரியிலிருந்து பாண்டியருக்கு வந்த வருவாய் எந்த அளவு இருந்திருக்க முடியும் என்று நினைக்கவே மலைப்பாய் இருக்கும். இந்தப் பொருட்குவை அல்லது நிதியம் கடலைச் சென்றடையும் ஆறுகள் போல மதுரை மைய அரசின் கருவூலம் வந்தடைந்தது. பாண்டிய மன்னர்களுக்குச் சொந்தமான சொத்துகளிலிருந்து வந்த வருமானமும் அரச நகைகளான நவரோதையா என்ற வைரமணி பொருத்தப்பட்ட சுந்தரமுடியும் (சந்திர மௌலி என்ற மதி மகுடம்) இந்திர ஆரமும் அரசுக் கருவூலத்திற்கு உரியவைதான். அரசுக் கருவூலத்திற்குள் போட்டவை போட்டவைதான்: யாரும் அதனைத் திரும்பத் தொடுவதில்லை. அப்படி ஒரு பழக்கம் நடைமுறையில் இருந்தது. இதன் விளைவாகப் பல நூற்றாண்டுகளாகவே மதுரைக் கருவூலம் கன்னிமையோடு செல்வச் செறிவில் விம்மி நின்றது. இந்த மதுரைக் கருவூலத்தின் செல்வச் செழுமையைக் குறி வைத்துக் கி.பி.1311இல் டெல்லி படையெடுப்பாளர் தென்னிந்தியாவிற்குள் வந்தார்கள் என்ற கருத்து உண்டு. 612 யானைகள், 20,000 குதிரைகள், 96,000 மணங்கு தங்கக் கட்டிகள், ஆயிரக்கணக்கான பெட்டிகளில் முத்து, வைரம் ஆகியவை மதுரைக் கருவூலத்திலிருந்து கி.பி. 1311இல் கொள்ளையடிக்கப்பட்டு டெல்லி சேர்ந்தன எனப் பரனி என்ற வரலாற்று ஆசிரியர் அறிவிக்கிறார். டெல்லிப் படைக்கு அஞ்சி மதுரை நகரை விட்டகன்ற பாண்டியப் பெருவேந்தன் அவசர கோலத்தில் அரசுக் கருவூலத்தில் இருந்து முடிந்த மட்டும் அள்ளிச் சென்ற பின்பு எஞ்சி நின்ற செல்வமே மேற்சொன்ன கொள்ளைப் பொருள் ஆகும். அதுவே (பரனி சொன்னபடி) அத்தனை பெரும் செல்வமாகக் காட்சியளித்தது என்றால் இக்கொள்ளைக்கு முன்பு இருந்த கருவூலத்தின் மதிப்பு என்னவாக இருந்திருக்கும்!. எடுக்க எடுக்கக் குறையாத செல்வம் என்பது பழமொழி. எடுக்காமலேயே வளர்ந்த செல்வம் பாண்டியக் கருவூலத்தில் மண்டிக் கிடந்த போது. மாபெரும் செல்வனாகப் பாண்டிய மன்னன் விளங்கினான். ''திரு உடையாரைக் காணின் திருமாலைக் கண்டேன்'' என்ற ஆழ்வாரின் பாசுரச் செய்திக்கேற்பப் பாண்டியப் பெருவேந்தருக்கு வாய்த்த கருவூலச் செல்வமானது வலிமையான மைய அரசை அமைத்துக் கொள்ள உதவிற்று எனலாம்.

இடைக் காலத்தில் தென்னிந்தியாவில் மெய்க்கீர்த்தியையும். ஆட்சியாண்டையும் பயன்படுத்துகின்ற தகுதியைக் கொண்டவன் அரசன் தான். அரசனைத் தவிர வேறொருவரும் இருக்க முடியாது: இருக்கவும் கூடாது. சோழரைப் போலப் பாண்டியரும் மெய்க்கீர்த்தி முகமன் சொல்லி

# 3. சமுதாயம்

பாண்டியப் பெருவேந்தர் காலச் சமுதாயம், சாதியின் அடிப்படையிலேயே அமைந்திருந்தது. இக்காலக் கட்டத்தில் புதிய சாதி அமைப்புகள் தோன்றின. இந்த அமைப்புகள் அந்தந்தச் சாதியினரின் நலன்களைப் பாதுகாப்பதில் ஆர்வம் காட்டின. அவர்களின் சமூக, பொருளாதார வளர்ச்சிக்கு இவ்வமைப்புகள் உறுதுணையாக இருந்தன. தொழிலுக்கும் சாதிக்கும் நெருங்கிய தொடர்பு இருந்த போதிலும், சூழ்நிலையின் காரணமாகச் சாதி மாற்றங்களும் ஏற்பட்டன. ஆனால் இத்தகைய சாதி மாற்றங்களுக்குப் பழைமை விரும்பிகள் கடும் எதிர்ப்புத் தெரிவித்தனர். அரசாங்கமோ இந்தச் சாதி அடிப்படைச் சமுதாயத்தைக் கட்டிக்காப்பதில் கண்ணும் கருத்துமாக இருந்தது.[1]

இக்காலக்கட்டத்தில், பிராமணர்களுக்கும் பிராமணர் அல்லாதவர் களுக்கும் இடையே எந்தத் தகராறும் நடைபெறவில்லை. ஆனால் ஒரே சாதியில் இருந்த உட்பிரிவுகள் சில உரிமைகளையும் சலுகைகளையும் பெறுவதற்காகத் தங்களுக்குள் தகராறுகள் செய்து கொண்டன.

## பிராமணர்கள்

பாண்டியப் பெருவேந்தர் காலத்தில் பிராமணர்கள் சிறுபான்மையினராக இருந்தனர். ஆனால் இவர்களே சமுதாயத்தில் உயர்ந்த மதிப்பும் செல்வாக்கும் பெற்றுத் திகழ்ந்தனர். இவர்கள் வேதங்கள், சாத்திரங்கள் ஆகியவற்றை நன்கு கற்றுப் பண்டிதர்களாகத் திகழ்ந்தனர். இவர்களுக்குச் சமுதாயத்தில் நல்ல மதிப்பும் மரியாதையும் அரசர்களின் ஆதரவும் இருந்தது. அரசர்கள் இவர்களுக்கு நிலங்களை நன்கொடையாகக் கொடுத்தனர். இந்த நிலங்கள் பிரம்மதேயம் என அழைக்கப்பட்டன. இந்தப் பிரம்மதேயக் குடியிருப்புகள் அரசர், அரசி, குறுநிலமன்னர்கள்,கடவுளர் ஆகியோரின் பெயர்களிலும் அரசரின் பட்டப் பெயர்களிலும் திகழ்ந்தன[2].

## பிராமணர்களின் கோத்திரங்கள்

இந்தக் காலக்கட்டத்தில் பிராமணர்கள் பற்பல கோத்திரங்களைச் சார்ந்திருந்தார்கள் என்பது கல்வெட்டுகளிலிருந்து நமக்குத் தெரிய வருகிறது. அக்கோத்திரங்களில் குறிப்பிடத்தக்கவை பாரத் வாச கோத்திரம்[3], வசிட்ட கோத்திரம்[4], காசியப கோத்திரம்[5], வச்சிய கோத்திரம்[6], அகத்திய கோத்திரம்[7], ஆத்திரேய கோத்திரம்[8], இரதிதார கோத்திரம்[9], கௌதம கோத்திரம்[10] போன்றவையாகும்.

## பிராமணர்களின் வகைகள்

இக்காலக் கட்டத்தில் பிராமணர்கள் சைவப் பிராமணர்கள், வைணவப் பிராமணர்கள் என இரண்டு பெரும் பிரிவினராக இருந்தனர். சைவப் பிராமணர்கள் சிவாச்சாரியார்கள் என்ற பட்டப் பெயரைச் சூட்டிக் கொண்டனர். வைணவப் பிராமணர்கள் ஜீயர்கள் என்ற பட்டப் பெயரைச் சூட்டிக் கொண்டனர்.

பாண்டிய நாட்டில், தென்னிந்தியாவின் பற்பல பகுதிகளைச் சார்ந்த பிராமணர்கள் வாழ்ந்தனர் என்றும் கல்வெட்டுகள் கூறுகின்றன. முதலாம் சடையவர்மன் குலசேகரனின் (கி.பி.1190) கல்வெட்டுகள் மலையாளப் பிராமணர்கள்[11], கன்னடப் பிராமணர்கள் ஆகியோரும் பாண்டிய நாட்டில் இருந்தனர் எனக் குறிப்பிடுகின்றன.[12]

## பிராமணர்களின் தொழில்கள்

பெரும்பான்மையான பிராமணர்கள் கல்விப் பணியையும் சமயப் பணியையும் செய்து வந்தனர். சில பிராமணர்கள் அமைச்சர்களாக இருந்திருக்கிறார்கள்.[13] மூன்றாம் சடையவர்மன் சுந்தர பாண்டியன் காலத்தில் (கி.பி.1303) மதுராந்தக பிரம்மராயன் என்ற பிராமணன் அமைச்சனாக இருந்தான். சில பிராமணர்கள் அரசு உயர் அதிகாரிகளாகப் பணிபுரிந்தனர். இராமநாதபுரம் மாவட்டம், திருக்களாக்குடிக் கல்வெட்டு, எல்லாம் தலையான பாண்டிய பிரம்மராயன் என்ற பிராமணன், முதலாம் சடையவர்மன் சுந்தர பாண்டியனின் (கி.பி.1251) அதிகாரியாக இருந்தான் எனக் குறிப்பிடுகிறது.[14] ''எல்லாம் தலையானான்'' என்பது முதலாம் சடையவர்மன் சுந்தரபாண்டியனின் பட்டப் பெயர்களில் ஒன்று என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது.[15] சுந்தர பாண்டிய பிரம்மாதிராயன் என்ற பிராமணன் முதலாம் மாறவர்மன் குலசேகரனின் அதிகாரியாக இருந்தான். இதிலிருந்து அக்காலத்தில் இருந்த பிராமண அதிகாரிகள், அரசனின் பெயர்களையும், அவனது பட்டப் பெயர்களையும் தங்களது பெயர்களாகக் கொண்டிருந்தனர் என்பது தெளிவாகிறது. சில பிராமணர்கள் அர்ச்சகர்களாகவும்,[16] சமையல்காரர்களாகவும்[17] கோயில்களில் பணிபுரிந்திருக்கின்றனர். சில பிராமணர்கள் படைத்தலைவர்களாக இருந்தனர். அவர்கள் ''பிரம்மாதிராசன்'' என அழைக்கப்பட்டனர்.[18]

## பிராமணர் குடியிருப்புகள்

வேதங்களில் தேர்ச்சி பெற்ற பிராமணர்களுக்கு வரி நீக்கம் செய்து வாழ்விடங்கள் கொடுக்கப்பட்டன. அவை பிரம்மதேயம், அகரம், சதுர்வேதி மங்கலம் என அழைக்கப்பட்டன. முதலாம் சடையவர்மன் சுந்தர பாண்டியன் தனது 13ஆம் ஆட்சியாண்டில் 108 பிராமணக்

குடும்பங்கள் வாழ்வதற்கு 'விக்கிரம பாண்டிய சதுர்வேதி மங்கலம்' என்ற ஒரு புதிய கிராமத்தை உருவாக்கிக் கொடுத்தான் என ஒரு கல்வெட்டு குறிப்பிடுகிறது. இந்த விக்கிரம பாண்டிய சதுர்வேதி மங்கலம் அமைக்கச் சிதம்பரத்திற்கு அருகில் உள்ள புளியங்குடி என்ற கிராமத்தில் 117 3/4 வேலி நிலம் வாங்கப்பட்டது. ஒவ்வொரு பிராமணருக்கும் ஒரு வேலி நிலம் வீதம் 108 வேலி நிலம் கொடுக்கப்பட்டது. எஞ்சிய நிலப்பகுதி அக்கிராமத்தில் இருந்த மருத்துவர், நாவிதர், கிராமக் கணக்கர், பறையர், குயவர், கருந்தட்டான், தச்சர், பொற்கொல்லர், வண்ணான், கிராமக் காவலர், கிராமத்து வெட்டியான் ஆகியோருக்குப் பகிர்ந்து அளிக்கப்பட்டது.[19]

மாறவர்மன் விக்கிரம பாண்டியனின் (கி.பி.1283) கல்வெட்டு ஒன்று திருச்சிராப்பள்ளி தாயுமானவர் கோயிலில் காணப்படுகிறது. இக்கல்வெட்டு இந்தப்பாண்டிய அரசன் 'கண்ணுடைய நாயகி சதுர்வேதி மங்கலம்' என்ற குடியிருப்பைப் பிராமணர்களுக்கு அமைத்துக் கொடுத்தான் எனச் சொல்கிறது. இந்தக் குடியிருப்பை அமைக்கத் தேவைப்பட்ட நிலத்தை இப்பாண்டிய மன்னன் தாயுமானவர் கோயில் நிருவாகத்தினரிடமிருந்து விலைக்கு வாங்கினான் எனவும் இக்கல்வெட்டு சொல்கிறது.[20]

## பிராமணர்கள் கோயில் நிலத்தைக் கைப்பற்றுதல்

பொதுவாகப் பிராமணர்கள் பக்தியுடன் திகழ்ந்தனர். ஆகவே அவர்களுக்குச் சமுதாயத்தில் நல்ல மதிப்பிருந்தது. பயிரோடு சேர்ந்திருக்கும் களையைப் போலப் பிராமணர்களில் சிலர் பேராசையுடையவர்களாகவும் இருந்திருக்கின்றனர். கடலூர் (திருப்பாப்புலியூர்) பாடலீசுவரர் கோயிலில் காணப்படும் மூன்றாம் விக்கிரம பாண்டியனின் கல்வெட்டு, இக்கோயிலைச் சார்ந்த சில பிராமணர்கள், இக்கோயிலுக்குச் சொந்தமான நிலங்களைக் கவர்ந்து கொண்டனர் எனக் குறிப்பிடுகிறது. இதனால் அப்பிராமணர்களுக்கும் கோயில் நிருவாகத்திற்கும் இடையே வழக்கு ஏற்பட்டது. இந்த வழக்கை நியாயத்தார்கள் விசாரித்தனர். கோயில் நிருவாகத்தினர் கொடுத்த ஆவணங்களை நியாயத்தார்கள் ஆராய்ந்து இந்த வழக்கில் தொடர்புடைய நிலங்கள் உண்மையிலேயே இக்கோயிலைச் சார்ந்தவை எனக் கண்டறிந்தனர். இதன் பின் நியாயத்தார்கள் இப்பிராமணர்களிட மிருந்து இந்நிலங்களைப் பறிமுதல் செய்து பாடலீசுவரர் கோயிலுக்குக் கொடுத்தனர்.

## பிராமணர்களுக்குத் தனிக்குளங்கள்

சேலம் மாவட்டம், தாரமங்கலத்தைச் சார்ந்த அரசு அதிகாரிகள், இலட்சுமண சதுர்வேதி மங்கலத்துப் பிராமணர்களுக்காக ஒரு குளத்தை

வெட்டி அதை அவர்களுக்கு அன்பளிப்பாகக் கொடுத்தனர். இந்தக் குளத்தைப் பிராமணர்கள் மட்டுமே பயன்படுத்திக் கொள்ள அனுமதிக்கப் பட்டனர். இப்படிப்பட்ட குளங்கள் 'பார்ப்பான் குளங்கள்' என்ற பெயரில் தற்போதும் பற்பல ஊர்களில் இருந்து வருகின்றன. ஆனால் அக்குளங்களைத் தற்போது எல்லாச் சாதியினரும் பயன்படுத்திக் கொள்ள அனுமதிக்கப்பட்டிருக்கின்றனர். சமுதாயத்தைச் சார்ந்த பல சாதியினரும். பிராமணர்களுக்கு வீட்டு மனைகள்,[21] நிலங்கள்,[22] நெல்,[23] பணம்[24] ஆகியவற்றைக் கொடுத்து ஆதரித்திருக்கின்றனர்.

## பிராமணர்களுக்குச் சிறப்புச் சலுகைகள்

பிராமணர்கள் கல்வித் தொண்டும், சமயத் தொண்டும் செய்தமையினால் இவர்களுக்குச் சில சிறப்புச் சலுகைகள் கொடுக்கப்பட்டிருந்தன. இராமநாதபுரம் மாவட்டம், சிவகங்கை வட்டம் திருப்பாற்சோற்றி என்ற கிராமத்தில் இருந்த அனைத்து மக்களும் முதலாம் சடையவர்மன் குலசேகரன் ஆட்சிக் காலத்தில் வெளியேற்றப்பட்டனர். அதன்பின், இந்த ஊரில் 40 பிராமணக் குடும்பங்கள் குடியேற்றப்பட்டன. இதிலிருந்து, பிராமணர்களுக்கு அக்காலத்தில் இருந்த சிறப்புச் சலுகை தெரியவருகிறது.

இராமநாதபுரம் மாவட்டம், ஆழ்வார் திருநகரியில் காணப்படும் முதலாம் மாறவர்மன் குலசேகரனின் கல்வெட்டு ஒன்று இவ்வூரிலுள்ள சிவன் கோயிலில் புராணங்களையும் இதிகாசங்களையும் விரிவுரை செய்த பிராமணர்களுக்கு முதலில் பிரசாதம் வழங்கப்பட்டதாகக் குறிப்பிடுகிறது.[25]

## பிராமணர்களின் கண்காணிப்பில் கோயில் சொத்துகள்

திருநெல்வேலி மாவட்டம், அம்பா சமுத்திரம் வட்டம் திருவாலீச்சுவரம் சிவன் கோயிலுக்குக் கொடுக்கப்பட்ட நன்கொடைத் தொகையிலிருந்து ஒரு பகுதியை இக்கோயிலில் பணிபுரிந்த திருத்தாண்ட நம்பி என்ற பிராமணன் கடனாகப் பெற்றுக் கொண்டான். இந்தக் கடனுக்குச் செலுத்த வேண்டிய வட்டிப் பணத்திற்கு ஈடான நெல்லை வாங்கி அதைக் கார்த்திகைத் திருவிழாக் கொண்டாட இப்பிராமணன் இக்கோயிலுக்குக் கொடுத்தான்.

மதுரை மாவட்டம் திருவாதவூர் திருமலைநாதர் கோயிலுக்கு அடுக்களைப்புறமாகக் (சமையல் பணிக்காகக் கொடுக்கப்பட்ட நிலம்) கொடுக்கப்பட்ட நன்கொடை நிலத்தை உருத்திரப்பட்டன் என்ற பிராமணன் பெற்றுக் கொண்டு அக்கோயிலில் பிரசாதம் தயாரிக்க ஒவ்வொரு நாளும் தேவையான அரிசியையும், பணம் ஒன்றையும் கொடுத்து வந்தான் என இக்கோயிலில் காணப்படும் கல்வெட்டு ஒன்று குறிப்பிடுகிறது.[26] இதிலிருந்து பிராமணர்கள் கோயில் சொத்துகளின்

பொறுப்பாளர்களாக இருந்தனர் என்பது தெரியவருகிறது. பாண்டியப் பேரரசுக் காலத்தில் பிராமணர்கள் மதிப்பு மிக்கவர்களாகத் திகழ்ந்தனர். அவர்களை அரசர் முதற்கொண்டு சாதாரண மக்கள் வரை அனைவரும் ஆதரித்தனர்.

## அரசர்கள்

பாண்டியப் பெருவேந்தர் காலத்தில் அரசர்கள் சமுதாயத்தில் உயர்ந்த மதிப்பு பெற்றிருந்தனர். அவர்கள் சர்வாதிகாரிகளாகத் திகழவில்லை. சில வழக்காறுகளுக்குக் கட்டுப்பட்டு அவர்கள் ஆட்சி நடத்தினர். பாண்டிய அரசர்கள் மனு தர்மப்படி ஆட்சி நடத்தினர் என்பது அவர்களின் மெய்க்கீர்த்திகளிலிருந்து நமக்குத் தெரிய வருகிறது. முதலாம் சடையவர்மன் குலசேகரனின் மெய்க்கீர்த்தி 'மறை நெறி வளர மனு நெறி திகழ' எனக் குறிப்பிடுகிறது. முதலாம் மாறவர்மன் சுந்தர பாண்டியனின் மெய்க்கீர்த்தி 'மனுநெறி தழைப்ப மணிமுடி சூடி' எனக் குறிப்பிடுகிறது. முதலாம் சடையவர்மன் சுந்தர பாண்டியனின் மெய்க்கீர்த்தி 'திருந்துகின்ற மனுநெறியும் திறம்பாது தழைத்தோங்க' எனக் குறிப்பிடுகிறது. முதலாம் மாறவர்மன் குலசேகரனின் மெய்க்கீர்த்தி 'மனுநூலும் நான்மறை முழுவதும் எத்தவச் சமயமும் இனிதுடன் விளங்கவும்' எனக் குறிப்பிடுகிறது.

## அரசர்களின் பட்டப் பெயர்கள்

பாண்டிய அரசர்கள் பற்பல பட்டப் பெயர்களைச் சூட்டிக் கொண்டனர். இராசகம்பீரன்,[27] இராசசூரியன்,[28] மகாராசாதிராசன்,[29] எம்மண்டலமும் கொண்டருளிய தேவன்,[30] எல்லாம் தலையானான்,[31] அனைத்துலகும் கொண்டருளிய தேவன்,[32] ஆகிய பட்டப் பெயர்கள் பாண்டிய அரசர்களின் மேன்மையைக் குறிப்பனவாக அமைந்துள்ளன. முதலாம் மாறவர்மன் சுந்தர பாண்டியன் சூட்டிக் கொண்ட 'சோணாடு கொண்டான்'[33] என்ற பட்டப் பெயரும்; முதலாம் சடையவர்மன் சுந்தர பாண்டியனின் 'சேரனை வென்றான்'[34] என்ற பட்டப்பெயரும்; முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியனின் 'கொல்லம் கொண்டான்'[35] என்ற பட்டப் பெயரும் இவ்வரசர்களின் வெற்றிகளைக் குறிக்கும் வகையில் அமைந்துள்ளன.

## பாண்டியப் பெருவேந்தர்களின் சிலைகள்

முதலாம் மாறவர்மன் சுந்தர பாண்டியனின் கற்சிலைகள் புதுக் கோட்டை மாவட்டம், குடுமியான்மலை சிகாநாதசாமி கோயிலிலும், திருச்சி மாவட்டம், அரங்கமலை மல்லீசுவரர் கோயிலிலும், திருவானைக்கா சம்புகேசுவரர் கோயிலிலும் காணப்படுகின்றன. முதலாம் சடையவர்மன் சுந்தர பாண்டியனின் கற்சிலை சிதம்பரம் நடராசர் கோயில் மேற்குக் கோபுரத்து நுழைவாயிலில் உள்ள ஒரு

மாடத்தில் காணப்படுகிறது. முதலாம் மாறவர்மன் குலசேகரனின் கற்சிலை திருநெல்வேலியிலுள்ள நெல்லையப்பர் கோயில் மண்டபம் ஒன்றில் காணப்படுகிறது. இந்தக் கற்சிலைகளிலிருந்து பாண்டியப் பெருவேந்தர்களின் உருவ அமைப்பைத் தெரிந்து கொள்கிறோம். மேலும் இவர்கள் கழுத்தணி, காதணி, காற்சதங்கை ஆகியவற்றை அணிந்திருப்பதுபோல இக்கற்சிலைகள் வடிக்கப்பட்டிருப்பதனால் இவர்களுக்கு நகைகள் அணிவதில் மிகுந்த ஆர்வம் இருந்தது என்பதும் தெரிய வருகிறது.

## அரசர்களின் கடமைகள்

மக்களுக்குப் பாதுகாப்புக் கொடுப்பதும் அவர்களின் குறைகளை நீக்குவதும் அரசர்களின் முக்கியக் கடமைகளாக இருந்தன. மேலும் அரசர்கள், சமுதாயத்திலிருந்த சாதிப்பிரிவுகளைப் பாதுகாப்பதில் கண்ணும் கருத்துமாக இருந்தனர். சாதி முறையை ஒழித்துச் சமுதாயத்தில் சீர்திருத்தம் கொண்டுவர எந்தப் பாண்டிய அரசரும் முயற்சி எடுக்கவில்லை. அரசர்கள், நீதிபதிகளாகவும் திகழ்ந்தனர். தங்கள் குடிமக்கள், மேல் முறையீடாகக் கொண்டுவந்த வழக்குகளை அரசர்கள் விசாரித்துத் தீர்ப்பு சொன்னார்கள்.[36] மேலும் அரசர்கள் தங்கள் நாட்டில் பல புதிய கோயில்களைக் கட்டினர்.[37] ஏற்கெனவே கட்டப்பட்டிருந்த கோயில்களில் புதிய கோபுரங்கள், மண்டபங்கள், சிற்றாலயங்கள், மடைப்பள்ளிகள், ஆகியவற்றைக் கட்டினர்.[38] பாண்டிய அரசர்கள் கோயில்களில் புதிய கடவுள் சிலைகளை அமைத்து அவற்றின் நாள் பூசைகளுக்கும் ஆண்டுத் திருவிழாக்களுக்கும் பணமும், நிலமும் நன்கொடையாகக் கொடுத்தனர்.[39] இவர்கள் மடங்களை ஏற்படுத்தி அவற்றின் பராமரிப்பிற்கும் நன்கொடைகள் வழங்கினர்.[40] இவ்வளவு சமயப்பணிகளையும் பாண்டியப் பேரரசர்கள் செய்தாலும் இவர்கள் சமுதாயத்தில் அரசியல் தலைவர்களாக இருந்தார்களேயன்றிச் சமயத் தலைவர்களாகக் கருதப்படவில்லை.

## அரசரைக் கட்டுப்படுத்துதல்

அரசர், தருமநெறிப்படி ஆட்சி நடத்த வேண்டுமென மக்கள் எதிர்பார்த்தனர். தருமத்தை மீறிச் சர்வாதிகாரத்தனமாக நடந்து கொள்ளும் அரசரை எதிர்த்து மக்கள் கிளர்ச்சி செய்தனர். அரசர் தங்களைக் கடுமையாக நடத்தினால் அதற்கு எதிர்ப்பு தெரிவிக்கும் வகையில் மக்கள் தங்கள் வாழ்விடங்களை விட்டு வேறிடம் சென்றுவிடும் வழக்கமும் இருந்தது. அப்படிக் குடிபெயர்ந்து சென்ற மக்களை மீண்டும் அவர்களின் பழைய வாழ்விடத்திற்கு அழைத்து வரவேண்டிய பொறுப்பு அரசருக்கு இருந்தது.[41] முதலாம் மாறவர்மன் சுந்தர பாண்டியன் காலத்தில் இராமநாதபுரம் மாவட்டம் பெரிச்சி கோயிலைச் சார்ந்த மக்களும். இந்த மாவட்டத்தைச் சார்ந்த

கண்டரமாணிக்கம் கிராம மக்களும் தங்கள் மீது விதிக்கப்பட்ட அதிக நிலவரியைக் கொடுக்க மறுத்தனர். அவர்கள் முதலாம் மாறவர்மன் சுந்தர பாண்டியனின் கொடுங்கோல் ஆட்சிக்கு உட்பட்டு இருப்பதை விட அக்கிராமங்களைக் காலி செய்து விட்டு, காட்டுக்குச் செல்வது மேல் என முடிவுசெய்தனர். இதைக் கேள்விப்பட்ட இப்பாண்டிய மன்னன் இம்மக்கள் மீது விதிக்கப்பட்டிருந்த வரியைக் குறைத்து அவர்கள் தங்கள் கிராமங்களிலிருந்து குடி பெயர்வதைத் தடுத்து நிறுத்தினான்.

## அரசர்களின் சமயக் கொள்கை

பாண்டிய அரசர்கள் சைவ சமயத்தைச் சார்ந்தவர்களாக இருந்த போதிலும் மற்ற சமயங்களையும் ஆதரித்தனர். முதலாம் சடையவர்மன் குலசேகரன், திருப்புவனத்தில் பிராமணர்களுக்கு நிலத்தானம் செய்த போது அவ்வூரில் ஏற்கெனவே சமணப்பள்ளிக்கு விடப்பட்டிருந்த பள்ளிச்சந்த நிலங்களைத் தவிர்த்து விட்டு ஏனைய நிலங்களை மட்டுமே தானம் செய்திருக்கிறான்.[42] முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் சிவன் கோயில்களுக்கும்[43] விஷ்ணு கோயில்களுக்கும்[44] நன்கொடை அளித்திருக்கிறான். முதலாம் சடையவர்மன் சுந்தரபாண்டியன், சிதம்பரம் நடராசர் கோயிலில் துலாபாரம் மேற்கொண்டு தன் எடைக்கு எடை பொன், வெள்ளி, வைர நகைகளைக் கொடுத்தான். மேலும், இப்பாண்டிய அரசன் இதே போலத் துலாபாரம் மேற்கொண்டு திருவரங்கம் அரங்கநாதர் கோயிலுக்கு அணிகளை நன்கொடைகளாக அளித்திருக்கிறான். முதலாம் மாறவர்மன் குலசேகரனின் மெய்க்கீர்த்தி 'எத்தவச் சமயமும் இனிதுடன் விளங்க' எனக் குறிப்பிடுகிறது. இதிலிருந்து இப்பாண்டிய அரசர்கள் சமயப் பொறை உடையவர்களாக இருந்தார்கள் என்பது தெளிவாகிறது. எக்காலக்கட்டத்திலும் எந்தப் பாண்டிய அரசரும் சமயவெறியுடன் நடந்து கொண்டதாகச் சான்று இல்லை.

## துலாபாரங்கள்

சிதம்பரம் நடராசர் கோயில் மேற்குக் கோபுரச் சுவரில் காணப்படும் ஒரு கவிதைக் கல்வெட்டு முதலாம் சடையவர்மன் சுந்தரபாண்டியன், சோழர்கள், காடவர்கள் ஆகியோரை வென்றதைக் குறிப்பிடுகிறது.[45] இப்பாண்டிய மன்னன் மேற்கண்ட வெற்றிகளின் மூலம் கிடைத்த தங்கம், வெள்ளி ஆகியவற்றைத் துலாபாரம் மேற்கொண்டு இக்கோயிலுக்கே தானமாகக் கொடுத்தான். இவன் துலாபாரம் மேற்கொண்ட செய்தியைக் குறிப்பிடும் கவிதைக் கல்வெட்டு பின்வருமாறு:

*"இனவரிக்கிம்புரி வெண்பிறைக் கோட்டிகல் வெங்கடுங்கட்*
*சினமத்த வெங்கரிச் சுந்தரத் தென்னவன் தில்லை மன்றில்*
*வனத் திருவுடன் செஞ்சொற்றிருவை மணந்த தொக்கும்*
*கனகத்துலையுடன்முத்தத் துலையிற் கலந்ததுவே"*[46]

இப்படித் துலாபாரத்தின் மூலம் கொடுக்கப்பட்ட தங்கத்தை நடராசர் கோயிலின் கற்பக்கிரகத்தின் மேல்விமானத்திற்குப் பொன்முலாம் பூசப் பயன்படுத்தினர்.[47]

இந்தச் சமயத்திருப்பணிகளைச் செய்ததனால் முதலாம் சடையவர்மன் சுந்தரபாண்டியனுக்குக் 'கோயில் பொன்வேய்ந்த பெருமாள்' என்ற பட்டப்பெயர் ஏற்பட்டது என ஒரு கவிதைக் கல்வெட்டு கூறுகிறது. அக் கவிதைக் கல்வெட்டு பின்வருமாறு:

''வாழ்க கோயில் பொன்வேய்ந்த மகபதி
வாழ்க செந்தமிழ் மாலை தெரிந்தவன்
வாழ்க மண்டலம் யாவையும் கொண்டவன்
வாழ்க சுந்தர மன்னவன் தென்னனே''.[48]

சிதம்பரத்தில் துலாபாரம் மேற்கொண்டதும், முதலாம் சடையவர்மன் சுந்தரபாண்டியன் திருவரங்கம் திருவரங்கநாதப் பெருமாள் கோயிலுக்குச் சென்று அங்கேயும் ஒரு துலாபாரம் மேற்கொண்டான். இந்தத் துலாபாரத்தின் மூலம் கிடைத்த தங்கத்தைத் திருவரங்கம் திருவரங்கநாதப் பெருமாள் கோயிலின் விமானத்திற்குப் பொன்வேயப் பயன்படுத்தினர்.[49]

திருவரங்கம் கோயில் தலபுராணமாகத் திகழும் 'கோயில் ஒழுகு' என்ற நூல் முதலாம் சடையவர்மன் சுந்தரபாண்டியன் திருவரங்கத்தில் மேற்கொண்ட துலாபாரத்தைப் பற்றிச் சில சுவையான செய்திகளைத் தருகிறது. காவிரி ஆற்றில் சம எடையுள்ள இரண்டு படகுகள் மிதக்க விடப்பட்டன. ஒரு படகில் சுந்தரபாண்டியனின் பட்டத்து யானை ஏற்றப்பட்டது. அந்த யானையின் மீது சடையவர்மன் சுந்தரபாண்டியன் அமர்ந்து கொண்டான். இப்படகு எவ்வளவு ஆழத்திற்கு அமிழ்கின்றதோ அந்த அளவிற்கு மற்றொரு படகும் அமிழ்கின்ற வரைக்கும் அதில் தங்கம், வெள்ளி, நவரத்தினங்கள் ஆகியவை கொட்டப்பட்டன. இந்த விலைமதிப்பு மிக்க ஆபரணங்களைக் கொண்டு திருவரங்கம் கோயில் விமானத்திற்குத் தங்கமுலாம் பூசப்பட்டது.[50]

## அரசரின் பணியாட்கள்

அரசரின் அரண்மனையில் இருந்த பணியாட்களை இரண்டு வகையாகப் பிரிக்கலாம். முதல் வகைப் பணியாட்கள் உடைகள் தயாரித்தல், விளக்குகள் ஏற்றுதல், தோட்டப் பராமரிப்பு, அரண்மனையைத் தூய்மைப்படுத்துதல் ஆகிய பணிகளைச் செய்தனர். இவர்களைத் தவிர ஒவ்வொரு அரண்மனையிலும் அரசகுடும்பத்தைச் சார்ந்தவருக்கு அணிகலன்கள் செய்வதற்கு அரண்மனையிலேயே பல பொற்கொல்லர்கள் இருந்தனர். மேலும் அரண்மனையில் கல்வெட்டுகள் வெட்டுவதற்குக் கல்தச்சர்களும், செப்பேடுகளில் சாசனங்களை வெட்டுவதற்குக் கன்னாரர்களும் இருந்தனர். அரசரின் அரண்மனைப்

பணிகள் அனைத்தையும் மேற்பார்வையிட அதிகாரிகள் இருந்தனர். அந்த அதிகாரிகள் திருவாசல் முதலி[51] என்றும் அகப்பரிவாரமுதலி[52] என்றும் அழைக்கப்பட்டனர். அரசருக்கு அருகிலிருந்து வேலையைச் செய்யும் பணியாளர்களை மேற்பார்வையிடும் அதிகாரியை 'மாளிகைத் தனம்' என முதலாம் சடையவர்மன் குலசேகரனின் திரிபுவனம் செப்பேடு சொல்கிறது.[53]

## அரசரின் நிருவாகப்பணியாளர்கள்

அரசருக்கு நிருவாகத்தில் உதவி செய்ய ஏராளமான பணியாளர்கள் இருந்தனர். அமைச்சர்கள், அரசருக்கு அவ்வப்போது ஏற்படும் பிரச்சினைகளைத் தீர்ப்பதற்கு ஆலோசனைகளும், அறிவுரைகளும் சொன்னார்கள். தலைமை அமைச்சர் 'உத்தர மந்திரி' என அழைக்கப்பட்டார்.[54] முதலாம் மாறவர்மன் குலசேகரன் காலத்தில் வாணாதிராயன் என்பவன் 'ஏகமந்திரி'யாக இருந்தான் என ஒரு கல்வெட்டு சொல்கிறது. ஏகமந்திரி என்ற சொல்லிற்குப் பொருள் தெளிவாகத் தெரியவில்லை. ஒரு துறையைக் கவனித்துக் கொண்ட அமைச்சர் ஏகமந்திரி என அழைக்கப்பட்டிருக்கலாம் என்று பேராசிரியர் கே.வி. இராமன் குறிப்பிடுகிறார்.[55] நிருவாகப் பணியில் முக்கியப் பங்கேற்ற அதிகாரிகளுக்குப் பாண்டிய அரசர்கள், 'காலிங்கராயன்', 'மழவராயன்,' 'பல்லவராயன்', 'முனையத்தரையன்' ஆகிய பட்டப் பெயர்கள் கொடுத்தனர். அரசன் தனது ஆணைகளை இந்த அதிகாரிகள் மூலமாகவே குறிப்பிட்ட துறைகளுக்கு அனுப்பி வைத்தான். பாண்டிய நாட்டில் ஆங்காங்கேஇருந்த அரண்மனைகளில் வைக்கப்பட்டிருந்த அரியணைகளுக்கு இந்த அதிகாரிகளின் பெயர்கள் சூட்டப்பட்டிருந்தன. காலிங்கராயன் சிம்மாசனம், மழவராயன் சிம்மாசனம் என்பவை பாண்டியர் கல்வெட்டுகளில் குறிப்பிடப்பட்டுள்ளன.[56]

முதலாம் சடையவர்மன் குலசேகரனின் திருபுவனம் செப்பேடுகளில், சில அதிகாரிகளின் இயற்பெயர்களுக்கு முன்னர் திருவாய்க்கேள்வி, திருமந்திர ஓலை, திருமந்திர ஓலைநாயகம் ஆகிய பதவிப் பெயர்கள் குறிப்பிடப்பட்டுள்ளன.[57] திருவாய்க் கேள்வி என்பவன் அரசருடன் எப்போதும் கூடவே இருந்தான். அரசர் சொல்லும் ஆணைகளை இந்த அதிகாரி கேட்டு அவற்றைத் தொடர்புடைய துறைகளுக்குத் தெரியப்படுத்தினான். திருமந்திர ஓலை என்பவன் அரசரின் மேற்படி வாய்மொழி ஆணைகளை ஓலைகளில் எழுதி அவற்றிற்கு எழுத்து வடிவம் கொடுத்தான். எழுத்து வடிவத்தில் இருந்த அந்த ஆணைகளைச் சரிபார்த்த அதிகாரி 'திருமந்திர ஓலை நாயகம்' என அழைக்கப்பட்டான். இப்படிச் சரிபார்த்த பின்னர்தான் அந்த ஆணை குறிப்பிட்ட துறைக்கு அல்லது நபருக்கு அனுப்பி வைக்கப்பட்டது.

## அரசரின் தங்கு தலங்கள் (முகாம்கள்)

நிருவாகத்தின் தலைவராக இருந்த அரசர், சுற்றுப் பயணங்களை மேற்கொண்டு மக்களை நேரில் சந்தித்து அவர்களின் குறைகளைக் கேட்டு அவற்றை நீக்கினார். இச் சுற்றுப்பயணக் காலத்தில் அரசர் ஆங்காங்கே தங்குவதற்கு அரண்மனைகள் இருந்தன. அரண்மனைகள் இல்லாத இடங்களில் அரசர்கள் கோயில்களிலிருந்த வெளிமண்டபங்களில் தங்கினார்கள். இந்தச் சமயங்களில் அரசர் வழக்குகளை விசாரித்து தீர்ப்புகளைச் சொன்னார்கள். ஒரு வழக்கு மிகச் சிக்கல் நிறைந்ததாக இருந்தால் அவ்வழக்குத் தொடர்பான எல்லா விவரங்களையும் சேகரித்து, ஆராய்ந்து அதன்பின் அந்த வழக்குக்குத் தீர்ப்புச் சொல்லுமாறு தனது அதிகாரிகளைக் கேட்டுக் கொள்வது வழக்கமாகும்.

## அரசரின் அந்தப்புரம்

அரசரின் அந்தப்புரத்தில் அழகிய பெண்கள் இருந்தனர் என்று வாசப் என்ற வெளிநாட்டுப் பயணி தனது பயணக்குறிப்பில் குறிப் பிட்டுள்ளார். அவரது கருத்து பின்வருமாறு :

'அன்றாட நிருவாகப் பணிகள் முடிந்ததும் அரசர் அந்தப்புரத் திற்கு வந்தார். அங்கு இருந்த ஆயிரக்கணக்கான அழகிய பெண்கள் அரசருக்குப் பணிவிடை செய்து அவருக்கு இன்பம் அளித்தனர். அவர்களில் சிலர் மொழிபெயர்ப்பாளர்களாகவும், சிலர் மது கொடுக்கும் மாதுகளாகவும் பணி புரிந்தனர்'.

இத்தாலியிலிருந்து வந்த மார்க்கோபோலோ என்ற பயணியும் அந்தப்புரத்தைப் பற்றித் தன் பயண நூலில் இதே போன்று கூறுகிறார். முதலாம் மாறவர்மன் குலசேகரனுக்கு அந்தப்புரத்தில் ஐந்நூறு மங்கையர் இருந்தனர் என்றும், அவர்களில் மிக அழகாக இருந்த ஒருத்தியை இவன் தன் மனைவியாகக் கொண்டிருந்தான் என்றும் அப்பயணி குறிப்பிடுகிறார்.[58] இந்த மங்கையர்களுக்கெல்லாம் மிக ஆடம்பரமான வாழ்க்கை வசதிகள் செய்து கொடுக்கப்பட்டிருந்தன என்றும் மார்க்கோபோலோ கூறுகிறார்.[59] மேலும் அவர் தனது பயணக்குறிப்பில் சொல்லியிருப்பதாவது :

'முதலாம் மாறவர்மன் குலசேகரன் தனது சகோதரனின் அழகிய மனைவியைக் கட்டாயப்படுத்தித் தன் மனைவியாக ஆக்கிக் கொண்டான். அந்தச் சகோதரனோ இதற்கு எவ்வித எதிர்ப்பும் தெரிவிக்காமல் அமைதியாக இருந்தான்'.[60]

முதலாம் சடையவர்மன் சுந்தரபாண்டியன் வேறுபட்ட அரசனாக இருந்தான். இவனிடம் பொதுவாக அரசர்களிடமிருந்த ஒழுக்கக்கேடுகள் இல்லை. இவனது தனிப்பட்ட வாழ்க்கை மிகத் தூய்மையாக இருந்தது. இவன் வெளியிட்ட திருப்பதி கல்வெட்டுகள் இவனைப் 'பரதார

சகோதரன்' என்று குறிப்பிடுகின்றது.[61] பர தார சகோதரன் என்றால் மற்றவர்களின் மனைவிக்குச் சகோதரனாக இருந்தவன் என்பது பொருளாகும். இதிலிருந்து முதலாம் சடையவர்மன் சுந்தரபாண்டியன் மிகத்தூய்மையான இல்லற வாழ்க்கை வாழ்ந்தான் என்பது தெரிய வருகிறது.

## அரசரின் ஆடைகளும், ஆபரணங்களும்

பாண்டிய அரசர்கள் எளிமையான ஆடையையும் மிக விலை உயர்ந்த ஆபரணங்களையும் அணிந்தனர் என்பது மார்க்கோ போலோவின் பயணக் குறிப்பிலிருந்து தெரிய வருகிறது. அக்குறிப்பு பின்வருமாறு :

'முதலாம் மாறவர்மன் குலசேகரன் தனது இடுப்பைச் சுற்றி ஒரு சிறிய நேர்த்தியான துணியைக் கீழாடையாக அணிந்திருக்கிறான். இவனைப் போலவே பாண்டிய நாட்டில் வாழும் அனைத்து மக்களும் எளிய ஆடையையே அணிந்திருக்கிறார்கள். தனது கழுத்தைச் சுற்றி நவரத்தினக் கற்களால் செய்யப்பட்ட ஒரு கழுத்தணியை இவன் அணிந்திருக்கிறான். இந்த அணி கழுத்திலிருந்து தொடங்கி மார்பில் நீண்டு தொங்குகிறது. இதில் 104 முத்துகள் உள்ளன. இந்த 104 முத்துகளை ஒவ்வொன்றாக உருட்டி மந்திரங்களை 104 முறை இவ்வரசன் தனது வழிபடு தெய்வத்தின் முன்னர் ஒவ்வொரு நாளும் காலையில் சொல்கிறான். இவனைப் போலவே எல்லா அரசர்களும் வழிபாடு செய்கிறார்கள். இவர்கள் காலையில் வழிபாட்டில் சொல்லும் மந்திரம் 'பச்சுதா பச்சுதா பச்சுதா' என்பதாகும்.[62] இந்தப் 'பச்சுதா' என்ற சொல்லை அவர்கள் 104 முறை திரும்பத் திரும்பச் சொல்கிறார்கள்''.

மார்க்கோபோலோ அரசர் அணிந்திருந்த ஆபரணங்களைப் பற்றிப் பின்வருமாறு குறிப்பிடுகிறார் : 'முதலாம் மாறவர்மன் குலசேகரன் தனது கையில் மூன்று தங்கக் காப்புகளை அணிந்திருக்கிறான். அந்தக் காப்புகளில் விலை உயர்ந்த முத்துகள் பதிக்கப்பட்டிருக்கின்றன. இவ்வரசன் கால்களில் தண்டைகள் அணிந்திருக்கிறான். இவன் அணிந்திருக்கும் தங்கம், மாணிக்கம், முத்து நகைகளின் மதிப்பு ஒரு பெரிய நகரத்தின் விலையைவிட அதிக மதிப்பு உடையதாகும்'.[63]

## அரசரின் கருவூலம்

மார்க்கோபோலோ அரசரின் கருவூலத்தைப் பற்றித் தன் பயணக்குறிப்பில் பின்வருமாறு குறிப்பிடுகிறார். 'ஓர் அரசன் இறந்ததும் அவன் தனது கருவூலத்தில் சேர்த்து வைத்திருக்கும் செல்வத்தை அவனது புதல்வர்கள் எடுத்துச் செலவழிப்பது இல்லை. தந்தை சேர்த்த செல்வத்தைப் புதல்வர்கள் பயன்படுத்துவதை மிக இழிவாகக் கருதினர். அப்புதல்வர்கள் தங்கள் ஆட்சிக் காலத்தில் தம் தந்தையைப் போலப்

பெரும் செல்வத்தைக் கருவூலத்தில் சேர்த்தனர்'.[64] வாசப் என்ற வெளிநாட்டு முகமதியப் பயணி முதலாம் மாறவர்மன் குலசேகரனின் மதுரைக் கருவூலம் பற்றிப் பின்வருமாறு குறிப்பிடுகின்றார்: 'கலேஸ்தேவர் (முதலாம் மாறவர்மன் குலசேகரன்) மதுரைக் கருவூலத்தில் ஆயிரத்து இருநூறு கோடி தங்க நாணயங்கள் (தினார்கள்) சேமித்து வைத்திருக்கிறான். இவற்றைத் தவிர இக்கருவூலத்தில் முத்துகள், இரத்தினக்கற்கள், மாணிக்கங்கள் ஆகியவையும் இருக்கின்றன. இக்கருவூலத்தில் இருக்கும் செல்வத்தின் அளவைக் கூறுவதற்குச் சொற்களே இல்லை'.[65]

மேற்கண்ட வெளிநாட்டுப் பயணிகளின் குறிப்புகளிலிருந்து, பாண்டிய நாட்டுக் கருவூலத்தில் ஏராளமான செல்வம் பரம்பரைப் பரம்பரையாகச் சேர்க்கப்பட்டது என்பது தெரியவருகிறது. பாண்டிய அரசர்கள் தமக்குக் கட்டுப்பட்டிருந்த குறுநில மன்னர்களிடம் வாங்கிய கப்பம், போர்களில் வெற்றி பெற்ற பின் அந்நாடுகளைக் கொள்ளை யடித்துக் கொண்டுவந்த பொருள் ஆகியவற்றை இக்கருவூலத்தில் சேமித்து வைத்தனர்.[66]

## அரசரின் பாதுகாவலர்கள்

அரசர்கள் அந்தப்புரத்தைத் தவிர வேறு எந்த இடத்திற்குச் சென்றாலும் அவர்களோடு சில பாதுகாவலர்கள் சென்றனர். இந்தப் பாதுகாவலர்களைப் பாண்டியர் கல்வெட்டுகள் 'தென்னவன் ஆபத் துதவிகள்'[67] எனக் குறிப்பிடுகின்றன. இந்தப் பாதுகாவலர்களைப் பற்றி மார்க்கோபோலோ தரும் செய்திகள் பின்வருமாறு :

'அரசனின் பாதுகாவலர்கள் அரசனோடு குதிரையில் செல் கின்றனர். அவர்கள் எப்போதும் அரசனுக்கு அருகில் இருக்கின்றனர். அவர்களுக்கு நாட்டில் மிகுந்த அதிகாரமும், மரியாதையும் இருக்கிறது. ஓர் அரசன் இறந்த பின்னர் அவனது உடலை எரிப்பதற்காக மூட்டப்பட்ட தீயில், இந்தப் பாதுகாவலர்கள் உட்புகுந்து தங்கள் உயிரை மாய்த்துக் கொண்டனர். இப்படி அரசனோடு அவர்கள் சேர்ந்து இறந்ததற்குக் காரணமும் சொன்னார்கள். இந்த உலகத்தில் அரசன் இருந்தபோது உதவியாக இருந்த இவர்கள் மேலுலகத்திலும் அரசனுக்கு உதவியாக இருக்கவே அரசனோடு சேர்ந்து இறந்தனர்.[68] அரசனின் முடிசூட்டு விழா நாளில் இந்தப் பாதுகாவலர்கள் அரசனுக்காகத் தயாரித்திருந்த உணவை உண்டனர். இதன்பின் அந்நாளில் அவர்கள் ஓர் உறுதி மொழியையும் எடுத்துக் கொண்டனர். அதாவது அரசன் இறந்தாலோ கொல்லப் பட்டாலோ அவனோடு சேர்ந்து தாங்களும் இறந்துவிடுவோம் என்பதே அவர்கள் அந்நாளில் எடுத்துக் கொண்ட உறுதி மொழியாகும்'.[69]

## வணிகர்கள்

பாண்டியப் பெருவேந்தர் காலத்து வணிகர்கள் பற்பல பொருட்களை விற்றனர். அப்பொருட்களில் குறிப்பிடத்தக்கவை உப்பு, நெல், அரிசி, பச்சைப்பருப்பு, ஆமணக்கு, பாக்கு, மிளகு, மஞ்சள், இஞ்சி, வெங்காயம், கடுகு, எள், இரும்பு, பஞ்சு, நூல், துணி, மெழுகு, தேன், வாசனைப் பொருட்கள், கால்நடைகள், குதிரைகள், நவரத்தினக் கற்கள், சந்தனம், அகில் ஆகியவை ஆகும். தாங்கள் விற்ற பொருட்களின் அடிப்படையில் வணிகர்கள் பற்பல பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தனர். துணி விற்ற வணிகர்கள் 'அறுவை வணிகர்கள்' என அழைக்கப்பட்டனர். தானியங்களை விற்றவர்கள் 'கூல வணிகர்கள்' எனப் பெயர் பெற்றனர். உப்பு வணிகர்களை 'உமணர்கள்' என அழைத்தனர். குதிரைகள் விற்ற வணிகர்கள் 'குதிரைச்செட்டிகள்' எனப் பெயர் பெற்றனர். எண்ணெய் விற்றவர்கள் 'செக்கு வணிகர்கள்' எனப்பட்டனர். முத்தும், மணிகளும், விற்றவர்கள் 'மணி வணிகர்கள்' எனப்பட்டனர். வெற்றிலை விற்றவர்கள் 'இலைவணிகர்' என்ற பெயர் பெற்றனர்.[70]

## குதிரைச் செட்டிகள்

பாண்டியப் பெருவேந்தர் காலத்துக் கல்வெட்டுகளில் குதிரைச் செட்டிகளைப் பற்றி ஏராளமான குறிப்புகள் உள்ளன.[71] இவர்களின் பெயரே இவர்கள் குதிரைகள் விற்றவர்கள் என்பதைத் தெளிவாக நமக்கு உணர்த்துகிறது. இவர்கள் அரேபியாவிலிருந்து குதிரைகளை இறக்குமதி செய்து விற்பனை செய்தனர். இக் குதிரைச் செட்டிகளுக்கு 'எட்டி' என்ற பட்டப் பெயரும் 'வணிகராதித்தன்' என்ற பட்டப்பெயரும் கொடுக்கப்பட்டன.[72]

## திசையாயிரத்து ஐந்நூற்றுவர்

'திசையாயிரத்து ஐந்நூற்றுவர்' என்ற சொற்றொடருக்குப் பலரும் பற்பல விளக்கங்கள் சொல்லியிருக்கிறார்கள். இச்சொற்றொடர் ஆயிரத்து ஐந்நூறு வியாபாரிகளைக் குறிக்குமெனக் கே.வி. சுப்பிரமணிய ஐயர் குறிப்பிடுகிறார்.[73] இச்சொற்றொடர் ஆயிரம் பகுதிகளைச் சார்ந்த ஐந்நூறு வியாபாரிகளைக் குறிப்பிடுகிறது என்கிறார் கே.ஏ. நீலகண்ட சாத்திரியார்.[74] இச்சொற்றொடர் பல நாடுகளில் வாழ்ந்த வியாபாரி களைக் குறிக்கும் என்கிறார் டி.என். சுப்பிரமணியம் என்ற வரலாற்று ஆசிரியர்.[75]

இராமநாதபுரம் மாவட்டம் பிரான்மலையில் காணப்படும் ஒரு கல்வெட்டு, திசையாயிரத்து ஐந்நூற்றுவர்களை 'ஐம்பொழில் பரமேசுவரியின் குழந்தைகள்' என்றும், 'பூமி தேவியின் குழந்தைகள்' என்றும் குறிப்பிடுகிறது.[76] மேலும் இக்கல்வெட்டு, இவர்கள் 18

பட்டினங்களிலும் 32 வளர்புரங்களிலும் 64 கடிகைத்தாவளங்களிலும் வாழ்ந்தனர் எனக் குறிப்பிடுகிறது. பட்டினம் என்பது கடற்கரையை ஒட்டிய நகரமாகும். வளர்புரம் என்பது வளர்ச்சியடைந்த பெரிய நகரத்தைக் குறிக்கும். கடிகைத்தாவளம்[77] என்பது வணிகர்களின் சபையைக் குறிக்கும். இந்தத் திசையாயிரத்து ஐந்நூற்றுவர்களுக்கு 'இராஜ்ஜிய பரிபாலகர்கள்' என்ற பட்டப் பெயர் இருந்ததாகவும் இக்கல்வெட்டு குறிப்பிடுகிறது. இவ்வியாபாரிகள் பாண்டிய நாட்டின் நிருவாகிகளாகவும் திகழ்ந்தனர் போலும்.

திசையாயிரத்து ஐந்நூற்றுவர் பிரிவில் பல உட்பிரிவுகள் இருந்ததாகப் பிரான்மலைக் கல்வெட்டு குறிப்பிடுகிறது. அந்த உட்பிரிவுகளின் பெயர்ப் பட்டியல் பின்வருமாறு :

1. திசைவழங்கு திசையாயிரத்து ஐந்நூற்றுவர்
2. கேரளசிங்க வளநாட்டுக் குலசேகரப் பட்டினத்து நகரத்தார்
3. நான்கு திசை சமஸ்தலோகப் பதினெண் விஷயத்தார்
4. துவராவதி நாட்டு நகரத்தார்
5. புறமலை (பிரான்மலை) நாட்டு நகரத்தார்
6. கொடும்பாளூர் மணிக்கிராமத்து நகரத்தார்
7. திருகோஷ்டியூர் மணி அம்பலத்து நகரத்தார்
8. கேரளசிங்க வளநாட்டு அழகபுரம் செழிய நாராயணபுரத்து நகரத்தார்
9. ஐம்பொழில் வளநாட்டுக் கல்வாயில் நாட்டுச் சுந்தர பாண்டியபுரம் நகரத்தார்
10. களவழிநாட்டு அழகை மாநகரம் செயம்கொண்டசோழப் பெருந்தெரு நகரத்தார்

பாண்டிய அரசர்கள் தங்களின் வியாபார வளர்ச்சிக்காகத் தங்கள் நாட்டிற்குத் திறமை மிக்க சில வியாபாரிகளை வரவழைத்துக் கொண்டனர் எனத் தர்ஸ்டன் தாம் எழுதியுள்ள 'தென்னிந்திய ஜாதிகளும் பழங்குடிகளும்' என்ற நூலில் குறிப்பிடுகிறார். கலியுக ஆண்டு 3808இல் சுந்தரபாண்டியன் என்ற பாண்டிய அரசன் ஒருவன் சோழ அரசனிடம் நல்ல வியாபாரிகளை அனுப்பும்படிக் கேட்டுக் கொண்டான்.[78] அவ்வேண்டுகோளுக்கு இணங்க, அச்சோழ அரசன் அனுப்பிய வணிகர்கள் பாண்டிய நாட்டில் தங்குவதற்கு அப்பாண்டிய அரசன் ஏற்பாடு செய்து கொடுத்தான். இப்படி வந்த வணிகர்கள் வைகை நதிக்கு வடக்கேயும், பிரான்மலைக்குக் கிழக்கேயும், வெள்ளாற்றிற்குத் தெற்கேயும் குடியேறினர். இப்படிக் குடியேறி வந்த வியாபாரிகள் தற்போது செட்டி நாட்டில் வாழும் நகரத்தார்களே ஆவர். ஏனெனில், பிரான்மலைக் கல்வெட்டு குறிப்பிடும் பத்துப் பிரிவு நகரத்தார்கள் அதே

பெயர்களுடன் தற்போதும் திகழ்கிறார்கள். நகரத்தார்கள் தாங்கள் எழுதிக் கொள்ளும் திருமண ஒப்பந்தங்களில் இந்தப் பத்துப் பிரிவுப் பெயர்களையும் இன்றளவும் குறிப்பிடுகின்றனர்.

பிள்ளையார்ப்பட்டியில் கிடைக்கும் முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியனின் கல்வெட்டு, நகரத்தார்களில் ஒரு பிரிவினராகிய இராச நாராயணபுர நகரத்தார் குடியிருப்பைப் பற்றிச் சொல்கிறது.[79] இந்த நகரத்தார்கள் எண்காரைக்குடி.[80] என்ற ஊரில், ஐந்நூற்றுவர் பெருந்தெருவில் வாழ்ந்து வந்தனர். இவர்கள் மருதங் குடியில் 4 மா நிலம் விலைக்கு வாங்கி இராசநாராயணபுரம் என்ற புதிய குடியேற்றத்தைக் கி.பி. 13ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் ஏற்படுத்தியதை இக்கல்வெட்டு குறிப்பிடுகிறது. இந்தக் கல்வெட்டு சோழநாட்டு வணிகர்கள், பாண்டிய நாட்டில் குடியேறினார்கள் என்ற கருத்தை வலியுறுத்துவதற்கும் ஓர் ஆதாரமாக அமைந்துள்ளது.

## வணிகர்களின் மெய்க்கீர்த்தி

முதலாம் மாறவர்மன் குலசேகரனின் நான்காம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு, வாணிய நகரத்தார்களின் மெய்க்கீர்த்தியைக் குறிப்பிடுகிறது.[81] இந்த மெய்க்கீர்த்தியிலிருந்து இந்த வாணிய நகரத்தார்களின் மலை 'கிஸ்கிந்த மலை' என்றும், இவர்களின் நதி 'பம்பை நதி' என்றும், இவர்களின் கொடி 'கருடக் கொடி' என்றும், இவர்களின் யானை 'ஜெயவாரணம்' என்றும், இவர்களின் குதிரை 'கலிமாருடம்' என்றும், இவர்களின் தேர் 'கமலக்கண்டிகை' என்றும், இவர்களின் மாலை 'தோன்றிமாலை 'என்றும் தெரிந்து கொள்கிறோம். மேலும் இக் கல்வெட்டு வாணிய நகரத்தார்கள் மீது வரி விதிப்பதற்கு இவர்களின் வாணிகக் குழுவிற்கு உரிமை இருந்தது என்றும் அந்த வரியைச் செலுத்தாதவர்களின் வீடுகளில் புகுந்து அவர்களது மட்பாண்டங்களை உடைத்தும், வெண்கலப் பாத்திரங்களைப் பறிமுதல் செய்தும் வரியை வசூலிப்பதற்கு இந்த வாணிக நகரத்தார் குழுவிற்கு உரிமை இருந்தது என்றும் சொல்கிறது.

## வணிகர்களின் வாழ்விடங்கள்

வணிகர்கள் வாழ்ந்த இடங்கள் தாவளம்,[82] நகரம்,[83] புரம்,[84] பட்டினம்[85] என அழைக்கப்பட்டன. இவர்கள் வாழ்ந்த தெருக்களின் பெயர்கள் கல்வெட்டுகளில் குறிப்பிடப்பட்டுள்ளன. அவற்றில் சில பின்வருமாறு : நியாய பரிபாலனப் பெருந்தெரு.[86] உலகுய்யவந்த பாண்டியப் பெருந்தெரு.[87] அரச நாராயணப் பெருந்தெரு.[88] ஐந்நூற்றுவப் பெருந்தெரு.[89] செயங்கொண்ட சோழப்பெருந்தெரு[90] முதலியன.

பாண்டியப் பெருவேந்தர் காலத்து வணிகர்கள் தங்கள் புதல்வர்களுக்கு நாயன்மார்களின் பெயர்களைச் சூட்டியிருக்கிறார்கள்.

சேது நாராயணபுரத்து வியாபாரி ஒருவர் ஞானசம்பந்தர் என்ற பெயர் பெற்றிருந்தார்.[91] பாளைநல்லூர் வியாபாரி ஒருவர் சுந்தரர் என்ற பெயர் பெற்றிருந்தார். இப்பெயர்களிலிருந்து வணிகர்களின் பக்தியும், இவர்கள் சைவ நாயன்மார்கள் மீது கொண்டிருந்த மரியாதையும் தெரியவருகிறது.

சோழ மார்த்தாண்ட சதுர்வேதி மங்கலத்தில் இருந்த சிவன் கோயில் ஆயிரத்து ஐந்நூற்றீச்வரம் உடையார் கோயில் என அழைக்கப் பட்டது. பெருவாயில் நாட்டில் திருவேங்க வாயிலில் இருந்த விஷ்ணு கோயில் நாற்பத்தெண்ணாயிர விண்ணகரம் என அழைக்கப்பட்டது. இந்தக் கோயில்கள் வணிகர்களின் குழுப்பெயர்களில் அமைந் துள்ளமையினால் இவற்றை வணிகர்களே கட்டியிருக்க வேண்டும் என்ற முடிவுக்கு வரலாம். வணிகர்களில் பெரும்பான்மையானவர்கள் சைவ, வைணவப் பிரிவினர்களாக இருந்தனர். சிலர் சமண மதத்தைப் பின்பற்றியிருக்கிறார்கள்.[92] வணிகர்கள் செய்த சமயத்தொண்டு அளவற்றவை. அவற்றுள் சிலவற்றைக் கீழே காண்போம்:

இராமநாதபுரம் மாவட்டம் தீத்தாண்டதானபுரம் என்ற ஊரில் காணப்படும் சடையவர்மன் வீரபாண்டியனின் (கி.பி. 1253) கல்வெட்டு, வணிகர்கள் தாங்கள் விற்பனை செய்யும் பொருட்களின் மீது ஒரு சிறிய வரியை விதித்து அதன் மூலம் கிடைத்த பணத்தை மேற்படி ஊரின் சிவன் கோயில் திருப்பணி செய்யப் பயன்படுத்தினர் எனக் குறிப்பிடுகிறது. இந்த வரியைக் கொடுப்பதற்கு வளஞ்சியர், அஞ்சுவண்ணம், மணிக்கிராமம் ஆகிய வணிகப் பிரிவுகள் ஒப்புக்கொண்டதாகவும் இக்கல்வெட்டு குறிப்பிடுகிறது.[93]

சடையவர்மன் வீரபாண்டியனின் மற்றொரு கல்வெட்டு காமரசவல்லி சதுர்வேதி மங்கலத்திலிருந்த சிவன்கோயில் திருப்பணிக்கு வணிகர்கள் பணம் சேர்த்துக் கொடுத்தது பற்றிச் சொல்கிறது. பெண்கள் ஆடைப் பொதி ஒன்றுக்குக் கால் பணமும், மிளகுப் பொதி ஒன்றுக்குக் கால் பணமும், ஒரு 'பொன்' தங்கக் கட்டிக்குக் கால் பணமும், ஒரு பொதி அரிசிக்கு இரண்டு காசும், ஒரு பொதி நெல்லுக்கு ஒரு காசும் வரி விதித்துக் கிடைத்த பணத்தை இக்கோயில் திருப்பணிக்குப் பயன்படுத்தினர் எனச் சொல்கிறது. மேலே குறிப்பிடப்பட்டுள்ள இரண்டு கல்வெட்டுகளிலிருந்து வணிகர்கள் ஒன்றாகச் சேர்ந்து முயற்சி எடுத்துக் கோயில் திருப்பணிகள் செய்தார்கள் என்பது தெளிவாகிறது.

வணிகர்கள் பாண்டிய நாட்டிலிருந்த பல கோயில்களில் கடவுள் திருவுருவங்களைப் பிரதிட்டை செய்திருக்கிறார்கள்.[94] மேலும் இவர்கள் மடங்களை ஏற்படுத்தி அவற்றில் துறவிகளுக்கும், பக்தர்களுக்கும் திருவிழாக் காலங்களில் இலவச உணவு வழங்கியிருக்கிறார்கள்.[95] இவர்கள் கோயிலுக்கு நன்கொடையாகக் கிடைத்த நிலங்களைப் பெற்றுக் கொண்டு அதற்கு ஈடாகக் கோயில் கடவுள் சிலைகளுக்குத் தேவையான பரிவட்டங்களை வழங்கியிருக்கிறார்கள்.[96]

## அறிஞர்களுக்கு ஆதரவு

வணிகர்கள், கல்வியில் சிறந்த பிராமணர்களுக்கு ஆதரவு கொடுத்திருக்கிறார்கள். சடையவர்மன் வீரபாண்டியனின் (கி.பி. 1253) இரண்டு கல்வெட்டுகள் மலைமண்டலத்தைச் சார்ந்த துப்பநாயக்கன் என்ற குதிரை வியாபாரி திருவரங்கத்தில் ஓர் அக்ரகாரத்தை ஏற்படுத்தி அதில் பிராமணர்களைக் குடியேற்றினான் எனச் சொல்கிறது. இராமநாதபுரம் மாவட்டம் தேவதானம் என்ற ஊரில் கிடைத்த கல்வெட்டு குலசேகரபுரத்து நகரத்தார்கள் திருவுடையதேவன் என்பவருக்குப் 'புலமைவிருத்தி'யாக நிலத்தானம் செய்ததைக் குறிப்பிடுகிறது.[97] அறிஞர்களுக்கு அவர்களின் அறிவுத் திறத்தைப் பாராட்டிக் கொடுக்கப்படும் தானம் 'புலமைவிருத்தி' ஆகும்.[98]

## வணிகர்களிடையே ஏற்பட்ட தகராறு

சேலம் மாவட்டம் ஆரகலூரில் கிடைத்த மூன்றாம் சடையவர்மன் சுந்தரபாண்டியனின் (கி.பி. 1303) கல்வெட்டு வாணிய நகரத்தார் களுக்கும், செட்டிகளுக்கும் இடையே நடந்த தகராறு பற்றிக் குறிப்பிடுகிறது.[99] ஆரகலூர் காமேசுவரன் கோயிலில் திருவிழாக்கள் நடத்தும் உரிமை அவ்வூரைச் சார்ந்த செட்டிகளுக்குக் கொடுக்கப் பட்டிருந்தது. அந்தச் செட்டிகள் திருவிழாக்கள் நடத்துவதைக் குறை கூறி அவர்களோடு வாணிய நகரத்தார் தகராறுகள் செய்தனர். இதனால் அக்கோயில் நிருவாகத்தினர் அத்திருவிழாக்கள் நடத்தும் உரிமையைச் செட்டிகளிடமிருந்து வாணிய நகரத்தாருக்கு மாற்றிக் கொடுத்தனர். சில ஆண்டுகளே வாணிய நகரத்தார் அவ்விழாக்களை முறைப்படி நடத்தினர். பின்னர் அவர்கள் அத்திருவிழாக்கள் நடத்துவதை நிறுத்திவிட்டனர். உடனே செட்டிகள், வாணிய நகரத்தாரின் இந்தப் போக்கைக் கடுமையாகக் கண்டித்தனர். மேலும் அவர்கள் இத்திருவிழாக்கள் நடத்தும் உரிமை தங்களுக்கே மீண்டும் கொடுக்கப்பட வேண்டும் என வாதாடினர். ஆகவே கோயில் நிருவாகம் செட்டிகளுக்கே அந்த உரிமையை வாங்கிக் கொடுத்தது. அவர்கள் திருவிழாக்களைச் சிறப்பாக எதிர்காலத்தில் நடத்தத் 'தலைவாய்' என்ற கிராமத்தையும் தானமாக அளித்தது.[100]

## நீதி நிருவாகத்தில் வணிகர்கள்

நீதி நிருவாகத்திலும் வணிகர்கள் முக்கியப் பங்கு வகித்தனர். எடுத்துக்காட்டாக இரண்டாயிரவேலிப்பற்று என்ற நகரத்தைச் சார்ந்த பிராமணர்கள் தங்களது கடமையைச் செய்யாதபோது, இதுபற்றிய வழக்கை விசாரித்து அவர்களுக்குத் தண்டனை கொடுத்த நீதிக் குழுவில் வணிகர்களும் இடம் பெற்றிருந்தனர்.[101] இவ்வாறு வணிகர்கள் பாண்டியப் பெருவேந்தர் காலத்தில் பொருளாதாரத் துறையில் மட்டுமன்றி நீதித்துறையிலும் முக்கியப் பங்கு ஏற்றிருந்தனர்.

## வேளாளர்கள்

பிராமணர் அல்லாதவர்களில் வேளாளர்கள் மிகுந்த செல்வாக்குப் பெற்றுத் திகழ்ந்தனர். வெள்ளத்தைக் கட்டுப்படுத்தி அதனை விவசாயத்திற்குப் பயன்படுத்திக் கொண்டமையால் (வெள்ளத்தை ஆள்பவர்கள்) இவர்கள் வெள்ளாளர்கள் என்றும் அழைக்கப்பட்டனர். இவர்களில் பெரும்பான்மையானவர்கள் உழவையே முக்கியத் தொழிலாகக் கொண்டிருந்தனர். சில வேளாளர்கள் கால்நடை வளர்ப்பிலும் நெசவுத் தொழிலிலும் ஈடுபட்டிருந்தனர். வேறுசில வேளாளர்கள் அரசனின் அதிகாரிகளாகவும், படைத்தலைவர்களாகவும் இருந்தனர். உதய திவாகர மூவேந்த வேளான் என்பவன் முதலாம் மாறவர்மன் சுந்தர பாண்டியனின் காலத்தில் அரசாங்க அதிகாரியாகத் திகழ்ந்தான்.[102] வேளாளர் குலத்தைச் சார்ந்த தவப்பெருமாள்,[103] நீலகங்கராயன்[104] ஆகியோர் முறையே முதலாம் சடையவர்மன் சுந்தரபாண்டியன், மூன்றாம் மாறவர்மன் விக்கிரம பாண்டியன் ஆகியோர் அரண்மனையில் அதிகாரிகளாகப் பணிபுரிந்தனர். திருவண்ணாமலை அருணாசலேச்வரர் கோயிலில் காணப்படும் ஒரு கல்வெட்டு வேளாளர் குலத்தைச் சார்ந்த இருவர் படைத்தலைவர்களாக இருந்தனர் எனக் குறிப்பிடுகிறது.[105] தஞ்சைவாணன்கோவை என்ற நூலின் தலைவன் தஞ்சைவாணன் முதலாம் மாறவர்மன் குலசேகரனின் படைத்தலைவனாக இருந்தான். இந்தத் தஞ்சைவாணன் வேளாளர் குலத்தைச் சார்ந்தவன் எனத் தஞ்சைவாணன் கோவையின் பாடல் ஒன்று குறிப்பிடுகிறது.[106] இவன் தனது அரசனின் சார்பில் போர்க்களம் சென்று சோழர்களையும் பாண்டியர்களையும் தோற்கடித்தான்.[107] தஞ்சை வாணன் கோவையின் ஆசிரியரான பொய்யாமொழிப் புலவரும் வேளாளர் குலத்தைச் சார்ந்தவரே ஆவார்.[108]

## வேளாளர்களின் சபை

வேளாளர்களின் சபை 'சித்திரமேழி' என அழைக்கப்பட்டது. மேழி என்ற தமிழ்ச் சொல்லிற்குக் கலப்பை என்பது பொருளாகும். இந்தச் சபை நிருவாகம் செய்த பகுதி சித்திரமேழி பெரிய நாடு எனப் பெயர் பெற்றிருந்தது. இந்தச் சபைக்கு உட்பட்டிருந்த கிராமங்களின் பெயர்களோடு சித்திரமேழி நல்லூர்,[109] சித்திரமேழி சதுர்வேதி மங்கலம்[110] என்ற சொற்கள் இணைந்து காணப்படுகின்றன. சித்திரமேழி சபையின் உறுப்பினர்கள் 'சித்திரமேழி பெரிய நாட்டார்', 'பூமிபுத்திரர்', 'நாட்டு மக்கள்' என அழைக்கப்பட்டனர்.[111] இச்சபை தானியங்களின் விளைச்சல் அவற்றின் ஏற்றுமதி, இறக்குமதி ஆகியவற்றைக் கண்காணித்தது. வேளாளர்கள் பல சமயப் பணிகளையும் செய்திருக்கிறார்கள். திருச்சி மாவட்டம் திருப்பைஞ்ஞிலி சிவன் கோயிலில் காணப்படும் முதலாம் மாறவர்மன் குலசேகரனின் 27ஆம்

ஆட்சியாண்டுக் கல்வெட்டு, வேளாளர்கள் தங்கள் இனத்தைச் சார்ந்த மக்களிடமிருந்து ஒரு சிறப்பு வரியை வசூலித்து, அவ்வூர்ச் சிவன் கோயிலில் முடிவடையாதிருந்த கோபுரம் கட்டும் திருப்பணியை முற்றுப் பெறச் செய்தனர் எனத் தெரிவிக்கின்றது.[112]

## வேளாளர்களின் மெய்க்கீர்த்தி

சில கல்வெட்டுகளின் தொடக்கத்தில் வேளாளர்களின் மெய்க்கீர்த்தி காணப்படுகிறது.[113] இம்மெய்க்கீர்த்தியில் வேளாளர்கள் ஐம்பொழில் பரமேசுவரியின் புதல்வர்கள் என்றும் பூமிபுத்திரர்கள் என்றும் குறிப்பிடப்பட்டுள்ளனர். இவர்கள் கலப்பையைக் கடவுளாக வழிபட்டனர். அதையே நீட்டல் அளவையாகவும் பயன்படுத்தினர். இவர்கள் நிலங்களை நிருவகிப்பதில் அரசருக்கு உதவியாக இருந்தனர். பாண்டிய மன்னன் வீரபாண்டியன் (கி.பி.1253) பூமிபுத்திரன் என்ற பட்டப்பெயரைப் பெற்றிருந்தான். ஆகவே இவன் வேளாளர்களின் ஆதரவாளனாக இருந்து இப்பட்டத்தைப் பெற்றான் எனக் கொள்ளலாம்.[114]

## கம்மாளர்

கம்மாளர் ஐந்து உட்பிரிவினராக இருந்தனர். 1. கொல்லன், 2. தச்சன், 3. தட்டான், 4. கன்னான், 5. கல்தச்சன்.[115] இந்தக் கம்மாளர்கள் சத்திரிய ஆண்களுக்கும் வைசியப் பெண்களுக்கும் பிறந்தவர்கள் ஆவர்.[116] இந்த ஐந்து பிரிவினரும் விசுவகர்மாவின் ஐந்து புதல்வர் களாகிய மனு, மாயன், சில்பன், திவித்தரன், தெய்வகன் ஆகியோரின் வழிவந்தவர்களாவர்.[117] கம்மாளர்கள் கோயில் கட்டும் பணியில் ஈடுபட்டிருந்தனர். கோபுரங்கள் கட்டுதல், சிலைகள் செய்தல், தேர்கள் செய்தல், ஆபரணங்கள் செய்தல், உலோகப் பாத்திரங்கள் செய்தல் ஆகிய பணிகளை இவர்கள் கோயில்களில் செய்தனர். இவர்கள் பாஞ்சால தேசத்திலிருந்து வந்தமையாலும், ஐந்து தொழில்களை மேற்கொண்டதாலும் பாஞ்சாலத்தார் என்றும் அஞ்சு பாஞ்சாலத்தார் என்றும் அழைக்கப்பட்டனர். கி.பி. 12ஆம் நூற்றாண்டில் இவர்களின் கோயில் பணியைப் பாராட்டி இவர்களுக்குச் சமுதாயத்தில் உயர்ந்த மதிப்பு அளிக்கப்பட்டது. இவர்கள் இடங்கை வகுப்பைச் சேர்ந்தவர் களாகத் திகழ்ந்தனர்.[118]

## கம்மாளர்களின் மெய்க்கீர்த்தியும், கொடியும்

கம்மாளர்கள், ஆச்சாரியர்கள் என்ற பட்டப் பெயரைப் பெற்றிருந்தனர். இவர்கள் பூணூல் அணிந்து கொள்ள உரிமை பெற்றிருந்தனர். புதுக்கோட்டை மாவட்டம் ஆலங்குடியில் காணப்படும் கல்வெட்டு. இவர்களுக்கென்று தனி மெய்க்கீர்த்தி இருந்தது என்றும் இவர்களின் கொடியில் மீன் பொறிக்கப்பட்டிருந்தது என்றும்

சொல்கிறது.[119] கல் தச்சர்களும் கன்னாரர்களும் கோயில்களிலும், அரண்மனை களிலும் பணிபுரிந்தனர். இவர்கள் அரசனின் ஆணைகளைச் செம்பிலும், கல்லிலும் வெட்டும் பணியைச் செய்தனர். இப்பணியை இவர்கள் பரம்பரை அடிப்படையில் பெற்றனர்.[120] இவர்கள் வெட்டிய கல்வெட்டுகளில் பிழைகள் இருப்பதை நோக்கும்போது இவர்கள் அதிகம் படித்தவர்களாக இல்லை என்பது தெளிவாகிறது. ஒருங்கிணைந்த தென்னார்க்காடு மாவட்டம், மேலதாயனூர்க் கல்வெட்டு நில விற்பனை பற்றிக் குறிப்பிடுகிறது. இக்கல்வெட்டில் ஏராளமான எழுத்துப்பிழைகள் இருக்கின்றன. இந்த மாவட்டத்தைச் சார்ந்த நொடியூர்க் கல்வெட்டு சடையகேசரிவர்மன் என்ற திரிபுவன சக்கரவர்த்தி வீரபாண்டிய தேவன், சிதம்பரத்தில் (பெரும்பற்றப்புலியூரில்) வீராபிடேகம் செய்து கொண்டான் எனச் சொல்கிறது. இக்கல்வெட்டில் சடையவர்மன் என்று செதுக்குவதற்குப் பதிலாகச் சடையகேசரிவர்மன் எனத் தவறாகச் செதுக்கியிருக்கிறார்கள்.

கம்மாளர்கள் ஏராளமான சமயப் பணிகளையும் செய்திருக் கிறார்கள். புதுக்கோட்டை மாவட்டம், உறையூர் அகத்தீசுவரன் கோயிலில் திருவிழா நடத்துவதற்கு விருதராாசபயங்கர வளநாட்டுக் கம்மாளர்கள் நிலத்தானம் செய்திருக்கிறார்கள். திருநெல்வேலி நெல்லையப்பர் கோயிலில் இருந்த, செய்யநம்பிராட்டி மடத்திற்குக் கம்மாளர்கள் நன்கொடையாகப் பணம் கொடுத்திருக்கிறார்கள். இரண்டாம் மாறவர்மன் சுந்தர பாண்டியன் காலத்தில் இக்கோயிலில் பணிபுரிந்த கல் தச்சர்கள் தம் வருமானத்தில் பத்தில் ஒரு பகுதியை இந்தச் செய்யநம்பிராட்டி மடத்திற்குக் கொடுத்தனர் என ஒரு கல்வெட்டு சொல்கிறது. இக்கோயிலில் காணப்படும் மற்றொரு கல்வெட்டு இக்கோயிலைச் சார்ந்த சிற்ப ஆசாரிகள் தங்கள் வருமானத்தில் எட்டில் ஒரு பகுதியைச் செய்யநம்பிராட்டி மடத்தின் பராமரிப்பிற்கு நன்கொடையாகக் கொடுத்தனர் எனக் குறிப்பிடுகிறது. இவ்விரு கல்வெட்டுகளும் கம்மாளர்களின் அறச் சிந்தனையை நமக்குத் தெரியப்படுத்துகின்றன.

## கைக்கோளர்கள்

கைக்கோளர்கள் என்பவர்கள் நெசவுத் தொழிலைச் செய்தார்கள். 'கை' என்ற சொல்லும் 'கோள்' என்ற சொல்லும் சேர்ந்து 'கைக்கோள்' என்ற வார்த்தை உருவாயிற்று. 'கோள்' என்பது இங்குத் தறியில் குறுக்கு நூலிழையைத் தாங்கிச் செல்லும் கருவியைக் குறிக்கும். கைக்கோளர் என்ற சொல்லே இவர்களின் தொழில், நெசவுத் தொழில் என்பதை உறுதி செய்கிறது.[121]

சில கைக்கோளர்கள், கோயில் பணியாளர்களாக இருந்திருக் கிறார்கள்..[122] இவர்கள் பொதுவாகக் கோயிலைச் சுற்றியுள்ள பகுதியில்

ஒரு தனிக்குடியிருப்பில் வாழ்ந்திருக்கிறார்கள். சிதம்பரத்தில் காணப்படும் மாறவர்மன் வீரபாண்டியனின் கல்வெட்டு கைக்கோளர்கள் சிதம்பரம் நகரத்தில் தெரியவரநின்ற பெருமாள்புரம்[123] என்ற தனிக் குடியிருப்பில் வாழ்ந்தனர் எனக் குறிப்பிடுகிறது. சிதம்பரத்தில் காணப்படும் மற்றொரு கல்வெட்டும் கைக்கோளர்களைப் பற்றிக் குறிப்பிடுகிறது. இக்கல்வெட்டு, விக்கிரம பாண்டியனால் (கி.பி. 1334) வெளியிடப்பட்டதாகும். இக்கல்வெட்டு, கைக்கோளர்கள் தாங்கள் வாழ்வதற்குத் தனியாக ஒரு குடியிருப்புப் பகுதியைப் பெற்றுக் கொண்டு அதற்கு ஈடாக ஆண்டுதோறும் சிவகாமி அம்மனுக்குத் திருவிழாவன்று நான்கு புடவைகளைக் கொடுத்தனர். மேலும் அவர்கள் திருஞான சம்பந்தர் சிற்றாலயத்திற்கு ஆண்டுதோறும் ஐந்து சிற்றாடைகள் கொடுத்தனர்[124] என்றும் அறிவிக்கிறது. கைக்கோளர்களுக்குச் சிறப்புச் சலுகைகள் கொடுக்கப்பட்டிருந்தன. திருவிழாக் காலங்களில் கோயில் களில் இவர்களுக்கு முதல் பிரசாதம் வழங்கப்பட்டது.[125]

## கைக்கோளர் பெரும்படை

கைக்கோளர் பெரும்படை என்ற சொற்றொடர் தென்னிந்தியக் கல்வெட்டுகளில் பல இடங்களில் காணப்படுகின்றது. இந்தச் சொற்றொடர் கைக்கோளர்களின் தனிப்பட்ட படையைக் குறிக்கிறது என வரலாற்று ஆசிரியர்கள் நீண்ட காலமாகச் சொல்லிக்கொண்டிருந்தனர். தற்போது கல்வெட்டுகளில் இந்தச் சொற்றொடர் வருகின்ற இடங்களை நுணுகி ஆராய்ந்து, இது அரசனின் நிரந்தரப் படையைக் குறிக்கும் என்று வரலாற்று ஆசிரியர்கள் ஒருமனதாக ஒப்புக்கொண்டிருக்கின்றனர்.[126]

## கைக்கோளர்களின் சமயப்பணிகள்

கைக்கோளர்கள், கூட்டாகவும் தனியாகவும் கோயில்களுக்குப் பற்பல அறங்களைச் செய்திருக்கிறார்கள். ஒருங்கிணைந்த தென்னார்க்காடு மாவட்டம் ஸ்ரீமுஷ்ணத்தில் வாழ்ந்த கைக்கோளர்கள் தாங்கள் வைத்திருந்த ஒரு தறிக்குக் கட்டணம் நிர்ணயித்து அதை வசூலித்து அப்பணத்தை ஸ்ரீமுஷ்ணம் விஷ்ணு கோயில் திருப்பணிக்கும், பூசைகளுக்கும் பயன்படுத்தினர்.[127] ஒருங்கிணைந்த திருச்சி மாவட்டம், திருமழபாடியைச் சார்ந்த கைக்கோளனாகிய இராசசிங்கதேவன் என்பவன் இவ்வூர்ச் சிவன் கோயிலுக்கு நிலம் கொடுத்தான். மேலும், இவன் இக்கோயில் சிவனுக்கு அபிடேகம் செய்ய நாள்தோறும் இரண்டு குடங்கள் காவிரி தண்ணீர் கொண்டுவர ஏற்பாடு செய்தான்.[128] கருணாகரன் என்ற மற்றொரு கைக்கோளன் தஞ்சை மாவட்டத்திலுள்ள மணக்கால் என்ற ஊரிலிருந்த சிவன் கோயிலில் சிவன், பார்வதி, பிள்ளையார் ஆகிய திருவுருவங்களை அமைத்து அவற்றின் வழிபாட்டிற்கு ஏற்பாடு செய்தான்.[129] இவ்வாறு கைக்கோளர்கள் சமயப்பணிகளிலும் தங்களை ஈடுபடுத்திக் கொண்டிருந்தனர்.

## இடையர்கள்

பாண்டியப் பேரரசுக் காலத்தில் இடையர்கள் கோன், கோனார், மன்றாடி என அழைக்கப்பட்டனர். இவர்கள் தனிக் குடியிருப்புகளில் வாழ்ந்தனர். அக்குடியிருப்புகள் ஆயர் பாடி, ஆய்க்குடி, துவாரபதி என அழைக்கப்பட்டன.[130] கால்நடை வளர்ப்பே இவர்களின் முக்கியத் தொழிலாக இருந்தது. இடையர் குல ஆண்கள் ஆடு மாடுகளை மேய்ச்சலுக்கு ஓட்டிச் சென்றனர். இடையர் குலப் பெண்கள் தயிர், வெண்ணெய், நெய் ஆகியவற்றைத் தயார் செய்து தங்கள் பகுதியிலும், அதைச் சுற்றியுள்ள பகுதிகளிலும் விற்றனர். சில இடையர்கள் கோயிலுக்கு நன்கொடையாகக் கொடுக்கப்பட்ட பசுக்களைக் குத்தகை முறையில் பெற்றுக்கொண்டு அதற்கு ஈடாகக் கோயிலில் விளக்கெரிக்கத் தேவையான நெய்யைக் கொடுத்தனர்.[131]

ஒருங்கிணைந்த வடார்க்காடு மாவட்டம், திருவத்தியூரில் காணப்படும் முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியனின் கல்வெட்டு, இடையர் குலத்தினரின் மெய்க்கீர்த்தியைக் குறிப்பிடுகிறது. இம்மெய்க்கீர்த்தியில் இடையர்கள் 'நந்தபுத்திரர்கள்' எனக் குறிப்பிடப்பட்டுள்ளனர்.[132] இவர்கள் எல்லோரும் தங்களுக்குள் ஓர் உடன்பாடு செய்து கொண்டு, திருவத்தியூர் சிவன் கோயிலுக்குத் தாங்கள் வைத்திருந்த 'திரம்' ஒன்றுக்கு ஓர் ஆடு, ஒரு பசு, ஓர் எருமை என்ற விகிதத்தில் கொடுத்தனர். 80 ஆடுகளும் 80 பசுக்களும் 80 எருமைகளும் கொண்ட கால்நடைத் தொகுதி ஒரு 'திரம்' என அழைக்கப்பட்டது. இடையர்கள் தனிப்பட்ட முறையிலும் கோயில் திருப்பணிகளுக்கு நிலம், பசு, பணம் ஆகியவற்றை நன்கொடையாகக் கொடுத்திருக்கிறார்கள்.[133]

## பறையர்கள்

பறையர் என்ற சொல் 'பறை' என்ற வேர்ச் சொல்லிலிருந்து வந்தது. பறையர்களின் முக்கியத் தொழிலாகப் பறை கொட்டுதல் இருந்தது. கோயில் திருவிழாக்களிலும் இந்துக்களின் குடும்பங்களிலும் நடைபெற்ற இன்ப துன்ப நிகழ்ச்சிகளின் போதும் பறை கொட்டும் வழக்கம் இருந்தது.

அரசின் ஆணைகளை இவர்களே பறையொலி எழுப்பி மக்களுக்குத் தெரிவித்தனர். இவர்கள் கோயில்களில் நிரந்தரப் பணியாளர்களாக நியமிக்கப்பட்டிருந்தனர். பறையர்கள் அனைவருமே பறை கொட்டும் தொழிலில் ஈடுபட்டிருந்தனர் எனச் சொல்லமுடியாது. பறையர்களில் சிலர் விவசாயத் தொழிலாளர்களாகவும் வீட்டு வேலைக்காரர்களாகவும் இருந்தனர். வேறு சில பறையர்கள் சடலங்களுக்குப் புதைகுழி வெட்டுதல், வேட்டையாடுதல், மட்பாண்டங்கள் செய்தல், துப்புரவு செய்தல், காவல் பணி செய்தல் ஆகிய பணிகளைச் செய்து வந்தனர்.[134] பறையர்கள் தனிக்

குடியிருப்புகளில் வாழ்ந்தனர். அக்குடியிருப்புகள் பறைச்சேரிகள் என்றும் பறையர் குடியிருப்பு என்றும் அழைக்கப்பட்டன.[135] முதலாம் சடையவர்மன் சுந்தரபாண்டியனின் கல்வெட்டு பாண்டிய அரசியின் பெயரில் 'புவனமுழுதுடையாள் சேரி' என்ற பறையர் குடியிருப்பு இருந்ததைக் குறிப்பிடுகிறது[136] சேரி என்ற சொல் அக்காலத்தில் ஒவ்வோர் இன மக்கள் குடியிருந்த பகுதியைக் குறிக்கப் பயன்பட்டிருக்கிறது.[137] இப்பாண்டிய அரசனின் மற்றொரு கல்வெட்டு வணிகர்கள், குன்னூற்றுவன்சேரியில் வாழ்ந்ததாகக் குறிப்பிடுகிறது.[138]

பறையர்கள் பாண்டியப் பேரரசுக் காலத்தில் நிருவாகத்தில் முக்கியப் பங்கு வகித்திருக்கிறார்கள். முதலாம் மாறவர்மன் குலசேகரனின் காலத்தில் நில விற்பனை ஆவணத்தில் அப்போது கிராம அதிகாரிகளாக இருந்த பறையர்கள் கையெழுத்திட்டிருக்கிறார்கள். பெரிய நாட்டுப் பறையன், காண நாட்டுப் பறையன், அரசர் மிகாமப்பறையன், அகலங்கப் பறையன் ஆகியோர் இவ்வாவணத்தில் கையெழுத்து இட்டிருக்கிறார்கள். இதிலிருந்து பறையர்களில் சிலர் நிருவாகப் பொறுப்பில் இருந்தனர் என்பதும் அவர்கள் படிப்பறிவு உடையர்களாகவும் இருந்தனர் என்பதும் புலனாகிறது.[139] சில பறையர்கள் படிப்பறிவு அற்றவர்களாக இருந்தனர் என்பதற்கும் கல்வெட்டு ஆதாரம் உள்ளது. ஒரு சில ஆவணங்களில் படிப்பறிவு அற்ற பறையர்களுக்காக அக்கிராமத்தின் கணக்கர் கையெழுத்து இட்டிருக்கிறார்.[140]

குடும்ப நிகழ்ச்சிகளுக்குப் பறை கொட்டப் பறையர்கள் மறுத்த போது பறையர்களுக்கும் மற்றவர்களுக்கும் தகராறு ஏற்பட்டிருக்கிறது. அத்தகராறுகளை அரசன் தனது அதிகாரிகள் மூலமாகத் தீர்த்து வைத்திருக்கிறான். வீரபாண்டியன் காலத்தில் திருத்தியூர் முட்டத்தில் இருந்த 24 கிராம மக்களுக்கும் அப்பகுதியைச் சார்ந்த பறையர்களுக்கு மிடையே தகராறு ஏற்பட்டது. இந்தத் தகராறை அரசனின் அதிகாரியாகிய காங்கேயன் விசாரித்துத் தீர்த்து வைத்தான். காங்கேயன் முன்னிலையில் செய்து கொள்ளப்பட்ட உடன்படிக்கையின்படிப் பறையர்கள் இக்கிராம மக்களுக்குப் பறை கொட்ட ஒப்புக் கொண்டனர். இப்பணிக்குச் சம்பளமாக இக்கிராமத்தின் ஒவ்வொரு குடும்பத்தினரும் பறையர்களுக்கு ஆண்டு ஒன்றுக்கு ஒருகலமும் ஒரு தூணியும் அளவுள்ள நெல் கொடுக்க ஒப்புக்கொண்டனர்.[141]

### பள்ளிகள்

பள்ளிகள் தங்களைச் சத்திரியர் குலத்தைச் சார்ந்தவர்கள் எனச் சொல்லிக் கொண்டனர். இவர்கள் தங்களைத் தென் கேரள நாட்டை ஆண்ட குலசேகர ஆழ்வாரின் வழித்தோன்றல்கள் எனக் கூறிக் கொண்டனர்.[142] இவர்களும் தனிக் குடியிருப்புகளில் வாழ்ந்தனர்.

புதுக்கோட்டை மாவட்டம் உறையூரில் சடையவர்மன் வீர பாண்டியனின் கல்வெட்டு (கி.பி. 1259) பள்ளிகளில் மூன்று பிரிவினரும், கம்மாளர்களில் ஆறு பிரிவினரும் சேர்ந்து கிராமச் சபைக் கூட்டத்தில் ஒவ்வொரு குடும்பத்திற்கும் ஆண்டொன்றுக்கு ஒரு பணம் வசூலிப்பது என்றும் அந்தப் பணத்தை அவ்வூர்ச் சிவன் கோயில் திருவிழாவுக்குப் பயன்படுத்துவது என்றும் முடிவு செய்தனர்.[143]

## வலங்கை, இடங்கைப் பிரிவுகள்

பாண்டியப் பெருவேந்தர் காலத்தில் இருந்த சாதிகள் வலங்கைப் பிரிவு, இடங்கைப் பிரிவு என இரு பிரிவுகளாக இருந்தன.[144] ஒவ்வொரு பிரிவிலும் 98 உட்பிரிவுகள் இருந்தன.[145]

வலங்கை, இடங்கைப் பிரிவுகள் தோற்றம் பற்றி வரலாற்றாசிரியர் களிடையே பற்பல கருத்துகள் நிலவுகின்றன :

மூன்றாம் குலோத்துங்கனின் (கி.பி. 1178 - 1218) கல்வெட்டு ஒன்று இந்த இரு பிரிவுகளின் தோற்றம் பற்றிச் சொல்கிறது. காசியப முனிவரைப் பேய்களிடமிருந்து காப்பாற்றுவதற்காகக் கடவுள் இடங்கைப் பிரிவை அக்னி குண்டத்திலிருந்து தோற்றுவித்தார் என இக்கல்வெட்டு சொல்கிறது.[146]

கரிகால் சோழன் என்ற பட்டப்பெயர் கொண்டிருந்த மூன்றாம் குலோத்துங்கனிடம் விசாரணைக்காக ஒரு வழக்கு வந்தது. இந்த வழக்கைக் கொண்டு வந்தவர்களில் ஒரு பிரிவினர் அவனுக்கு இடப் பக்கம் நின்றனர். மற்றொரு பிரிவினர் வலப்பக்கம் நின்றனர். இடப்பக்கம் நின்ற பிரிவினர் இடங்கை வகுப்பினர் ஆயினர். வலப் பக்கம் நின்றவர்கள் வலங்கை வகுப்பினர் ஆயினர்.[147]

விவசாயத் தொழிலில் ஈடுபட்டிருந்தவர்கள் வலங்கைப் பிரிவினர் என்றும் பொருட்கள் உற்பத்தியிலும் அவற்றின் விற்பனையிலும் ஈடுபட்டிருந்தவர்கள் இடங்கைப் பிரிவினர் என்றும் கருதப்பட்டனர்.[148]

அரசன் தனது படைவீரர்களைத் தன் வலப்பக்கம் வைத்திருந் தான். படை வீரர்களுக்குத் தேவையான படைக்கருவிகளை உற்பத்தி செய்து கொடுக்கும் தொழிலாளர்களையும், படை வீரர்களுக்கு உணவு சமைத்துக் கொடுத்த சமையல்காரர்களையும் தன் இடப் பக்கம் அமரும்படி ஏற்பாடு செய்திருந்தான். இதிலிருந்தே பின்னர் வலங்கை, இடங்கைப் பிரிவுகள் தோன்றின என்று முனைவர் ஆர். நாகசாமி குறிப்பிடுகிறார்.[149]

இந்த இரண்டு பிரிவினரும் தங்களுக்கெனச் சில விதிமுறை களை வகுத்துக்கொண்டு சுதந்திரமாக இயங்கினர் எனத் தெரிகிறது. இவர்களைப் பற்றிச் சோழர் காலத்துக் கல்வெட்டுகளில் பல செய்திகள் காணப்படுகின்றன. ஆனால், பாண்டியப் பேரரசுக் காலத்தில்

வெளியிடப்பட்ட கல்வெட்டுகளில் இவர்களைப் பற்றிய செய்திகள் குறைவாகவே உள்ளன.

முதலாம் சடையவர்மன் சுந்தரபாண்டியன் வெளியிட்ட ஒரு கல்வெட்டு, ஒருங்கிணைந்த தஞ்சாவூர் மாவட்டத்து, நன்னிலம் வட்டம், திருப்புகலூரில் காணப்படுகிறது. இக்கல்வெட்டு வலங்கை, இடங்கைப் பிரிவினர்களுக் கிடையே ஏற்பட்ட ஓர் உடன்பாட்டைக் குறிப்பிடுகிறது.[150] இந்த இரண்டு பிரிவினரிடையே இருந்த சமூகக் கேடுகளைக் களைவதற்குச் சில சட்டங்கள் இயற்றப்பட்டதாக இக்கல்வெட்டு குறிப்பிடுகிறது. இக்கல்வெட்டு பெரிதும் சிதைந்த நிலையில் இருப்பதனால் இவர்களிடையே இருந்த சமூகக் கேடுகள் என்ன என்பதும் இவற்றை நீக்க இயற்றப்பட்ட சட்டங்கள் என்ன என்பதும் தெரியவில்லை. இக்கல்வெட்டிலிருந்து வலங்கை, இடங்கைப் பிரிவுகள் பாண்டியப் பேரரசுக் காலத்தில் இருந்தன என்பது உறுதியாகிறது.

## பெண்களின் நிலை

பாண்டியப் பேரரசுக் காலத்தில் பெண்கள் ஆண்களின் ஆதிக்கத்திற்குக் கட்டுப்பட்டுக் குடும்பத்தில் வாழ்ந்தனர். இக்காலக் கட்டத்தில் பெண் கல்விக்கு முக்கியத்துவம் கொடுக்கப்படவில்லை. அரச குடும்பத்தைச் சார்ந்த பெண்களும் பணக்காரப் பெண்களும் மட்டுமே படிப்பறிவு பெற்றுத் திகழ்ந்தனர்.[151]

பாண்டியப் பேரரசுக் காலத்துப் பெண்களுக்குச் சொத்துரிமை இருந்திருக்கிறது. அவர்கள் தங்கள் விருப்பம் போல் தங்கள் சொத்துகளை விற்றிருக்கிறார்கள்.[152] பெண்களின் சொத்துக்களுக்குச் சிலர் பாதுகாவலர்களாகவும் இருந்திருக்கின்றனர். அக்காவலர்கள் கல்வெட்டுகளில் 'முதுகண்ணன்' எனக் குறிப்பிடப்பட்டுள்ளனர்.[153] பற்பல சாதிகளைச் சார்ந்த பெண்கள் கோயில்களுக்குத் தங்கம், ஆபரணங்கள், நிலங்கள், பணம் ஆகியவற்றை நன்கொடைகளாகக் கொடுத்திருக்கிறார்கள்.[154] இதிலிருந்து பெண்கள் தங்கள் விருப்பம் போல் நன்கொடைகள் கொடுக்க அனுமதிக்கப்பட்டனர் என்பது தெரிய வருகிறது. ஆனால் அவர்களுக்குக் குடும்பச் சொத்தில் சட்டப்படி உரிமை இருந்ததா என்பது தெரியவில்லை.

பாண்டியப் பேரரசுக் காலத்துப் பெண்கள் சமயப் பணிகளிலும் ஆர்வம் கொண்டிருந்தனர். திருவாதவூர்ச் சிவன் கோயிலுக்கு மங்கையர்க்கரசியார் என்ற பெண்மணி சந்திரசேகரர் சிலை, பார்வதி சிலை ஆகியவற்றைச் செய்து கொடுத்தார். மேலும் இவர் அக்கோயிலைச் சுற்றி நான்கு புறங்களிலும் சாலைகள் அமைத்தார். இக்கோயில் குளத்தின் கரைகளைக் கட்டினார். இவர் ஆற்றிய கோயில் திருப்பணிகளுக்கு ஈடாகக் கோயில் நிருவாகத்தினர் இக்கோயில் குளத்திலிருந்து

இப்பெண்மணி தனது வயல்களுக்கு நீர் எடுத்துக்கொள்ள அனுமதித்தனர்.[155] தீத்தாண்டதானபுரம் கல்வெட்டு, இவ்வூரிலிருந்த சிவன் கோயிலின் மண்டபம் பழுதாகி இருந்ததை இரண்டு பெண்கள் செப்பனிட்டுப் புதுப்பித்தனர் எனக் குறிப்பிடுகிறது. இவர்களில் ஒருவர் வடுகாழ்வார் ஆவார்.[156] மற்றொருவர் அகலகண்டாழ்வார் ஆவார். மேற்கண்ட கல்வெட்டுகளி லிருந்து பெண்கள் கோயில் திருப்பணிகளில் ஆர்வம் கொண்டிருந்தனர் என அறிய முடிகிறது.

பிராமணப் பெண்களுக்குக் கோயிலில் பூசை செய்யும் உரிமை கொடுக்கப்பட்டிருந்தது என்பது ஆரகலூர் காமேசுவரன் கோயில் கல்வெட்டிலிருந்து தெரிய வருகிறது. இக்கல்வெட்டு சில பிராமணப் பெண்களுக்கு மாதத்தில் 3 1/8 நாட்கள் பூசை செய்யும் உரிமை கொடுக்கப்பட்டிருந்ததாகக் குறிப்பிடுகிறது.[157] இந்தப் பிராமணப் பெண்களின் கணவன்மார்கள் இறந்த பின்னர் இவர்களுக்கு இந்தக் கோயிலில் பூசை செய்யும் உரிமை கொடுக்கப் பட்டிருக்க வேண்டும்.

பெண்கள் நீதி வழங்கும் குழுவிலும் உறுப்பினராக இருந்திருக்கின்றனர். காஞ்சிபுரத்திற்கு அருகிலுள்ள உத்திரமேரூரில் காணப்படும் சுந்தரபாண்டியனின் கல்வெட்டு பெருங்கருணையாட்டி என்ற பெண்மணி நியாயத்தார் குழுவில் ஓர் உறுப்பினராக இடம் பெற்றிருந்தார் எனக் குறிப்பிடுகிறது.[158]

பாண்டியப் பேரரசுக் காலத்தில் பொதுவாக மக்கள், பெண் குழந்தைகளை விரும்பவில்லை. இக்கருத்தைச் சமகாலத்து இலக்கிய மாகிய தஞ்சைவாணன்கோவை குறிப்பிடுகிறது.[159] ஆண் குழந்தை பிறப்பை அனைவரும் விரும்பினர்; அதனை மகிழ்ச்சியாகக் கருதினர். ஆண் குழந்தை இல்லாதவர்கள் தங்கள் நெருங்கிய உறவினர்களின் ஆண் குழந்தைகளைத் தத்தெடுத்துக் கொண்டனர். ஒரு பிராமணப் பெண் தனக்கு ஆண் குழந்தை இல்லாததனால் தன் கொழுந்தனின் ஆண் குழந்தையைத் தத்தெடுத்துக் கொண்டாள்.[160]

## பாண்டிய அரசிகள்

பாண்டிய அரசிகளுக்கு உலகமுழுதுடையாள், புவன முழுதுடையாள், தரணி முழுதுடையாள், அவனி முழுதுடையாள் என்ற பட்டப் பெயர்கள் வழங்கி வந்தன.[161] அரசிகள் பல கோயில் திருப்பணிகளைச் செய்திருக்கிறார்கள். மாறவர்மன் விக்கிரம பாண்டியனின் (கி.பி. 1283) மனைவி உலக முழுதுடையாள் ஒருங்கிணைந்த தென்னார்க்காடு மாவட்டம், திருவக்கரை (சிவன்) கோயிலின் மண்டபத்தைக் கட்டினார்.[162] சடையவர்மன் ஸ்ரீவல்லபனின் பட்டத்தரசி உலக முழுதுடையாள் இராமநாதபுரம் மாவட்டம், திருப்பத்தூர் திருத்தளீசுவரர் கோயிலின் சமையலறையைக் கட்டினார்.[163] சடையவர்மன் வீரபாண்டியனின் (கி.பி. 1296) அரசி திருத்தோள்

பிரியாத திருநங்கை என்ற உலக முழுதுடையாள் ஒருங்கிணைந்த வடார்க்காடு மாவட்டம் திருவத்தியூர் சிவன் கோயிலுக்குத் தங்க அணிகள் செய்து கொடுத்தார்.[164]

முதலாம் சடையவர்மன் சுந்தரபாண்டியனுடைய மனைவி தென்னவன் முழுதுடையாளின் பிறந்த நாளில், பெரம்பலூரிலுள்ள மதனகோபால சுவாமி கோயிலில் ஒரு திருவிழா கொண்டாட ஏற்பாடு செய்யப்பட்டது.[165] அத்திருவிழா 'அக்கன் திருவிழா' என அழைக்கப்பட்டது. அவ்விழாக் கொண்டாட 12 வேலி நிலத்தை அவ்வூர் மக்கள் அக்கோயிலுக்குத் தானமாக அளித்தனர். இதிலிருந்து அக்காலத்து மக்கள் தங்கள் அரசியின் மீது கொண்டிருந்த அன்பும் பாசமும் தெரிகிறது.

பாண்டிய அரசிகளின் பெயர்களில் தெருக்கள், நந்தவனங்கள் ஊர்கள் ஆகியவை இருந்தன. திருப்பூந்துருத்தியில் இருந்த ஒரு தெரு ஏழுலக முழுதுடையாள் திருவீதி என அழைக்கப்பட்டது.[166] திருநெல் வேலி நெல்லையப்பர் கோயிலில் இருந்த நந்தவனம் தரணி முழுதுடையாள் நந்தவனம் என வழங்கப்பட்டது. திருவரங்கம் கோயிலிலுள்ள ஒரு கல்வெட்டு புவன முழுதுடையாள் நல்லூர் என்றும் உலகமாதேவி நல்லூர் என்றும் பாண்டிய அரசிகள் பெயர்களில் ஊர்கள் இருந்ததைக் குறிப்பிடுகிறது.[167] மேற்கண்ட கல்வெட்டுச் சான்றுகளி லிருந்து பாண்டிய அரசர்களைப் போல அவர்களது அரசிகளும் தாராளமாகக் கோயில்களுக்கு நன்கொடைகள் கொடுத்தனர் என்பது தெரிய வருகிறது.

## நடன மாதர்கள்

பாண்டியர் கால நடன மாதர்களை மூன்று வகைகளாகப் பிரிக்கலாம். முதல் வகையினர் அரண்மனையில் இருந்தனர். அவர்கள் அரசவையில் மட்டும் அரசருக்காக நடனம் ஆடினர். அவர்களில் சிலர் அரச குடும்பத்து ஆண்களுக்கும், அரசவையில் இருந்த உயர் அதிகாரி களுக்கும் ஆசை நாயகிகளாக இருந்தனர்.[168] இரண்டாம் வகை நடன மாதர்கள் மக்களுக்காகப் பேரரசின் பல பகுதிகளில் நாட்டிய நாடகங் களை நடத்தினர். மூன்றாவது வகை நடன மாதர்கள் கோயில்களில் பணிபுரிந்தனர். இவர்கள் கோயிலில் ஆடல்,பாடல் நிகழ்ச்சிகளை நடத்தினர்.

பொதுவாக நடன மாதர்கள் திருமணம் செய்துகொள்வது இல்லை. ஆகவேதான் அவர்கள் பதியிலார் (கணவன் இல்லாதவர்கள்) என அழைக்கப்பட்டனர்.[169] இந்த நடன மாதர்கள் கோயில்களுக்குத் தாராளமாக நன்கொடைகளை வழங்கி இருக்கிறார்கள். திருநெல்வேலி மாவட்டம், வள்ளியூரின் வடக்குப்புற வாயிலில் ஓர் அம்மன் கோயிலை உலக முழுதுடையாள் என்ற சாந்திக்கூத்தி கட்டினாள்.[170] உருப சுந்தரதலைக்கோலி, சிவஞான சம்பந்த தலைக்கோலி ஆகிய நடன

மாதர்கள் திருநெல்வேலி மாவட்டம், பெருங்குளம் சிவன் கோயிலில் லிங்கம் மற்றும் சுப்பிரமணியர் (குன்றம் எறிந்த பிள்ளையார்) ஆகிய சிலைகளை அமைத்தனர்.[171]

கோயிலுக்குக் கொடுத்த நிவந்தங்களைப் பராமரிக்கும் பணியையும் நடன மாதர்கள் செய்திருக்கிறார்கள் என்பதைத் திருப்பத்தூர் சிவன் கோயிலில் காணப்படும் முதலாம் சடையவர்மன் சுந்தரபாண்டியனின் கல்வெட்டு குறிப்பிடுகிறது. பாண்டிய அரசி நம்பிராட்டியார் அவனி முழுதுடையாள், திருப்பத்தூர் சிவன் கோயிலில் ஏற்படுத்திய அறக்கட்டளைப் பராமரிப்பைக் குலசேகர மாணிக்கம் என்ற நடன மாது கவனித்துக் கொண்டார்.[172]

திருநெல்வேலி மாவட்டம், தருவை சிவன் கோயில் கல்வெட்டு, நடன மாதர்கள் கோயில்களில் செய்த பணிகளைக் குறிப்பிடுகிறது. காலைப் பூசையாகிய திருவடி நிலைக்கும், மாலைப் பூசையாகிய திருவந்திக் காப்புக்கும் உதவியாக நடன மாதர்கள் இருந்தனர் என இக்கல்வெட்டு குறிப்பிடுகிறது. சந்தனம் அரைத்தல், மாலை தொடுத்தல், மகா மண்டபம், பிரகாரங்கள் முதலியவற்றைப் பெருக்குதல், கழுவுதல் ஆகிய பணிகளை இந்நடனமாதர்கள் செய்திருக்கிறார்கள்.[173] இரண்டாம் ச்டையவர்மன் குலசேகரனின் (கி.பி. 1238) கல்வெட்டு, நடன மாதர்கள் நெல்லைக் குத்தி அரிசியாக்கி அதனைக் கோயில் பிரசாதம் செய்யக் கொடுத்தனர் எனக் கூறுகிறது.[174] கோயில் திருவிழாக்களின் போது கடவுள் சிலைகள் ஊர்வலமாக எடுத்துச் செல்லப்பட்டன. அப்போது சிலைகளுக்குச் சாமரம் வீசும் பணியையும் இந்த நடனமாதர்கள் செய்தனர்.[175] தினப் பூசைகளின் போது இவர்கள் கடவுள் திருவுருவங்களுக்கு முன்னர் பாடினர்; ஆடினர். திருவிழாக்களின் போது கடவுள் திருவுருவ ஊர்வலத்திற்கு முன்னர் இவர்கள் ஆடல், பாடல் நிகழ்த்தினர். இப்பணிகளுக்காக இவர்களுக்கு நிலம், வீட்டு மனை, நெல், அன்றாடம் சமைத்த உணவு ஆகியவை கொடுக்கப்பட்டன.[176]

இராமநாதபுரம் மாவட்டம், திருமாலுகண்டான் கோட்டையில் காணப்படும் முதலாம் மாறவர்மன் குலசேகரனின் கல்வெட்டு நாட்டியப் பெண்களுக்கும் அவர்களுடைய வாரிசுகளுக்கும் கொடுக்கப்பட்ட சன்மானம் பற்றிக் குறிப்பிடுகிறது. ஒரு நடனப் பெண்ணுக்கு ஆண் மகவு இல்லாதிருந்தால் அவளுக்கும் அவளது பெண் குழந்தைகளுக்கும் நாள் ஒன்றுக்கு நபர் ஒன்றுக்கு இரண்டு நாழி நெல் கொடுக்கக் கோயில் நிருவாகம் முடிவு செய்தது. இக்கல்வெட்டிலிருந்து சில நடன மாதர்கள் திருமணம் செய்து கொண்டு வாழ்ந்தனர் என்பதும் உறுதியாகிறது. கோயில் நிருவாகத்தினர், நாள் ஒன்றுக்கு இரண்டு நாழி நெல் வீதம் கொடுக்க முடியாத நிலைமையில் ஒன்றரை மா நன்செய் நிலத்தை ஒவ்வொரு நடன மாதருக்கும் கொடுக்க வேண்டுமென முடிவு செய்யப்பட்டது.[177]

நடன மாதர்களின் கோயில் திருப்பணிகளைப் பாராட்டி அவர்களுக்குச் சில சலுகைகள் வழங்கப்பட்டன. ஆலாலசுந்தர நங்கை என்ற நடனப் பெண் திருவாதவூர் திருமறைநாதர் கோயிலுக்குச் சொந்தமான ஊர்களைக் கடனிலிருந்து மீட்டுக் கோயி லுக்குக் கொடுத்தார். மேலும் இவள் தனது கணவன் (அகமுடையான்) பட்டன்தேவன் உதவியோடு இக்கோயிலில் சந்திரசேகரர் சிலையை அமைத்தாள். அன்றியும் இவள் இக்கோயிலுக்குச் சில விலை உயர்ந்த அணிகளைச் செய்து கொடுத்தாள். இவளது இத்திருப்பணிகளைப் பாராட்டி இவளுக்குச் சில சலுகைகளும் கௌரவமும் கொடுக்கப் பட்டன.[178] இராமநாதபுரம் மாவட்டம், திருமலையில் கிடைக்கும் ஒரு கல்வெட்டு, அழகை மாநகர் சிவன் கோயிலுக்கும் வேறு சில கோயில்களுக்கும் திருப்பணிகள் செய்த ஒரு நடனப் பெண்ணுக்கு மாகேசுவரர்கள் (சிவன் கோயில் நிருவாகத்தினர்) கொடுத்த சலுகையைக் குறிப்பிடுகிறது. அந்தப் பெண்ணும் அவளது சந்ததியினரும் அக்கோயிலுக்குள் நுழைகின்ற பொழுது அவர்களுக்கு மதிப்பளிப் பதற்காகச் சங்கு ஊத வேண்டும் என்றும் பறையொலி எழுப்ப வேண்டும் என்றும் அக்கோயில் மாகேசுவரர்கள் முடிவு செய்தனர்.[179]

## திருமணம்

சங்க காலத்தில் நடந்தது போல, காதல் திருமணங்கள் பாண்டியப் பெருவேந்தர் காலத்தில் நடைபெறவில்லை. இக்காலக் கட்டத்தில் நடந்த பெரும்பான்மையான திருமணங்கள் பெற்றோர்களால் நிச்சயிக்கப்பட்ட திருமணங்களே ஆகும். சாதி முறை மிகக் கடுமையாக இருந்ததனால் கலப்புத் திருமணங்கள் அதிகமாக நடைபெறவில்லை. இருந்தபோதிலும் சில கலப்புத் திருமணங்கள் இக்காலத்தில் நடந்திருக்கின்றன. உயர்ந்த சாதி ஆண் மகன், தாழ்ந்த சாதிப் பெண்ணைத் திருமணம் செய்து கொண்டால் அத்தகைய திருமணம், 'பிரதிலோமா திருமணம்' என அழைக்கப்பட்டது. இப்படி, கலப்புத் திருமணங்கள் சில நடந்ததால்தான் பல புதிய சாதிகள் தோன்றின.[180]

ஒருவனுக்கு ஒருத்தி என்ற கொள்கையே திருமண முறையில் பெரும்பாலும் பின்பற்றப்பட்டது. இந்தப் பொதுக் கொள்கையை அரச குடும்பத்தைச் சார்ந்தவர்கள் பின்பற்றவில்லை. அவர்கள் பல பெண்களைத் திருமணம் செய்து கொண்டனர். பாண்டியப் பெருவேந்தர் காலத்தில் பாண்டிய நாட்டிற்கு வருகை தந்த மார்க்கோ போலோ என்ற இத்தாலியப் பயணி இதுபற்றிப் பின்வருமாறு குறிப்பிடுகிறார் :

'காயல் பகுதி அரசனுக்கு 300 மனைவியர் இருக்கின்றனர். அதிக மனைவியரைக் கொண்டிருக்கும் அரசருக்கு அதிக மதிப்பு இருந்தது'.[181]

ஒரு புனிதமான நாளில் திருமணம் நடந்தது. இந்தப் புனித நாளைச் சோதிடர்கள் குறித்துக் கொடுத்தனர். திருமணத்தின் போது பல

சடங்குகள் செய்யப்பட்டன. பிராமணர் அல்லாதவர்களின் குடும்பத் திருமணங்கள் பிராமணக் குருக்களை வைத்தே நடத்தப்பட்டன. திருமண விழா நான்கு நாட்கள் முதல் ஏழு நாட்கள் வரை நடந்தது.[182]

பாண்டியப் பெருவேந்தர் காலத்தில் திருமண வீடுகளிலிருந்து கட்டணம் வசூலிக்கப்பட்டது என்பதற்குக் கல்வெட்டுச் சான்றுகள் உள்ளன. குலோத்துங்க சோழப் பட்டினம் சிவன் கோயில் பராமரிப்புச் செலவுக்காக அவ்வூரில் நடந்த திருமணத்தின் போது மணமகன் மணமகள் இல்லங்களிலிருந்து கட்டணம் வசூலிக்கப்பட்டதாக முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியனின் கல்வெட்டு குறிப்பிடுகிறது. இந்தத் திரும்மணக் கட்டணம் வசூலிக்கும் அதிகாரம் விழக்கத்தரையன் என்ற அதிகாரிக்குக் கொடுக்கப்பட்டிருந்தது. மணமகள் இல்லத்திலிருந்து 200 காசு கட்டணம் வசூலிக்கப்பட்டது. இதில் கோயிலுக்கு ஆடுகள் வாங்க 120 காசும் கோயிலுக்குத் தேவையான ஆடைகள் வாங்குவதற்கு 80 காசும் செலவிடப்பட்டது. மணமகன் இல்லத்திலிருந்து 180 காசு திருமணக் கட்டணம் வசூலிக்கப்பட்டது. இதில் கோயிலுக்கு ஆடுகள் வாங்க 100 காசும் கோயிலுக்குத் தேவையான ஆடைகள் வாங்க 80 காசும் செலவிடப்பட்டது. இந்தக் கட்டணத்தைச் செலுத்திய பின்னரே திருமணங்கள் நடத்த அனுமதி கொடுக்கப்பட்டது.[183]

## வரதட்சணை முறை

பாண்டியப் பெருவேந்தர் காலத்தில் வரதட்சணை கொடுக்கும் முறை வழக்கத்தில் இருந்தது. மாறவர்மன் விக்கிரம பாண்டியன் வெளியிட்ட திருவந்திபுரம் (கடலூர் மாவட்டம்) கல்வெட்டு வரதட்சணை பற்றிக் குறிப்பிடுகிறது. செயங்கொண்ட சோழப் பட்டினத்தைச் சார்ந்த பெரியதேவன் அமரக்கோன் என்பவன் குடந்தையைச் சார்ந்த தனது மாமனார் நாயகப் பெருமான் என்பவனிடமிருந்து நிலங்களை வரதட்சணையாகப் பெற்றுக் கொண்டான் என்றும் அந்நிலங்களைப் பின்னர் பெரியதேவன் அமரக்கோன் விற்றான் என்றும் இக்கல்வெட்டு குறிப்பிடுகிறது.[184]

திருமணத்தின்போது மணமகளுக்கு மணமகன் அணிமணிகளை அன்பளிப்பாகக் கொடுக்கும் வழக்கம் இருந்தது எனப் புதுக்கோட்டை மாவட்டத்துத் திருமயம் சத்தியநாதப் பெருமாள் கோயிலில் காணப்படும் சடையவர்மன் பராக்கிரம பாண்டியனின் (கி.பி. 1367) கல்வெட்டு குறிப்பிடுகிறது. மேலூரைச் சார்ந்த முனையதரையன் மக்கநாயினார் என்பவன் தனக்குச் சொந்தமான நிலங்களை 540 பணத்திற்கு விற்று அப்பணத்தைக் கொண்டு, தன்னை மணந்துகொள்ளும் காணவினியார் என்ற பெண்ணுக்கு அன்பளிப்பாகக் கொடுப்பதற்காக நகைகள் வாங்கினான் என இக்கல்வெட்டு குறிப்பிடுகிறது.[185]

## விதவைப் பெண்கள் நிலை

புதுக்கோட்டை மாவட்டம், நார்த்தாமலைச் சிவன் கோயிலில் காணப்படும் முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியனின் கல்வெட்டு விதவைகள் பூ, வண்ண ஆடைகள், ஆபரணங்கள் ஆகியவற்றை அணியாது இருந்தனர் எனக் குறிப்பிடுகிறது. மேலும் அவர்கள் தங்களின் விதவைக் கால நல்வாழ்விற்காக இச்சிவன் கோயிலுக்கு 120 காசு கொடுத்தனர் என்றும் இதனைக் கிராம சபை உறுப்பினர்களில் ஒருவர் வசூலித்து இக்கோயிலின் அர்ச்சகரிடம் கொடுத்தார் எனவும் இக்கல்வெட்டு மேலும் குறிப்பிடுகிறது.[186]

திருநெல்வேலி மாவட்டம், மன்னார் கோயில் இராசகோபால சுவாமி கோயிலில் காணப்படும் மாறவர்மன் சுந்தர பாண்டியனின் இருபதாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு (கி.பி. 1236) இராசராச சதுர்வேதி மங்கலத்தின் இரண்டு பிராமண விதவைகளின் அவல நிலையைப் படம் பிடித்துக் காட்டுகிறது.[187] முதல் பிராமண விதவையின் பெயர் நங்கை யாண்டாள் என்பதாகும். இவள் வேங்கிபுரம் அழகர் என்பவனின் மனைவியாவாள். இவள் தனது மருமகனாகிய வானமாமலை என்ற ஆசிரியரின் (உபாத்யாயன்) பாதுகாப்பில் இருந்து வந்தாள். இந்த வானமாமலை இந்த ஊரில் இருந்த மூன்றாவது பார்ப்பனச் சேரியில் வாழ்ந்து வந்தார். மற்றொரு விதவையாகிய பிள்ளையாண்டாள் என்பவள் ஏற்கெனவே குறிப்பிடப்பட்டுள்ள விதவை நங்கையாண் டாளின் மருமகளாவாள். இவள் தனது தந்தையாகிய வேங்கிபுரம் நம்பி என்பவரின் பாதுகாப்பில் இருந்து வந்தாள். இந்த வேங்கிபுரம் நம்பி இதே ஊரைச் சார்ந்த நான்காவது பார்ப்பனச்சேரியில் வாழ்ந்து வந்தார். இவ்விரு விதவைகளுக்கும் புதல்வர்கள் இல்லை. ஆகவே, இவ்விருவரும் தங்களது நிலங்களைத் தங்களின் பாதுகாவலர்கள் எடுத்துக் கொண்டு தங்களை வாழ்நாள் முழுவதும் பராமரிக்கும்படி கேட்டுக் கொண்டனர்.[188] ஆனால் அப்பாதுகாவலர்களோ அதற்கு மறுத்துவிட்டனர். அவ்விரு விதவைகளும் தங்கள் நிலங்களைத் தங்கள் விருப்பப்படி நன்கொடையாகக் கொடுப்பதற்கும், விற்பதற்கும் இப்பாதுகாவலர்கள் விடுதலைப் பத்திரம் (விடுதீட்டு) எழுதிக் கொடுத்து விட்டனர். இதன் பின் இவ்விரு விதவைகளும் தங்களது நிலங்களை இராசராச சதுர்வேதிமங்கலத்துக் குலசேகர ஆழ்வார் கோயிலுக்கு 12 ஆனை அச்சுக்கு விற்றனர்.[189] இக்கல்வெட்டு விதவைகளை அக்காலத்தில் அவர்களது நெருங்கிய உறவினர்களே கவனித்துக் கொள்ள மறுத்து விட்டனர் என்பதற்கு ஆதாரமாக அமைந்துள்ளது.

## சதி

பாண்டியப் பெருவேந்தர் காலத்தில் சதி (உடன்கட்டை ஏறல்) வழக்கம் இருந்தது. இப்பழக்கம் அரச குடும்பத்துப் பெண்களிடம்

இருந்தமைக்கு நேரடிச்சான்று கல்வெட்டில் உள்ளது. திருநெல்வேலி மாவட்டம், செய்துங்கநல்லூரில் காணப்படும் மாறவர்மன் ஸ்ரீவல்லபனின் (கி.பி. 1257இல்) கல்வெட்டு பூரிசாந்தி என்ற பெண் தன் கணவன் இறந்ததும், அவனது உடலை எரிக்க மூட்டிய சிதையில் விழுந்து தனது இன்னுயிரை மாய்த்துக் கொண்டாள் எனச் சொல்கிறது.[190] இந்தப் பூரிசாந்தி என்பவள் இப்பாண்டிய அரசனின் குறுநில மன்னனாகிய அம்பலக்கூத்தன் அன்னவரததானன் என்பவனின் மகளாவாள். இக்குறுநில மன்னன் தனது மகள் பூரிசாந்தி உடன்கட்டை ஏறி இறந்ததும், அவளது மேலுலக நல்வாழ்வுக்காக நிலம் நன்கொடை கொடுத்ததைப் பற்றி இக்கல்வெட்டு குறிப்பிடுகிறது. இந்த நிகழ்ச்சி பூதப்பாண்டியன் இறந்த பின்னர் அவனது மனைவி பெருங்கோப்பெண்டு சதி மேற்கொண்டதையும்.[191] இரண்டாம் பராந்தகன் இறந்த பின்னர் அவனது மனைவி வானவன்மாதேவி சதி மேற்கொண்டதையும்[192] நமக்கு நினைவுப்படுத்துகின்றன. இப்படி 'சதி மேற்கொள்ளும் பெண்களுக்குச் சமுதாயத்தில் மிகுந்த மதிப்பும் கௌரவமும் கிடைத்தது' என மார்க்கோ போலோ தனது பயணக் குறிப்பில் குறிப்பிடுகிறார்.[193]

### பரத்தையர்

பரத்தையர் பற்றிப் பல செய்திகள் தஞ்சைவாணன்கோவை என்ற நூலில் காணப்படுகின்றன. இவர்கள் நாட்டியம், நாடகம், இசை ஆகியவற்றில் தேர்ச்சி பெற்றவர்களாக இருந்தனர். இவர்கள் நகரத்தில் ஒரு பகுதியில் தனிக்குடியிருப்பில் வாழ்ந்தனர். அப்பரத்தையர் குடியிருப்பு, பரத்தையர்சேரி என அழைக்கப்பட்டது.[194] பரத்தையர்களில் இரு வகையினர் இருந்தனர். முதல் வகையினர் தங்கள் வருமானத்திற்காகப் பல ஆடவர்களுக்குக் காமக்கிழத்திகளாக இருந்தனர். இரண்டாவது வகையைச் சேர்ந்த பரத்தை தனக்கென்று ஒரு ஆடவனைத் தேர்ந்தெடுத்துக் கொண்டு அவனைத் திருமணம் செய்து கொள்ளாமல் அவனுடன் மட்டுமே தனது வாழ்நாள் முழுவதும் வாழ்ந்தாள். இவர்களைத் தவிர, கோயில்களில் இருந்த பணிப்பெண்கள் தங்களைக் கோயில் பணிகளுக்கே அர்ப்பணித்துக் கொண்டு வாழ்ந்தனர். இவர்கள் தேவரடியார்கள் என அழைக்கப்பட்டனர். காலப்போக்கில் இவர்கள் சார்ந்திருந்த கோயில்களில் பொருளாதார நெருக்கடி ஏற்பட்டது. ஆகவே கோயில்கள் இவர்களுக்கு ஊதியம் கொடுக்க இயலாமல் போயிற்று. எனவே இந்தக் கோயில் பணிப்பெண்களாகிய தேவரடியார்கள் ஒழுக்கம் தவறிப் பரத்தையர் ஆகிவிட்டனர். பாண்டியப்பெருவேந்தர் காலத்தில் வாழ்ந்த பொய்யாமொழிப் புலவர் தனது தனிப்பாடல் ஒன்றில் காளையார்கோயில் சிவன் கோயிலைச் (இராமநாதபுரம் மாவட்டம்) சார்ந்த எழுபது தேவரடியார்கள் இக்கோயிலின் ஆதரவை இழந்த பின்னர் பரத்தையர் ஆயினர் எனக் குறிப்பிடுகிறார்.[195]

சிற்றின்பத்தில் நாட்டமுடைய ஆண்கள் பரத்தையரை நாடிச் சென்றனர். இவர்கள் சமுதாயத்தில் மதிப்பை இழந்திருந்தனர். காம இச்சையை அடக்க முடியாத ஆண்களே பரத்தையர்பால் சென்றனர் என்று பொய்யாமொழிப் புலவர் தஞ்சைவாணன்கோவையில் குறிப்பிடு கிறார். இத்தகைய ஆண்களை இவ்வாசிரியர் கடுமையாகச் சாடுகிறார்.[196] இந்தத் தீய பழக்கம் பாண்டியப்பெருவேந்தர் காலத்திலும் அதைத் தொடர்ந்து வந்த காலங்களிலும் இருந்து வந்தது.

## உணவு முறை

காலம், இடம், மக்களின் சாதி ஆகியவற்றின் அடிப்படையில் உணவு முறை அமையும். பாண்டியப் பெருவேந்தர் காலத்து மக்களின் முக்கிய உணவுப் பொருள் அரிசியேயாகும்.[197] பல நெல் வகைகள் பாண்டிய நாட்டில் உற்பத்தி செய்யப்பட்டன.[198] தானியங்கள் மக்களுக்கு மட்டுமன்றி கால்நடைகளுக்கும் உணவுப் பொருளாகப் பயன்பட்டன. எலுமிச்சை, பேரீச்சம்பழம் ஆகிய பழங்களும், உணவு வகைகளாகத் தயாரிக்கப்பட்டன.[199]

13ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் பொய்யாமொழிப் புலவரால் தஞ்சைவாணன்கோவை எழுதப்பட்டது. இந்நூலில் பாண்டிய நாட்டு மக்கள் அரிசி, மானிறைச்சி, தேன், பால் ஆகியவற்றை உணவுப் பொருள்களாகக் கொண்டிருந்தனர் என்ற குறிப்பு உள்ளது. சர்க்கரைச் சோறு (சர்க்கரைப் பொங்கல்), புளிச் சோறு (புளியஞ் சோறு), தயிர்ச் சோறு (தயிர் அமுது) ஆகியவற்றை இம்மக்கள் வீடுகளிலும், கோயில் களிலும் தயாரித்து உண்டனர். நன்கு தீட்டப்பட்ட சிவப்பரிசி, பாசிப் பருப்பு, நெய், வாழைப்பழம், சர்க்கரை ஆகியவற்றைக் கொண்டு சர்க்கரைச் சோறு தயாரிக்கப்பட்டது.[200] தஞ்சைவாணன்கோவையில் பொய்யாமொழிப் புலவர் புளியஞ்சோறு பற்றிக் குறிப்பிடுகிறார்.[201] இபன் பதூதா என்ற மோரீசு நாட்டுப் பயணி 14ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் பாண்டிய நாட்டிற்கு வந்திருந்தார். இவர் பாண்டிய நாட்டில் ஒவ்வொரு விருந்திலும் இறுதி உணவுப் பொருளாகத் தயிர்ச் சோறு வழங்கப்பட்டது எனக் குறிப்பிடுகிறார்.[202]

பாண்டியர் கல்வெட்டுகளில் திருப்பண்ணியாரமும் பிட்டும் பற்றிய குறிப்புகள் உள்ளன. தஞ்சாவூர் மாவட்டம், பாபநாசம் வட்டம், மணக்கால் என்ற ஊரின் சிவன் கோயிலில் செல்லப்பிள்ளையாருக்குத் திருப்பண்ணியாரம் திருவமுதாகப் படைக்கப்பட்டது.[203] வீரபாண்டி யனின் ஒரு கல்வெட்டு, அரிசி, நெய், சர்க்கரை, தேங்காய் ஆகியவை திருப்பண்ணியாரம் தயாரிக்கப் பயன்படுத்தப்பட்டன எனக் குறிப்பிடுகிறது.[204] புதுக்கோட்டை மாவட்டம் திருவரங்குளம் சிவன் கோயிலில் அம்மனுக்குப் பிட்டு திருவமுதாகப் படைக்கப்பட்டது.[205]

பிராமணர்கள், சமணர்கள், புத்தமதத்தினர் ஆகியோர் மரக்கறி உணவை உண்டனர். அவர்களின் உணவில் அரிசி, வெண்ணெய், காய்கறிகள், கீரை ஆகியவை அடங்கியிருந்தன. மார்க்கோபோலோ தனது பயணக் குறிப்பில் 'பிராமணர்கள் உணவுக்காக உயிர்களைக் கொல்லவில்லை' எனக் குறிப்பிடுகிறார்.[206]

பாண்டிய நாட்டு மக்களில் பெரும்பான்மையினர் புலால் உணவை உண்டனர். கோழி, ஆடு, மான், பறவைகள் ஆகியவற்றின் இறைச்சியை அவர்கள் உணவுடன் சேர்த்துக் கொண்டனர். இவர்கள் பசுவின் மாமிசத்தை உண்ணவில்லை. ஏனெனில் பசு இந்துக்களுக்கு ஒரு புனித விலங்காக இருந்தது. அதை இவர்கள் தெய்வமாகக் கருதி வணங்கினர். பன்றி ஒரு அருவருக்கத்தக்க மிருகம். ஆதலால், அதன் மாமிசத்தையும் பாண்டிய நாட்டு மக்கள் சாப்பிடவில்லை. இதனை மார்க்கோபோலோ பின்வருமாறு குறிப்பிடுகிறார் : 'பாண்டிய நாட்டு மக்கள் உலகத்திலுள்ள எந்த உயர்ந்த பொருளைக் கொடுத்தாலும் பன்றி மாமிசத்தை உண்ணமாட்டார்கள். எக்காரணத்தைக் கொண்டும் அவர்கள் பசுவைக் கொல்லமாட்டார்கள்'.[207]

பாண்டிய நாட்டு மக்களில் சில பிரிவினர் போதை தரும் பானங்களை அருந்தினர். அவர்கள் கள், மது ஆகியவற்றை அருந்தினர் எனக் கப்பற்கோவை குறிப்பிடுகிறது.[208] சிலர் பனைமரத்திலிருந்தும், தென்னை மரத்திலிருந்தும் கள்ளை உள்நாட்டிலேயே உற்பத்தி செய்தனர். மது வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டது.

## ஆடைகள்

பாண்டிய நாட்டு மக்களின் ஆடைப் பழக்கத்தைப் பற்றி மார்க்கோ போலோ பின்வருமாறு குறிப்பிடுகிறார் : 'மாபார் (பாண்டிய நாடு) நாட்டில் தையல்காரர் ஒருவர்கூடக் கிடையாது[209] இந்நாட்டு மக்கள் பொதுவாக நிருவாணமாகத் திரிகின்றனர். தங்கள் மானத்தைக் காப்பாற்றிக் கொள்ள இடுப்பைச் சுற்றி, ஒரு சிறிய துணியைக் கட்டிக் கொண்டிருக்கிறார்கள். ஏழை, பணக்காரர், ஆண்கள், பெண்கள், அரசன் அனைவருமே இப்படித்தான் ஆடை அணிந்து கொள்கிறார்கள்'.[210] மார்க்கோபோலோ சொல்லியிருக்கும் மேற்கண்ட கருத்து மிகைப் படுத்தப்பட்டிருக்கிறது அல்லது தவறாகக் குறிப்பிடப்பட்டிருக்கிறது. ஏனெனில் சமகாலத்து இலக்கியமாகிய தஞ்சைவாணன் கோவையில் சட்டைகள் பற்றியும் மேல் அங்கிகள் பற்றியும் குறிப்பு உள்ளது.[211]

பாண்டிய நாட்டில் வெப்பம் அதிகமாக இருந்தது. ஆகவே தான் இந்நாட்டு மக்கள் மிகக் குறைந்த அளவு ஆடையை அணிந்து கொண்டு இருந்திருக்கிறார்கள். மார்க்கோபோலோ, ஐரோப்பிய மக்களின் ஆடை அணியும் முறையைப் பார்த்துப் பழக்கப்பட்டவர். ஐரோப்பிய மக்களின் ஆடை முறையோடு பாண்டிய நாட்டு மக்களின் ஆடை முறையை

ஒப்பிட்டுப் பார்த்ததும் மார்க்கோபோலோவிற்கு அதிர்ச்சியாக இருந்திருக்கும். ஆகவேதான் அவர் பாண்டிய நாட்டு மக்கள் நிருவாணமாகத் திரிகிறார்கள் என்று சொல்லிவிட்டார்.

## ஆண்களின் ஆடைகள்

மதிப்பிற்கும், தேவைகளுக்கும் ஏற்ப ஆண்களின் ஆடைப் பழக்கம் பலவிதமாக இருந்தது. போர் செய்வதற்கு ஏற்ற வகையில் படைவீரர்களின் ஆடைகள் அமைந்திருந்தன. பிராமணர்கள் இரண்டு பருத்தி ஆடைகளை அணிந்தனர். ஒரு பருத்தி ஆடையை இடுப்பைச் சுற்றி அணிந்து கொண்டனர். மற்றொரு ஆடையைக் கழுத்தைச் சுற்றி மேலுடம்பை மறைக்குமாறு அணிந்து கொண்டனர். கோயில்களில் வழிபாடு செய்கின்ற போது அந்த மேலாடையை எடுத்து இடுப்பைச் சுற்றி அணிந்து கொண்டனர். இப்படி அணிந்துகொள்வது தெய்வத்திற்கு மதிப்பு கொடுப்பதற்கேயாகும். அரசரும், அரசர் குடும்பத்தைச் சார்ந்தவர்களும், அரசவையிலிருந்த அதிகாரிகளும், உயர்ந்த, நேர்த்தியான பருத்தி ஆடைகளையும் பட்டு ஆடைகளையும் அணிந் தனர். திருச்சி மாவட்டம் ஜம்புகேஸ்வரம் சிவன்கோயிலில் காணப்படும் முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியனின் கல்வெட்டு மூன்று வகையான பட்டுகளைக் குறிப்பிடுகிறது. அவையாவன : புலியூர் பூம்பட்டு, செந்திலானிப் பட்டு, ஆரியன் தேவாங்குப்பட்டு என்பன.[212]

## பெண்களின் ஆடைகள்

பாண்டியப் பெருவேந்தர் காலத்துச் சிற்பங்கள் பலவும் தமிழ்நாட்டுக் கோயில்களில் உள்ளன. இச்சிற்பங்களிலிருந்து பெண்கள் மேலாடை ஏதும் அணியவில்லை என்றும் கீழாடை மட்டுமே அணிந்திருந்தனர் என்றும் தெரிய வருகிறது. இருந்த போதிலும் சமகாலத்து இலக்கியங்களில் பெண்கள் கச்சு அல்லது வார் என்ற மேலாடையை அணிந்ததாகக் குறிப்பு உள்ளது.[213] இந்தப் பாண்டியர் காலத்துப் பெண்கள் தம் உடல் முழுவதையும் மறைத்துக் கொள்ளும் வகையில் புடவை அணிந்தனர். ஆனால் புடவை அணிந்திருக்கும் சிற்பங்கள் ஏதும் நமக்குக் கிடைக்கவில்லை.

## வீடுகள்

சாதி, தொழில்கள் ஆகியவற்றின் அடிப்படையில் மக்கள் ஓரிடத்தில் குடியிருப்பை அமைத்துக் கொண்டனர். பிராமணர்கள், வியாபாரிகள், விவசாயிகள், படைவீரர்கள், கைவினைப் பொருட்கள் தயாரிக்கும் கலைஞர்கள் ஆகியோர் நகரங்களிலும், கிராமங்களிலும் தனித்தனிக் குடியிருப்பில் வாழ்ந்தனர்.[214] இந்தத் தனிக் குடியிருப்பு அமைப்பு என்பது அக்காலத்திலிருந்த சாதிப் பற்றை நமக்குத் தெள்ளத்தெளிவாகக் காட்டுகிறது.

அரசருக்குத் தலைநகரத்தில் மட்டுமன்றிப் பேரரசின் பல முக்கிய நகரங்களிலும் அரண்மனைகள் இருந்தன.[215] ஒவ்வொரு அரண்மனையிலும் பல மண்டபங்களும், குடியிருப்புகளும் இருந்தன.[216] நகரங்களில் இருந்த பெரும்பான்மையான வீடுகள் சுட்ட செங்கற்களினாலும், சாந்தினாலும் கட்டப்பட்டிருந்தன. இவ்வீடுகள் அளவில் பெரியதாக இருந்தன. திறந்த வெளியுடன் காணப்பட்டன. கிராமங்களில் பல வீடுகள் சிறியதாகவும் சில வீடுகள் பெரியதாகவும் இருந்தன. சிறிய வீடுகள் மண் சுவர்களையும் பனை ஓலை அல்லது வைக்கோலினால் மேற்கூரையையும் பெற்றிருந்தன. வீட்டின் தரை களி மண்ணினால் அமைந்திருந்தது. இதனைப் பசுவின் சாணத்தினால் மெழுகிச் சுத்தமாகவும், அழகாகவும் வைத்திருந்தனர். இப்படிப்பட்ட சிறிய வீடுகளில் ஏழைகள் வாழ்ந்தனர்.[217] கிராமங்களில் இருந்த பணக்காரர்களின் வீடுகள் செங்கற்களினால் சுவர்களையும், ஓட்டினாலமைந்த மேற்கூரையையும் பெற்றிருந்தன.[218]

## நகைகள்

கல்வெட்டுகளிலும் அக்கால இலக்கியங்களிலும் பாண்டியப் பெருவேந்தர் காலத்தில் பயன்படுத்தப்பட்ட நகைகளின் பெயர்கள் குறிப்பிடப்பட்டுள்ளன. இவற்றில் பெரும்பான்மையான நகைகள் தங்கத்தால் செய்யப்பட்டன. நவ இரத்தினங்களாலும் வெள்ளியாலும் சில நகைகள் செய்யப்பட்டிருந்தன. இந் நகைகளை ஒத்த பல நகைகளை இன்றைக்கும் நாம் பயன்படுத்தி வருகிறோம். பாண்டியப் பெருவேந்தர் காலத்தில் பயன்படுத்தப்பட்ட சில நகைகள் தற்போது அணியப்படுவதில்லை. சில நகைகளின் பெயர்கள் தற்போது மாற்றமடைந்துள்ளன.

இரண்டாம் சடையவர்மன் குலசேகரனின் சேரமாதேவிக் கல்வெட்டு அரண்மனையைச் சார்ந்த பணிப்பெண் ஒருத்தி இவ்வூர்க் கோயிலுக்குக் கொடுத்த நகைகளின் பட்டியலைக் குறப்பிடுகிறது.[219] இக் கல்வெட்டில் குறிப்பிடப்பட்டுள்ள நகைகள் பின் வருமாறு :

1. கால்வடம் (காலில் அணியும் வளையம்)
2. பாடகம் (மகளிர் காலில் அணியும் ஆபரணம்)
3. காரை (கழுத்தில் அணியும் அட்டிகை)
4. ஆரம் (தங்கத்தினாலான சங்கிலி)
5. மாங்கிலியம் (திருமணமான பெண்கள் அணியும் தாலி)
6. பட்டைக் காரை (கழுத்தைச் சுற்றி அணியும் வளையம்)
7. தோடு (காதில் அணியும் வளையம்)
8. வாளி (காதில் அணியும் மற்றொரு நகை)
9. பஞ்ச சரம் (ஐந்து புரிகள் கொண்ட சங்கிலி)

10. தாழி வடம் (நீண்ட சங்கிலி)

புதுக்கோட்டை மாவட்டம், திருவரங்குளம் கல்வெட்டு வேறு இரண்டு நகைகளின் பெயர்களைக் குறிப்பிடுகிறது.[220] இக் கல்வெட்டில் குறிப்பிடப்பட்டுள்ள திருமேகலை என்ற நகை இடுப்பைச் சுற்றி அணியும் பட்டை போன்ற நகையாகும். இந்நகை இடுப்பிலிருக்கும் ஆடை நழுவாமல் கட்டுவதற்குப் பயன்பட்டது. மற்றொரு நகையான திருப்பாட்டம் என்பது நீண்டு குறுகிய தகடு போன்ற நகையாகும். இந்நகை நெற்றியைச் சுற்றி அணிந்து கொள்ளப்பட்டது.

பாண்டியப் பெருவேந்தர் காலத்துக் கல்வெட்டுகளில் அரசர் களும் மக்களும் கோயில்களுக்குத் தானமாக அளித்த பல நகைகள் குறிப்பிடப்பட்டுள்ளன. இதே நகைகளை அக்காலக் கட்டத்தில் மக்களும் அணிந்தனர் எனக் கருதுவதில் தவறொன்றும் இல்லை. அக்காலத்து இலக்கியங்களாகிய கப்பற்கோவையும், தஞ்சைவாணன்கோவையும், குலசைவுலாவும், ஏராளமான நகைகளைப் பற்றிக் குறிப்பிடுகின்றன. அக்காலத்துச் சிற்பங்களைப் பார்த்தும் பாண்டியர்கால மக்கள் பயன்படுத்திய நகைகளை அறிந்துகொள்கிறோம். அத்தகைய நகை களில் சில பின்வருமாறு :

### 1. காதணிகள்

ஆண்கள், பெண்கள், குழந்தைகள் ஆகிய அனைவரும் காதணிகளை அணிந்தனர். இக்காதணிகள் குழை,[221] ஓலை,[222] தோடு[223] என அழைக்கப்பட்டன. ஓலை, தோடு என்ற இரண்டு நகைகளும் அதே பெயர்களுடன் இன்றளவும் திகழ்கின்றன. பாண்டியப் பெருவேந்தர் சிலைகள் சிதம்பரம், குடுமியான்மலை, திருநெல்வேலி ஆகிய இடங்களில் காணப்படுகின்றன. இந்தச் சிலைகளில் காதணிகள் மிகத்தெளிவாக வடிவமைக்கப்பட்டிருக்கின்றன.

### 2. தோள் வளைகள்

பாண்டியப் பெருவேந்தர் காலச் சிற்பங்களில் பலவிதமான தோள்வளைகள் காட்டப்பட்டிருக்கின்றன. இந்தத் தோள்வளை, தோளுக்கு அருகில் முன்னங்கையில் அணியப்பட்டது. இதனை ஆண்களும், பெண்களும் அணிந்தனர். இந்தத் தோள்வளை அக்கால இலக்கியங்களில் கடகம் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது.

### 3. வளையல்

இந்த நகை வளைவாக இருப்பதனால் இதனை வளை என இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன.[224] வளைகள் தங்கத்திலும் கிழிஞ்சல்களிலும் செய்யப்பட்டன. பெண்களின் சிற்பங்களில் இந்நகை மணிக்கட்டைச் சுற்றிக் காட்டப்பட்டுள்ளது.

### 4. கழுத்தணி

ஆண்களும், பெண்களும் கழுத்தணிகள் அணிந்திருந்தனர் என்பது இந்தப் பாண்டியர் காலத்திய சிற்பங்களிலிருந்து தெரிய வருகிறது. இந்த நகை தங்கத்திலும், நவரத்தினங்களிலும் செய்யப்பட்டுள்ளது. இதனை அக்காலத்து இலக்கியங்களில் முத்துவடம்[225] என்றும் முத்தாரம்[226] என்றும் குறிப்பிடுகின்றனர். மார்க்கோபோலோ என்ற வெளிநாட்டுப் பயணி தனது பயணநூலில் இந்த நகையைக் குறிப்பிட்டுள்ளார்.[227]

### 5. கால் நகைகள்

பாண்டியர் காலத்தில் நூபுரம்,[228] சிலம்பு,[229] கிண்கிணி,[230] கழல்[231] ஆகிய அணிகள் காலில் அணிந்து கொள்ளப்பட்டன. நூபுரம் என்ற நகை கணுக்காலில் படியுமாறு அணியப்பட்டது. சிலம்பு என்ற நகை தங்கத்திலும், வெள்ளியிலும் செய்யப்பட்டது. இது கூடாகச் செய்யப்பட்டு இதனுள் முத்துகள், மாணிக்கங்கள் இடப்பட்டன. மேலே குறிப்பிடப்பட்டுள்ள நூபுரம், சிலம்பு ஆகிய இரண்டு நகைகளைப் பெண்கள் மட்டுமே அணிந்தனர். கிண்கிணி என்ற கால்நகையை ஆண்களும், பெண்களும் அணிந்தனர். இது வட்டவடிவத்தில் வெள்ளியில் செய்யப்பட்டிருந்தது. இதில் சிறிய மணிகள் இணைக்கப் பட்டிருந்தன. இந்த நகையை அணிந்தவர் நடந்தபொழுது மெல்லிய இனிய ஒசையை இந்த மணிகள் எழுப்பின. ஆண்கள் காலில்அணிந்த ஒரு வகை நகை கழல் எனப்பட்டது.

### 6. தாலி

தங்கச் சங்கிலியில் புலிப்பல்லை இணைத்துச் செய்யப்பட்ட நகை புலிப்பல்தாலி என அழைக்கப்பட்டது. இந்த நகையைக் குழந்தைகளுக்கும் அணிவித்தனர்.[232] இந்தத் தாலி திருஷ்டியிலிருந்தும் பேய், பிசாசுகளிலிருந்தும் குழந்தைகளைக் காப்பாற்றும் என மக்கள் நம்பினர். மாங்கல்ய தாலி என்ற நகை திருமணமான பெண்கள் கட்டாயமாக அணியவேண்டிய நகையாக இருந்தது. இந்த நகையை மணமான பெண்கள் தங்கள் கணவன்மார்கள் உயிரோடு இருக்கின்றவரைக்கும் எப்போதும் அணிந்துகொள்ள வேண்டும் என்ற நியதி இருந்தது. இந்த நகை திருமணமான பெண்களுக்கு ஓர் அடையாளமாகத் திகழ்ந்தது. விதவைப் பெண்கள் இந்த மாங்கல்ய தாலியை அணிந்துகொள்ளக் கூடாது என்ற நியதி இருந்தது.

பாண்டியர்கால இலக்கியங்களில் மேலும் சில நகைகள் சொல்லப்பட்டுள்ளன. அவற்றில் குறிப்பிடத்தக்கவை : 1. வீரச்சங்கிலி[233] (ஆண்கள் மார்பின்மீது குறுக்கே அணிந்த பட்டையான நகை)

2. சதங்கை[234] (இது ஒருவகை காற்சிலம்பு ஆகும்) 3. மூக்குத்தி[235] (மூக்கில் அணிந்த தோடாகும்). பாண்டியநாட்டு மக்கள் நகைகள் செய்யப் பல வகையான முத்துகளைப் பயன்படுத்தினர். வட்டம் என்ற அணி, முத்து வடிவத்தில் வட்டமாக இருந்தது. அனுவட்டம் என்ற முத்து, சற்று வளைந்த வட்டவடிவத்தில் காணப்பட்டது. ஒப்புமுத்து என்ற முத்து பள்ளம் உடைய முத்தாகும். குறுமுத்து என்பது அளவில் சிறியதாக இருந்த முத்தாகும்.[236]

## வாசனைத் திரவியங்களும் மலர்களும்

ஆண்களும் பெண்களும் வாசனைத் திரவியங்களையும் வாசனைப் பொருட்களையும் பயன்படுத்தினர். பெண்கள் இவற்றை மிக விரும்பிப் பயன்படுத்தினர். பாண்டியர் காலப் பெண்கள் குங்குமப்பூ அல்லது சந்தனத்தைத் தங்கள் மார்பின் மீது பூசிக்கொண்டனர்.[237] இவர்கள் அகில் புகையில் தங்கள் தலைமுடியைக்காட்டி அதனை நறுமணப்படுத்திக் கொண்டனர்.[238] வாசனை மலர்களை அழகிற்காகவும், மணத்திற்காகவும் சூட்டிக்கொண்டனர்.[239] கண் இமைகளின் மீது அழகிற்காகக் கருப்பு மையைப் பூசிக்கொண்டனர்.[240] இவர்கள் தங்களை அழகுபடுத்திக் கொள்வதற்குக் கண்ணாடியைப் பயன்படுத்தினர் எனத் தஞ்சைவாணன்கோவை குறிப்பிடுகிறது.[241]

## பழக்க வழக்கங்கள்

பாண்டிய மக்களிடம் வெற்றிலை போடும் வழக்கம் இருந்தது. வெற்றிலையுடன் சுண்ணாம்பு, பாக்கு ஆகியவற்றைச் சேர்த்துப் பயன்படுத்தினர். மார்க்கோபோலோ, இந்தப் பழக்கம் பற்றிப் பின்வருமாறு குறிப்பிடுகிறார் : 'காயல் நகரத்தில் வாழும் மக்களும் இந்தியாவின் மற்ற இடங்களில் வாழும் மக்களைப் போல வெற்றிலை போடும் பழக்கத்தைக் கொண்டிருக்கின்றனர். இந்தப் பழக்கத்தைத் 'தாம்பூலம் தரித்தல்' எனச் சொல்கிறார்கள். இவர்கள் வெற்றிலையை மென்று அதன் மூலம் வரும் எச்சிலைத் துப்புகிறார்கள். அரசர்கள், செல்வர்கள், சாதாரண மக்கள் அனைவரும் வெற்றிலை போடும் பழக்கத்தைக் கொண்டிருக்கின்றனர். இப்பழக்கம் உடல் நலத்திற்குச் சிறந்தது என்று சொல்கிறார்கள்'.[242]

ஒரு நபர் மற்றொரு நபரை அவமானப்படுத்த இந்த வெற்றிலைச் சாற்றை (எச்சிலை) அவர்மீது துப்பும் பழக்கம் இருந்தது. இப் பழக்கத்தைப் பற்றி மார்க்கோபோலோ பின்வருமாறு குறிப்பிடுகிறார்:

'ஒரு நபர் மற்றொரு நபரை அவமானப்படுத்த, மென்ற வெற்றிலையை அல்லது அதன் சாற்றை அவர்மீது துப்புகிறார். இதனால்

அவமானப்பட்ட நபர் அரசரிடம் சென்று தனக்கு ஏற்பட்ட அவ மானத்தைச் சொல்லி இப்படி அவமானப்படுத்திய நபரை எதிர்த்துச் சண்டை செய்ய அனுமதி கேட்கிறார். உடனே அரசர் இவ்விரு நபர்களுக்கும் போர்க்கருவிகளாகிய வாள், கேடயம் ஆகியவற்றைக் கொடுக்கிறார். இச் சண்டையைப் பார்க்க அப்பகுதியில் வாழும் மக்கள் அனைவரும் கூடுகின்றனர். இச்சண்டையின்போது கத்தியின் முனையைப் பயன்படுத்தக் கூடாது என்ற விதிமுறை இருக்கிறது. இந்தச் சண்டை இருவரில் ஒருவர் இறக்கின்றவரை நடக்கிறது'.[243]

பாண்டிய நாட்டுப்போர் முறை பற்றி மார்க்கோபோலோ தரும் செய்திகள் பின் வருமாறு :

'பாண்டிய நாட்டுப் படைவீரர்கள், இடையில் ஒரு சிறிய ஆடையை அணிந்து கொண்டு நிர்வாணத் தோற்றத்துடன் போர்க்களம் செல்கின்றனர். வாளும் கேடயமும் ஏந்திக் கொண்டு இவர்கள் போர்க்களம் செல்கின்றனர். போரில் இவர்கள் விலங்குகளையும், பறவைகளையும் கொல்வதில்லை. ஆனால் இவர்கள் மாமிசத்தை உண்கின்றனர். அம்மாமிசத்திற்காகப் பறவைகளையும், விலங்கு களையும் இவர்கள் கொல்வதில்லை. இஸ்லாமியர்களை நியமித்து அவர்களைக் கொண்டு உணவுக்குத் தேவையான பறவைகளையும் விலங்குகளையும் கொல்கின்றனர்'.[244]

மேலும் மார்க்கோபோலோ எழுதுகிறார் :

'பாண்டிய நாட்டு ஆண்களும் பெண்களும் ஒவ்வொரு நாளும் இரண்டு முறை குளிக்கிறார்கள். இப்படிக் குளிக்காதவர்களை அசுத்தமானவர்கள் என்று கேவலமாக மற்றவர்கள் பார்க்கின்றனர். இவர்கள் வலது கையினால் சாப்பிடுகிறார்கள், எக்காரணத்தைக் கொண்டும் இடது கையினால் உணவுப் பொருட்களைத் தொட மாட்டார்கள். உடலின் இரகசியப் பகுதிகளைத் தூய்மைப்படுத்துவதற்கு இடது கையைப் பயன்படுத்துகின்றனர். ஒரு குடும்பத்தில் உள்ள ஒவ்வொரு நபருக்கும் தனித்தனி நீர் அருந்தும் பாத்திரம் இருக்கிறது. ஒருவரின் நீர் அருந்தும் பாத்திரத்தை மற்றொருவர் பயன்படுத்துவ தில்லை. நீரை அருந்தும் போது அப்பாத்திரத்தின் விளிம்பு உதடுகளில் படாதவாறு பாத்திரத்தை உயரத் தூக்கிவைத்துக் கொண்டு நீர் அருந்துகின்றனர். அறிமுகம் இல்லாதவர்களுக்கு நீரைப் பாத்திரத்தில் கொடுப்பதில்லை. அவர்கள் தங்கள் கைகளையே கோப்பை வடிவில் அமைத்துக் கொண்டு அதில் நீரை வாங்கிக் குடிக்கின்றனர்.[245]

குழந்தை பிறந்ததும் இம்மக்கள், அக்குழந்தை பிறந்த நேரம், நாள், ஆண்டு ஆகியவற்றைக் குறிக்கின்றனர். ஏனெனில் பிறந்த நேரத்தின் அடிப்படையிலேயே வாழ்க்கையில் நன்மை, தீமைகள் நடப்பதாக இம்மக்கள் நம்புகின்றனர்'.[246]

பெரும்பற்றப்புலியூர்நம்பி எழுதிய திருவிளையாடல் புராணத்தில் பாண்டிய நாட்டு மக்களின் சில விசித்திரமான பழக்க வழக்கங்கள் குறிப்பிடப்பட்டுள்ளன. தனது நெருங்கிய உறவினர் அல்லது நண்பர் சொல்லும் ஒரு வேலையை நினைவு வைத்துக் கொள்ள இவர்கள் தங்களின் வேட்டியின் முனையில் ஒரு முடிச்சைப் போட்டு வைத்துக் கொள்கிறார்கள். அந்த முடிச்சைப் பார்த்ததும் அவர்களுக்கு அந்த நண்பர் அல்லது உறவினர் சொன்ன வேலை நினைவுக்கு வரும்.[247] திருவிழா நாட்களில் இம்மக்கள் மகிழ்ச்சியோடு கடலில் குளிக்கிறார்கள். பின்னர் அவர்கள் கடல் நீரில் பொரியையும், மலர்களையும் மிதக்க விட்டு அதைக் கண்டு மகிழ்கின்றனர்.[248] சைவர்கள் தும்முகின்ற போது 'சிவ..சிவ' என்ற புனித மந்திரத்தைச் சொல்கின்றனர்.[249]

பாண்டிய நாட்டு மக்கள், கிரகங்கள் மனித வாழ்க்கையின் நன்மை, தீமைகளை நிர்ணயிப்பதாக நம்பினர். இக்கிரகங்களின் பாதிப்பிலிருந்து தம்மைப் பாதுகாத்துக் கொள்ள இம்மக்கள் நிலங்களைத் தானமாகக் கோயில்களுக்கு வழங்கினர். புதுக்கோட்டை மாவட்டம் விரையாச்சிலையில் காணப்படும் கல்வெட்டு , சூரக்குடியைச் சார்ந்த விசயாலயத்தேவன் என்பவன் தனக்குச் செவ்வாய் கிரகத்தினால் ஏற்பட்ட தோசத்தைப் போக்கிக் கொள்ள விரையாச்சி சிவன் கோயிலுக்கு நிலத்தானம் கொடுத்துத் தன் பெயரில் ஒரு சந்தியை ஏற்படுத்தினான் எனக் குறிப்பிடுகிறது.[250] இம்மக்கள் சனிக்கிழமையை ஒரு துரதிர்ஷ்டமான கிழமை எனக் கருதினர். காங்கேயன் என்ற அரசாங்க அதிகாரியின் பிறந்த நாள் சித்திரை மாதம் சனிக்கிழமை என்பதனால் இதற்குப் பிராயச்சித்தமாக இந்த அதிகாரி கோயிலுக்குத் தானங்கள் செய்தான்.[251] பேய்களும், பிசாசுகளும் நடு இரவில் தெருக்களில் நடமாடும் என இம்மக்கள் நம்பினர்.[252] காகங்கள் கரைந்தால் விருந்தினர் வருவர் என்றும் இவர்கள் நம்பினர்.[253]

## அஞ்சினான் புகலிடம்

அச்சத்தின் காரணமாகவோ துன்பத்தின் காரணமாகவோ மக்கள் தங்கள் குடியிருப்புப் பகுதியை விட்டு வெளியேறி 'அஞ்சினான் புகலிடத்திற்கு' வந்து தங்கினர். இப்படித் தங்கிய மக்களுக்கு வரிச் சலுகைகள் கொடுக்கப்பட்டன. திருவண்ணாமலை மாவட்டம் தெள்ளாறு சிவன் கோயிலில் காணப்படும் மாறவர்மன் விக்கிரம பாண்டியனின் (கி.பி.1283) கல்வெட்டு, தெள்ளாற்றில் இருந்த அஞ்சினான் புகலிடத்தில் வந்து தங்கியிருந்த மக்களுக்குச் சலுகைகள் கொடுக்கப் பட்டதாகக் குறிப்பிடுகிறது.[254] அச்சலுகைகள் பற்றிய முழு விவரம் இக் கல்வெட்டில் குறிப்பிடப்படவில்லை. இதே போன்ற மற்றொரு கல்வெட்டு வேலூர் மாவட்டம் இடைப்பாறை என்ற இடத்தில் கிடைத்துள்ளது. இக்கல்வெட்டு மாறவர்மன் பராக்கிரமன் காலத்தில்

வெளியிடப்பட்டது. இந்த இடைப்பாறை என்ற ஊரைக் குறுநில மன்னனாகிய குலசேகர காங்கேயராயன், அஞ்சினான் புகலிடமாக மாற்றி அங்குக் குடியேறிய கைக்கோளர்கள்,செட்டிகள் போன்றோரிடம் குறைந்த வரி வசூலித்ததாக இக்கல்வெட்டு குறிப்பிடுகிறது.[255]

சுசீந்திரம் கோயிலில் காணப்படும் ஒரு கல்வெட்டு சுசீந்திரம் கோயிலைச் சுற்றி ஓர் அஞ்சினான் புகலிடம் அமைக்கப் பட்டதாகக் குறிப்பிடுகிறது.[256] வெள்ளக்காலங்களிலும் வறட்சிக் காலங்களிலும் மக்கள் தற்காலிகமாக இந்த அஞ்சினான் புகலிடத்தில் வந்து தங்கினர். முதலாம் மாறவர்மன் குலசேகரனின் திருவில்லிபுத்தூர்க் கல்வெட்டு இவ்வூரின் வடபெருங்கோயில், சூடிக்கொடுத்தருளிய நாச்சியார் கோயில், கிராமச் சபை ஆகியவை இப்பகுதியில் இருந்த பல நாடுகளைச் (நிருவாகப் பிரிவு) சார்ந்த மக்களுக்கு வெள்ளக்காலத்திலும் வறட்சிக் காலங்களிலும் அஞ்சினான் புகலிடம் அமைத்துக் கொடுத்ததாகக் குறிப்பிடுகிறது.[257]

## உதிரப்பட்டி

பொதுத் தொண்டு செய்தபோது இறந்த நபரின் குடும்பங்களுக்கு அவரின் உயிரிழப்பிற்கு ஈடாக நிலம் கொடுக்கப்பட்டது. இப்படிக் கொடுக்கப்பட்ட நிலம் 'உதிரப்பட்டி' என அழைக்கப்பட்டது.[258] இராமநாதபுரம் மாவட்டம் கருங்குளத்தைச் சார்ந்த பெருந்தேவப் பள்ளன் என்பவன் இவ்வூரின் குளத்தில் நீர் அதிகமாகி உடைப்பு ஏற்பட்ட சமயத்தில் அதை அடைக்கும் பணியைச் செய்த போது தனது உயிரை இழந்தான். தன் ஊரின் நலனுக்காகத் தனது இன்னுயிரை இழந்த பெருந்தேவப்பள்ளனுக்கு இவ்வூர் மக்கள் கி.பி.1302இல் ஒரு நினைவுக் கல்லை நட்டுப் பெருமதிப்பளித்தனர். மேலும் இவனது மக்களுக்கு உதிரப்பட்டியாக நிலமும் கொடுத்தனர்.[259]

கடலூர் மாவட்டம் அரகண்டநல்லூர் சிவன் கோயிலில் காணப்படும் மூன்றாம் சடையவர்மன் சுந்தரபாண்டியனின் (கி.பி.1303) கல்வெட்டும் உதிரப்பட்டி பற்றிக் குறிப்பிடுகிறது. இக்கோயிலில் பணிபுரிந்த தேவரடியாள் பொன்னாண்டையின் மகன் இளவெண்மதி சூடினான் என்பவன் இக்கோயிலின் மண்டபம் ஒன்று கட்டி முடிக்கப் பட்டால் தனது தலையை அறுத்துக் கொண்டு உயிரை விடுவதாகச் சபதம் எடுத்துக் கொண்டான். அந்த உறுதிமொழிக்கு இணங்க அவன் அம்மண்டபம் கட்டி முடிக்கப்பட்டதும் தன் தலையைத் தானே வெட்டிக் கொண்டு உயிரிழந்தான். இந்த மண்டபம் வெகு காலம் கட்டி முடிக்கப்படாத நிலையில் இருந்திருக்க வேண்டும். அதைக் கட்டி முடிப்பது ஒரு கடினமான செயல் என்று கருதிய அவன், கடவுளின் அருளினைப் பெற வேண்டியும் இத்திருப்பணி முடிக்க வேண்டியும் தனது உயிரையே கடவுளுக்குக் காணிக்கையாக்கியிருக்கிறான். இவன்

இறந்ததும் இவனது குடும்பத்தினருக்கு இவ்வூரின் கிராமச் சபை 1000 குழி நிலத்தை உதிரப்பட்டியாகக் கொடுத்தது.[260]

ஓர் ஆண்மகன் தனது தலையைத் தானே அறுத்துக் கொள்வது போல ஒரு கற்பலகைச் சிற்பம் இக்கோயிலுக்கு அருகில் உள்ள தெருவில் நடப்பட்டுள்ளது. இந்தச் சிற்பத்தில் காட்டப்பட்டுள்ள ஆண்மகன் இளவெண்மதி சூடினானாகத்தான் இருக்க வேண்டும்.

கோயில் திருப்பணி செய்த போது காயங்கள் பெற்றவர்களுக்கும் தவறான தீர்ப்புகளினால் மன உளைச்சல் பெற்றவர்களுக்கும் உதிரப் பட்டி கொடுக்கப்பட்டது. புதுக்கோட்டை மாவட்டம், காரமங்கலம் சிவன் கோயிலில் குலசேகரன் என்ற ஓர் அரசனின் கல்வெட்டு காணப்படுகிறது. இக்கோயிலில் ஒரு மண்டபத்தைச் செப்பனிடும் பணியைச் செய்த போது அரங்குளவன் என்ற கல்தச்சன் கீழே விழுந்து விபத்துக்குள்ளாகிப் பெரிய காயம் பெற்றான். இந்தக் காயத்திற்கு ஈடு செய்யும் வகையில் அக் கல்தச்சனுக்கு உதிரப்பட்டியாக நிலம் வழங்கப்பட்டது.[261]

இராமநாதபுரம் மாவட்டம், திருப்பத்தூர்க் கல்வெட்டும் உதிரப்பட்டி பற்றிச் சில செய்திகளைக் கூறுகிறது. மணமான ஒரு பிராமணப் பெண் நஞ்சு குடித்து இறந்து போனாள். அவள் இறப்பிற்கு அவளது கணவன் சுந்தரபாண்டியப் பட்டனே காரணம் எனக் கருதினர். ஆகவே அப்பிராமணனை அழைத்து விசாரித்து அவனுக்கு மன உளைச்சலையும் துன்பத்தையும் கொடுத்தனர். அவனது நற்பெயருக்கு இழுக்கு ஏற்படுத்தினர். பின்னர் எந்தவிதத்திலும் அவளது மனைவியின் இறப்பிற்கு அவன் காரணமில்லை என்பது தெளிவாகத் தெரிய வந்தது. ஆகவே இந்தப் பிராமணனுக்கு ஏற்பட்ட மனநிம்மதி இழப்பிற்கு ஈடாக இக்கோயிலைச் சார்ந்த கைக்கோளர்கள் உதிரப்பட்டியாக நிலம் வழங்கினர்.[262]

## மனித உயிர்ப் பலி

மனிதர்கள் தங்களது உயிரைத் தெய்வத்திற்குப் பலி கொடுத்தனர், இவர்களின் நினைவாக நினைவுக் கற்கள் (சாவாங் கல்லு)நடப்பட்டன. மதுரை மாவட்டம்,நிலக்கோட்டை வட்டம், சோழவந்தானுக்கு அருகிலுள்ள தென்கரை மூலநாத சுவாமி கோயில் கிழக்கு வாயிலுக்கு அருகில் பாண்டியப் பெருவேந்தர் காலத்தைச் சார்ந்த ஒரு கற்பலகை காணப்படுகிறது. இக் கற்பலகையில் ஒரு படைவீரன் தனது தலைமுடியைத் தன் இடது கையினால் பிடித்துக் கொண்டு தன் வலக் கையிலுள்ள வாளினால் தனது கழுத்தை அறுத்துக் கொள்வது போல் காட்டப்பட்டிருக்கிறது. இந்தக் கற்பலகைச் சிற்பம் பாண்டியப் பெருவேந்தர் காலத்தில் இறைவன் பெயரில் மனித உயிர்கள் பலியிடப்பட்டன என்பதற்குச் சான்றாக அமைந்துள்ளது.[263]

## வீரக் கல்

தனி நபர்களின் சாதனைகளை நினைவுபடுத்தும் வகையில் வீரக் கற்கள் நடப்பட்டன. இந்த வீரக் கற்கள் நடுகற்கள் என்றும் அழைக்கப் பட்டன. இக்கற்கள் இறந்தவரின் சடலம் புதைக்கப்பட்ட இடத்தில் அல்லது அவர் சாதனை செய்த இடத்தில் நடப்பட்டது.[264] தர்மபுரி மாவட்டம், உச்சினப்பள்ளி என்ற ஊரில் காணப்படும் பாண்டியப் பெருவேந்தர் காலத்துக் கல்வெட்டு வீரக்கல் பற்றிக் குறிப்பிடுகிறது. இக்கிராமத்து மக்களுக்குப் பல தொல்லைகள் கொடுத்து வந்த பன்றி ஒன்றை இவ்வூரின் ஆண் மகன் ஒருவன் கொன்றான். இப்பன்றியைக் கொல்லும் போது ஏற்பட்ட படுகாயத்தினால் அவன் இறந்து போனான். அவனின் நினைவாக இவ்வூரில் மக்கள் ஒரு வீரக்கல்லை நட்டனர்.[265]

## அடிக்குறிப்புகள்

1. K.A.N. Sastri, A History of South India, pp. 313 - 314.
2. சுந்தரபாண்டிய சதுர்வேதி மங்கலம், குலசேகர சதுர்வேதி மங்கலம், விக்கிரம பாண்டிய சதுர்வேதி மங்கலம், உலக முழுதுடையாள் சதுர்வேதி மங்கலம், அவனி முழுதுடையாள் சதுர்வேதி மங்கலம், புவன முழுதுடையாள் சதுர்வேதி மங்கலம், காங்கேயராயன் சதுர்வேதி மங்கலம், சிவகாமசுந்தரி சதுர்வேதி மங்கலம், கொல்லம் கொண்ட பாண்டிய சதுர்வேதி மங்கலம், சோழ குலாந்தக சதுர்வேதி மங்கலம்.
3. ஏ.ஆர்.இ., 1907, எண். 506.
4. ஏ.ஆர்.இ., 1921, எண். 494.
5. ஏ.ஆர்.இ., 1954-55, எண். 375.
6. ஏ.ஆர்.இ.,1967-68, எண். 150.
7. பி.எஸ்.ஐ., எண். 269.
8. ஏ.ஆர்.இ.,1926, எண். 557.
9. ஏ.ஆர்.இ.,1960-61, எண். 21.
10. பி.எஸ்.ஐ.,எண். 272.
11. ஏ.ஆர்.இ.,1924, எண். 86-87.
12. ஏ.ஆர்.இ., 1928-29, பத்தி. 12.
13. கே.வி.இராமன், பாண்டியர் வரலாறு, பக். 156.
14. ஏ.ஆர்.இ.,1916 எண். 62 பத்தி. 28
15. ஏ.ஆர்.இ.,1913, பத்தி 44.
16. ஏ.ஆர்.இ.,1916, எண். 447.

17. ஏ.ஆர்.இ.,1941-42 எண். 279.
18. ஏ.ஆர்.இ.,1916 எண். 554.
19. ஏ.ஆர்.இ. , 1913, எண். 277; 1914, பத்தி.18.
20. ஏ.ஆர்.இ.,1955-56, எண்.322.
21. ஏ.ஆர்.இ.,1936-37, எண்கள். 42 மற்றும் 49.
22. ஏ.ஆர்.இ.,1921 , எண். 462.
23. ஏ.ஆர்.இ., 1916, எண். 334.
24. ஏ.ஆர்.இ.,1914, எண். 290.
25. ஏ.ஆர்.இ.,1909, எண். 467.
    K.A.N. Sastri, The Pandiyan Kingdom, p. 191
26. ஏ.ஆர்.இ., 1962-63, எண்.487.
27. இ.ஐ., தொகுதி 25,பக்.121 (திருப்புவனம் செப்பேடுகள்)
28. ஏ.ஆர்.இ., 1982, எண்கள்.179 மற்றும் 182
29. மேற்படி.
30. எஸ்.ஐ.ஐ., தொகுதி.8, எண்கள். 393 மற்றும் 396.
31. ஏ.ஆர்.இ.,1913 எண். 277; 1914. பத்தி.18.
32. ஏ.ஆர்.இ.,1961-62 எண். 168.
33. ஏ.ஆர்.இ.,1916, எண். 358.
34. ஏ.ஆர்.இ., 1937-38, எண். 358.
35. ஏ.ஆர்.இ. 1926-27, பத்தி 42.
36. பி.எஸ்.ஐ., எண்.601, ஏ.ஆர்.இ., பத்தி 23.
37. ஏ.ஆர்.இ., 1926-27, பத்தி. 42.
38. ஏ.ஆர்.இ.,1894,எண்.118, 1928-29, எண்.84, 1941-42, எண். 246.
39. ஏ.ஆர்.இ., 1955-56, எண். 246.
40. ஏ.ஆர்.இ. ,1916, எண்.667.
41. T.V. Mahalingam, South Indian polity, p 20.
42. ஏ.ஆர்.இ., 1914, பத்தி. 18.
43. ஏ.ஆர்.இ., 1937-38, எண். 3.
44. ஏ.ஆர்.இ.,1940-41, எண். 284.
45. ஏ.ஆர்.இ., 1913 எண். 332
46. எஸ்.ஐ.ஐ., தொகுதி-4 எண். 620.

47. ஏ.ஆர்.இ., 1892, எண்182, 1962-63, எண்கள்.570 மற்றும் 571.
48. எஸ். ஐ.ஐ., தொகுதி.4, எண். 455.
49. எஸ்.ஐ.ஐ., தொகுதி5. எண். 459, ஏ.ஆர்.இ. , 1894, எண். 166.
50. V.N. Hari Rao, History of the Srirangam Temple, p. 79.
51. ஏ.ஆர்.இ., 1946-47, எண். 42.
52. ஏ.ஆர்.இ., 1929-30, எண். 218.
53. இ.ஐ., தொகுதி 25, பக். 106.
54. ஏ.ஆர்.இ., 1929-30, எண். 273.
55. K.V. Raman, Some aspects of Pandiyan History, P. 47.
56. K.V. Raman, Op. cit. P. 48
57. இ.ஐ., தொகுதி 25, பக். 106.
58. Elliot and Dowson, History of India, Vol. III, P. 53.
59. Yule and cordier (Ed) Travels of Marco Polo, Vol. III, P. 339.
60. K.A.N. Sastri, Foreign Notices of South India, P. 165.
61. டி.டி.டி.ஐ., தொகுதி 1 பக் 68.
62. மார்க்கோ போலோ 'அச்சுதா' என்ற வார்த்தையை தவறாகப் 'பச்சுதா' எனப் புரிந்து கொண்டு எழுதியிருக்கிறார். மேலும் அவர் அந்தத் கழுத்தணியில் 108 மணிகள் இருந்தன என்பதை 104 மணிகள் இருந்ததாகத் தவறாகக் குறிப்பிட்டுள்ளார். 108 என்ற எண் இந்து மதத்தில் ஒரு புனித எண்ணாகும். ஆகவே தான் 108 முறை ஒரு மந்திரத்தைச் சொல்லும் வழக்கம் இருக்கிறது.
63. K.A.N. Sastri (Ed) Foreign Notices of South India, P. 164.
64. Ibid P. 165.
65. Elliot and Dowson, History of India, Vol. III, P. 33 - 34.
66. R.Rajalakshmi, Tamil Polity P. 46.
67. ஏ.ஆர்.இ., 1917, எண்.395, 1918. பத்தி.43.
68. K.A.N. Sastri, op.cit.p.165.
69. Elliot and Dowson, History of India Vol. Ip.9.
70. A.J. Thinakaran, The Second Pandiyan Empire, P. 180.
71. ஏ.ஆர்.இ., 1907, எண்.161., 1936-37, எண்கள்.7, 44 மற்றும் 50
72. தி.வை. சதாசிவபண்டாரத்தார், பாண்டியர் வரலாறு, பக்.144.
73. O.J.M.U. Vol. XLVI, No. 2, P. 73.

74. K.A.N. Sastri, The Colas, P. 319.
75. எஸ்.ஐ.டி.ஐ., தொகுதி 3, பகுதி. 2 , பக். 203.
76. எஸ்.ஐ.ஐ.தொகுதி8, எண்.442.
77. தாவளத்திலிருந் தன்மம் வளர்க்கும் செட்டி (எஸ்.ஐ.ஐ.,தொகுதி.8, எண்.442)
78. Thurston, Castes and Tribes of southern India Vol. V, P. 260
79. ஏ.ஆர்.இ., 1935-36, பத்தி.52.
80. சா. கணேசன், பிள்ளையார்பட்டி ஸ்தல வரலாறு, பக்.39, காரைக்குடி என்ற இடம் தற்போதுள்ள இராமநாதபுரம் மாவட்டத்திலுள்ள காரைக்குடி என்ற ஊரேயாகும்.
81. ஏ.ஆர்.இ., 1960-61, எண்.337.
82. ஏ.ஆர்.இ., 1960-61 பக்.23.
83. ஏ.ஆர்.இ., 1929-30 , எண்.350.
84. ஏ.ஆர்.இ., 1940-41, எண்.237.
85. ஏ.ஆர்.இ., 1926, எண்.613, பத்தி. 41.
86. ஏ.ஆர்.இ., 1962 -63, எண்.731.
87. ஏ.ஆர்.இ., 1916, எண்.571.
88. பி.எஸ்.ஐ.எண்.363.
89. ஏ.ஆர்.இ., 1935-36, எண்.125.
90. ஏ.ஆர்.இ., எண்.155.
91. பி.எஸ்.ஐ., எண்.302.
92. எஸ்.ஐ.ஐ., தொகுதி.8, எண்.442.
93. ஏ.ஆர்.இ., 1926, எண்.598, 1927, பத்திகள் 46-48.
94. ஏ.ஆர்.இ., 1959-60, எண்.389, 1914 எண்.407, 1916, எண்.586.
95. ஏ.ஆர்.இ., 1040-41, எண்.255.
96. ஏ.ஆர்.இ., 1961-62. எண்.255.
97. ஏ.ஆர்.இ.1936-37, எண்.42.
98. ஏ.ஆர்.இ.1940-41, எண்.242.
99. ஏ.ஆர்.இ.,1913, எண்.432.
100. ஏ.ஆர்.இ., 1914, பத்தி.23.
101. ஏ.ஆர்.இ. , 1909, எண்.315.

102. பி.எஸ்.ஐ., எண்318.
103. ஏ.ஆர்.இ., 1938-39 , எண்.191.
104. ஏ.ஆர்.இ.1936-37, எண்.236.
105. ஏ.ஆர்.இ.,1945-46, எண்.67.
106. சொக்கப்ப நாவலர் (பதிப்பாசிரியர்), தஞ்சைவாணன்கோவை, பக். 282.
107. தஞ்சை வாணன் கோவை. பா.266.
108. சொக்கப்ப நாவலர் (பதிப்பாசிரியர்) தஞ்சைவாணன் கோவை, முன்னுரை. பக்.15.
109. ஏ.ஆர்.இ., 1941-42, எண்.172.
110. ஏ.ஆர்.இ., 1941-42, எண்.91
111. ஏ.ஆர்.இ., 1937, எண்.209; 1900, எண்.117.
112. ஏ.ஆர்.இ., 1938 -39, எண்.189.
113. எஸ்.ஐ.ஐ. , தொகுதி.7; எண்.129, ஏ.ஆர்.இ., 1900, எண்.117; 1938-39, எண்.189
114. எஸ்.ஐ.ஐ., தொகுதி.8, எண்.353, ஏ.ஆர்.இ., 1903, எண்.75.
115. Q.J.M.U. Vol. XLIX P. 77
116. Burton Stein, Peasant State and Society in Medieval South India, P. 197
117. ஆர். நாகசாமி (பதிப்பாசிரியர்), தமிழ்நாட்டு வரலாற்றுக் கருத்தரங்கு, பக். 54-56.
118. Burton Stein, Op. cit. P. 248.
119. ஆர். நாகசாமி (பதிப்பாசிரியர்), தமிழ்நாட்டு வரலாற்றுக் கருத்தரங்கு , பக்.54.
120. T.V. Mahalingan, South Indian Polity, P. 143.
121. Q.J.M.U. Vol. XLIX; No. 2, P. 72.
122. ஏ.ஆர்.இ. , 1968-69, எண்.291, பி.எஸ்.ஐ., எண்.469
123. ஏ.ஆர்.இ., 1913, எண்.269.
124. ஏ.ஆர்.இ., 1914, பத்தி.21.
125. ஏ.ஆர்.இ., 1910, எண்.296.
126. T.V. Mahalingam, South Indian Polity, PP. 255-56.
127. ஏ.ஆர்.இ., 1916, எண்.248, பத்தி.28.
128. ஏ.ஆர்.இ., 1920, எண்.34

129. ஏ.ஆர்.இ.1927-28, எண்.126, பத்தி 21.
130. இடையர்களின் குலதெய்வமாகிய ஸ்ரீ கிருஷ்ணன் வாழ்ந்த இடமாகிய துவாரகையை இந்தக் குடியிருப்பின் பெயர் துவாரபதி நினைவுபடுத்துகிறது.
131. ஏ.ஆர்.இ., 1939-40 எண்.81. 1962-63, எண். 472.
132. ஏ.ஆர்.இ., 1939-40, எண்.92.
133. ஏ.ஆர்.இ., 1939-40, எண். 201, 1943-44 எண்.224; பி.எஸ்.ஐ., எண். 498.
134. Q.J.M.U. Vol. XLIX, p. 75.
135. பி.எஸ்.ஐ., எண். 386.
136. ஏ.ஆர்.இ., 1968, எண்.178
137. R. Nagasamy, Seminar on Inscriptions, p. 10.
138. ஏ.ஆர்.இ., 1900, எண்.59.
139. R. Tirumalai, Townships of Pudukkottai, P. 28
140. பி.எஸ்.ஐ. எண்.309
141. ஏ.ஆர்.இ., 1924, எண்.69, பத்தி 34, K.R. Hanumanthan, Untouchability - A Historical Study P. 158.
142. Q.J.M.U. Vol. XLIX No. 2, P. 73.
143. பி.எஸ்ஐ., எண்.362.
144. ஏ.ஆர்.ஈ. 1905, எண்.419.
145. ஏ.ஆர்.இ., 1913, எண். 34.
146. ஏ.ஆர்.இ., 1912, எண்.489.
147. ஏ.ஆர்.இ. 1921 பத்தி.47.
148. T.W. Ellis, (Ed.) Kural P. 44.
149. R. Nagasamy, Social and Cultural Life in Medieval Tamil Land, P. 17.
150. ஏ.ஆர்.இ., 1927-28. எண்.84.
151. கே.வி. இராமன், பாண்டியர் வரலாறு, பக். 224.
152. ஏ.ஆர்.இ., 1911, எண். 114; 1937-38, எண். 101.
153. எஸ்.ஐ.ஐ., தொகுதி - 8, எண். 266.
154. ஏ.ஆர்.இ., 1927, எண். 18, 1961 - 62, எண். 446.
155. ஏ.ஆர்.இ., 1962 - 63, எண். 497.
156. ஏ.ஆர்.இ., 1926, எண். 598.

157. ஏ.ஆர்.இ., 1913, எண். 439; பத்தி. 19.
158. ஏ.ஆர்.இ., 1910, பத்தி. 35.
K.A.N. Sastri, The Pandiyan Kingdom P. 202
159. சொக்கப்ப நாவலர் (பதிப்பாசிரியர்) தஞ்சைவாணன்கோவை பக். 261.
160. ஏ.ஆர்.இ., 1916, எண். 446.
161. R. Nagasamy, Social and Cultural Life in Medieval Tamil Land, P. 11
162. ஏ.ஆர்.இ., 1904, எண். 188.
163. ஏ.ஆர்.இ., 1908, எண். 115.
164. ஏ.ஆர்.இ., 1939 - 40, எண். 81; பத்தி. 55.
165. ஏ.ஆர்.இ., 1930 - 31,எண். 113.
166. ஏ.ஆர்.இ., 1927, எண். 60.
167. ஏ.ஆர்.இ., 1952 - 53, எண். 338.
168. செந்தமிழ், தொகுதி - 36, பக். 461.
K.A.N. Sastri, History of South India, P. 315.
169. M.S. Govindasamy, Position and Status of Women in Ancient India, Vol. I, P. 256.
170. ஏ.ஆர்.இ.,929 - 30, எண். 364.
171. ஏ.ஆர்.இ., எண்கள் 230 மற்றும் 231.
172. ஏ.ஆர்.இ., 1935 - 36, எண். 190.
173. ஏ.ஆர்.இ., எண். 374.
174. ஏ.ஆர்.இ.,1916, எண். 370.
175. ஏ.ஆர்.இ.,1950 - 51, எண். 363.
176. பி.எஸ்.ஐ., எண். 621; ஏ.ஆர்.இ., 1941-42, எண். 242.
177. ஏ.ஆர்.இ., 1931 - 32, பத்தி 23.
178. ஏ.ஆர்.இ., 1962 - 63, எண். 471.
179. ஏ.ஆர்.இ., 1924, எண். 33; பத்தி. 26.
180. ஏ.ஆர்.இ., 1937 - 38, பத்தி 45.
181. K. A. N. Sastri, Foreign Notices of South India, P. 179.
182. R. Rajalakshmi, Tamil Polity, pp. 182 - 183.
183. பி.எஸ்.ஐ., எண். 281.

184. ஏ.ஆர்.இ., 1955 - 56, எண். 249.

185. ஏ.ஆர்.இ., 1906, எண். 395, பி.எஸ்.ஐ., எண். 460.

186. பி.எஸ்.ஐ., எண். 281.

''பெண் பிள்ளைகள் தாமதியம் வந்தால் ஆடையும், மாலையும் தவிர்த்து தங்களுக்கு நன்றாகக் குடுக்கும் காசு நூற்று இருபது வாரியன் வாங்கி இக்கோயில் திருவடி பிடிப்பார் கையிலே ஒடுக்கக் கடவதாகவும்'' (பி.எஸ்.ஐ., எண். 281)

187. ஏ.ஆர்.இ., 1916, எண். 401; பத்தி. 9.

188. R. Tirumalai, Rajendra Vinnagar, PP. 37 - 38.

189. ஏ.ஆர்.இ., 1916, பத்தி 9.

190. ஏ.ஆர்.இ., 1959-60, எண். 363.

191. புறநானூறு, பா. 246.

192. எஸ்.ஐ.ஐ., தொகுதி 8, பக். 383.

193. K.A.N. Sastri, Foreign Notices of South India, P. 167.

194. சொக்கப்ப நாவலர் (பதிப்பாசிரியர்) தஞ்சைவாணன்கோவை, பக்கம் 315.

195. எஸ். துரைசாமிப் பிள்ளை (பதிப்பாசிரியர்) தமிழ் நாவலர் சரிதை, பா. 70.

196. சொக்கப்பநாவலர் (பதிப்பாசிரியர்), தஞ்சைவாணன்கோவை, பக். 327.

197. K.A.N. Sastri, Foreign Notices of South Indian, P. 168.

198. டி. சந்திரசேகரன் (பதிப்பாசிரியர்), கப்பற்கோவை பக்கம். 126

199. A. Appadurai, Economic conditions in Southern India, Vol. II, P. 756.

200. ஆர். நாகசாமி (பதிப்பாசிரியர்), தமிழ்நாட்டு வரலாற்றுக் கருத்தரங்கு, பக். 89.

201. எஸ். துரைசாமிப்பிள்ளை (பதிப்பாசிரியர்), தமிழ் நாவலர் சரிதை, பா. 63.

202. K.A.N. Sastri, Foreign Notices of South India, P. 278, A. Appadurai, Op. Cit. P. 757.

203. ஏ.ஆர்.இ., 1927 - 28, எண். 127.

204. ஏ.ஆர்.இ., 1895 எண். 196.

205. ஏ.ஆர்.இ., 1914, எண். 264.

206. K.A.N. Sastri, Op. Cit. P. 167.

207. K.A.N. Sastri, Op. Cit. P. 176.
208. டி. சந்திரசேகரன் (பதிப்பாசிரியர்), கப்பற்கோவை, பக் 9.
209. 11ஆம் நூற்றாண்டில் சோழர்கள் காலத்தில் தையல்காரர்கள் இருந்தனர் எனத் தஞ்சைப் பெரிய கோயில் கல்வெட்டு குறிப்பிடுகிறது. (எஸ்.ஐ.ஐ., தொகுதி 2 எண். 8)
210. K.A.N. sastri,Foreign Notices of South India, pp. 163 - 164.
211. சொக்கப்பநாவலர் (பதிப்பாசிரியர்), தஞ்சைவாணன் கோவை, பக். 334.
212. ஏ.ஆர்.இ., 1937-38, எண். 3; பத்தி. 44.
213. டி. சந்திரசேகரன் (பதிப்பாசிரியர்), கப்பற்கோவை பா. 100 மற்றும் 142.
214. ஏ.ஆர்.இ., 1935 - 36, எண். 125.
215. ஏ.ஆர்.இ., 1959 - 60, எண். 307; 1929 - 30 எண். 319.
216. ஏ.ஆர்.இ., 1916, எண். 340.
217. K.A.N. Sastri,Foreign Notices of South India, PP. 167.
218. A. Appadurai, Economic conditions of Southern India, Vol. II, P. 756.
219. ஏ.ஆர்.இ., 1916, எண். 720.
220. பி.எஸ்.ஐ., எண். 427.
221. குலசை உலா, பா. 57.
222. கப்பற்கோவை, பா. 120.
223. சொக்கப்ப நாவலர் (பதிப்பாசிரியர்), தஞ்சைவாணன் கோவை, பக். 116.
224. கப்பற்கோவை, பாக்கள் 114 மற்றும் 200.
225. குலசை உலா, பா. 208.
226. சொக்கப்ப நாவலர் (பதிப்பாசிரியர்), தஞ்சைவாணன் கோவை, பக். 269.
227. K.A.N. Sastri, Foreign Notices of South India, P. 164.
228. குலசை உலா, பா. 54; கப்பற்கோவை, பா. 382.
229. சொக்கப்ப நாவலர் (பதிப்பாசிரியர்), தஞ்சைவாணன் கோவை, பக். 73.
230. குலசை உலா, பாக்கள் 66 மற்றும் 178.
231. கப்பற்கோவை, பாக்கள் 85 மற்றும் 388; குலசை உலா, பா. 52.

232. கப்பற்கோவை, பா. 315.
233. குலசை உலா, பா. 48.
234. குலசை உலா, பா. 208.
235. குலசை உலா, பா. 175.
236. K.V. Subramanya Aiyer, Historical Sketches of Ancient Deccan, Vol. I, P. 382.
237. கப்பற்கோவை, பாக்கள் 84 மற்றும் 135; குலசை உலா, பா. 63.
238. சொக்கப்ப நாவலர் (பதிப்பாசிரியர்), தஞ்சைவாணன் கோவை பக். 288.
239. மேற்படி பக். 118.
240. மேற்படி பக். 79.
241. மேற்படி பக். 318.
242. K.A.N. Sastri, Foreign Notices of South India, P. 180.
243. Ibid., P. 180.
244. Ibid., P. 169.
245. Ibid., P. 169.
246. Ibid., P. 170.
247. திருவிளையாடல் புராணம், பகுதி 46, பா. 14.
248. திருவிளையாடல் புராணம், பகுதி 49, பா. 38.
249. திருவிளையாடல் புராணம், பகுதி 49, பா. 42.

திருவிளையாடல் புராணத்தில் சொல்லப்பட்டுள்ள இம்மூன்று பழக்கங்களில் முதல் பழக்கம் மறைந்து கொண்டு வருகிறது. மற்ற இரண்டு பழக்கங்களும் தமிழ்நாட்டு மக்களிடம் இன்றும் இருந்து வருகின்றன.

250. பி.எஸ்.ஐ., எண். 461.
251. ஏ.ஆர்.இ., 1916, எண். 12; பத்தி 34.
252. கப்பற்கோவை, பா. 151.
253. கப்பற்கோவை, பா. 309.
254. ஏ.ஆர்.இ., 1934 - 35, எண். 70; பத்தி 22.
255. ஏ.ஆர்.இ., 1941 - 42, எண். 141.
256. ஏ.ஆர்.இ., 1958 - 59, எண். 474.
257. ஏ.ஆர்.இ., 1926, எண். 587.
258. T.V. Mahalingam, South India Polity, P. 286.

259. R. Nagasamy (Ed.) Seminar on Hero stones, P. 77.

260. ஏ.ஆர்.இ., 1934 - 1935, எண். 197; பத்தி 24; க.மு. வெங்கடராமய்யா, கல்வெட்டில் தேவார மூவர் பக். 17-18.

261. பி.எஸ்.ஐ., எண். 411.

262. ஏ.ஆர்.இ., 1935 - 36, எண். 171; பத்தி 58.

263. கல்வெட்டு, தொகுதி 8, பக். 21.

264. தமிழ்க் கலைக் களஞ்சியம், தொகுதி 6, பக். 285.

265. கல்வெட்டு,தொகுதி 17, பக். 27.

# 4. பொருளியல்
## வேளாண்மையும் நில உரிமையும்

### ஊர்ப் பொது நிலங்கள்

இரண்டாம் பாண்டியப் பேரரசில் வாழ்ந்த மக்களின் முக்கியத் தொழில் விவசாயமாக இருந்தது. அக்காலத்தில் ஊரில் இருந்த சில நிலங்கள் அவ்வூர் மக்கள் எல்லோருக்கும் பொதுவாக இருந்தன. அந்நிலங்கள் ''ஊர்ப்பொது '' என்றும் ''சபைப் பொது '' என்றும் அழைக்கப்பட்டன. கீழே குறிப்பிடப்பட்டுள்ள நிலங்கள் ஊர்ப்பொது நிலங்களாகக் கருதப்பட்டன:

1) யாருக்கும் சொந்தமில்லாமல் ஊரின் எல்லைக்குள் இருந்த நிலங்கள் (பற்றிலி)

2) ஊரின் எல்லைக்கோட்டை ஒட்டி அமைந்திருந்த நிலங்கள் (கடை நிலம்)

3) ஊர்க் கால்நடைகள் மேயப் பயன்பட்ட நிலங்கள் (கன்று மேய்பாழ்)

4) நிலவரி கட்டாமையினால் பறிமுதல் செய்யப்பட்டுக் கிராமச் சபையின் கண்காணிப்பில் இருந்த நிலங்கள்

5) உரிமையாளர்களினால் கைவிடப்பட்டுக் கிராமச் சபையின் கண்காணிப்பில் இருந்த நிலங்கள்

### கிராமச் சபையும் ஊர்ப் பொது நிலங்களும்

ஊர்ப் பொது நிலங்கள் மீது கிராமச் சபைக்கு முழு அதிகாரம் இருந்தது. அந்நிலங்களைப் பொது நலனுக்கு ஊர்ச் சபைகள் பயன்படுத்தின என்பது பல கல்வெட்டுகளிலிருந்து தெரிய வருகிறது. தஞ்சாவூர் மாவட்டத்து நெல்லித்தோப்பு கிராமத்தில் காணப்படும் ஒரு கல்வெட்டு இராசமகேந்திர சதுர்வேதி மங்கலத்தின் ஊர்ச்சபை 19 மா பொது நிலத்தை அவ்வூரிலுள்ள கோயிலைப் பழுது பார்க்கும் பணிக்குக் கொடுத்தது எனக் கூறுகிறது[1]. இராமநாதபுரம் மாவட்டம் பிரான்மலைக் கல்வெட்டு மருங்கூர் ஊர்ச்சபை சில ஊர்ப் பொது நிலங்களை மன்னுக்குறிச்சி சிவன் கோயில் மடத்திற்குத் தானம் செய்ததாகக் குறிப்பிடுகிறது[2]. கடலூர் மாவட்டம் திருவாமத்தூர் கல்வெட்டு அவ்வூர்ச்சபை கிராமப் பொது நிலங்களைச் சாத்திரங்களில் தேர்ச்சிபெற்ற 24 பிராமணர்களுக்கும் அவ்வூர் மருத்துவருக்கும் தானமாகக் கொடுத்ததாகக் குறிப்பிடுகிறது[3]. இதிலிருந்து கிராமச் சபைக்கு ஊர்ப் பொது நிலங்களைக் கோயிலுக்கும் மடத்திற்கும் பொதுப்பணிகள் செய்வோருக்கும் கொடுக்கும் அதிகாரம் இருந்ததெனத் தெரிய வருகிறது.

கிராமப் பொது நிலத்தைக் கிராமச் சபை சில சமயங்களில் அடகு வைப்பதும் உண்டு. திருநெல்வேலி மாவட்டம் செய்துங்கநல்லூர் கல்வெட்டு இதற்குச் சான்றாக அமைகிறது. கீழ்மங்கலம் கிராமச்சபை தனது பொது நிலங்களை (ஏதோ ஒரு பொது நலனுக்குப் பணம் பெற) வீர சோழ தேவரிடம் அடகு வைத்தது[4].

புதுக்கோட்டை மாவட்டம் பின்னங்குடியில் காணப்படும் கல்வெட்டு, ஊர்ப் பொது நிலத்தை விற்கும் அதிகாரம் ஊர்ச் சபைக்கு இருந்ததாகக் கூறுகிறது. அரசாங்க வரி கட்டப் பணம் தேவைப்பட்டதால் அவ்வூர்ச் சபை, ஊர்ப் பொது நிலங்களில் சிலவற்றை விற்றுப் பணம் பெற்றது[5].

## தனியார் நிலங்கள்

தனி நபர்கள் தங்களுக்கெனச் சொந்த நிலங்கள் வைத்துக் கொள்ள அனுமதிக்கப்பட்டனர்[6]. தங்கள் நிலங்களை விருப்பம் போல் விற்பதற்கும், அடகு வைப்பதற்கும், தானம் செய்வதற்கும் அவர்களுக்கு உரிமை இருந்தது. கி.பி. 1341ஆம் ஆண்டு மதுரையைச் சார்ந்த கைக்கோளன் அழகிய சொக்கனான் என்பவன் பிரம்பன் என்பவனிடம் நிலத்தை விலைக்கு வாங்கிச் சிறுதாவூர் சிவன் கோயிலுக்குத் தானமாகக் கொடுத்தான் என ஒரு கல்வெட்டு குறிப்பிடுகிறது[7]. இக்கல்வெட்டு தனி நபருக்கு நிலத்தின் மீது இருந்த உரிமைக்குச் சான்று பகர்கிறது. தந்தையின் நிலம் மகனுக்குக் குடும்பச் சொத்தாக வந்தது என்பதற்குப் பல கல்வெட்டுகள் சான்று பகர்கின்றன[8].

## பயிரிடும் முறைகள்

நிலம் பயிர் செய்வதில் பாண்டிய நாட்டில் மூன்று வகையான முறைகள் பின்பற்றப்பட்டன. அவையாவன :

1. நிலத்தின் உரிமையாளரே தனது குடும்ப உறுப்பினர்களின் உதவியோடு நிலத்தைப் பயிரிடல்.
2. நிலத்தின் உரிமையாளர் நாட் கூலியாட்களை அமர்த்திக் கொண்டு தனது மேற்பார்வையில் நிலத்தைப் பயிரிடல்.
3. நிலத்தின் உரிமையாளர் தனது நிலத்தை விவசாயம் செய்யும் உழவருக்குக் குத்தகைக்கு விடல்.

குறைந்த அளவு நிலமுள்ள விவசாயக் குடும்பத்தினர் தங்கள் நிலத்தைத் தாங்களே பயிரிட்டுக் கொண்டனர். அதிக அளவு நிலங்களை வைத்துக் கொண்டு வாழ்ந்தவர்கள் நாட் கூலியாட்களை வைத்துக் கொண்டு தங்கள் நிலத்தைப் பயிரிட்டனர். விவசாயக் குடும்பத்தைச் சாரா நபர்களும், மடம், கோயில் போன்ற அமைப்புக்குரியவர்களும் தங்களது நிலங்களைக் குத்தகைக்கு விட்டனர்.

## குத்தகை நிபந்தனைகள்

ஒரு குடும்பத்தினர் ஒரு குறிப்பிட்ட நிலத்தின் குத்தகையை ஒழுங்காக அதன் உரிமையாளருக்குக் கொடுத்துவிட்டு, அந்நிலத்தைப் பல தலைமுறைகள் தொடர்ந்து பயிர் செய்து வந்திருக்கிறார்கள். குத்தகைதாரர் தான் விரும்பும் தானியங்களைப் பயிரிட்டார். ஆனால் ஒரு நன்செய் நிலத்தைப் புன்செய் நிலமாகவோ தோட்டமாகவோ மாற்றுவதற்கு நில உரிமையாளரின் அனுமதி பெற வேண்டியிருந்தது[9].

## நில உரிமையாளருக்கு விளைச்சலில் பங்கு

நில உரிமையாளருக்குக் குத்தகை இரண்டு முறைகளில் கொடுக்கப்பட்டது.

1. விளைச்சலில் ஒரு பங்கு.
2. ஒரு குறிப்பிட்ட தொகைப் பணம்.

நன்செய் நிலங்களுக்குக் குத்தகையாக விளைச்சலில் ஒரு பங்கு தானியம் கொடுக்கப்பட்டது. புன்செய் நிலங்களுக்குக் குத்தகை, பணமாகக் கொடுக்கப்பட்டது. இந்த முறையே எல்லா இடங்களிலும் பின்பற்றப்பட்டதென உறுதியாகச் சொல்ல முடியாது. சில இடங்களில் நன்செய் நிலத்திற்குக் குத்தகைப் பணமும், புன்செய் நிலத்திற்குத் தானியமும் குத்தகையாகக் கொடுக்கப் பட்டிருக்கிறது[10].

குத்தகைப் பணம் நிலத்தினுடைய வளத்தின் அடிப்படையிலும், அந்நிலத்தில் பயிர் செய்யப்பட்ட தானியங்களின் அடிப்படையிலும் நிருணயிக்கப்பட்டது. நன்செய் நிலத்திற்குக் குத்தகைப் பணம் விளைச்சலில் மூன்றில் ஒரு பங்கிலிருந்து ஐந்தில் ஒரு பங்கு வரை இருந்தது[11]. புன்செய் நிலத்திற்குக் குத்தகை மொத்த விளைச்சலில் ஐந்தில் ஒரு பங்கிலிருந்து ஏழில் ஒரு பங்கு வரை இருந்தது[12].

நிலக் குத்தகை எடுத்தவர்கள் நில உரிமையாளருக்குக் குத்தகைப் பணம் செலுத்தியதோடு வேறு சில கட்டணங்களையும் அரசுக்குச் செலுத்தினர். அவையாவன. (1) உழுதான் குடி (2)அந்தராயம் (3) வெட்டி முட்டாள் (4) காவிரி கரைத்தேவை. உழுதான் குடி என்பது பயிரிடுபவர் அரசாங்கத்திற்குக் கொடுத்த வரியாகும்[13]. அந்தராயம் என்பது பயிரிடுபவர் ஊர்ச் சபைக்குக் கொடுத்த வரியாகும்[14]. வெட்டி முட்டாள் என்பது கிராமத்தின் பொது வேலை முடிவடையும் வரையில் இடையறாமல் (முட்டாமல்) வேலை செய்வதற்கு அனுப்பப் பெறும் ஆளின் கூலிக்காகப் பயிரிடுபவர் கொடுத்த வரியாகும்[15]. காவிரிக் கரையைச் செப்பனிட அனுப்பப் பெறும் ஆளின் கூலிக்காகப் பயிரிடுவோர் கொடுத்த வரி காவிரிக் கரைத் தேவையாகும்[16].

கேரளாந்தக விழுப்பரையன் என்ற நிலக் குத்தகைதாரர் காவிரிக்கரை செப்பனிடும் வேலைக்கு ஆள் அனுப்பாததால் அவருக்கு

அரசு அதிகாரிகள் அபராதம் விதித்தனர் என ஒரு கல்வெட்டு குறிப்பிடுகிறது[17].

கோயில் நிலங்களைப் பயிரிட்ட குத்தகைதாரர்கள் கண்காணிப்பு வரி ஒன்றையும் செலுத்த வேண்டியிருந்தது. தேவதான நிலங்களில் அறுவடை நடைபெற்ற போது அதனை மேற்பார்வையிட வந்த கோயில் அலுவலர்களின் செலவுகளுக்காக இந்தக் கண்காணிப்பு வரி வசூலிக்கப்பட்டது.

பொதுவாகக் கோயில் நிலங்கள் உள்ளூர்க் குத்தகைதாரர்களுக்கே குத்தகைக்கு விடப்பட்டன. ஆனால் சில சமயங்களில் தவிர்க்க முடியாத காரணங்களினால் பக்கத்து ஊர்க்காரர்களுக்கும் கோயில் நிலங்கள் குத்தகைக்கு விடப்பட்டன வெளியூர்க் குத்தகைதாரர்கள் சில சிறப்பு வரிகளைச் செலுத்த வேண்டியிருந்தது.

சூரக்குடியை ஆண்ட குறுநில மன்னனாகிய விக்கிரம பாண்டியவிசயாலயன் தட்டமங்கலத்திலிருந்த சில நன்செய், புன்செய் நிலங்களை விரையாச்சிலை (புதுக்கோட்டை மாவட்டம்) சிவன் கோயிலுக்குத் தானமாகக் கொடுத்தான். அந்த நிலங்களைத் தட்டமங்கலம் கிராமத்தைச் சார்ந்தவர்களுக்கே குத்தகைக்கு விடவேண்டுமென ஒரு நிபந்தனையையும் அந்த விசயாலயன் விதித்திருந்தான். மாறாக அந்த நிலத்தை வெளியூர்க்காரருக்குக் குத்தகைக்கு விட்டால் அந்தக் குத்தகைதாரர் கோயில் திருவிழா சமயத்தில் சில ஊழியங்களைச் (வேலைகளை) செய்ய வேண்டும் எனவும் விசயாலயன் நிபந்தனை விதித்திருந்தான்.

## நிலங்களின் வகைகள்

விளைநிலங்கள் நன்செய், புன்செய், தோட்டம் என மூன்று வகைகளாகப் பிரிக்கப்பட்டிருந்தன. நன்செய் நிலங்களில் ஆண்டுக்கு இரண்டு போகங்கள் விளைந்தன. அவையாவன. (1) கார், (2) பாசனம். கார் போகத்தில் சூன் மாதம் விதைத்தல் நடந்தது. டிசம்பர் மாதம் அறுவடை நடந்தது. பாசனம் போகத்தில் சனவரி மாதம் விதைத்தல் நடந்தது. மே மாதம் அறுவடை நடந்தது.

## விவசாய முறை

இரண்டாம் பாண்டியப் பேரரசின் விவசாயிகள் பயன்படுத்திய உழவுக் கருவிகள் பற்றிய நேரடி ஆதாரங்கள் ஏதும் கிடைக்கவில்லை. ஏரினால் நிலங்கள் அளக்கப்பட்டதாகச் சில கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன[18]. கிணற்றிலிருந்து நீரை இரைக்க ஏற்றங்கள் பயன்படுத்தப்பட்டன. ஒவ்வொரு கிராமத்திலும் மேய்ச்சல் நிலம் இருந்தது எனக் கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன.

## முக்கிய விளைபொருள்கள்

இரண்டாம் பாண்டியப் பேரரசின் விவசாயிகள் உற்பத்தி செய்த தானியங்கள் எவை எவை என்பதைப் பல கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன. நில உரிமையாளர்களுக்குக் குத்தகையாகத் தானியங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன[19]. சந்தைக்கு வந்த தானியங்களின் பட்டியலும் நமக்குக் கிடைக்கிறது[20]. நாம் இன்று விளைவிக்கும் தானியங்கள் அனைத்தும் இரண்டாம் பாண்டியப் பேரரசில் உற்பத்தி செய்யப்பட்டன. கொள்ளு, உளுந்து ஆகிய கோடைப் பயிர்கள் பயிரிடப்பட்டன என்பதற்குக் கல்வெட்டுச் சான்றுகள் உள்ளன. பாண்டிய நாட்டில் பயிரிடப்பட்ட விவசாயப் பொருட்களின் பட்டியல் வருமாறு[21].

1) நெல்
2) கோதுமை
3) பார்லி
4) சோளம்
5) பட்டாணி[22]
6) உளுந்து
7) பாசிப்பயறு
8) மொச்சை
9) எள்
10) கொள்ளு
11) ஆமணக்கு
12) கரும்பு[23]
13) பருத்தி[24]
14) அவுரி[25]
15) சந்தனம்

உணவுக்கு நறுமணம் ஊட்டும் பொருட்கள் பல இரண்டாம் பாண்டியப் பேரரசில் உற்பத்தி செய்யப்பட்டன. அவற்றில் குறிப்பிடத்தக்கவை- மிளகு, இஞ்சி, இலவங்கப்பட்டை, சீரகம், கடுகு, கிராம்பு, ஜாதிக்காய், ஏலக்காய் ஆகியவையாகும்[26]. மேலும் பூசணிக்காய், சுரைக்காய், கிழங்கு வகைகள், வெற்றிலை, பாக்கு, கத்தரிக்காய், மஞ்சள், புளி ஆகிய தோட்டப் பயிர்களும் பயிரிடப்பட்டன[27].

எல்லா இடங்களிலும் நெல் பயிர் செய்யப்பட்டது. நெல் பயிரிட உகந்த மண், தட்பவெப்ப நிலை, தண்ணீர் ஆகியவை ஏறக்குறைய எல்லா இடங்களிலும் அமைந்திருந்ததே இதற்குக் காரணமாகும். குறுவை, பஞ்சவாரம் ஆகிய இரண்டு நெல் வகைகள் இக்காலத்தில் பயிரிடப்பட்டன[28].

தோட்டப் பயிர்களாகிய இஞ்சி, மிளகு, வாழை ஆகியவை பரவலாகப் பயிரிடப்பட்டன[29]. மிளகு, இலவங்கப்பட்டை, ஜாதிக்காய் கிராம்பு ஆகியவை கடற்கரையை ஒட்டிய பகுதிகளில் மட்டும் பயிரிடப்பட்டன.

## நிலச் சீரமைப்பு

காடுகளும், தரிசு நிலங்களும், விளை நிலங்களாக மாற்றி அமைக்கப்பட்டன. இந்த நிலச் சீரமைப்புப் பணியைப் பெரும்பாலும் அரசரே மேற்கொண்டார். இப்படி அரசர் செய்தமையினால் விளை நிலங்கள் அதிகமாயின. அவருக்குக் கிடைத்த நிலவரியும் அதிகமாயிற்று.

கல்வெட்டுகளில் இரண்டு வகையான நிலச் சீரமைப்புகள் குறிப்பிடப்பட்டுள்ளன.

1) அடர்ந்த காடுகள் கொண்ட நிலங்களைச் சீர்திருத்தி முதல் முதலாக விளை நிலங்களாக மாற்றுதல்[30].

2) ஏற்கனவே விளை நிலங்களாக இருந்து பின்னர் கைவிடப்பட்டதனால் வளமை இழந்த நிலங்களை விளை நிலங்களாக மாற்றுதல்[31].

பல ஆண்டுகள் நிலவரி கட்டாமையினால் நிலவரியின் நிலுவை அதிகமாகிவிடும். அந்த நிலுவை பெருந்தொகையாக இருந்ததால் அதைச் செலுத்த முடியாமல் சில உழவர்கள் தங்கள் நிலங்களை விட்டு ஓடிப் போய்விட்டனர். அந்த நிலங்கள், ஒரு காலக் கட்டத்தில் சீரமைப்புக்கு எடுத்துக் கொள்ளப்பட்டன[32].

## கிராமச் சபையும் நிலச் சீரமைப்பும்

கிராமங்களில் இருந்த தரிசு நிலங்கள் முது தரிசு[33]. என்றும் பரம்பரைப்பாழ்[34]. என்றும் அழைக்கப்பட்டன. அவற்றைக் கிராமச் சபை சீரமைப்பு செய்தது.

திருநலக்குன்றம் (புதுக்கோட்டை மாவட்டம்) கிராமச் சபை தனது தரிசு நிலமாகிய சாமை வயலைக் கூத்தன் சொக்கனாருக்கும் அவரது குடும்பத்தினருக்கும் குறைந்த விலைக்கு (அதாவது 25 வராகன் பணத்துக்கு) ஒரு நிபந்தனையின் பேரில் விற்றது. அத்தரிசு நிலத்தை

வாங்கியவர் அதனை விளைநிலமாகச் சீர்திருத்திக் கிராமச் சபைக்குக் கடமை செலுத்த வேண்டும் என்பதே அந்த நிபந்தனையாகும். முதலாம் மாறவர்மன் குலசேகரன் கி.பி.1294-இல் வெளியிட்ட மேற்கண்ட கல்வெட்டு கிராமச் சபை, நிலச் சீரமைப்புக்கு எடுத்த நடவடிக்கையைத் தெளிவாக உணர்த்துகிறது[35].

இராமநாதபுரம் மாவட்டம் நாமனூர் கிராமச் சபை ஒரு தரிசு நிலத்திற்குத் தண்ணீர் வரியிலிருந்து விலக்கு அளித்தது. இச்செய்தி சடையவர்மன் பராக்கிரம பாண்டியன் வெளியிட்ட கி.பி.1320ஆம் ஆண்டுக் கல்வெட்டிலிருந்து தெரிகிறது. இக்கல்வெட்டும் தரிசு நிலத்தைச் செம்மைப்படுத்தக் கிராமச் சபை மேற்கொண்ட நடவடிக்கையைத் தெரியப்படுத்துகிறது[36].

## கோயில் நிருவாகமும் நிலச் சீரமைப்பும்

கிராமச் சபையைப் போலக் கோயில் நிருவாகமும் நிலச் சீரமைப்பு நடவடிக்கைகளை மேற்கொண்டது. கோயில் நிருவாகம் குத்தகைப் பணத்தைக் குறைத்துக் கொண்டு மக்களை நிலச் சீரமைப்புப் பணியில் ஈடுபடுத்தியது. திருவேட்பூர் (புதுக்கோட்டை மாவட்டம்) விட்டுணு கோயிலில் காணப்படும் முதலாம் சடையவர்மன் சுந்தர பாண்டியனின் கல்வெட்டு நிலச்சீரமைப்பு பற்றிக் கூறுகிறது. இந்தக் கோயில் நிருவாகம் தன்னிடமிருந்த தரிசு நிலங்களை வேலான் அழகன் என்பவனுக்குச் சில நிபந்தனைகளின் பேரில் குத்தகைக்கு விட்டது. மேற்படி வேலான் அழகன் அந்தத் தரிசு நிலத்தை விளை நிலமாக ஆக்க வேண்டும் என்றும் செலுத்த வேண்டிய முழுக் குத்தகைத் தொகை ஒரு மா நிலத்திற்கு 15 பணம் எனவும் நிருணயிக்கப்பட்டது. ஆனால் நிலம் வளமையின்றி இருந்ததனால் முதலாண்டுக் குத்தகை 7½ பணம் என்றும் இரண்டாம் ஆண்டுக் குத்தகை 11¼ பணம் என்றும் பின்வரும் வருடங்களில் குத்தகை 15 பணம் (முழுத் தொகை) என்றும் நிருணயம் செய்யப் பட்டது. இதிலிருந்து கோயில் நிருவாகமும் நிலச் சீரமைப்புப் பணியில் ஈடுபட்டது எனத் தெரிகிறது[37].

முதலாம் மாறவர்மன் குலசேகரன் வெளியிட்ட குடுமியான் மலைச் சிவன் கோயில் கல்வெட்டும் நிலச் சீரமைப்பு பற்றிக் கூறுகிறது. இவ்வூரின் மங்கலம் குளத்தில் உடைப்பு ஏற்பட்டு அதைச் சுற்றியிருந்த நிலங்கள் பாதிக்கப்பட்டன. மேற்படி சிவன் கோயில் நிருவாகம் அந்தப் பாழ்பட்டிருந்த நிலத்தை 30 குளிகைப் பணத்திற்கு இரண்டு பிராமணர்களுக்கு ஏலத்தில் விற்றது. ஏலத்தில் சலுகை விலைக்கு நிலத்தைப் பெற்ற அந்தப் பிராமணர்களாகிய சுப்பிரமணிய பட்டரும் நம்பு செய்வான் பட்டரும் அந்த நிலத்தை மேம்படுத்திச் சீரமைக்கவும் நிலவரி கொடுக்கவும் ஒப்புக் கொண்டனர்[38].

## தனியார்களும் நிலச் சீரமைப்பும்

நிலச் சீரமைப்பு செய்வது ஒரு நல்ல பொதுத் தொண்டு எனக் கருதியும், இலாபம் கிடைக்கும் எனக் கருதியும் தனியார்கள் நிலச் சீரமைப்புப் பணிகளை மேற்கொண்டனர். பெரிய தேவன் என்ற வியாபாரி சில தரிசு நிலங்களைக் குலோத்துங்கசோழ பட்டினம் நகரத்தார்களிடமிருந்து விலைக்கு வாங்கினான்[39]. அந்த நிலம் கற்கள் நிரம்பியதாகவும் காடுகள் நிரம்பியதாகவும் காணப்பட்டது[40].

பெரிய தேவன் மரங்களை வெட்டி அந்நிலத்தைச் சீர்படுத்தி அங்குக் கிணறுகளைத் தோண்டினான். சீரமைப்பு செய்த அந்த நிலத்தைப் பின்னர் அவன் குடுமியான்மலை (புதுக்கோட்டை மாவட்டம்) சிவன் கோயிலுக்குத் தானமாக அளித்தான்.

இராமநாதபுரம் நாமனூரில் காணப்படும் பராக்கிரம பாண்டியனின் இரண்டு கல்வெட்டுகள் இலாப நோக்கத்தோடு நிலச் சீரமைப்புப் பணியை மேற்கொண்டமை பற்றிக் குறிப்பிடுகிறது. முதல் கல்வெட்டு கி.பி.1320இல் வெளியிடப்பட்டது. இது உலகுய்ய வந்தான் என்பவன் நாமனூர் கிராமச் சபையிடமிருந்து நாற்பது இராசிமராசன் குளிகைப் பணத்திற்கு நிலம் விலைக்கு வாங்கினான் என்றும் அந்நிலம் தரிசாக இருந்தமையால் நீர்வரியிலிருந்து அந்நிலத்திற்கு விலக்கு அளிக்கப் பெற்றிருந்தது என்றும் கூறுகிறது. [41] அதே நிலம் சீரமைப்புக்குப் பின் சில ஆண்டுகள் கழித்துக் கி.பி.1324இல் அதே உலகுய்ய வந்தானால் ஏழகப் பெருமாள் பொய் சொல்லாதார் என்பவனுக்கு 489 இராசிமராசன் குளிகைக்கு விற்கப்பட்டது. [42] நான்கு ஆண்டுகளில் நிலத்தைச் சீர் செய்து 10 மடங்கு அதிக விலைக்கு விற்று உலகுய்ய வந்தான் இலாபம் சம்பாதித்தான் என்பது பராக்கிரம பாண்டியனின் இக் கல்வெட்டிலிருந்து தெரிய வருகிறது.

பொது நிலங்களைத் தவிர எஞ்சிய நிலங்கள் மூன்று வகைகளாக அமைந்திருந்தன. அவையாவன.

1) விவசாயிகளின் நிலம் அல்லது வெள்ளான் வகை

2) சில பொதுப் பணிகளைச் செய்வதற்காகத் தனி நபர்களுக்குக் கொடுக்கப்பட்ட நிலங்கள். இவை ஜீவிதம், போகம், காணி, விருத்தி என அழைக்கப்பட்டன.

3) தருமமாகக் கொடுக்கப்பட்ட நிலங்கள் இவை பிரம்மதேயம், தேவதானம், மடப்புறம் என அழைக்கப்பட்டன.

## வெள்ளான் வகை

வெள்ளான் என்ற சொல் வேளாண்மை செய்கின்ற விவசாயியைக் குறிக்கும். வகை என்பது பிரிவைக் குறிக்கும்[43]. விவசாயிகளின் நிலங்கள் வெள்ளான் வகை நிலங்கள் என அழைக்கப்பட்டன. வெள்ளான் வகை நிலங்களின் வரிகள் அப்போதைக்கப்போது மாற்றி அமைக்கப்பட்டன.

வெள்ளான் வகை நிலங்கள் ஏக போக பிரம்மதேயங்களாக மாற்றப் பெறுவதும் உண்டு. ஒரு பிராமணருக்குத் தானமாகக் கொடுக்கப்பட்ட நிலம் அல்லது கிராமம் ஏக போக பிரம்மதேயம் என அழைக்கப்பட்டது. முதலாம் மாறவர்மன் சுந்தர பாண்டியனின் வேங்க நல்லூர் (இராமநாதபுரம் மாவட்டம்) கல்வெட்டு வெள்ளான் வகை நிலம் ஏக போகப் பிரம்மதேயமாக மாற்றப்பட்டதைக் குறிக்கிறது[45]. இக்கல்வெட்டு ஸ்ரீராம பட்டன் என்ற பிராமணருக்கு வெள்ளான் வகை நிலத்தை ஏக போகப் பிரம்மதேயமாகக் கொடுத்ததாகக் குறிப்பிடுகிறது.

## பொதுப்பணி செய்பவர்களுக்கு நிலங்கள்

கிராமத்தில் பொதுப்பணி செய்தவர்களுக்கும், கோயில்களில் பொதுப்பணி செய்தவர்களுக்கும் நிலங்கள் வழங்கப்பட்டன. நிலங்கள் அதிகமாக இருந்ததாலும், பணப்புழக்கம் குறைவாக இருந்ததாலும் பொதுவாக மக்கள் ஓரிடம் விட்டு மற்றோரிடம் சென்று குடியேறுவது அக்காலத்தில் குறைவாக இருந்ததாலும் சம்பளமாகப் பணம் கொடுப்பதற்குப் பதிலாக நிலங்கள் கொடுக்கப்பட்டன.

ஒரு குறிப்பிட்ட பொதுப் பணியை ஒரே ஒருமுறை செய்பவர்களுக்கு நிலம் கொடுக்கப்பட்டது. எடுத்துக்காட்டாக ஒருவன் ஒரு குளத்தை வெட்டினாலோ ஒரு குளத்தைச் செப்பனிட்டாலோ அதைப் பாராட்டி நிலம் கொடுக்கின்ற வழக்கம் இருந்தது[46]. கிராமப் பணியாளர்களாகிய பொற்கொல்லர், குயவர், நாவிதர், சோதிடர், தச்சர், மருத்துவர் ஆகியோருக்கும் அவர்கள் செய்யும் கிராமப் பொதுப்பணிக்காக நிலங்கள் கொடுக்கப்பட்டன[47]. கிராம மக்களின் எண்ணிக்கைக்கு ஏற்ப இந்தக் கிராமப் பணியாளர்களின் எண்ணிக்கை கூடுதலாகவோ குறைவாகவோ இருந்தது.

கிராமத்தில் பணி செய்பவர்களில் சிலரின் பணி அக்கிராமத்தின் ஒரு பிரிவினருக்கு மட்டும் பயன்பட்டது. மற்றச் சிலரின் பணி அக்கிராமத்து மக்கள் அனைவருக்கும் பயன்படும் வகையில் அமைந்திருந்தது. பிராமண ஆசிரியர்கள் இலக்கணம், வேதம், சூத்திரம் ஆகியவற்றைக் கிராமத்தின் ஒரு பிரிவினருக்கு மட்டும் போதித்து விட்டு சம்பளத்திற்குப் பதிலாக நிலம் பெற்றனர். கிராமத்தின் காவலர்கள் கிராம மக்கள் அனைவருக்கும் பயன்படும் வகையில் காவல் புரிந்து விட்டுச் சம்பளத்திற்குப் பதிலாக நிலம் பெற்றனர்.

கிராமப் பொதுப்பணி செய்பவர்கள் தாங்கள் பெற்ற நிலங்களுக்கு வரிகள் செலுத்தினர். பொதுவாக இந்த நிலங்களை அவர்கள் விற்கவோ தர்மம் செய்யவோ முடியாது. ஆனால் சில சமயங்களில் சிலருக்கு மட்டும் பொதுப்பணிக்காகக் கொடுத்த நிலங்களை விற்க அல்லது தர்மம் செய்ய அனுமதி கொடுக்கப்பட்டிருந்தது.

புதுக்கோட்டை மாவட்டம் திருவரங்குளத்தில் காணப்படும் முதலாம் மாறவர்மன் குலசேகரனின் கல்வெட்டு நிம்மவன வைத்தியர் என்பவருக்கு வைத்திய விருத்தியாகக்[48] கொடுக்கப்பட்ட நிலத்தை அவர் விற்க அல்லது தர்மம் செய்ய உரிமை கொடுக்கப்பட்டிருந்தது எனக் குறிப்பிடுகிறது[49].

வாழ்வுரிமையாகக் (ஜீவிதமாக) கொடுக்கப்பட்ட நிலங்களைப் பெற்றவர்கள் அந்நிலங்களைத் தாங்களே பயிரிடலாம் அல்லது குத்தகைக்கு விடலாம்.[50] விவசாயக் குடியைச் சாராதவர்கள் தாங்கள் பெற்ற வாழ்வியல் நிலங்களைக் குத்தகைக்கு விட்டு மேல் வாரம் (குத்தகைப் பணம்) பெற்றனர் அல்லது அவர்கள் விவசாயப் பணியாளர்களை வேலைக்கு அமர்த்திக் கொண்டு தங்களது வாழ்வியல் நிலங்களைப் பயிரிட்டனர்.

அக்காலத்தில் போக்குவரத்து வசதிகள் வளர்ச்சியடைந்திருக்க வில்லை. ஆகவே ஒவ்வொரு கிராம மக்களின் அன்றாடப் பணிகளைச் செய்வதற்குத் தேவையான பணியாளர்கள் அந்தந்தக் கிராமங்களிலேயே வாழ வேண்டியிருந்தது. ஆகவே தான் கிராம மக்கள் வாழ்வியல் நிலங்களைக் கொடுத்து அப்பணியாளர்களைத் தங்கள் கிராமத்திலேயே நிரந்தரமாக வாழும்படி பணித்திருந்தனர்[51].

புதிய ஊர்கள் உருவாக்கப்பட்டமை பற்றிப் பற்பல கல்வெட்டுகள் கிடைக்கின்றன. எடுத்துக்காட்டு : இராமநாதபுரம் மாவட்டம் திருத்தங்கால் கல்வெட்டு[52], கடலூர் மாவட்டம் சிதம்பரம் கல்வெட்டு[53], கடலூர் மாவட்டம் திருவாமத்தூர் கல்வெட்டு[54].

இராமநாதபுரம் மாவட்டம் திருவில்லிபுத்தூர் கல்வெட்டு[55] புதிய கிராமங்கள் உருவாக்கப்பட்டமை பற்றிக் குறிப்பிடுகின்றன. இக்கல்வெட்டுகளிலிருந்து கிராமத்தில் பணி செய்தவர்களின் எண்ணிக்கையும் சம்பளமும் அவர்களின் (நிலமாகக் கொடுக்கப்பட்டது) கிராமத்திற்குக் கிராமம் வேறுபட்டிருந்தது எனத் தெரிய வருகிறது.

கோயிலில் பணி செய்தவர்களுக்கும் சம்பளம் பணமாகக் கொடுக்கப்படவில்லை. நிலமாகவே கொடுக்கப்பட்டது. கோயிலில் பணிபுரிந்த அர்ச்சகர்கள்[56]. நடன மாதர்[57] நடன ஆசிரியர்[58] மேளக்காரர்[59] இசைக் கலைஞர்கள்[60] சமையற்காரர்கள்[61] கல்தச்சர்கள்[62] தோட்டக்காரர்கள் [63] முதலியோர் தங்களது கோயில் பணிக்கு நிலமே பெற்றனர்.

## தருமமாகக் கொடுக்கப்பட்ட நிலங்கள்

பொதுவாகக் கருதுமிடத்து தருமமாகக் கொடுக்கபட்ட நிலங்களுக்குரியவர்கள் வரி செலுத்த வேண்டியதில்லை. ஏனெனில் அவை பெரும்பாலும் வரி தள்ளுபடி செய்யப் பெற்ற நிலங்களாகவே இருந்தன. அவை தருமம் செய்யப்பட்டவை. இவை இறையிலி (வரி

விலக்குப் பெற்ற) நிலங்களென அழைக்கப்பட்டன. சில சமயங்களில் அந்நிலங்கள் செலுத்த வேண்டிய வரியிலிருந்து விலக்குப் பெற ஒரு பெருந்தொகை முன்பணமாக அரசுக்குக் கொடுக்கப்பட்டது. அப்பெருந்தொகை ஈட்டிய வட்டித் தொகை வரியாக எடுத்துக் கொள்ளப்பட்டது. இதனை இறைக்காவல் நிலங்கள் என அழைத்தனர்.

தருமம் செய்யப்பட்ட நிலம் பற்றிய ஆவணத்தில் இறையிலி, இறைக்காவல் பற்றி ஏதும் குறிப்பிடப்படாமல் இருந்ததால் அந்தத் தரும நிலத்திற்கு வரிகள் செலுத்த வேண்டிய நியதி இருந்தது.

## பிரம்மதேயம்

படித்த பிராமணர்களுக்குக் கொடுக்கப்பட்ட நிலங்கள் அல்லது கிராமம் பிரம்மதேயம் என அழைக்கப்பட்டது. பிராமணர்களின் அறிவாற்றலைக் கருதி அவர்கள் செய்த கல்விப் பணிக்காவும், சமயப் பணிக்காகவும் பிரம்மதேயம் கொடுக்கப்பட்டது.64

பிரம்மதேயம், இரண்டு வகைகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. 1) மானியம் (2)சர்வ மானியம். மானியமாகப் பெற்ற நிலத்திற்குப் பிராமணர்கள் சில சிறு வரிகள் செலுத்த வேண்டியிருந்தது. சர்வமானியமாகப் பெற்ற நிலத்திற்குப் பிராமணர்கள் யாதொரு வரியும் செலுத்தத் தேவையில்லை என்ற நிலை இருந்தது.

சர்வமானியம் இரண்டு வகைகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. 1) ஏக போகம் (2) கண போகம். ஏக போகத்தில் பெற்ற நிலத்தை அப்பிராமணர் முழுமையாக உரிமை கொண்டாடலாம். ஏனெனில் அது அந்த ஒரு பிராமணருக்கு மட்டுமே கொடுக்கப்பட்டிருக்கும் நிலமாகும். அந்த மானியத்தின் நிபந்தனைகளுக்கு ஏற்ப அவர் அந்நிலத்தை விற்கலாம் அல்லது குத்தகைக்கு விடலாம். கண போகத்தில் ஒரு கிராமம் முழுவதும் சில பிராமணர்களுக்குக் கொடுக்கப்பட்டது. ஒவ்வொரு பிராமணருக்கும் அக்கிராம நிலத்தில் ஒரு பங்கு கொடுக்கப் பட்டிருந்தது. இந்தக் கண போகக் கிராமத்தைச் சதுர்வேதி மங்கலம் அல்லது பிரம்மதேயம் என அழைத்தனர்.

பிராமணர்கள் நேரடியாக உழவு வேலைகள் செய்கின்ற வழக்கமில்லை. அவர்கள் தாங்கள் பெற்ற நிலங்களில் விவசாயத்தை மூன்று விதங்களில் மேற்கொண்டனர்[65]. (1) ஒரு கிராமத்தைச் சார்ந்த பிராமணர்கள் அனைவரும் ஒன்றாகச் சேர்ந்து தங்களுக்குக் கொடுக்கப்பட்ட சதுர்வேதி மங்கலம் நிலங்களில் விவசாயம் செய்து பின்னர் அதிலிருந்து கிடைத்த இலாபத்தைத் தங்களது பங்குகளுக்கு ஏற்பப் பிரித்துக் கொண்டனர்.

2) சதுர்வேதி மங்கலம் நிலங்களில் சில பகுதிகள் பிராமணர்களுக்குப் பொதுவாக இருந்தது. அந்தப் பொது நிலங்களில்

பிராமணர்கள் அனைவரும் ஒன்றாகச் சேர்ந்து மேலே கண்டவாறு பொது விவசாயம் செய்தனர். சதுர்வேதி மங்கலத்தின் வேறு சில பகுதிகள் பிராமணர்களுக்குத் தனிப்பட்ட முறையில் சொந்தமாக இருந்தது. அந்நிலங்களில் அவர்கள் தனி உரிமை பெற்று விவசாயம் செய்து அதன் முழுப் பலனையும் தாங்களே அனுபவித்தனர்.

3) சதுர்வேதி மங்கல நிலங்கள் அவற்றின் வளமையின் அடிப்படையில் மூன்று வகைகளாகப் பிரிக்கப்பட்டன. 1) வளமான நிலங்கள், 2) சுமாரான வளமுடைய நிலங்கள், 3) வளமற்ற நிலங்கள், ஒவ்வொரு பிராமணருக்கும் ஒவ்வொரு வகையிலிருந்தும் சில நிலங்கள் சில காலத்திற்கு மட்டும் ஒதுக்கப்பட்டிருந்தன. பின்னர் அந்த நிலங்கள் மீண்டும் வளமையின் அடிப்படையில் பிரிக்கப்பட்டுப் பிராமணர் களுக்குக் கொடுக்கப்பட்டன.

கோயிலுக்குத் தானமாகக் கொடுக்கப்பட்ட நிலங்கள் தேவதானம் என அழைக்கப்பட்டன. சிவன் கோயிலுக்குத் தானமாக வழங்கப்பட்ட நிலங்கள் ''திருநாமத்துக் காணி''[66] என்றும் பெருமாள் கோயிலுக்குத் தானமாக வழங்கப்பட்ட நிலங்கள் ''திருவிடையாட்டம்[67]'' என்றும் அழைக்கப்பட்டன. சிவன் கோயில் நிலங்களின் எல்லைக் கற்களில் திரிசூலம் பொறிக்கப்பட்டிருந்தது. பெருமாள் கோயில் நிலங்களின் எல்லைக் கற்களில் சக்கரம் பொறிக்கப்பட்டிருந்தது.

சிவன் கோயில் நிலங்களின் நிருவாகத்தைக் கவனித்தவர்கள் மகேசுவரர்கள் என்றும் விட்டுணு கோயிலின் நிலங்களை நிருவாகம் செய்தவர்கள் சிராதமந்திரர்கள் என்றும் அழைக்கப்பட்டனர். பொதுவாகக் கோயில் நிலங்கள் குத்தகைக்கு விடப்பட்டுக் குத்தகைப் பணம் (மேல்வாரம்) வசூலிக்கப்பட்டது. சில சமயங்களில் கோயில் நிருவாகமே நாட் கூலிஆட்களை வைத்துக் கொண்டு தங்களது நிலங்களை விவசாயம் செய்வதும் உண்டு. கோயிலின் நேரடி விவசாயத்தை முற்றூட்டு என அழைத்தனர்[68]. புதுக்கோட்டை மாவட்டம் ஒளியமங்கலம் சிவன் கோயிலில் காணப்படும் முதலாம் மாறவர்மன் குலசேகரனின் கல்வெட்டு தளக்காலூர் மக்கள் கோயில் நிலத்தில் விவசாயம் செய்யக் கோயில் நிருவாகத்திற்கு நான்கு ஏர்களும், கால்நடைகளும் கொடுத்தனர் எனக் குறிப்பிடுகிறது[69]. இப்படிக் கிராம மக்கள் கோயில் நில விவசாயத்திற்குத் தேவையானவற்றைக் கொடுக்கும் வழக்கம் மற்றக் கோயில்களிலும் இருந்திருக்க வேண்டும் என்று கருத முடிகிறது.

மடங்களின் பராமரிப்புக்கும் அதன் கல்விப்பணிக்கும் தானமாகக் கொடுக்கப்பட்ட நிலங்கள் மடப்புறம் என அழைக்கப்பட்டன.

## நீர்ப்பாசனம்

இரண்டாம் பாண்டியப் பேரரசில் நீர்ப்பாசனத்திற்கு மிகுந்த முக்கியத்துவம் கொடுத்திருந்தனர் என்பது பல கல்வெட்டுகளிலிருந்து

தெரியவருகிறது. நீர்ப்பாசன வசதிகளை ஏற்படுத்திக் கொடுப்பது அரசாங்கத்தின் ஒரு முக்கியக் கடமையாகக் கருதப்பட்டது.

ஒரு குளத்தை வெட்டித் தருமம் செய்வது ஒரு மனிதன் தனது வாழ்க்கையில் செய்ய வேண்டிய ஏழு முக்கியப் பணிகளில் ஒன்றாகக் கருதப்பட்டது[70]. நீர்ப்பாசன வசதி செய்து கொடுப்பதை ஒரு தருமம் எனக் கருதியதனால் தனியார்கள் குளங்களை வெட்டினர். அவற்றின் பராமரிப்பிற்கும் ஏற்பாடு செய்தனர்.

ஒரு நிலத்தை விற்கும் போதும், வாங்கும் போதும், தானமாகக் கொடுக்கும் போதும் அந்த நிலம் எந்தக் குளத்தின் நீரைப் பயன்படுத்திக் கொள்ளலாம் என்பது ஆவணத்தில் தெளிவாகக் குறிக்கப்பட்டது[71]. அக்காலத்தில் அமைக்கபட்ட குளங்கள், ஏரிகள் ஆகியவற்றில் சில தற்போதும் நீர்ப்பாசனத்திற்குப் பயன்பட்டு வருகின்றன. அவற்றில் குறிப்பிடத்தக்கவை.

1)மதுரை மாவட்டம் மேலவளவில் உள்ள பரம்புக்கண்மாய்

2) மதுரை மாவட்டம் திருவாதவூரில் உள்ள பூவாணை ஏரி

3) மதுரையில் உள்ள மாடக்குளம்

4) திருநெல்வேலி மாவட்டம் கோயில் பட்டியில் உள்ள சுந்தர பாண்டியன் பேரேரி

## நீர்நிலைகளின் வகைகள்

கிணறு, கால்வாய், குளம் ஆகியவை நீர்ப்பாசனத்திற்குப் பயன்பட்டன. நீர்ப்பாசனத்திற்குக் குளம் பயன்பட்டது பற்றிப் பல கல்வெட்டுக் குறிப்புகள் காணப்படுகின்றன[72].

கால்வாய்ப்பாசனம் ஆறுகளை ஒட்டிய பகுதிகளில் நடந்தது[63]. ஆங்காங்கே கட்டப்பட்டிருந்த அணைகள் கால்வாய்களுக்குத் தண்ணீர் வழங்கின[64]. தோட்டங்களுக்குக் கிணறுகளிலிருந்து தண்ணீர் எடுத்துக் கொள்ளப்பட்டது. ஏற்றத்தின் மூலம் கிணற்றில் தண்ணீர் இறைக்கப்பட்டது[65].

## நீர்நிலைகள் ஏற்படுத்தல்

அரசர்கள் மக்களின் நலனுக்காகவும் தமக்கு நற்பெயர் கிடைக்கவும் நீர்நிலைகளை அமைத்தார்கள். மதுரை மாவட்டம் சிலைமான் என்ற ஊரில் முதலாம் மாறவர்மன் சுந்தர பாண்டியனின் கல்வெட்டு உள்ளது. இவ்வரசனின் ஆணைப்படி மானாபரன் மூவேந்த வேளான் என்ற குறுநில மன்னன் குந்தபை(வைகை) ஆற்றிலிருந்து தியாகச் சீரிய பேராறு என்ற பெயரில் ஒரு கால்வாய் வெட்டினான் என இக்கல்வெட்டு குறிப்பிடுகிறது.[66] முதலாம் சடையவர்மன் சுந்தர பாண்டியன் வெளியிட்ட மற்றொரு கல்வெட்டு அவன் கொள்ளிடத்தின்

கரைகளை உயர்த்துவதற்கு அப்பகுதியில் வாழ்ந்த மக்களிடமிருந்து ஒரு சிறப்பு வரியை வசூலித்தான் எனக் குறிப்பிடுகிறது[67]. மூன்றாம் மாறவர்மன் விக்கிரம பாண்டியன் (கி.பி.1283) வெளியிட்ட அரகண்டநல்லூர் (கடலூர் மாவட்டம்) கல்வெட்டு இப்பாண்டிய அரசனின் குறுநிலமன்னனான சுந்தர பாண்டிய கண்டியதேவன் ஒரு கால்வாய் வெட்டி அதற்கு மதகு அமைத்து அக்கால்வாய் மூலம் பெண்ணை ஆற்றின் தண்ணீர் நென்மேலி தேவதான நிலங்களில் பாய்வதற்கு ஏற்பாடு செய்தான் எனக் குறிப்பிடுகிறது[68].

தனியார்கள் நீர்ப்பாசன வசதிகளை ஏற்படுத்தியபோது அவர்களுக்கு அரசாங்கம் ஆதரவு காட்டியது. சலுகைகளும் வழங்கியது. கி.பி.1203இல் மங்கையர்க்கரசியார் என்ற பெண்மணி திருவாதவூர் (மதுரை மாவட்டம்) திருமறைநாதர் கோயில் குளத்தின் கரைகளைக் கட்டினார். இந்தத் தருமத்தைப் பாராட்டி அக்கோயில் நிருவாகம் அந்தக் குளத்திலிருந்து தனது நிலத்திற்கு நீர் எடுத்துக் கொள்ள மங்கையர்க்கரசியாருக்கு அனுமதி கொடுத்தது[69]. கி.பி.1221இல் முதலாம் மாறவர்மன் சுந்தர பாண்டியனின் அமைச்சன் பல்லவராயன் என்பவன் அழகர் கோயிலில் (மதுரை மாவட்டம்) ஒரு கால்வாயை வெட்டினான்[70]. கி.பி.1251இல் மலை மண்டலத்தைச் சேர்ந்த நம்பி பொதுவான் என்பவன் திருமங்கலக்குறிச்சியில் (திருநெல்வேலி மாவட்டம்) இருந்த சுந்தர பாண்டியப் பேரேரியில் ஒருமதகை அமைத்தான்[71]. கி.பி.1286இல் மூன்றாம் மாறவர்மன் விக்கிரம பாண்டியனின் அமைச்சனாகிய ஜெயசிம்மன் தளவாலூரில் (கடலூர் மாவட்டம்) ஒரு குளத்தை வெட்டினான்[72]. கி.பி.1308இல் கண்ணன் என்பவன் புலவயல் (புதுக்கோட்டை மாவட்டம்) என்ற இடத்தில் அமையாண்டி ஏரி என்ற ஓர் ஏரியை வெட்டினான். இந்தத் தருமத்தைப் பாராட்டிப் புலவயல் கிராமச் சபை இராசராசப்பற்றுப் பகுதியின் பாடிக்காவல் உரிமையை (காவல் செய்யும் உரிமை) கண்ணனுக்கு வழங்கியது[73].

## நீர்நிலைகள் பராமரிப்பு

நீர் நிலைகளில் தேங்கிக் கிடந்த வண்டல் மண்ணை ஆண்டு தோறும் நீக்கினர். இதனால் நீர் நிலைகளின் ஆழம் அதிகமாயிற்று. மறு ஆண்டில் நீரைத் தேக்கி வைப்பது எளிதாயிற்று. மேலும் நீர் நிலைகளின் கரைகள் ஆண்டுதோறும் சீர்செய்யப் பெற்றன[74].

முதலாம் மாறவர்மன் சுந்தர பாண்டியன் கி.பி.1234இல் வெளியிட்ட ஒரு கல்வெட்டு கள்ளிக் குடியில் (மதுரை மாவட்டம்) காணப்படுகிறது. இக்கல்வெட்டு செங்குடி நாட்டில் இருந்த பொற்பாததேவி சதுர்வேதி மங்கலத்தின் ஏரிகளாகிய கோவிந்தன் ஏரி, திருமாலிருஞ்சோலைப் பேரேரி, குமர நாராயணப் பேரேரி

ஆகியவற்றின் கரைகள் செப்பனிடப் பட்டதைக் குறிப்பிடுகிறது[75]. அதே கள்ளிக்குடியில் காணப்படும் மற்றொரு கல்வெட்டு முதலாம் மாறவர்மன் குலசேகரனால் வெளியிடப்பட்டது. இக்கல்வெட்டு பத்மதலதேவி சதுர்வேதி மங்கலத்தின் ஏரிகளாகிய குலசேகரப் பேரேரி, பேராயிரப் பேரேரி ஆகியவற்றின் கரைகள் செப்பனிடப்பட்டதைக் குறிப்பிடுகிறது[76].

குளத்தின் பராமரிப்பிற்காகத் தானமாகக் கொடுக்கப்பட்ட நிலம் திருவோடைப்புறம்[77] அல்லது குளப்பட்டி[78] என அழைக்கப்பட்டது. முதலாம் சடையவர்மன் குலசேகரனின் திருநெல்வேலி நெல்லையப்பர் கோயில் கல்வெட்டு திருவோடைப் புறமாக 1-1/2 வேலி நிலம் அளிக்கப்பட்டதென்றும் அந்த நிலத்தை அக்குளத்தைப் பராமரிப்பவர்கள் தங்களுக்குள் பகிர்ந்து கொண்டனர் என்றும் குறிப்பிடுகிறது.[79] முதலாம் சடையவர்மன் சுந்தர பாண்டியனின் செம்பத்தூர் (புதுக்கோட்டை மாவட்டம்) கல்வெட்டு செம்பாடு, கொற்றைக் குறிச்சி, பூத்தாம்பூர் ஆகிய மூன்று ஊர்களைச் சார்ந்த கிராம சபைகள் குளப்பட்டியாக நிலம் அளித்த செய்தியைக் குறிப்பிடுகிறது[80]. பொதுவாகக் குளப்பட்டியாக அல்லது திருவோடைப் புறமாகக் கொடுக்கப்பட்ட நிலம் வரிவிலக்கு பெற்றிருந்தது[81]. அந்த நிருவாகத்தை ஏரி வாரியம் கவனித்துக் கொண்டது[82].

நீர்நிலைகளைப் பராமரிப்பதற்குத் தேவையான பணத்தைப் பலர் கொடுத்தனர். திருநெல்வேலி மாவட்டம் சுத்தமல்லியில் காணப்படும் முதலாம் சடையவர்மன் குலசேகரனின் கல்வெட்டு இப்பாண்டிய அரசர் 100 திரமம் பணத்தை ஒரு பிராமணருக்குக் கொடுத்துக் குலசேகரப் பேரேரியை ஆழப்படுத்தச் செய்தார் எனச் சொல்கிறது[83]. முதலாம் மாறவர்மன் குலசேகரன் வெளியிட்ட ஒரு கல்வெட்டு, பல ஊர்களைச் சேர்ந்த நகரத்தார்கள் ஒவ்வொரு மாதமும் ஒரு குறிப்பிட்ட தொகையைத் தங்களுக்குள் வசூலித்து அந்தப் பணத்தைக் கீரமங்கலம் சிவன் கோயிலுக்குக் கொடுத்து நானாதேசம் என்ற குளத்தைப் பராமரிக்கச் சொன்னார்கள் எனக் குறிப்பிடுகிறது[84].

குளங்களில் மீன் பிடிக்கும் உரிமையை ஆண்டுதோறும் ஏலத்தில் விட்டனர். அப்படிப் பெற்ற பாசிப்பட்டம் முழுவதையுமோ அதன் ஒரு பகுதியையோ அக்குளத்தின் பராமரிப்பிற்குப் பயன்படுத்தினர். இராமநாதபுரம் மாவட்டம் குள்ளபுரம் குளப் பராமரிப்பிற்கு அக்குளத்திலிருந்து பெற்ற பாசிப்பட்டம் முழுவதும் பயன்படுத்தப் பட்டது[85]. புதுக்கோட்டை மாவட்டம் நார்த்தாமலையின் குளத்தை ஆழப்படுத்துவதற்கு அக்குளத்திலிருந்து பெற்ற பாசிப் பட்டத்தில் பாதிப் பணம் செலவு செய்யப்பட்டது[86]. புதுக்கோட்டை மாவட்டம் நெடுங்குடியிலிருந்த அழிசிக்குடிக் குளத்திலிருந்து பெறப்பட்ட பாசிப்பட்டத்தில் ஐந்தில் ஒரு பகுதி அக்குளத்தின் வண்டல் மண்ணை அகற்றி அதனை ஆழப்படுத்தப் பயன்படுத்தப்பட்டது[87].

## நீர்நிலைகளைப் பழுதுபார்த்தல்

தேவையானபொழுது நீர்நிலைகளை அரசர்கள் பழுது பார்த்தனர். கி.பி.1258இல் முதலாம் சடையவர்மன் வீரபாண்டியன் வாகைப்புத்தூர் (கோயம்புத்தூர் மாவட்டம்) குளத்தைப் பழுது நீக்கிச் சரி செய்து அதற்கு வீரபாண்டியப் பேரேரி எனப் பெயர் வைத்தான்[88]. இதே பாண்டிய அரசன் கி.பி.1276இல் திருப்பெரும்பழனம்(கோயம்புத்தூர் மாவட்டம்) கிராமச் சபைக்கு ஆணை பிறப்பித்து அவ்வூர்க் குளத்தைச் செப்பனிடும்படிக் கேட்டுக் கொண்டான்[89]. அவனுடைய ஆணையின்படி மேற்படி குளத்தின் கரைகள் உயர்த்தப்பட்டன. அக்குளத்தில் மடைகளும் அமைக்கப்பட்டன[90].

கி.பி.1286-இல் மேலத்தானியம் (புதுக்கோட்டை மாவட்டம்) கால்வாயில் உடைப்பு ஏற்பட்டுவிட்டது.[91] அவ்வூரின் கிராமச் சபையினர் முதலாம் மாறவர்மன் குலசேகரனைச் சந்தித்து, தங்களிடம் மேற்படி கால்வாய் உடைப்பைச் சீர் செய்யப் பணமில்லை எனச் சொன்னார்கள். உடனே அப்பாண்டிய அரசன் மேலத்தானியம் சிவன் கோயில் நிருவாகத்தினர் இரண்டு கரை நாட்டுப் பாடிகாப்பார் (காவல் பிரிவினர்) ஆகியோருக்கு ஆணை பிறப்பித்து, அந்த உடைப்பைச் சீர் செய்யும் படியும் அந்தக் கால்வாயின் அதிகப் படி நீரை வெளியேற்றச் சிறு கால்வாய்கள் வெட்டும்படியும் செய்தான். கி.பி.1301இல் இந்த மேலத்தானியம் கால்வாயில் மீண்டும் உடைப்பு ஏற்பட்டது. அப்போது அந்த உடைப்பை முதலாம் மாறவர்மன் குலசேகரனின் குறுநில மன்னனாகிய அரசு கடம்பராயன் சரி செய்தான். இந்தக் குறுநில மன்னனின் பணியைப் பாராட்டி ஒரு பாடல் இயற்றப்பட்டது[92].

தனியார்களும் நீர் நிலைகளைச் செப்பனிடுவதில் ஆர்வம் செலுத்தினர். கி.பி.1222இல் குன்னத்தூரில் (மதுரை மாவட்டம்) இலுப்பைமடைக்கும் சப்பைமடைக்கும் இடையே அமைந்திருந்த குளத்தில் உடைப்பு ஏற்பட்டுவிட்டது. அதனை மலை மண்டலத்தைச் சார்ந்த அழகிய ராம பல்லவராயன் என்பவன் தனது சொந்தப் பணத்தைச் செலவு செய்து செப்பனிட்டான்[93]. கி.பி.1303இல் விசயமங்கலம் (திருநெல்வேலி மாவட்டம்) மனோமயன் ஏரியின் 32-ஆவது மதகு கடும் மழை வெள்ளதால் உடைந்தது. அவ்வூரைச் சேர்ந்த நம்பி சங்கரன் வாசுதேவன் என்பவன் மேற்படி மதகைச் செப்பனிட்டான்[94].

## நீர்ப்பங்கீடு

நீர்நிலைகளின் நீரைப் பங்கீடு செய்வதில் சில விதிமுறைகள் பின்பற்றப்பட்டன. முதலாம் மாறவர்மன் சுந்தர பாண்டியன் வெளியிட்ட மன்னார்கோயில் (தஞ்சாவூர் மாவட்டம்) கோபாலநாதசாமி கோயிலில் காணப்படும் மூன்று கல்வெட்டுகள் ஒரு கிராமத்தின் குளத்திலிருந்து நிரம்பிவழியும் தண்ணீரைக் கோயில் நிலத்திற்குப் பயன்படுத்திக் கொண்டது பற்றிக் குறிப்பிடுகிறது[95].

பொன்னமராவதி (புதுக்கோட்டை மாவட்டம்) சோழேச்சுவரர் கோயிலில் காணப்படும் முதலாம் மாறவர்மன் சுந்தர பாண்டியனின் கல்வெட்டு அக்கோயில் நிருவாகத்திற்கும் அப்பாண்டிய அரசரின் பணியாட்களுக்கும் ஏற்பட்ட தண்ணீர்த் தகராறு பற்றிக் குறிப்பிடுகிறது. முதலாம் மாறவர்மன் சுந்தர பாண்டியன் பொன்னமராவதிப் பகுதியின் கோயில்களைக் கண்காணிக்கச் சென்றான். அப்போது அவனும் அவனது பணியாட்களும் பொன்னமராவதியில் தங்கி இருந்தனர். அச்சமயம் அப்பணியாட்கள் தங்களுக்குத் தேவையான தண்ணீரைச் சிவன் கோயிலுக்குச் சொந்தமான இடங்கைமீகாமன் குளத்திலிருந்து எடுத்துக் கொண்டனர்.இதற்கு அச்சிவன் கோயில் நிருவாகத்தினர் எதிர்ப்பு தெரிவித்தனர். இது பற்றி அரசனிடம் புகார் செய்தனர். பின்னர் அப்பாண்டியன் தனது பணியாட்கள் இடங்கை மீகாமன் குளத்திலிருந்து தண்ணீர் எடுக்கக்கூடாது என ஆணை பிறப்பித்தான்.

## வெள்ளம்

ஒருங்கிணைந்த தஞ்சாவூர் மாவட்டம் திருக்குவளை தியாகராசர் கோயிலில் காணப்படும் முதலாம் சடையவர்மன் சுந்தர பாண்டியனின் கல்வெட்டு சந்திரமௌலி பேராற்றில் வெள்ளம் ஏற்பட்டு அத்தண்ணீர் கோயிலில் வடக்குத் தெருவில் ஓட ஆரம்பித்தது எனக் குறிப்பிடுகிறது. திருமறைக் காடுடையான் என்பவன் அந்தச் சந்திரமௌலி பேராற்றில் எதிர்காலத்தில் வெள்ளம் ஏற்படாதவாறு அந்தப் பேராற்றிலிருந்து கால்வாய்கள் வெட்டி அதிகப்படியான தண்ணீரை வெளியேற்றினான்.

## பஞ்சம்

முதலாம் சடையவர்மன் சுந்தரபாண்டியனின் இளையாங்குடி (இராமநாதபுரம் மாவட்டம்) கல்வெட்டு இவ்வரசனின் 10ஆம் ஆட்சியாண்டில் பஞ்சம் ஏற்பட்டது எனக் குறிப்பிடுகிறது. இந்தப் பஞ்ச காலத்தில் ஏற்பட்ட இழப்பினால் இவ்வூர் சிவன் கோயில் நிருவாகத்திற்குப் பணம் தேவைப்பட்டது. ஆகவே இக்கோயில் நிருவாகம் சில கோயில் நகைகளை விற்றுப் பணம் பெற்று நிருவாகத்தைச் செய்தது. பின்னர் அடுத்த ஆண்டு நன்னிலை திரும்பியதும் அக்கோயில் நிருவாகம் தான் விற்ற நகைகளுக்கு ஈடுகட்ட புதிய நகைகளை வாங்கியது[97].

பாண்டியப் பெருவேந்தர் காலத்து நிதி நிலைமை பற்றித் தெரிந்து கொள்ளக் கல்வெட்டுகள் பெரிதும் உதவுகின்றன. பெரும்பாலான பாண்டியப் பெருவேந்தர் காலக் கல்வெட்டுகள் நிலம் கொடுத்தல், நிலவரித் தள்ளுபடி, வரி விதிப்பு ஆகியவை பற்றிச் சொல்கின்றன.

பேரரசுக்குக் கீழே குறிப்பிடப்பட்டுள்ள வகைகள் மூலம் வருவாய் கிடைத்தது.

1. நிலவரி
2. சொத்து வரி
3. வருமான வரி
4. தொழில் வரி
5. பிற வரிகள்

## நிலவரி

பாண்டியப் பேரரசிற்குக் கிடைத்த மிக முக்கியமான வருவாய் நிலவரியாகும். நிலவரியைப் பொதுவாகக் கடமை என அழைத்தனர். இதனை இறைக்காக[98] நெல் கடமை[99] நெல் வரி[100] புன்செய் வாரம்[101] எனவும் அழைத்தனர். நன்செய் நிலத்திலிருந்து வசூலிக்கப்பட்ட வரி நன்செய்க் கடமை என்றும் புன்செய் நிலத்திலிருந்து வசூலிக்கப்பட்ட வரி புன்செய்க் கடமை என்றும் அழைக்கப்பட்டன.

## நில வரி விதித்தல்

நிலத்தின் வளமை, விளைவிக்கப்பட்ட தானியங்கள், நிலத்தின் விளைச்சல், நீர்ப்பாசன வசதி ஆகியவற்றின் அடிப்படையில் நில வரி நிருணயிக்கப்பட்டது. மதுரை மாவட்டம் அழகர் கோயிலில் காணப்படும் முதலாம் சடையவர்மன் குலசேகரனின் கல்வெட்டொன்று விளைந்த நிலங்களில் இருந்து மட்டுமே வரி வசூலிக்கப்பட்டது எனச் சொல்கிறது[102]. நிலத்தின் விளைச்சல் பாதிக்கப்படுமேயானால் வரி தள்ளுபடி செய்யப்பட்டது. மழை பெய்யாத காலத்திலும் வெள்ளம் வந்து பயிர் பாதிக்கப்பட்ட போதும் நிலவரி தள்ளுபடி செய்யப்பட்டது: அல்லது குறைவாக வசூலிக்கப்பட்டது[103].

## நில வரி விகிதம்

இரண்டாவது பாண்டியப் பேரரசில் நிலவரி எவ்வளவு வசூலிக்கப்பட்டது என்பதில் கருத்து வேறுபாடுகள் நிலவுகின்றன. வரலாற்றாசிரியர்கள் சிலர் இப்பேரரசில் நில வரி மொத்த விளைச்சலில் ஆறில் ஒரு பங்கு வசூலிக்கப்பட்டது என்கின்றனர். வேறு சிலரோ மொத்த விளைச்சலில் மூன்றில் ஒரு பகுதியாக வசூலிக்கப்பட்டது என்கின்றனர்.

நிலவரி என்ற கடமை பற்றிப் பல கல்வெட்டுகள் குறிப்பிடு கின்றன. இக்கல்வெட்டுகளில் நிலத்தின் அளவும் அதற்கான நிலவரியும் குறிப்பிடப்பட்டிருக்கிறதேயொழிய அந்த நிலத்தின் மொத்த விளைச்சலில் எவ்வளவு பங்கு வசூலிக்கப்பட்டது என்பதைத் தெளிவாகத் தெரிந்து கொள்ள முடியவில்லை. கீழே குறிப்பிடப்பட்டுள்ள பட்டியல் நில அளவையும், அந்நிலத்திற்கு வசூலிக்கப்பட்ட வரியையும் நமக்குத் தெரிவிக்கிறது.

| ஆண்டு | மாவட்டம் | விளைவிக்கப்பட்ட தானியத்தின் விவரம் | நில அளவு | வரி | ஒரு வேலி நிலத்தின் மீது வரி/20 மா = ஒரு வேலி |
|---|---|---|---|---|---|
| கி.பி. 1205 | மதுரை | நெல் | மா | 4 கலம்+ கால் காசு | 20 கலம்+ 5 காசு[104] |
| | | நெல் கோடை காலப்பயிர் | மா | 2 கலம்+ 1/4 திரம் | 40 கலம்+ 5 திரம்[105] |
| | | கரும்பு | மா | 2 கலம்+ 1/4 திரம் | 40 கலம்+ 5 திரம்[105] |
| | | நெல் குறுவை | மா | 1 கலம்+ 1/8 திரம் | 20 கலம்+ 2 1/2 திரம்[105] |
| கி.பி.1222 | புதுக்கோட்டை | எள் - | மா | 1 தூணி+ 1 பதக்கு+ 1/16 திரம் | 10 கலம் + 1 1/4 திரம்[105] |
| | | தினை | மா | 1 தூணி+ 1 பதக்கு+ 1/16 திரம் | 10 கலம்+ 1 1/4 திரம்[105] |
| | | வரகு | மா | 1 தூணி+ 1 பதக்கு+ 1/16 திரம் | 10 கலம்+ 1 1/4 திரம்[105] |
| கி.பி. 1235 | புதுக்கோட்டை | நெல் கோடைக்காலப் பயிர் | மா | 1 1/2 கலம் | 30 கலம்[106] |
| | | நெல் குறுவை | மா | 3/4 கலம் | 15 கலம்[106] |
| | | கோடைக்காலப் பயிர்கள் கிணற்றுப்பாசனம் | மா | 3/8 கலம் | 7 1/2 கலம்[106] |

கடமையைத் தவிர வேறு சில வரிகளும் நிலங்களிலிருந்து வசூலிக்கப்பட்டன. இந்த இதர வரிகள் நிலத்திற்குத் தண்ணீர் பாய்ச்சுவதற்காகவும் , வரித் துறை அலுவலர்கள் பராமரிப்பிற்காகவும், கோயில்கள், மடங்கள் ஆகியவற்றின் பராமரிப்பிற்காகவும் வசூலிக்கப் பட்டன. இவ்வாறு வசூலிக்கப்பட்ட வரிகள் இடத்திற்கு இடம், காலத்திற்குக் காலம் மாறுபட்டிருந்தது என்பது கல்வெட்டுகளிலிருந்து தெரிய வருகிறது[107].

நீர்ப்பாசன நிலைகளைப் பராமரிப்பதற்காக நில உரிமையாளர்களிடமிருந்து நீரணி[108] நீர்விலை[109] ஆகிய வரிகளை அரசாங்கம் வசூலித்தது. அரிமுக்கை[110], எடுத்துக்கோட்டி[111], கண்காணி[112], கணக்கப்பேறு[113], பாடிக்காவல்[114], வெட்டித்தேவை[115] ஆகிய வரிகள் கிராமத்தின் அலுவலர்களைப் பராமரிப்பதற்காக வசூலிக்கப்பட்ட வரிகளாகும். கார்த்திகைப் பச்சை[116], கார்த்திகைப்பொன்[117], மகமை[118] ஆகிய வரிகளை அரசாங்கம் கோயில்கள், மடங்கள் ஆகியவற்றின் பராமரிப்பிற்காக வசூலித்தது.

மேலே சொல்லப்பட்ட வரிகளையும், நிலவரியோடு சேர்த்து அரசாங்கம் வசூலித்தது. ஆகவே தான் மொத்தத்தில் நிலவரி மிகக்கூடுதலாக இருந்தது. இப்படி வசூலித்ததனால் நிலவரி எவ்வளவு வசூலிக்கப்பட்டது என்பதைத் தெளிவாகத் தெரிந்து கொள்ள முடியவில்லை.

## நிலவரி வசூலித்த முறை

இரண்டாம் பாண்டியப் பேரரசில் வரிகள் பணமாகவும், தானியங்களாகவும் வசூலிக்கப்பட்டன[119]. தானியமாக வசூலிக்கப்பட்ட நிலவரிகளைக் கல்வெட்டுகள் நெல்கடமை[120] நெல்வரி[121] எனக் குறிப்பிடு கின்றன. பணமாக வசூலிக்கப்பட்ட நிலவரிகளைக் கல்வெட்டுகள் காசுக்கடமை[122] காசாயவர்க்கம்[123] எனக் குறிப்பிடுகின்றன.

கிராமச் சபைகளாகிய ஊர், சபை ஆகியவை தங்கள் நிருவாகத்தின் கீழ் இருந்த பகுதிகளில் வரி வசூலிக்கின்ற பொறுப்பை ஏற்றுக் கொண்டிருந்தன. ஆகவே தான் புதிய வரி விதிப்பு அல்லது வரிகள் தள்ளுபடி பற்றிய செய்திகளை அரசாங்கம் இந்தச் சபைகளுக்குத் தெரிவித்தது. இந்தக் கிராமச் சபைகள் சில சமயங்களில் அரசாங்கத்தின் அனுமதி இன்றியே தங்கள் பகுதியிலுள்ள நிலங்களின் வரிகளைக் குறைத்தன அல்லது தள்ளுபடி செய்தன. அச்சமயம் அந்த வரித் தள்ளுபடி அல்லது குறைப்பைச் சரிக்கட்டக் கிராமத்திலிருந்த மற்ற நிலங்களின் மீது வரி உயர்த்தப்பட்டது. இவ்வாறு செய்தமையினால் அரசாங்கத்திற்குச் செலுத்தப்பட வேண்டிய வரி குறைக்கப்படாமல் அதே அளவு செலுத்தப்பட்டது.

## வரி விலக்கு

கிராமத்தில் இருந்த பொது இடங்களுக்கும், பொது நிலங்களுக்கும் வரி விலக்கு கொடுக்கப்பட்டிருந்தது. கிராமத்தின் பொது நிலம், 'ஊர் நத்தம்' என அழைக்கப்பட்டது. இந்த ஊர் நத்தத்திற்கு வரி விலக்கு அளிக்கப்பட்டிருந்தது. கோயில், பறைச்சேரி (பறையர் வாழ்விடங்கள்) கம்மாளச்சேரி (கைவினைஞர்கள் வாழ்விடம்), குளம், கோயில் நிலங்கள், கோயில் பூந்தோட்டங்கள், கதிரடிக்கும் இடம், பொது

மேய்ச்சல் இடம், உப்பளம், நதியின் கரையிலிருக்கும் இடம், வெள்ளத்தினால் பாதிக்கப்படுகின்ற நிலம், சுடுகாடு ஆகியவற்றிற்கு வரி விலக்கு கொடுக்கப்பட்டிருந்தது. வரி விலக்கு பெற்றிருந்த நிலங்களைத் தரமிலி நிலங்கள் என்றும் வரி விதிக்கப்பெற்ற நிலங்களைத் தரம் பெற்ற நிலங்கள் என்றும் கல்வெட்டுகள் குறிக்கின்றன.

பொதுவாக மடங்களுக்கும்[124] கோயில்களுக்கும்[125] தானமாகக் கொடுக்கப்பட்ட நிலங்களுக்கும் வரி விலக்கு அளிக்கப்பட்டது. வரி விலக்கு அளிக்கும் அதிகாரம் அரசருக்கும்[126] கிராமச் சபைகளுக்கும் [127] இருந்தது. வரி விலக்கைக் கிராமச்சபை (ஊர்) கொடுத்திருந்தால் அதை ஊர்கீழ் இறையிலி[128] என அழைத்தனர். சில சமயங்களில் நாட்டின் சபையாகிய நாட்டாரும் வரிவிலக்குக் கொடுப்பர். நாட்டின் சபை கொடுத்த வரிவிலக்கு நாட்டு இறையிலி[129] என அழைக்கப்பட்டது.

கடலுக்கு அருகில் இருந்த நிலங்கள் கடல் கொந்தளிப்பினால் பாதிக்கப்பட்டு மணற்பாங்காக மாறின. அந்நிலங்களில் களைகள் முளைத்தன. இப்படிப்பட்ட கடலோர நிலங்களுக்கு வரிவிலக்கு கொடுக்கப்பட்டிருந்தது[130]. முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் வெளியிட்ட சோழவந்தான் கல்வெட்டு (மதுரை மாவட்டம்) அவ்வரசனது முடிசூட்டு விழாவை முன்னிட்டுச் சில வரிகள் தள்ளுபடி செய்யப்பட்டன எனக் குறிப்பிடுகிறது[131].

சில சமயங்களில் ஒரு பெருந்தொகையை அரசு பெற்றுக் கொண்டு நிலங்களுக்கு வரிவிலக்கு அளித்தது. அந்தப் பெருந்தொகைக்குக் கிடைத்த வட்டிப்பணம் வரிக்கு ஈடாகக் கொள்ளப்பட்டது. இப்படிப்பட்ட நிலங்களும் இறையிலி நிலங்கள் என அழைக்கப்பட்டன[132]. சில தனி நபர்கள் நிலங்களை விலைக்கு வாங்கி அவற்றைக் கோயில்களுக்கும், மடங்களுக்கும் தானமாகக் கொடுத்தனர். அந்த நிலங்கள் செலுத்த வேண்டிய வரிக்காக ஒரு பெருந்தொகையை அரசுக்குச் செலுத்தித் தாங்கள் தானம் செய்த நிலங்களை இறையிலி நிலங்களாக ஆக்கிக் கொடுத்தனர். அந்தத் தனியார்கள் நிலத்திற்குக் கொடுத்த விலை கல்வெட்டுகளில் விலைத் திரவியம் என்றும், அந்நிலங்களின் வரிக்கு ஈடுசெய்யக் கொடுத்த மொத்தத் தொகை இறைத்திரவியம் என்றும் குறிப்பிடப்பட்டுள்ளன. இப்படிக் கொடுக்கப்பட்ட நிலங்களைக் கல்வெட்டுகள், விலைத்திரவியமும் இறைத்திரவியமும் அறக்கொண்டு என்று குறிப்பிடுகின்றன. இந்தக் கல்வெட்டுச் சொற்றொடர் விலைப்பணமும், வரிப்பணமும் மொத்தமாகப் பெற்றுக் கொண்டமையைக் குறிக்கிறது. இறைத்திரவியமாகப் பெற்ற பணத்தை, கிராமச் சபைகள் நிலங்களை வளப்படுத்துதல், நீர்ப்பாசன வசதிகளைப் பெருக்குதல் ஆகிய பணிகளுக்குப் பயன்படுத்தின. இந்த நிலங்கள் தனியார்களால் வாங்கி இறையிலியாகக் கொடுக்கப்பட்டன. இந்த நிலங்கள் வரி நீக்கப்பட்ட நிலங்கள் என்று பெயர் பெற்றிருந்தாலும்

இதனால் அரசாங்கத்திற்கு வரி இழப்பு ஏதும் ஏற்படவில்லை. ஏனென்றால் அந்த வரிக்கு ஈடாக ஒரு பெருந்தொகை முன்னமேயே முதலீடு செய்யப்பட்டு விட்டது. அந்த முதலீட்டின் வட்டி வரியாக எடுத்துக் கொள்ளப்பட்டது.

மொத்தத் தொகையைப் பெற்றுக் கொண்டு வரிவிலக்கு கொடுத்தமைக்குப் பல எடுத்துக்காட்டுகள் உள்ளன. அவற்றில் சில பின்வருமாறு: நிருபசேகர சதுர்வேதிமங்கலத்தின் சபை 75 கழஞ்சுப் பொன்னை மொத்தமாக அவ்வூர் சிவன் கோயிலிலிருந்து பெற்றுக் கொண்டு அச்சிவன் கோயிலின் சில நிலங்களுக்கு வரிவிலக்கு அளித்தது. செயங்கொண்ட சோழச் சதுர்வேதி மங்கலத்தின் சபை சுந்தர பாண்டிய சதுர்வேதி மங்கலத்துப் பிராமணர்களிடமிருந்து ஒரு பெருந்தொகையை இறைத்திரவியமாகப் பெற்றுக் கொண்டு அவர்களது நிலங்கள் சிலவற்றுக்கு வரிவிலக்கு கொடுத்தது. இராமநாதபுரம் மாவட்டம், திருப்பத்தூர் வட்டம் இளையாத்தாங்குடிக் கைலாசநாதர் கோயிலில் கிடைக்கும் ஒரு கல்வெட்டும் வரிவிலக்குப் பற்றிச் சொல்கிறது. நெல்வாயில் கிராமச்சபை, கல்வாயில் நாடாள்வான் என்பவரிடமிருந்து மொத்தத் தொகை பெற்றுக் கொண்டு அவனுக்குச் சொந்தமாகச் சிங்களாந்தகநல்லூரில் இருந்த நிலங்கள் சிலவற்றிற்கு வரிவிலக்கு அளித்தது[133].

## நிலத்தின் தர அடிப்படையில் வரி விதித்தல்

பல ஆண்டுகள் பயிரிடப்படாமல் கிடந்த நிலங்களைச் சீர் செய்து அவற்றை விளைநிலங்களாக ஆக்குபவர்களுக்கு வரிச்சலுகை கொடுக்கப்பட்டது. இப்படி வரிச்சலுகை கொடுத்ததனால் பலர் தரிசு நிலங்களை விளைநிலங்களாக மாற்றியமைக்க முன் வந்தனர். மதுரை மாவட்டம், திருமங்கலம் வட்டம், ஆனையூர்க் கல்வெட்டு இப்படித் தரிசாகக் கிடந்த நிலத்தை விளைநிலமாக மாற்றியமைத்தவரிடமிருந்து முதல் ஆண்டு அந்த நிலத்திற்காக 50 விழுக்காடு (சதவீதம்) வரியை மட்டுமே பெற்றுக் கொண்டது என்றும் இரண்டாவது ஆண்டு 75 விழுக்காடு வரி பெற்றுக் கொண்டது என்றும், மூன்றாவது ஆண்டிலிருந்து முழுமையான வரி வசூலித்தது என்றும் சொல்கின்றது[134]. முதலாம் சடையவர்மன் சுந்தர பாண்டியனின் திருக்களாக்குடி (இராமநாதபுரம் மாவட்டம்) கல்வெட்டும், தரிசு நிலங்கள் விளைச்சல் நிலங்களாக மாற்றப்பட்ட போது அந்நிலத்திற்கு வரிச்சலுகை கொடுத்ததைக் குறிக்கின்றது. திருக்களாக்குடி சிவன் கோயில் நிருவாகத்தினர் கோயிலுக்குச் சொந்தமாயிருந்த தரிசு நிலங்களைச் சுந்தர பாண்டியன் நரசிங்கதேவன் என்பவருக்குக் குத்தகைக்கு விட்டனர். அச்சமயம் குத்தகைத் தொகையில் சலுகை காட்டப்பட்டது[135]. அக்குத்தகைதாரர் செலுத்த வேண்டிய மேல் வாரம் முதலாண்டு பத்தில் ஒரு பங்காகவும்,

இரண்டாம் ஆண்டு ஒன்பதில் ஒரு பங்காகவும், மூன்றாம் ஆண்டு எட்டில் ஒரு பங்காகவும் நான்காம் ஆண்டு ஏழில் ஒரு பங்காகவும் அதற்குப் பின் வரும் ஆண்டுகளில் மூன்றில் ஒரு பங்காகவும் வசூலிக்கப்பட்டதாக இக்கல்வெட்டில் குறிக்கப்படுகிறது.

## வரிகளை மறுபரிசீலனை செய்து திருத்தி அமைத்தல்

அரசு விதித்த வரிகள் சில சமயங்களில் திருத்தி அமைக்கப் பட்டன. கிராமச் சபைகள் கேட்டுக் கொண்டதன் பேரில் சில சமயங்களில் அரசாங்கம் வரிகளைக் குறைத்திருக்கிறது. இராமநாதபுரம் மாவட்டம் திருவில்லிப்புத்தூர் மகாசபை கேட்டுக் கொண்டதன் பேரில் அவ்வூர் நிலங்களுக்குரிய வரிகளை முதலாம் மாறவர்மன் சுந்தர பாண்டியன் குறைத்தான்[136]. ஐயன் மழவராயன் என்ற அரசு அதிகாரியின் வேண்டுகோளுக்கிணங்க இரண்டாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் திருக்கோலூர், பூரங்குறிச்சி ஆகிய கிராமங்களின் நில வரிகளைக் குறைத்தான். இந்த இரு கிராமங்களிலிருந்த விவசாயிகள் நிலவரி அதிகம் என்பதனால் தங்கள் நிலங்களை உழுது பயிரிடாமல் இருந்தனர். இதை ஐயன் மழவராயன் மூலம் அறிந்த இரண்டாம் மாறவர்மன் சுந்தர பாண்டியன் வரிகளைக் குறைத்தான். அதன் பின்னர் அந்நிலங்கள் பயிரிடப்பட்டன.

வரிக் குறைப்பு இரண்டு முறைகளில் நடந்தது. 1. வரித் தொகை குறைக்கப்பட்டது. 2. நிலத்தை அளக்கும் அளவுகோல் பெரிதாக ஆக்கப்பட்டது. அச்சமயம் நிர்ணயித்த வரியில் மாற்றம் ஏதும் செய்யப்படவில்லை. இந்த இரண்டுவித வரிச்சலுகைகளையும் பற்றி முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியனின் பெரிச்சி கோயில் (இராமநாதபுரம் மாவட்டம்) கல்வெட்டுகளில் குறிப்பிடப்பட்டுள்ளன. பெரிச்சி கோயிலையும் கண்டரமாணிக்கத்தையும் சேர்ந்த மக்கள் நிலவரி அதிகமாயிருந்தது என்ற காரணத்தால் ஊரில் வாழ்வதை விடக் காட்டிற்குச் சென்று வாழ்வது மேல் எனக் கருத ஆரம்பித்தனர். இதனையறிந்த அப்பகுதி சிற்றரசன் கண்டன் ஆளுடையான் காங்கேயன் நிலவரிகளைக் குறைத்தான். ஐப்பசிக் குறை, சித்திரைக்குறுவை, தினை, வரகு, எள் ஆகியவை விளைந்த நிலங்களின் வரிகள் குறைக்கப் பட்டன[137].

அளவுகோலின் நீளம் அதிகப்படுத்தப்பட்டதனால் நிலத்தின் பரப்பளவு அளவில் குறைந்தது. அதனால் அந்நிலம் செலுத்த வேண்டிய வரியும் குறைந்தது. ஒரு மா விற்கு 18 சாண் சதுரம் என இருந்தது. இதனை முதலாம் மாறவர்மன் சுந்தர பாண்டியன் மா ஒன்றிற்கு 48 சாண் சதுரம் என மாற்றியமைத்தான். இதனால் நிலத்தின் அளவு குறைந்தது. நிலவரியும் குறைவாயிற்று. இப்படி அளவுகோலின் நீளத்தை அதிகப்படுத்துவதன் மூலமாகவும் வரிச்சலுகை கொடுக்கப்பட்டது[138].

## வரிவசூலிப்பதில் தாமதம்

பாண்டியப் பெருவேந்தர் காலத்துச் சில கல்வெட்டுகள் வரி வசூலிப்பதில் அரசாங்கம் தகுந்த அக்கறை செலுத்தவில்லை எனக் குறிப்பிடுகின்றன. ஒருங்கிணைந்த தஞ்சாவூர் மாவட்டம், திருப்பாம்புரத்தைச் சார்ந்த ஒரு விவசாயியிடம் அரசாங்கம் 22 ஆண்டுகள் வரி வசூலிக்காமல் இருந்திருக்கிறது[139]. ஒருங்கிணைந்த தென்னார்க்காடு மாவட்டம், இடையாறு என்ற கிராமத்தைச் சார்ந்த இரண்டு விவசாயிகளிடமிருந்து 18 ஆண்டுகள் வரி வசூலிக்கப்படவில்லை என மற்றொரு கல்வெட்டு குறிப்பிடுகிறது[140]. புதுக்கோட்டை மாவட்டம், வல்லநாடு என்ற கிராமத்து மக்களிடமிருந்து 9 ஆண்டுகள் வரி வசூலிக்கப்படவில்லை. இதனால் இவ் வரிப் பாக்கி 11000 காசாக உயர்ந்து விட்டது. வெகுகாலம் வரி வசூலிக்காததனால் வரி நிலுவை மிகப் பெரிய தொகையாக ஆகிவிட்டது. அப்பெருந் தொகையை அரசாங்கம் செலுத்தும்படி கேட்டபோது அவ்விவசாயி களினால் கொடுக்க இயலவில்லை. ஆகவே தான் அவர்கள் தங்கள் கிராமங்களை விட்டு ஓடிப்போய்விட்டனர். இதன்பின் இவர்களின் நிலங்கள் ஏலத்தில் விற்கப்பட்டன. இதன் மூலம் கிடைத்த பணத்தை வரி நிலுவைக்காக அரசாங்கம் வைத்துக்கொண்டது. மேற்கண்ட கல்வெட்டுகளிலிருந்து அரசாங்கம் ஆண்டுதோறும் நிலவரி வசூலிக்காமல் மெத்தனமாக இருந்தது என்பது தெளிவாகிறது.

## வரி வசூலிக்கக் கடுமையான நடவடிக்கைகள்

பாண்டியப் பெருவேந்தர் காலத்தில் வரிவசூலிக்கக் கடுமையான நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன எனச் சில கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன. கி.பி.1286ஆம் ஆண்டு வெளியிடப்பட்ட ஒரு கல்வெட்டு செங்கதிர் சோழ மூவேந்த வேளான் என்பவன் வரி நிலுவை செலுத்தாமல் இருந்தான் என்றும் அவனைப் பிரம்மாதிராயன் என்ற அரசு அதிகாரி அச்சுறுத்தினான் என்றும் குறிப்பிடுகிறது. வரிப் பாக்கியைச் செலுத்தாவிட்டால் சிறையில் அடைத்து விடுவதாக அவ்வதிகாரி அச்சுறுத்தினான். ஆகவே தான் செங்கதிர் சோழ மூவேந்த வேளான் தனது தம்பிக்காக ஒதுக்கி வைக்கப்பட்டிருந்த குடும்பப் பொது நிலத்தை விற்று, வரிப் பாக்கியைச் செலுத்திச் சிறைத் தண்டனையிலிருந்து தப்பினான்[141].

நிலவரி செலுத்த முடியாமல் விவசாயிகள் பலர் தங்களது நிலங்களை விட்டு ஓடி விட்டதாகப் பல கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன. இதிலிருந்து அரசு அதிகாரிகள் வரி வசூலிப்பதில் கடுமையாக நடந்து கொண்டார்கள் என்பதும் உறுதியாகிறது.

## சொத்து வரி

அசையும் சொத்துகள் அசையாச் சொத்துகள் ஆகியவற்றின் மீது பாண்டியப் பெருவேந்தர் காலத்தில் வரி விதிக்கப்பட்டது. தற்போதைய அரசாங்கம் சொத்தின் மீது வரி விதிக்கின்ற போது அச்சொத்தினால் அதன் உரிமையாளருக்கு ஆண்டொன்றிற்கு எவ்வளவு வருமானம் வருகிறது என்பதைக் கணக்கிட்டு அதனடிப்படையில் வரி விதிக்கிறது. ஆனால் பாண்டியப் பெருவேந்தர் காலத்தில் சொத்து வரி விதித்த போது சொத்தின் மதிப்பு மட்டுமே கணக்கில் எடுத்துக் கொள்ளப்பட்டது. அச்சொத்தின் ஆண்டு வருமானத்தின் அடிப்படையில் சொத்து வரி விதிக்கப்படவில்லை.

வீடு[142], மனை[143], தோட்டம்[144], விலங்கு[145], மரம்[146] ஆகியவற்றின் மீது சொத்து வரி விதிக்கப்பட்டது. இந்தச் சொத்து வரி விகிதம் இடத்திற்கிடம் வேறுபட்டு இருந்தது.

## வணிக வரி

விற்பனைக்காகச் சந்தைக்குக் கொண்டு செல்லப்பட்ட பொருட்களாகிய உப்பு, தானியங்கள், துணி வகைகள், விலங்குகள், வாசனைப் பொருட்கள் ஆகியவற்றின் மீது வரி விதிக்கப்பட்டது[147]. இந்த விற்பனை வரி மூலம் அரசாங்கத்திற்கு ஒரு கணிசமான வருவாய் கிடைத்தது. பிரான் மலையில் கிடைத்த பாண்டியப் பெருவேந்தர் காலத்துக் கல்வெட்டு, சந்தைக்கு வந்த பொருட்களின் மீது எவ்வளவு விற்பனை வரி விதிக்கப்பட்டது என்பதைப் பட்டியலிட்டுக் காட்டுகிறது[148].

**வணிக வரி விவரப் பட்டியல்**

| வ. எண். | பொருள் | அளவு | விற்பனை வரி |
|---|---|---|---|
| 1. | உப்பு | தலைச்சுமை 1-க்கு | 1/2 காசு |
| | | பாக்கம் 1-க்கு (சிறிய மூட்டை பாக்கம் எனச் சொல்லப்பட்டது) | 1/2 காசு |
| | | மூட்டை 1-க்கு | 1 காசு |
| | | வண்டி 1-க்கு | 10 காசு |
| 2. | நெல் | பாக்கம் 1- க்கு | 1/2 காசு |
| | | மூட்டை 1-க்கு | 2 காசு |
| | | வண்டி 1- க்கு | 10 காசு |
| 3. | அரிசி | பாக்கம் 1-க்கு | 1 காசு |
| | | மூட்டை 1- க்கு | 2 காசு |
| | | வண்டி 1- க்கு | 10 காசு |

| வ. எண். | பொருள் | அளவு | விற்பனை வரி |
|---|---|---|---|
| 4. | உளுந்து | பாக்கம் 1-க்கு | 1/2 காசு |
| | | மூட்டை 1-க்கு | 1 காசு |
| | | வண்டி 1-க்கு | 20 காசு |
| 5. | மொச்சை | பாக்கம் 1-க்கு | 1/2 காசு |
| | | மூட்டை 1-க்கு | 1 காசு |
| | | வண்டி 1-க்கு | 20 காசு |
| 6. | கொள்ளு | பாக்கம் 1-க்கு | 1/2 காசு |
| | | மூட்டை 1-க்கு | 1 காசு |
| | | வண்டி 1-க்கு | 20 காசு |
| 7. | ஆமணக்கு விதை | பாக்கம் 1-க்கு | 1/4 காசு |
| | | மூட்டை 1-க்கு | 1/2 காசு |
| | | வண்டி 1-க்கு | 10 காசு |
| 8. | பாக்கு | பாக்கம் 1-க்கு | 2 காசு |
| | | மூட்டை 1-க்கு | 4 காசு |
| 9. | மிளகு | பாக்கம் 1-க்கு | 2 1/2 காசு |
| | | மூட்டை 1-க்கு | 5 காசு |
| 10. | மஞ்சள் | பாக்கம் 1-க்கு | 1 1/2 காசு |
| | | மூட்டை 1-க்கு | 3 காசு |
| 11. | சுக்கு | பாக்கம் 1-க்கு | 11/2 காசு |
| | | மூட்டை 1-க்கு | 3 காசு |
| 12. | வெங்காயம், சீரகம், கடுகு | பாக்கம் 1-க்கு | 1 காசு |
| | | மூட்டை 1-க்கு | 2 காசு |
| 13. | இரும்புப் பொருட்கள் | பாக்கம் 1-க்கு | 1 காசு |
| | | மூட்டை 1-க்கு | 2 காசு |
| | | வண்டி 1-க்கு | 20 காசு |
| 14. | பருத்தி | தலைச்சுமை 1-க்கு | 1/2 காசு |
| | | பாக்கம் 1-க்கு | 1 காசு |

| வ. எண். | பொருள் | அளவு | விற்பனை வரி |
|---|---|---|---|
| | | மூட்டை 1-க்கு | 2 காசு |
| | | வண்டி 1-க்கு | 10 காசு |
| 15. | பருத்தி நூல் | தலைச்சுமை 1-க்கு | 2 காசு |
| | | பாக்கம் 1-க்கு | 2 1/2 காசு |
| | | மூட்டை 1-க்கு | 5 காசு |
| | | வண்டி 1-க்கு | 20 காசு |
| 16. | பருத்திப்புடவை | பாக்கம் 1-க்கு | 5 காசு |
| | | மூட்டை 1-க்கு | 10காசு |
| 17. | தேன் | குடம் 1-க்கு | 5காசு |
| 18. | கோளிகைப்பட்டு (ஒரு வகையான பட்டு) | தலைச்சுமை 1-க்கு | 1 காசு |
| | | பாக்கம் 1-க்கு | 1 காசு |
| | | மூட்டை 1-க்கு | 2 காசு |
| 19. | சந்தனக் கட்டை | மூட்டை 1-க்கு | 30 காசு |
| 20. | அகில் (வாசனைப் பொருள்) | தலைச்சுமை 1-க்கு | 30 காசு |
| 21. | பன்னீர் (வாசனைத் திரவியம்) | குடம் 1-க்கு | 30 காசு |
| 22. | சந்தனக்குழம்பு புனுகு, ஜவ்வாது. | கொம்பு 1-க்கு | 15 காசு |
| 23. | மாடு | ஒன்று | 2 காசு |
| 24. | குதிரை | ஒன்று | 1/4 அச்சு |
| 25. | யானை | ஒன்று | 1/2 அச்சு |
| 26. | கற்பூர எண்ணெய் | தலைச்சுமை 1-க்கு | 20 காசு |

மேற்கண்ட பட்டியலிலிருந்து அவசியப் பொருட்களாகிய உப்பு, அரிசி, உளுந்து, வெங்காயம் ஆகியவற்றின் மீது விற்பனை வரி குறைவாக விதிக்கப்பட்டிருந்தது என்பதும் ஆடம்பரப் பொருட்களாகிய அகில், சந்தனம் ஆகியவற்றின் மீது விற்பனை வரி அதிகமாக விதிக்கப்பட்டு இருந்ததென்பதும் தெரிய வருகிறது.

## தொழில் வரி

இக்காலக் கட்டத்தில் தொழில் வரியும் வசூலிக்கப்பட்டது. இத்தொழில் வரி விகிதம் தொழிலுக்குத் தொழில் வேறுபட்டு இருந்தது. தொழில் செய்யப் பயன்படுத்திய பொருட்கள் மீது தொழில் வரி விதிக்கப்பட்டது. பறை[149], முகம்[150], பார்க்கும் கண்ணாடி[151] ஆகியவற்றின் மீது வரி விதிக்கப்பட்டிருந்தது. நடனமாதர்களிடமிருந்து கண்ணாடி வரி வசூலிக்கப்பட்டது. இவ்வரிகள் பெரும்பாலும் ஆண்டுக்கு ஒரு முறையே வசூலிக்கப்பட்டன[152].

சிலவகைத் தொழில் புரிந்தவர்களுக்கு வரிச் சலுகை காட்டப்பட்டிருக்கிறது. முதலாம் மாறவர்மன் சுந்தர பாண்டியன், எண்ணெய் வியாபாரிகளுக்கு வரிச் சலுகை கொடுத்தான் என ஒரு கல்வெட்டு குறிப்பிடுகிறது[153].

## தொழில் வரிப் பட்டியல்

| வ.எண். | வரியின் பெயர் | செலுத்தியவர்கள் |
|---|---|---|
| 1. | ஆட்டிறைப்பாட்டம்[154] | இடையர்கள் |
| 2. | செக்காயம்[155] | எண்ணெய் வியாபாரிகள் |
| 3. | செட்டிறை[156] | வியாபாரிகள் |
| 4. | ஏரி மீன்பாட்டம்[157] | மீனவர்கள் |
| 5. | ஈழம்பூஞ்சி[158] | கள் இறக்குபவர்கள் |
| 6. | முகம் பார்வை[159] | நாட்டியப் பெண்கள் |
| 7. | பாசிப்பாட்டம்[160] | மீனவர்கள் |
| 8. | பஞ்சுப்பீலி[161] | பஞ்சு விற்பவர்கள் |
| 9. | செக்கிறை[162] | எண்ணெய் வியாபாரிகள் |
| 10. | தச்சுத்தாள்வு[163] | தச்சர்கள் |
| 11. | தறி இறை[164] | நெசவாளர்கள் |
| 12. | தட்டார்பாட்டம்[165] | பொற்கொல்லர் |
| 13. | தட்டொலிப்பாட்டம்[166] | பறையர்கள் |
| 14. | வீசுவலைப் பாட்டம்[167] | மீனவர்கள் |

## இதர வரிகள்

மேலே சொல்லப்பட்ட வரிகளைத் தவிர வேறு சில வரிகளும் பாண்டியப் பெருவேந்தர் காலத்தில் வசூலிக்கப்பட்டன. அரசர்கள் தங்களின் எடைக்கு எடை பொன், வெள்ளி, நவரத்தின அணிகளைத் துலாபாரம் மேற்கொண்டு கோயில்களுக்குக் கொடுத்தனர். அச்சமயம் அவ்வரசர்களிடமிருந்து துலாபார வரி என்ற ஒரு சிறப்பு வரி

வசூலிக்கப்பட்டது. முதலாம் சடையவர்மன் சுந்தரபாண்டியன் சிதம்பரத்திலும் திருவரங்கத்திலும் துலாபாரம் மேற்கொண்ட போது இந்தத் துலாபார வரியை அக்கோயில்களுக்குச் செலுத்தினான்[168]. அரசனின் ஆணைகளைக் குறிப்பிட்ட ஒருவருக்கு அல்லது துறைக்குக் கொண்டு செல்பவர் 'சந்திவிக்கிரகி' என அழைக்கப்பட்டார். இந்தச் சந்திவிக்கிரகிக்குச் சம்பளம் கொடுப்பதற்காக மக்களிடமிருந்து வசூலிக்கப்பட்ட வரி சந்திவிக்கிரகப்பேறு என அழைக்கப்பட்டது. அரசனின் முடிசூட்டு விழாச் செலவுகளுக்காக வசூலிக்கப்பட்ட வரி சிறப்பு அபிஷேக உகவை எனப் பெயர் பெற்று இருந்தது[170]. அரசனின் அரண்மனைப் பராமரிப்பிற்காக வசூலிக்கப்பட்ட வரிகள் வாசல்பேறு என்றும் வாசல் விநியோகம் என்றும் சொல்லப்பட்டன[171]. படையிலிருந்த குதிரைகளின் பராமரிப்பிற்காகக் 'குதிரைப் பந்தி' என்ற வரியும் யானைகளின் பராமரிப்பிற்காக 'ஆனைச்சாலை' என்ற வரியும் வசூலிக்கப்பட்டன[172]. நெல்லை அரிசியாக ஆக்கியபோது மக்கள் ஒரு சிறு தொகையை அரசுக்கு வரியாகச் செலுத்தினர். அந்த வரி அரிசிக்காசு என்றும் அரிசித்துண்டம் என்றும் கூறப்பட்டது[173]. கோயிலின் பராமரிப்பிற்கு ஸ்ரீகாரியப் பேறு என்ற வரி வசூலிக்கப்பட்டது[174].

அரசாங்கத்தின் வருவாய்த்துறை அலுவலர்கள் ஆண்டுதோறும் வரிப்பதிவு ஏடுகளைத் தயாரித்தனர். இந்த அலுவலர்களுக்குச் சம்பளம் கொடுப்பதற்காக மக்களிடமிருந்து 'ஆண்டெழுத்து தேவை[175]' என்ற வரியும், 'காரிய ஆராய்ச்சி[176]' என்ற வரியும் வசூலிக்கப்பட்டன. அரசரின் முத்திரையை ஆவணங்களில் பதித்த போது இலஞ்சினைப்பேறு என்ற வரி வசூலிக்கப்பட்டது.[177] கிராமங்களில் இருந்த மக்கள் மன்றங்களாகிய ஊர் அல்லது சபையின் செலவுகளுக்காக அந்தந்த ஊர் மக்களிடமிருந்து 'விநியோகம்' என்ற வரி வசூலிக்கப்பட்டது[178]. பிராமணர்கள்[179] வன்னியர்கள்[180] ஆகியோரிடமிருந்து தலைவரி வசூலிக்கப்பட்டது. இந்தத் தலைவரி 'இனவரி'[181] என்றும் 'ஆள்வரி'[182] என்றும் உரைக்கப்பட்டது. மேற்கண்ட செய்திகளின் மூலம் அரசு, மக்களிடமிருந்து பற்பல காரணங்களுக்காகச் சிறிய வரிகளை வசூலித்தது என்பது தெளிவாகிறது.

## அரசாங்கத்தின் செலவுகள்

பாண்டியப் பெருவேந்தர் காலத்தில் நிருவாகச் செலவு மிகக் குறைவாகவே இருந்தது. ஏனெனில் நிருவாகத்தில் பணிபுரிந்த அரசாங்க அதிகாரிகளுக்குச் சம்பளமாகப் பணம் கொடுக்கப்படவில்லை. அதற்கு ஈடாக அவ்வதிகாரிகளுக்கு நிலங்கள் மானியமாகக் கொடுக்கப் பட்டன[183].

காவல் துறைப் பொறுப்பை அரசாங்கம் தனது நேரடி நிருவாகத்தின் கீழ் வைத்துக் கொள்ளவில்லை. இந்த உரிமையைப்

பாண்டியப் பெருவேந்தர் காலத்தில் ஏலத்தில் விட்டுவிட்டனர். இதனால் காவலர்கள் பராமரிப்புச் செலவை அரசாங்கம் ஏற்கவேண்டிய நிலை இல்லாமற் போயிற்று.[184]

கிராமங்களில் கிராமச் சபையினாலும், நாடுகளில் நாடு என்ற நிருவாகச் சபையினாலும் நீதி மன்றங்கள் ஏற்படுத்தப் பட்டன. இதனால் இக்காலக்கட்டத்தில் நீதித்துறைச் செலவுகளும் அரசாங்கத்திற்கு இல்லாமற்போயிற்று.[185]

பாண்டியப்பெருவேந்தர் காலத்தில் அரசாங்கம் கல்விக்காகவும் அதிகம் செலவு செய்யவில்லை. எல்லா மக்களுக்கும் கல்வி போதிக்க வேண்டும் என்ற எண்ணமெல்லாம் பேரரசுக்கு இல்லை. கல்வி நிறுவனங்கள் அமைக்கும் தொண்டினைத் தனியார்கள் மேற்கொண்டனர். சாதியின் அடிப்படையிலேயே தொழில்களைச் செய்ய வேண்டும் என்ற நியதி இக்காலக்கட்டத்தில் இருந்ததனால் கல்விக்கு மிகுந்த முக்கியத்துவம் கொடுக்கப்படவில்லை. ஆகவே அரசாங்கத்திற்குக் கல்வி தொடர்பாகச் செலவு ஏற்படவில்லை.

அரசாங்கத்தின் மிகப்பெரிய செலவு படைப் பராமரிப்புச் செலவே ஆகும். இடைக்காலத் தமிழகத்தின் அரசுகளுக்கிடையே பற்பல போர்கள் நடந்த வண்ணம் இருந்தன. ஆகவேதான் ஒவ்வோர் அரசும் ஒரு நிரந்தரப் படையை வைத்துக் கொள்ள வேண்டியதாயிற்று.[186] பாண்டியப் பெருவேந்தர்கள் சோழப் பெருவேந்தர்களோடு பற்பல போர்களைச் செய்தனர். இந்தப் போர்ச் செலவு பாண்டியப் பேரரசின் ஒரு முக்கியச் செலவாக இருந்தது. பாண்டியப் பெருவேந்தர்கள் தங்களது படையை வலிமைப்படுத்திக் கொள்வதற்காக அரேபியர்களிடமிருந்து ஆயிரக் கணக்கான குதிரைகளை வாங்கினர் என மார்க்கோபோலோ தனது பயணக்குறிப்பில் கூறியுள்ளார். அவரது கருத்து பின் வருமாறு:

பாண்டிய நாட்டில் குதிரைகள் உற்பத்தி செய்யப்படவில்லை. ஆகவேதான் குதிரைகள் வாங்குவதில் ஏராளமான பணத்தைப் பாண்டிய அரசர்கள் செலவு செய்தனர்.[187]

அரசாங்கத்தின் அடுத்த முக்கியச் செலவாக அறக்கட்டளைகள் அமைத்தல் இருந்தது. நாட்டில் இருந்த எல்லாக் கோயில்களுமே அரசர்களிடமிருந்து நன்கொடைகளைப் பெற்றுக் கொண்டே இயங்கின. தமிழ் நாட்டில் உள்ள கோயில்களில் காணப்படும் கல்வெட்டுகள் பாண்டிய அரசர்கள் கோயில் திருப்பணிகளுக்காகவும், பூசைகளுக்காகவும் கொடுத்த நன்கொடைகளைத் தெரிவிக்கின்றன. இந்த அரசர்கள் புதிய கோயில்களைக் கட்டினர். பழைய கோயில்களைப் புதுப்பித்தனர். பூசைகளுக்காகவும், திருவிழாக்களுக்காகவும், நன்கொடைகளைத் தாராளமாக வழங்கினர். மேலும் மக்களிடமிருந்து வசூலிக்கப்பட்ட வரிகளை அரசர்கள் அந்தந்தப் பகுதியிலிருந்த

மடங்களுக்கும், கோயில்களுக்கும் பராமரிப்புச் செலவிற்காகத் தானமாகக் கொடுத்தனர். இதிலிருந்து அரசர் மக்களிடமிருந்து வரியாகப் பெற்ற தொகையை மக்கள் நலனுக்காகவே திரும்பக் கொடுத்தனர் என்பது தெளிவாகிறது.

அரசர்கள் அறிஞர்களுக்குப் பெருமதிப்பளித்தனர். அவர்களுக்குப் பணமும், நிலமும் நன்கொடையாகக் கொடுத்து ஆதரவு அளித்தனர். இப்படி அரசர்கள் அறிஞர்களுக்கு ஆதரவு வழங்கித் தங்களது வருமானத்தின் ஒரு பகுதியைச் செலவு செய்தனர். குளங்கள் அமைத்தல், அணைகள் கட்டுதல், அரசாங்கக் கட்டடங்கள் கட்டுதல் ஆகிய பொதுப் பணிகளுக்கும் அரசாங்கத்தின் பணம் செலவு செய்யப்பட்டது.

அரசாங்கத்தின் மொத்த வருமானத்தில் பெரும் பகுதி அரசரின் ஆடம்பரச் செலவிற்கே பயன்படுத்தப்பட்டது. அரசர்கள் தமது ஆடைகள், மது பானங்கள், அந்தப்புரப் பெண்கள் ஆகியவற்றிற்காகப் பெரும் தொகையைச் செலவிட்டார்கள். இவ்வாறு பாண்டியப் பெருவேந்தர் காலத்தில அரசாங்கப் பணம் பல வகைகளில் செலவு செய்யப்பட்டது.

## தொழிற்சாலைகள்

பாண்டியப் பெருவேந்தர் காலத்தில் இருந்த தொழிற் சாலைகளைப் பற்றி அறிந்து கொள்வதற்கு அதிகச் சான்றுகள் கிடைக்கவில்லை. இருந்த போதிலும் வெளி நாட்டுப் பயணிகளின் குறிப்புகளிலிருந்தும் கல்வெட்டுகள் குறிப்பிடும் வரிகள் பற்றிய குறிப்புகளிலிருந்தும் தொழிற்சாலைகள் பற்றிச் சில செய்திகளை அறிந்து கொள்கிறோம்.

பாண்டிய நாட்டு மக்கள் தங்களுக்குத் தேவையான பொருட்களைத் தாங்களே உற்பத்தி செய்து கொண்டனர். வெளிநாடுகளிலிருந்து எந்தப் பொருளையும் அவர்கள் தங்கள் தேவைக்காக இறக்குமதி செய்து கொள்ளவில்லை. பாண்டிய அரசர்கள் தங்கள் படைக்குத் தேவையான குதிரைகளை மட்டும் வெளிநாடு களிலிருந்து இறக்குமதி செய்து கொண்டனர்.

## உலோகத் தொழிற் சாலைகள்

பாண்டியப் பெருவேந்தர் காலத்துக் கல்வெட்டுகள் நாணயங்கள், கடவுளர் சிலைகள், வீட்டில் பயன்பட்ட பாத்திரங்கள் பற்றிக் குறிப்பிடுகின்றன. அக்காலத்தில் தயாரிக்கப்பட்ட நாணயங்கள், செப்புத் திருமேனிகள், பாத்திரங்கள் ஆகியவை கிடைத்திருக்கின்றன. இதிலிருந்து இக்காலக் கட்டத்தில் உலோகத் தொழிற்சாலைகள் இருந்தன என்பது உறுதியாகிறது. இந்த உலோகத் தொழிற்சாலைகள் போர் வீரர்களுக்குத் தேவையான அம்பு வில், வாள், கேடயம்

ஆகியவற்றையும், விவசாயிகளுக்குத் தேவையான கலப்பை, இலாடங்கள், வண்டிச் சக்கரங்களுக்கு மேலே பொருத்தக்கூடிய வட்ட வடிவப் பட்டைகள் ஆகியவற்றையும் செய்து கொடுத்தன.

நகைகள் செய்யும் தொழிலும் இக்காலக் கட்டத்தில் வளர்ச்சியடைந்திருந்தது. முதலாம் சடையவர்மன் சுந்தர பாண்டியன் திருவரங்கம் கோயிலுக்குக் கொடுத்த நகைகளை, அவனது வடமொழிக் கல்வெட்டு பட்டியலிட்டுக் காட்டுகிறது. வைரக்கிரீடம், தங்கத்தினால் ஆன பாம்புப் படுக்கை, முத்துகள் கோக்கப்பட்ட தங்க மாலை, தங்கத்தினால் ஆன பலாப்பழம், மாம்பழம் , வாழைப்பழம் தங்கத்தினாலான அரியணை ஆகியவை இந்தப் பட்டியலில் அடங்கும்.[188]

திருநெல்வேலி மாவட்டத்துச் சேரன்மாதேவியில் கிடைத்த முதலாம் சடையவர்மன் குலசேகரனின் கல்வெட்டு , இவ்வரசன் அவ்வூரின் சிவன் கோயிலுக்கு நன்கொடையாகக் கொடுத்த பதின்மூன்று வகையான நகைகளைக் குறிப்பிடுகிறது.[189]

பாண்டியப் பெருவேந்தர்கள் அணிந்திருந்த விலை மதிப்பு மிக்க அணிகளைக் கண்டு மார்க்கோபோலோ வியப்படைந்தார் என்பது அவரது பயணக்குறிப்பிலிருந்து தெரிய வருகிறது. [190] மேற்கண்ட ஆதாரங்களிலிருந்து உலோகங்களினால் நகைகள், பாத்திரங்கள், போர்க் கருவிகள் ஆகியன செய்யும் தொழில் நல்ல வளர்ச்சியடைந்து இருந்ததென்பது உறுதியாகிறது.

## நெசவுத் தொழில்

பாண்டியப் பெருவேந்தர் காலத்தில் நெசவுத் தொழில் சிறப்புற்றிருந்தது. பாண்டிய நாட்டில் உற்பத்தி செய்யப்பட்ட துணி வகைகள் வெளிநாடுகளுக்கும் ஏற்றுமதி செய்யப்பட்டன.[191]

திருச்சி மாவட்டம் சம்புகேசுவரத்தில் கிடைத்த முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியனின் கல்வெட்டு மூன்று வகையான பட்டுகளைக் குறிப்பிடுகிறது. அவையாவன :

1. புலியுகிர்பூம்பட்டு
2. செந்திலானைப்பட்டு
3. ஆரியன் தேவாங்கு பட்டு

இந்த மூன்று வகைப் பட்டுகளின் தரவேறுபாடு தெரியவில்லை.

## சர்க்கரை ஆலை

ஒவ்வொரு கிராமத்திலும் உணவுப் பொருட்களைத் தயாரிக்கும் சிறிய தொழிற்சாலைகள் அமைந்திருந்தன. தானியங்களை மாவாக அரைக்கச் சிறிய தொழிற்சாலைகள் இருந்தன. புதுக்கோட்டை

மாவட்டம், மேலூர் கிராமத்தில் கிடைத்த கல்வெட்டு அவ்வூரில் சர்க்கரை ஆலை இருந்ததாகக் குறிப்பிடுகிறது. இந்தக் கல்வெட்டின் அடிப்படையில் பாண்டியப் பெருவேந்தர் காலத்தில் சர்க்கரை ஆலைகள் கிராமங்களில் இருந்தன என்பது உறுதியாகிறது.

## செக்காலை

தேங்காய், எள், ஆமணக்கு ஆகியவற்றிலிருந்து எண்ணெய் தயாரிக்கப்பட்டது. எண்ணெய் தயாரிக்கும் கருவி தமிழில் செக்கு எனப் பெயர் பெற்றிருந்தது. இந்தச் செக்கு கல்லால் அல்லது மரத்தால் அமைக்கப்பட்டிருந்தது. இதனை ஒன்று அல்லது இரண்டு மாடுகள் இழுத்தன. ஒவ்வொரு கிராமத்திலும் பற்பல செக்காலைகள் இருந்தன. இந்த ஆலைகள் தயாரித்த எண்ணெய் சமையல் செய்வதற்கும், கோயில்களில் விளக்கு எரிப்பதற்கும் பயன்பட்டது. எண்ணெய் தயாரிக்கும் பணியில் ஈடுபட்டிருந்தவர்கள் வாணியச் செட்டிகள் எனக் கல்வெட்டுகளில் குறிக்கப்பட்டனர். இவர்கள் அரசுக்குச் செலுத்திய தொழில் வரியானது செக்கிறை, செக்காயம், செக்குக் கடமை எனச் சொல்லப்பட்டது.[193]

## உப்பளம்

கடற்கரையை ஒட்டிய பகுதிகளில் உப்பு உற்பத்தித் தொழில் சிறப்பாக நடந்தது. உப்பளங்கள் ஒருங்கிணைந்த தென்னார்க்காடு மாவட்டத்திலுள்ள மாறன்பாடி, ஆதாம்பூர் , செல்லூர், இடையன்குழி, கடலூர், திருநல்லூர், சூறைக்காடு ஆகிய இடங்களில் இருந்ததெனப் பாண்டியர் காலத்துக் கல்வெட்டு ஒன்று குறிப்பிடுகிறது.[194]

## முத்துக்குளிக்கும் தொழில்

பழங்காலம் முதற்கொண்டு பாண்டிய நாடு முத்துக்குப் பெயர் பெற்றுத் திகழ்ந்தது. மார்க்கோபோலோ தனது பயணக்குறிப்பில் பாண்டிய நாட்டில் முத்துக் குளிப்பது பற்றிக் கீழ்க்கண்டவாறு குறிப்பிடுகின்றார்:

முத்துக்குளிப்பவர்கள் சிறிய படகுகளிலும் பெரிய படகுகளிலும் செல்கிறார்கள். இவர்கள் பாண்டிய நாட்டிற்கும் இலங்கைத் தீவிற்கும் இடைப்பட்ட கடற்பகுதிக்கு ஏப்பிரல், மே ஆகிய மாதங்களில் செல்கின்றனர். அங்கு இவர்கள் நங்கூரம் பாய்ச்சித் தங்களது படகுகளை நிறுத்திவிட்டு, கடலில் மூழ்கி முத்து எடுக்கின்றனர். இப்படி எடுக்கப்பட்ட முத்துகளில் பத்தில் ஒரு பகுதியை அரசருக்குக் கொடுக்கின்றனர். மேலும் அவர்கள் தாங்கள் எடுக்கும் முத்தில் ஒரு சிறு பகுதியை மந்திரங்கள் உச்சரித்துத் தங்களைக் கடலில் வாழும் திமிங்கலம், மீன் ஆகியவற்றிடமிருந்து காப்பாற்றும் அபிரமின்களுக்கு (பிராமணர்கள்) கொடுக்கின்றனர்.[195]

ஒடோரிக் (கி.பி.1321-22) என்ற பிரான்சு நாட்டுப் பயணியும் பாண்டிய நாட்டில் முத்துக்குளிப்பதற்கு 8000 படகுகள் பயன்படுத்தப் பட்டன என்றும் இந்த முத்துக்குளிக்கும் தொழில் வருடத்தில் மூன்று மாதங்கள் நடந்ததென்றும் தனது பயணக்குறிப்பில் எழுதியிருக்கின்றார்.[196]

## போக்குவரத்து

நிலங்கள் பற்றியும் கிராமங்களின் எல்லைகளைப் பற்றியும் குறிப்பிடும் கல்வெட்டுகள் பற்பல சாலைகளைக் குறிப்பிடுகின்றன. சாலைகள் பராமரிப்புப் பணி, கிராமச் சபைகளிடம் ஒப்படைக்கப் பட்டிருந்தது. இந்தச் சாலைகள் பழுதுபட்டால் அவற்றைச் சரிசெய்ய ஊர்மக்கள் இலவசமாகப் பணி செய்ய வேண்டியிருந்தது. இந்த இலவசப் பணி கல்வெட்டுகளில் 'வெட்டி' என்றும், 'அமஞ்சி' என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது.

கல்வெட்டுகளில் 'வதிகள்' என்ற சாலைகளும், 'பெருவழிகள்'[198] என்ற சாலைகளும் குறிப்பிடப்பட்டுள்ளன. வதி என்பது அகலமான பாதை எனக் கருதப்படுகிறது. நாட்டின் ஒரு முக்கியப் பகுதியை மற்றொரு முக்கியப் பகுதியோடு இணைக்கும் வழி பெருவழி என அழைக்கப்பட்டது. வீரபாண்டிய நல்லூர் என்ற ஊருக்கும், பொன்னமராவதி என்ற ஊருக்கும் இடையே ஒரு பெருவழி இருந்ததாகக் கல்வெட்டு ஒன்று குறிப்பிடுகிறது.[199] பாண்டியர் காலத்து மற்றொரு கல்வெட்டு வஞ்சிவழி என்ற பெருவழியைக் குறிப்பிடுகிறது. சேரநாட்டின் தலைநகரமாகிய வஞ்சிக்குச் சென்ற வழி வஞ்சிவழி எனக் கல்வெட்டில் குறிப்பிடப்பட்டுள்ளது.[200]

வியாபாரிகள் விற்பனைக்கு உரிய பொருட்களைச் சந்தைக்கு எடுத்துச் செல்ல மாட்டு வண்டிகளைப் பயன்படுத்தியிருக்கின்றனர்.[201] இராமநாதபுரம் மாவட்டம், தேவிப்பட்டினத்தில் கிடைத்த கல்வெட்டு, வியாபாரிகள் தங்கள் பொருட்களைச் சந்தைக்குத் தோணிகளில் எடுத்துச் சென்றனர் எனக் குறிப்பிடுகின்றது.[202]

## வணிகக் குழுக்கள்

பாண்டியப் பெருவேந்தர் காலத்துக் கல்வெட்டுகளில் பலவகையான வணிகக் குழுக்களைப் பற்றிய செய்திகள் உள்ளன. வியாபாரம் செய்யும் பொருள், வணிகர்கள் வாழும் பகுதி ஆகியவற்றின் அடிப்படையில் பற்பல வணிகக் குழுக்கள் தோன்றின. கல்வெட்டுகளில் வணிகர்கள் நகரத்தார்கள் எனக் குறிப்பிடப்பட்டுள்ளனர். நகரத்தில் வாழ்ந்ததனாலும் நகரத்தின் நிருவாக சபையாகிய நகரம் என்ற அமைப்பின் உறுப்பினர்களாக இவர்கள் இருந்தமையாலும் நகரத்தார்கள் என அழைக்கப்பட்டனர்.[203]

## மணிக்கிராமம்

வணிகக் குழுக்களிலேயே மிக முக்கியமானது மணிக்கிராமம் ஆகும். மணிக்கிராமம் என்ற சொற்றொடருக்குப் பலரும் பல விளக்கங்களைச் சொல்லியிருக்கிறார்கள். லோகன் என்பவர் மணிக்கிராமம் என்பது கிறித்தவர்கள் வாழும் பகுதியைக் குறிக்கும் என்கிறார்.[204] ரிச்சர்டு கோலின்ஸ் என்பவர் மணிக்கிராமம் என்ற சொற்றொடர் மாணவர்கள் வசிக்கும் கிராமத்தைக் குறிக்கும் என்கிறார்[205].நன்கொடை கொடுத்தவரைக் கௌரவப்படுத்தும் முகத்தான் அவருக்குக் கொடுக்கப்பட்ட பட்டமே மணிக்கிராமம் என்ற கருத்தும் நிலவி வந்தது.[206] ஆனால் தற்போது வரலாற்று அறிஞர்கள் மணிக்கிராமம் என்பது வணிகர்களின் குழுவையே குறிக்கும் என்ற முடிவிற்கு வந்திருக்கின்றனர். மலையாளத்தில் காணப்படும் கிராமியப் பாடல்களில் மணிக்கிராமம் என்பது வணிகர்களின் குழு எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. [207] தமிழ் உரையாசிரியராகிய நச்சினார்க்கினியர் மணிக்கிராமம் என்பதை ஒரு குழுவின் பெயர் எனக் குறிப்பிட்டுள்ளார்.[208]

இந்த மணிக்கிராமம் என்பது தென்னிந்தியாவில் புகழ்பெற்றிருந்த ஒரு வணிகக் குழு என்பது கல்வெட்டுகளிலிருந்து நமக்குத் தெரிய வருகிறது.[209] மணிக்கிராமம், தமிழ் நாட்டில் கி.பி.9ஆம் நூற்றாண்டிலிருந்து கி.பி.14ஆம் நூற்றாண்டு வரை சிறப்பான பணிகளைச் செய்தது.[210]

எல்லா மதத்தைச் சார்ந்தவர்களும் மணிக்கிராமத்தில் உறுப்பினர்களாக அனுமதிக்கப்பட்டனர். இந்தியாவின் மேற்குக் கடற்கரைப் பகுதியில் வாழ்ந்த கிறித்தவ வணிகர்களும் இந்த மணிக்கிராமத்தில் உறுப்பினர்களாக இருந்தனர்.[211] இந்த மணிக்கிராமக் குழுவில் இந்துக்களும் இடம் பெற்றிருந்தனர்.மணிக்கிராமத்தின் உறுப்பினர்கள் திருவெள்ளறை.[212], சேலம்[213], குற்றாலம் [214] ஆகிய ஊர்களில் அமைந்திருந்த இந்துக் கோயில்களுக்கு நன்கொடைகள் வழங்கி இருக்கின்றனர்.

## அய்யவோலி

அய்யவோலி என்ற வணிகர் குழு பற்றியும் பாண்டியப் பெருவேந்தர் காலத்துக் கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன.[215] மணிக்கிராமக் குழுவினைப் போல இந்த அய்யவோலி வணிகர் குழுவும் தென்னிந்தியாவில் பிரசித்தி பெற்றிருந்தது.[216] இந்த அய்யவோலி வணிகர் குழுவின் அங்கத்தினர்கள் பகவதி அம்மனை வழிபட்டனர். இந்தப் பகவதி அம்மனைக் கல்வெட்டுகள் ஐம்பொழில் பரமேசுவரி என்றும் ஐம்பொழில் நாச்சியார் என்றும் குறிப்பிடுகின்றன. [217] அய்யவோலி வணிகர் குழுவில் 18 விஷயங்களைச் (மாவட்டங்கள்)

சார்ந்தவர்களும், 32 வளர்புரங்களைச் சார்ந்தவர்களும், பதினெட்டுப் பட்டினங்களைச் சார்ந்தவர்களும், 64 கடிகைத் தாவளங்களைச் (வணிகர் சபைகள்) சார்ந்தவர்களும் அடங்கியிருந்தனர்.[218]

அய்யவோலி வணிகர் குழுவின் தலைமையிடம் பீஜப்பூர் மாவட்டம், அய்யகோலி என்ற இடத்தில் அமைந்திருந்தது. ஆகவே தான் இக் குழுவின் உறுப்பினர்கள் அய்யவோலி புர பரமேசுவரி மக்கள் என அழைக்கப்பட்டனர்.[219] செட்டிகள், செட்டி புத்திரர்கள், வாணியர்கள் ஆகியோர் இக்குழுவில் அடங்கியிருந்தனர். மேலும் இந்த வணிகர் குழுவில் சுதேசிகள் என்ற உள்நாட்டு வியாபாரிகளும், பரதேசிகள் என்ற வெளிநாட்டு வியாபாரிகளும், நானாதேசிகள்(பல நாடுகளுடன் வியாபாரம் செய்யும் வியாபாரிகள்) என்போரும் இருந்தனர்.[220]

அய்யவோலி என்ற இந்த அமைப்பு நானாதேசி திசையாயிரத்து ஐந்நூற்றுவர் என்ற பெயரையும் பெற்றுத் திகழ்ந்தது. [221] இந்த நீண்ட பெயருக்கு இரண்டு விளக்கங்கள் சொல்லப்படுகின்றன. ஆயிரம் திசைகளில் வணிகம் செய்யும் ஐந்நூற்றுவர் என்பது முதல் விளக்கமாகும். பற்பல திசைகளில் வணிகம் செய்யும் ஆயிரத்து ஐந்நூற்றுவர் என்பது இரண்டாவது விளக்கமாகும். இந்த வணிகர் அமைப்பைச் சார்ந்த வணிகர்கள், கல்வெட்டுகளில் நானாதேசிகள் என்றும் ஐந்நூற்றுவர் என்றும் குறிப்பிடப்பட்டிருப்பதால் முதல் விளக்கமே சரியானது எனப் பேராசிரியர் கே.ஏ.நீலகண்ட சாத்திரி குறிப்பிடுகிறார். [222]

நானாதேசிகள் வணிகம் செய்யும் பணியை மேற்கொண்டு உலகின் பற்பல பாகங்களில் அலைந்து திரிந்தனர் என்பது கல்வெட்டுகளால் உறுதி செய்யப்பட்டுள்ளது. சுமத்திரா நாட்டில் உள்ள லோபு துவா(LUBUTUWA) என்ற இடத்தில் கி.பி.1088ஆம் ஆண்டைச் சார்ந்த பழுதடைந்த தமிழ்க் கல்வெட்டு ஒன்று கிடைத்துள்ளது. இக்கல்வெட்டில் நானாதேசிகள் பற்றிய குறிப்பு உள்ளது.[223] பர்மாவில் உள்ள பகன் (PAGAN) என்ற ஊரில் கிடைத்த 13ஆம் நூற்றாண்டுத் தமிழ்க் கல்வெட்டு நானாதேசிகள் மேற்படி ஊரில் ஒரு விஷ்ணு கோயிலைக் கட்டினர் எனக் குறிப்பிடுகிறது.[224]

மைசூர் பகுதியில் கிடைக்கும் கல்வெட்டுகள் நானாதேசிகள் சேர நாடு, சோழ நாடு, பாண்டிய நாடு, மலேய நாடு, மகதநாடு, நேபாளம் முதலிய பல நாடுகளுக்குத் தரை வழியாகவும் சென்று வியாபாரம் செய்தனர் எனக் குறிப்பிடுகின்றன.[225] இவர்கள் யானைகள், குதிரைகள், நவரத்தினங்கள், வாசனைப் பொருட்கள், மருந்துகள் ஆகியவற்றை விற்பனை செய்தனர். இவர்கள் தங்களது விற்பனைப் பொருட்களைக் கழுதை, எருமை ஆகியவற்றின் முதுகில் ஏற்றிக் கொண்டு சந்தைக்குச் சென்றனர். இவர்கள் தங்களது பாதுகாப்பிற்காக ஒரு தனிப் படையை வைத்திருந்தனர். இப்படை இவர்களது பொருட்கள் வைக்கப்பட்டிருந்த கிடங்குகளைப் பாதுகாத்தது. மேலும் இப்படை இவர்கள் சந்தைக்குப்

பொருட்களைக் கொண்டு செல்லும் போது இவர்களுக்குப் பாதுகாப்பு கொடுத்தது.[226]

பாண்டியப் பெருவேந்தர் காலத்துக் கல்வெட்டுகள் இலங்கையைச் சார்ந்த வணிகர்களை 'வளஞ்சியர்' எனக் குறிப்பிடு கின்றன. [227] இந்த வளஞ்சியர் தங்களுக்கெனத் தனியொரு வணிகக் குழுவை அமைத்துக் கொண்டு வணிகம் செய்தனர்.

## ஏற்றுமதியும் இறக்குமதியும்

பாண்டிய நாட்டுப் பொருட்கள் பாரசீகம், அரேபியா, மேற்கில் அமைந்துள்ள ஐரோப்பிய நாடுகள், கிழக்கே அமைந்துள்ள *சீனா*, தெற்கே அமைந்துள்ள இலங்கை ஆகிய நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டன. மேலும் பாண்டிய நாடு, வட இந்தியாவுடனும் வியாபாரத் தொடர்பு கொண்டிருந்தது.[228]

பாண்டிய நாடு ஏற்றுமதி செய்த பொருட்களில் மிளகு, இலவங்கம், கிராம்பு, இஞ்சி, ஏலக்காய், சந்தனம், நவரத்தினங்கள் ஆகியவை குறிப்பிடத்தக்கவையாகும்.[229] பாண்டிய நாட்டிலிருந்து முத்துகள் *சீனா*விற்கு ஏற்றுமதி செய்யப்பட்டன எனச் *சீனப்* பயணி ஹா-ஜூ-கா (HAU-JU-KAU) குறிப்பிடுகிறார்.[230] *சீனா*வில் இறக்குமதி செய்யப்பட்ட முத்துகளின் மீது சுங்க வரி மிக அதிகமாக விதிக்கப்பட்டது. ஆகவே தான் வியாபாரிகள் முத்துகளைத் தங்களது உடைகளின் மடிப்புகளின் உள்ளே மறைத்து வைத்துக் கொண்டு *சீனா*விற்குச் சென்றனர். மேலும் அவர்கள் தங்களது குடைகளின் பிடிகளுக்குள்ளும் முத்துகளை ஒளித்து வைத்துக்கொண்டு *சீனா*விற்குச் சென்றனர். சுங்கவரியிலிருந்து தப்பிப்பதற்காகவே வியாபாரிகள் இப்படிப்பட்ட செயல்களில் ஈடுபட்டிருந்தனர் எனலாம்.[231]

பாண்டியப் பெருவேந்தர்கள் வியாபாரத்தைப் பெருக்குவதற்காக வெளிநாடுகளுக்குத் தூதுவர்களை அனுப்பினர். அதே போலச் *சீனப்* பேரரசர்களும் பாண்டிய நாட்டிற்குத் தூதுவர்களை அனுப்பியிருக் கின்றனர். இத்தூதுவர்களின் வருகை ஆண்டுகளைக் கீழ்க்காணும் அட்டவணைகள் தெளிவுபடுத்துகின்றன.[232]

## முதல் அட்டவணை

| வரிசை எண். | பாண்டியநாட்டிலிருந்து *சீனா*விற்குத் தூதுவர்கள் சென்ற ஆண்டுகள் |
|---|---|
| 1. | கி.பி.1279 |
| 2. | கி.பி.1280 |
| 3. | கி.பி.1283 செங்-சோ-யூ-பான் (Seng-tsa-yu-pan) |

| | |
|---|---|
| 4. | கி.பி.1284 |
| 5. | கி.பி.1286 |
| 6. | கி.பி.1288 |
| 7. | கி.பி.1289 |
| 8. | கி.பி.1314 ஐ-சு-திங்(Ai ssu ting) |

**இரண்டாம் அட்டவணை**

| வரிசை என். | சீனாவிலிருந்து பாண்டிய நாட்டிற்குத் தூதுவர்கள் வந்த ஆண்டுகள் |
|---|---|
| 1. | கி.பி.1281 (young ting pi) |
| 2. | கி.பி.1285 மா-சு-ஹு(Ma-Su-Hu)' |
| 3. | கி.பி.1290 சங்-கி.-லா-ஷின் (Sang-Ki-La-Shin) |
| 4. | கி.பி.1291 |
| 5. | கி.பி.1296 யூ-லோ-ஏ-நு (Yu-Lo-Yeh-Nu) |

பாண்டிய நாடு இறக்குமதி செய்தவற்றுள் குதிரைகள் மிகக் குறிப்பிடத் தக்கவையாகும். இந்த நாட்டின் வருமானத்தில் பெருந்தொகை குதிரைகள் வாங்குவதிலேயே செலவிடப்பட்டது. குதிரைச் செட்டிகள் என்ற வியாபாரிகள் குதிரைகளை அரேபியாவிலிருந்து வரவழைத்துப் பாண்டிய அரசர்களுக்குக் கொடுத்தனர்[233]. இந்தக் குதிரை இறக்குமதி பற்றி மார்க்கோபோலோவின் கருத்து பின் வருமாறு:

ஒவ்வொரு ஆண்டும் பாண்டிய நாட்டின் தலைமை அரசரும் அவரது நான்கு சகோதரர்களும் தலைக்கு ஏறத்தாழ 2000 குதிரைகளை (மொத்தம் 10,000 குதிரைகள்) இறக்குமதி செய்கின்றனர். இப்படி வாங்கும் குதிரைகளில் ஆண்டு இறுதியில் ஒவ்வொரு அரசரிடமும் 100 குதிரைகளே உயிரோடு இருந்தன. ஏனெனில் பாண்டிய நாட்டு மக்களுக்குக் குதிரை வளர்ப்புக் கலை தெரியாமல் இருந்தது. குதிரைக்கு என்ன உணவு கொடுக்கவேண்டுமென்பது கூடத் தெரியவில்லை. ஆகவே தான் இறக்குமதியான குதிரைகளில் பெரும்பாலானவை ஒரு வருடத்திற்குள்ளேயே இறந்துவிட்டன. பாண்டிய நாட்டுக் குதிரை வியாபாரிகள் வெளி நாடுகளிலிருந்து குதிரை வளர்ப்பு முறை தெரிந்தவர்கள் எவரையும் பாண்டிய நாட்டிற்கு அழைத்து வரவில்லை. அவர்கள் பாண்டிய நாட்டிற்குள் வருவதையும் இக்குதிரை வியாபாரிகள் தடுத்து நிறுத்தினர். ஆண்டுதோறும் பாண்டிய அரசர்களிடம் அதிக எண்ணிக்கையில் குதிரைகளை விற்க வேண்டும் என்ற எண்ணத் தினாலேயே குதிரை வியாபாரிகள் இவ்வாறு செய்தனர். இவ்வியாபாரிகள் குதிரைகளைக் கப்பல் மூலம் பாண்டிய நாட்டிற்குக் கொண்டு வந்தனர்[234].

வாசப் என்ற வெளிநாட்டுப்பயணியும் பாண்டிய நாட்டில் குதிரை இறக்குமதி பற்றிக் கீழ்க் கண்டவாறு குறிப்பிடுகிறார்:

ஒரு குதிரையின் விலை 220 தினார் ஆகும். சில நிபந்தனைகளுடனே பாண்டிய நாட்டு அரசருக்குக் குதிரைகள் விற்கப்பட்டன. அதாவது ஒரு குதிரை வெளிநாட்டிலிருந்து பாண்டிய நாட்டிற்குக் கப்பலில் வரும் போது அக்குதிரைக்கு ஏதாவது காயம் ஏற்பட்டால் அதற்குக் குதிரை வியாபாரி பொறுப்பாக மாட்டார். மேலும் ஒரு குதிரை கப்பலிலேயே இறந்துவிட்டால் அதற்கு அரசரே முழுப் பொறுப்பு ஏற்றுக் கொண்டு அந்தக் குதிரைக்குரிய பணத்தை வியாபாரிக்குக் கொடுத்து விட வேண்டும்[235].

வெளிநாட்டுக் குதிரைகள் இந்திய மண்ணில் பெருமளவில் இறப்பதற்குக் காரணத்தையும் வாசப் தனது பயணக் குறிப்பில் பின்வருமாறு குறிப்பிடுகிறார்:

குதிரைகளுக்கு இந்தியர்கள் பச்சையான பார்லி அரிசியைக் கொடுப்பதற்குப் பதிலாக அவர்கள் வறுத்த பார்லி அரிசியைக் கொடுக்கிறார்கள். மேலும் அவர்கள் தானியங்களை வெண்ணெயில் கலந்து குதிரைக்குக் கொடுக்கின்றனர். பசும்பாலையும் கொதிக்க வைத்துக் குதிரைகளுக்குக் கொடுக்கின்றனர். இந்த ஒவ்வாத உணவே குதிரைகளை வலிமை இழக்கச் செய்து இறப்பிற்கு அழைத்துச் சென்றது. பாண்டிய நாட்டு மக்கள் குதிரைகளை வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்ததும் முதல் நாற்பது நாட்கள் அவற்றிற்குப் பயிற்சி ஏதும் கொடுக்காமல் அவற்றைக் குதிரைப் பந்தியில் கட்டிப் போட்டு அவற்றின் எடையை அதிகரிப்பதற்காக நிறைய (ஒவ்வாத) உணவைக் கொடுக்கின்றனர். இதனால் வலிமையும் , சுறுசுறுப்பும் பெற்றிருந்த குதிரைகள் வலிமை இழந்து சுறுசுறுப்பை இழந்து பயனற்றவையாக ஆகி விடுகின்றன. ஆகவே தான் ஒவ்வொரு ஆண்டும் நிறைய குதிரைகளைப் பாண்டிய நாடு இறக்குமதி செய்ய வேண்டியிருந்தது[236].

## நாணயங்கள்

பாண்டியப் பெருவேந்தர் காலத்தில் நாணயங்கள் செம்பிலும், தங்கத்திலும் வெளியிடப்பட்டன. பாண்டிய நாட்டுத் தங்க நாணயங்கள் கழஞ்சு, வராகன், காசு, பொன் என அழைக்கப்பட்டன. செப்பு நாணயங்கள் செப்புக் காசுகள் எனப் பெயர் பெற்றிருந்தன. கழஞ்சு என்ற நாணயம் பாண்டியப் பெருவேந்தர் காலத்துக் கல்வெட்டுகளில் பல இடங்களில் குறிப்பிடப்பட்டுள்ளது.

கழஞ்சு என்பது நாணயத்தையும் குறித்தது: தங்கத்தை நிறுக்கக்கூடிய ஓர் எடைக் கல்லையும் குறித்தது. இந்தக் கழஞ்சு 52 நெல்மணிகளின் எடைக்குச் சமமாக இருந்தது.[237]

வராகன் என்ற தங்கக் காசும் 52 நெல்மணிகளின் எடையையே கொண்டிருந்தது. வராகன் என்ற சொல்லிற்குப் பன்றி என்பது பொருளாகும். சாளுக்கியர்கள் பன்றி உருவம் பொறித்த நாணயங்களை வெளியிட்டனர். அந்த நாணயங்களை மாதிரியாகக் கொண்டு பாண்டிய அரசர்கள் வெளியிட்ட நாணயங்கள் வராகன் என அழைக்கப்பட்டன[238]. பாண்டியர்களுக்கும், சாளுக்கியர்களுக்கும் ஏற்பட்ட திருமண உறவினால் இந்த வராகன் நாணயம் வெளியிடப்பட்டிருக்கலாம்; அல்லது பாண்டியர்கள் சாளுக்கியர்களை வென்ற பின்னர் அந்த வெற்றியி நினைவாக வராகன் நாணயங்களை வெளியிட்டிருக்கலாம்[239].

காசு என்ற தங்க நாணயத்தின் எடை காலத்திற்குக் காலம் வேறுபட்டிருந்தது. இது 6 நெல்மணிகள் எடையிலிருந்து 156 நெல்மணிகள் எடை வரை வேறுபட்டு இருந்திருக்கிறது. புதுக் கோட்டைப் பகுதியில் கிடைத்த ஒரு கல்வெட்டு 15 பொன் என்பது 15 கழஞ்சுக்கு நிகரானது எனக் குறிப்பிடுகிறது.[240] ஆகவே ஒரு பொன் என்பது ஒரு கழஞ்சுக்குச் சமமானது என்பது தெளிவாகிறது.

பாண்டியப் பெருவேந்தர்கள் வெளியிட்ட செப்புக்காசுகளில் சில சொற்கள் காணப்படுகின்றன. அந்தச் சொற்களின் அடிப்படையிலேயே அந்நாணயங்களும் பெயர் பெற்றிருந்தன. அவையாவன:

1. சோணாடு கொண்டான் காசு
2. கச்சி வழங்கும் பெருமாள் காசு
3. எல்லாம் தலையானான் காசு
4. கோதண்டராமன் காசு
5. சுந்தரபாண்டியன் காசு
6. குலசேகரன் காசு

## சோணாடு கொண்டான் காசு

இந்தக் காசின் முன் பக்கத்தில் இரண்டு மீன்கள் காணப் படுகின்றன. இந்த மீன்களுக்கு நடுவில் செங்கோல் காணப்படுகிறது. மீன்களுக்குக் கீழே பிடரி மயிர் இல்லாத சிங்கம்(?) காணப்படுகிறது. இந்நாணயத்தின் மறுபக்கத்தில் ஓர் அரசர் நின்ற நிலையில் காணப்படுகிறார். இந்த நாணயத்தில் உள்ள விலங்கைச் சிங்கம் என. டி.தேசிகாச்சாரி தனது தென்னிந்திய நாணயங்கள் என்ற ஆங்கிலப் புத்தகத்தில் குறிப்பிடுகிறார். இது தவறான கருத்தாகும். இந்நாணயத்தில் காணப்படுவது பிடரி மயிர் இல்லாத சிங்கம் அல்ல. இது புலியே ஆகும். தென்னிந்திய அரசர்கள் ஒரு நாட்டை வென்ற பின்னர் அந்த வெற்றியின் நினைவாக நாணயங்கள் வெளியிட்டனர். அந்நாணயத்தில் வெற்றி பெற்ற அரசர் தனது சின்னத்தை மேற்பகுதியிலும், தோற்றுப்போன அரசரின் சின்னத்தைத் தனது சின்னத்திற்குக் கீழேயும் இருக்குமாறு

பொறித்தனர். இந்த அடிப்படையில் பார்ப்போமேயானால் பாண்டிய அரசர் சோழர்களை வென்ற பின்னர் இந்தக் காசினைச் சோணாடு கொண்டான் என்ற பட்டப் பெயர் கொண்டிருந்த முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் வெளியிட்டான் என்று கருதுவதில் தவறொன்றுமில்லை[241]. இந்நாணயத்தின் முன்பக்கத்தில் சோணாடு கொண்டான் என்ற தமிழ்ச்சொல் மூன்று வரிகளில் பிரித்து எழுதப்பட்டுள்ளது. இந்நாணயத்தை முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் கி.பி.1220ஆம் ஆண்டு வெளியிட்டிருக்க வேண்டும்[242].

## கச்சி வழங்கும் பெருமாள் காசு

இந்த நாணயத்தின் விளக்கத்தைச் சர். வால்டர் இலியட் தனது ஆங்கிலப் புத்தகமாகிய ''தென்னிந்திய நாணயங்கள்'' என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார். இந்நாணயத்தின் முன்பக்கம் இரண்டு மீன்கள் காணப்படுகின்றன. மேலும் பிறை, அங்குசம், திரிசூலம் ஆகியவையும் இப்பக்கத்தில் உள்ளன. இந்நாணயத்தின் மறுபக்கத்தில் கச்சி வழங்கும் பெருமாள் என்ற வாசகம் மூன்று வரிகளில் எழுதப்பட்டுள்ளது.[243] இந்தக் கச்சி என்ற பெருமாள் நாணயங்கள் சிலவற்றில் 'சு' என்ற தமிழ் எழுத்து பொறிக்கப்பட்டுள்ளது. இந்தச் சு என்ற எழுத்து சுந்தர பாண்டியனைக் குறிக்கும். ஆகவே இந்த நாணயத்தைச் சுந்தர பாண்டியன் என்ற பெயருடைய ஒரு பாண்டிய அரசன் வெளியிட்டான் என்பது தெளிவாகிறது. இந்த நாணயத்தைச் சுந்தரபாண்டியன் வெளியிட்டான் என்று நாணயவியல் அறிஞர் தேசிகாச்சாரி பொதுவாகச் சொல்லியிருக்கிறார்.[244] வித்யபிரகாஷ் என்ற வரலாற்று அறிஞர் இந்நாணயத்தை முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் வெளியிட்டான் எனக் குறிப்பிடுகிறார்[245]. இந்த வித்தியபிரகாஷின் கருத்தைப் பேராசிரியர் கே.ஏ.நீலகண்டசாத்திரியார் தக்க ஆதாரங்களுடன் மறுக்கிறார், அவரது வாதம் பின்வருமாறு :

முதலாம் மாறவர்மன் சுந்தர பாண்டியன் காஞ்சிபுரம் பகுதிவரை படையெடுக்கவில்லை. அவன் காஞ்சிபுரத்தையும் கைப்பற்ற வில்லை. ஆகவே அவன் இந்தக் கச்சி (காஞ்சி) வழங்கும் பெருமாள் என்ற நாணயத்தை வெளியிட்டிருக்க வாய்ப்பில்லை. பாண்டியப் பெருவேந்தர்களில் ஒருவனாகிய முதலாம் சடையவர்மன் சுந்தர பாண்டியன் தான் காஞ்சிபுரத்தை வென்றதாகத் தனது கல்வெட்டுகளில் குறிப்பிட்டுள்ளான். மேலும் அவன் காஞ்சிபுரம் கொண்டான் என்ற பட்டப் பெயரையும் பெற்றுத் திகழ்ந்தான். ஆகவே இந்தக் கச்சி வழங்கும் பெருமாள் நாணயத்தை முதலாம் சடையவர்மன் சுந்தர பாண்டியனே வெளியிட்டிருக்க வேண்டும் எனப் பேராசிரியர் கே.ஏ. நீலகண்டசாத்திரி அறுதியிட்டுக் கூறுகிறார்[246]. இந்தக் கருத்தை வரலாற்றுப் பேராசிரியர் கே.வி.இராமனும் ஒப்புக் கொள்கிறார். இந்தக் கச்சி வழங்கும் பெருமாள்

நாணயம் கி.பி.1260க்கும் கி.பி.1265க்கும் இடைப்பட்ட காலத்தில் வெளியிடப்பட்டிருக்க வேண்டும் என்பது பேராசிரியர் கே.வி.இராமனின் கருத்தாகும்[247].

## எல்லாம் தலையானான் காசு

பாண்டியப் பெருவேந்தர் காலத்து நாணயங்களில் சில எல்லாம் தலையானான் என்ற வாசகத்துடன் திகழ்கின்றன. எல்லாம் தலையானான் என்ற பட்டப் பெயரை முதலாம் சடையவர்மன் சுந்தர பாண்டியன் பெற்றிருந்தான் என்பது குறிப்பிடத்தக்கது[248]. பேராசிரியர்கள் கே.ஏ.நீலகண்டசாத்திரியும், தி.வை.சதாசிவப் பண்டாரத்தாரும் இந்த எல்லாம் தலையானான் நாணயத்தை முதலாம் சடையவர்மன் சுந்தர பாண்டியனே வெளியிட்டான் என்று கருதுகின்றனர்[249]. இந்த நாணயத்தில் 'சு' என்ற எழுத்து பொறிக்கப் பட்டிருப்பது இவர்களின் கருத்தை மேலும் உறுதிசெய்கிறது[250]. இந்த எல்லாம் தலையானான் நாணயம் ஐந்து வகைகளில் காணப்படுகிறது. இந்த ஐந்து வகை நாணயங்களிலும் ஒரு பக்கம் அரசன் ஒருவன் நின்ற கோலத்தில் காணப்படுகிறான். இவற்றின் மறு பக்கத்தில் சில வேறுபாடுகள் காணப்படுகின்றன. முதல் நாணயத்தில் எல்லாம் தலையானான் என்ற தொடர் மூன்று வரிகளில் எழுதப்பட்டுள்ளது[257]. இரண்டாவது நாணயத்தில் ஒரு மீன் செங்குத்தாகப் பொறிக்கப் பட்டுள்ளது. அதன் மேற்பகுதியில் எல்லாம் தலையானான் என்ற தொடர் கடிகாரச் சுற்றுமுறையில் பொறிக்கப்பட்டுள்ளது[252]. மூன்றாவது நாணயத்தில் இரண்டு மீன்கள் செங்குத்தாகக் காட்டப்பட்டுள்ளன. இம்மீன்களைச் சுற்றி வட்டவடிவத்தில் எல்லாம் தலையானான் என்ற தொடர் பொறிக்கப்பட்டுள்ளது[253]. நான்காவது நாணயத்தில் இரண்டு மீன்கள் ஆங்கில எழுத்து வி போல சாய்ந்த சிலையில் பொறிக்கப்பட்டுள்ளன. இந்த இரண்டு மீன்களுக்குமிடையில் எல்லாம் தலையானான் என்ற தொடர் காணப்படுகிறது[254]. ஐந்தாவது நாணயத்தில் இரண்டு மீன்கள் தலைப் பகுதியில் சேர்ந்து ஒரு கூம்பு வடிவத்தில் காணப்படுகின்றன. இவற்றிற்கு இடையே காணப்படும் இடைவெளியில் எல்லாம் தலையானான் என்ற தொடர் காணப்படுகிறது[255].

முதலாம் மாறவர்மன் குலசேகரனும், எல்லாம் தலையானான் என்ற தொடர் பொறிக்கப்பட்ட நாணயங்களை வெளியிட்டான். இந்த நாணயத்தின் முன்பக்கத்தில் முதலாம் மாறவர்மன் குலசேகரனின் உருவம் நின்ற கோலத்தில் காணப்படுகிறது. இந்நாணயத்தின் மறுபக்கத்தில் இரண்டு மீன்களும் எல்லாம் தலையானான் என்ற தொடரும் காணப்படுகின்றன[256].

## கோதண்டராமன் காசு

பாண்டியப் பெருவேந்தர்கள் கி.பி.13ஆம் நூற்றாண்டில் வெளியிட்ட நாணயங்களில் கோதண்டராமன் என்ற சொல் காணப்படுகிறது. இந்தக் கோதண்டராமன் நாணயத்தின் முன் பக்கத்தில் இரண்டு மீன்கள் செங்குத்தாகக் காணப்படுகின்றன. இதன் மறுபக்கத்தில் ஒரு வெண்கொற்றக் குடையின் கீழே கோதண்டராமன் என்ற சொல் மூன்று வரிகளில் எழுதப்பட்டுள்ளது. இந்த நாணயத்தை முதலாம் பராந்தகனின் மகனாகிய இராசாதித்தியன் வெளியிட்டான் எனத் தேசிகாச்சாரியார் கூறியிருக்கிறார்[257]. வித்தியபிரகாஷ் என்பவர் இந்த நாணயத்தை கி.பி.1303இல் பட்டத்திற்கு வந்த மூன்றாம் சடையவர்மன் சுந்தரபாண்டியன் என்ற பாண்டிய அரசன் வெளியிட்டதாகக் கூறுகின்றார். இவர் இந்த முடிவிற்கு வரக்காரணம் யாதெனில் இந்தக் கோதண்டராமன் நாணயத்தைச் சுந்தர பாண்டியன் என்ற பிற்காலப் பாண்டிய அரசன் வெளியிட்டான் எனக் கே.ஏ.நீலகண்டசாத்திரியார் தனது நூலில் குறிப்பிட்டுள்ளதேயாகும் [258]. சட்டோபாத்தியாயா என்ற நாணயவியல் அறிஞர், இந்தக் கோதண்டராமன் நாணயத்தை மூன்றாம் சடையவர்மன் சுந்தர பாண்டியனே வெளியிட்டான் என்று கருதுகிறார்[259]. ஒருங்கிணைந்த தென்னார்க்காடு மாவட்டத்திலுள்ள தீர்த்தனகிரி என்ற ஊரில் காணப்படும் முதலாம் சடையவர்மன் சுந்தர பாண்டியனின் கல்வெட்டு அவனுக்குக் கோதண்டராமன் என்ற பட்டப்பெயர் இருந்தது எனக் குறிப்பிடுகிறது. இக்கல்வெட்டில் 'நம் பேரால் கட்டின கோதண்டராமன் சந்திக்கு' என்ற தொடர் வருகிறது. ஆகவே இந்தக் கோதண்டராமன் நாணயத்தை முதலாம் சடையவர்மன் சுந்தர பாண்டியனே வெளியிட்டான் என்பது தெளிவாகிறது[260].

## சுந்தர பாண்டியன் காசு

சுந்தர பாண்டியன் என்ற தொடர் பொறிக்கப்பட்ட பல நாணயங்கள் நமக்குக் கிடைத்துள்ளன. இந்நாணயங்கள் பற்பல வடிவங்களில் உள்ளன. பற்பல சின்னங்கள் பொறிக்கப்பட்டவையாக உள்ளன. சுந்தர பாண்டியன் என்ற பெயரில் பாண்டிய அரசர்கள் பலர் இருந்திருக்கிறார்கள். அவர்கள் வெளியிட்ட நாணயங்களே இந்தச் சுந்தர பாண்டியன் காசுகளாகும். எந்தச் சுந்தர பாண்டியன் எந்தக் காசு வெளியிட்டான் என்பதைத் தற்போது தெரிந்து கொள்ள முடியவில்லை. இச்சுந்தரபாண்டியன் காசுகளில் பலவகைகள் உள்ளன. அவற்றில் இரண்டு வகைகளின் விளக்கம் கீழே கொடுக்கப்பட்டுள்ளது.

## சுந்தரபாண்டியன் காசு (முதல் வகை)

இக்காசின் முன்பக்கத்தில் இரண்டு மீன்கள் செங்குத்தாகக் காணப்படுகின்றன. அவற்றிற்கு இடையில் ஒரு செங்கோல் பொறிக்கப்பட்டுள்ளது. செங்கோலுக்கு மேலே பிறைச் சந்திரன் காட்சியளிக்கிறது.

இந்நாணயத்தின் மறுபக்கத்தில் சுந்தர பாண்டியன் என்ற வாசகம் மூன்று வரிகளில் எழுதப்பட்டுள்ளது. இந்த வாசகத்திற்குக் கீழே ஒரு செங்கோல், ஒரு சிறு உருண்டை பிறைச் சந்திரன் ஆகியவை காணப்படுகின்றன. இச்சுந்தரபாண்டியனுடைய காசில் இரண்டு பக்கங்களிலுமே பிறைச் சந்திரன் காட்டப்பட்டுள்ளது. பாண்டியர்கள் சந்திர வம்சத்தைச் சார்ந்தவர்கள் என்பதைக் குறிக்கவே இப்பிறைச் சந்திரன் பொறிக்கப்பட்டுள்ளது. இந்நாணயம் கி.பி.12ஆம் நூற்றாண்டின் இறுதியில் வெளியிடப்பட்டிருக்க வேண்டும். மதுரையில் உள்ள திருமலை நாயக்கர் மகால் அருங்காட்சியகத்தில் இந்தச் சுந்தர பாண்டியன் நாணயங்களில் சில காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளன.

## சுந்தர பாண்டியன் காசு (இரண்டாம் வகை)

இந்நாணயத்தின் முன் பக்கத்தில் அரசன் ஒருவன் நின்ற நிலையில் காணப்படுகிறான். இதன் மறு பக்கத்தில் சுந்தர பாண்டியன் என்ற தொடர் காணப்படுகிறது. இந்நாணயம் அளவில் மிகச் சிறியதாக இருக்கிறது. இந்நாணயம் கி.பி.13ஆம் நூற்றாண்டின் முதற்பாதியில் வெளியிடப் பட்டிருக்க வேண்டும்[261].

## குலசேகரன் காசு

குலசேகரன் என்ற சொல் பொறிக்கப்பட்ட மூன்று வகையான காசுகள் கிடைத்துள்ளன. குலசேகரன் என்ற பெயரில் பாண்டிய அரசர்கள் பலர் இருந்திருக்கின்றனர். ஆகவே தான் எந்தக் குலசேகரன் எந்தக் காசை வெளியிட்டான் என்பது தெரியவில்லை.

## குலசேகரன் காசு (முதல் வகை)

இக்காசின் முன் பக்கத்தில் ஓர் அரசன் நின்ற நிலையில் காணப்படுகிறான். இக்காசின் மறுபக்கத்தில் குலசேகரன் என்ற சொல்லும், இரண்டு மீன்களும், செங்கோலும் காணப்படுகின்றன.

## குலசேகரன் காசு (இரண்டாவது வகை)

இக்காசின் முன் பக்கத்தில் ஓர் அரசன் நின்ற நிலையில் காட்சியளிக்கிறான். இதன் மறுபக்கத்தில் குலசேகரன் என்ற சொல்லும் வெண்கொற்றக் குடையும், கவரியும் காணப்படுகின்றன. மேலே குறிப்பிடப்பட்டுள்ள முதல் வகைக் குலசேகரன் காசையும் இரண்டாம் வகைக் குலசேகரன் காசையும் கி.பி.13ஆம் நூற்றாண்டின் இறுதியில் ஆட்சி செய்த முதலாம் மாறவர்மன் குலசேகரன் வெளியிட்டான் எனத் தொல்லியல் துறை மேளாள் இயக்குநர் ஆர். நாகசாமி குறிப்பிடுகிறார்[262].

## குலசேகரன் காசு (மூன்றாவது வகை)

இக்காசின் முன் பக்கத்தில் ஓர் அரசன் நின்ற நிலையில் காட்சியளிக்கிறான். இக்சாசின் மறுபக்கத்தில் ஓர் அரசன் அமர்ந்த

நிலையில் காட்சியளிக்கிறான். மேலும் குல என்ற சொல்லும் இந்தப் பக்கத்தில் காணப்படுகிறது. இக்காசு கி.பி.14ஆம் நூற்றாண்டில் வெளியிடப்பட்டிருக்க வேண்டும்[263].

## நில அளவைகள்

நிலங்களை அளக்கக் கோல் என்ற நீட்டல் அளவைக்கோல் பயன்படுத்தப்பட்டது. இதன் நீளம் காலத்திற்குக் காலம் மாறு பட்டிருக்கிறது. இக்கோல் 24 அடியாகவும் இருந்திருக்கிறது. சில காலங்களில் 18 அடியாகவும் இருந்திருக்கிறது. முதலாம் மாறவர்மன் சுந்தர பாண்டியன் காலத்தில் ஒரு புதிய நீட்டல் அளவைக் கோல் அறிமுகப்படுத்தப்பட்டது. அக்கோல் 'குடிதாங்கி' என்ற பெயர் பெற்றிருந்தது. அதன் நீளம் 24 சாண்களாக இருந்தது.

முதலாம் மாறவர்மன் குலசேகரன் காலத்தில் பயன்பாட்டிலிருந்த நீட்டல் அளவைக் கோல் 'அருள் நீதி' என அழைக்கப்பட்டது. மேலும் பாண்டியப் பெருவேந்தர் காலத்தில் 24 அடி நீளமுள்ள 'சுந்தர பாண்டியன் கோலும்' 18 அடி நீளமுள்ள 'வீர பாண்டியன் கோலும்' நீட்டல் அளவைகளாக இருந்திருக்கின்றன.

விளைச்சல் நிலங்களைக் குழி, மா, வேலி ஆகிய அளவைகளால் அளந்திருக்கின்றனர். தங்கம், வெள்ளி, செம்பு ஆகிய உலோகங்களை நிறுக்கக் குன்றி, மஞ்சாடி, கழஞ்சு ஆகிய நிறுத்தல் அளவைகளைப் பயன்படுத்தி இருக்கின்றனர். முதலாம் சடையவர்மன் குலசேகரன் காலத்தில் பொருட்களை நிறுக்கக் கைலாசமுடையான் துலாக்கோல் (தராசு) பயன்படுத்தப்பட்டிருக்கிறது. தானியங்கள், நெய், எண்ணெய் ஆகியவற்றை நாழி, உரி, உழக்கு, ஆழாக்கு, கலம், குறுணி ஆகிய முகத்தல் அளவைகளால் அளந்தனர். நீளத்தை அளக்கத் தோரை, விரல், சாண், முழம் ஆகிய அளவைகளைப் பயன்படுத்தினர்.

பாண்டியப் பெருவேந்தர் காலத்தில் பயன்பாட்டிலிருந்த அளவை முறைகள் பின்வருமாறு:

## நில அளவைகள்

| | | |
|---|---|---|
| 144 சதுர அடி | - | 1 குழி |
| 100 குழி | - | 1 மா |
| 20 மா | - | 1 வேலி |
| 1 வேலி | - | 6.6 ஏக்கர்கள் |
| 1 மா | - | 0.33 ஏக்கர் |
| 1 குழி | - | 0.0033 ஏக்கர் |

**எடை அளவைகள் :**

| | | |
|---|---|---|
| 2 குறுனி | - | 1 மஞ்சாடி |
| 2 மஞ்சாடி | - | 1 பணத்தூக்கம் |
| 20 மஞ்சாடி | - | 1 கழஞ்சு |

**கொள் அளவைகள் :**

| | | |
|---|---|---|
| 2 செவிடு | - | 1 பிடி (ஒரு கைப்பிடி) |
| 5 செவிடு | - | 1 ஆழாக்கு |
| 2 ஆழாக்கு | - | 1 உழக்கு |
| 2 உழக்கு | - | 1 உரி |
| 2 உரி | - | 1 நாழி |
| 8 நாழி | - | 1 குறுணி |
| 2 குறுணி | - | 1 பதக்கு |
| 2 பதக்கு | - | 1 தூணி |
| 3 தூணி | - | 1 கலம் |

**நீட்டல் அளவைகள் :**

| | | |
|---|---|---|
| 8 தோரை | - | 1 விரல் |
| 12 விரல் | - | 1 சாண் |
| 2 சாண் | - | 1 முழம் |

**அடிக்குறிப்புகள்**

1. ஏ.ஆர்.இ., 1921, எண். 539.
2. ஏ.ஆர்.இ., 1924, எண். 233.
3. ஏ.ஆர்.இ., 1922, எண். 46.
4. ஏ.ஆர்.இ., 1959 - 60, எண். 359.
5. புதுக்கோட்டை சமசுத்தானக் கல்வெட்டுகள், எண். 488.
6. ஏ.ஆர்.இ., 1911, எண். 114.
7. ஏ.ஆர்.இ., எண். 92.
8. ஏ.ஆர்.இ., 1931-32, பத்தி. 24
9. A. Appadurai, Economic Conditions of Southern India, Vol. I, P. 169
10. ஏ.ஆர்.இ., 1916, எண். 64.

11. ஏ.ஆர்.இ., 1916, எண். 66
12. ஏ.ஆர்.இ., 1916, பத்திகள் 28 மற்றும் 33.
13. எஸ்.ஐ.ஐ., தொகுதி 23, எண். 124.
14. மேற்படி.
15. எஸ்.ஐ.ஐ., தொகுதி 7, எண். 411.
16. எஸ்.ஐ.ஐ., தொகுதி 7, எண். 51.
17. எஸ்.ஐ.ஐ., தொகுதி 8, எண். 51.
18. புதுக்கோட்டை சமசுதானக் கல்வெட்டுக்கள், எண்கள் 440 மற்றும் 581.
19. ஏ.ஆர்.இ., 1916, எண். 66.
20. எஸ்.ஐ.ஐ., தொகுதி 8, எண். 442.
21. A. Appadurai, Op.Cit., Vol. I, p.332
22. இ.ஐ., தொகுதி 6, பக். 232.
23. புதுக்கோட்டை சமசுதானக் கல்வெட்டுகள், எண். 265.
24. எஸ்.ஐ.ஐ. தொகுதி 8, எண். 442.
25. A. Appadurai, Op.Cit., p 332
26. எஸ்.ஐ.ஐ., தொகுதி 8, எண். 442
27. ஏ.ஆர்.இ., 1916, எண். 66
28 ஏ.ஆர்.இ. , 1915, எண். 587.
29. ஏ.ஆர்.இ., 1916, பத்தி. 28
30. புதுக்கோட்டை சமசுதானக் கல்வெட்டுகள், எண்.375
31. ஏ.ஆர்.இ., 1928-29, எண்.284
32. ஏ.ஆர்.இ., 1928-29, எண்.284
33. எஸ்.ஐ.ஐ., தொகுதி, 8 , எண்.417, வெகு காலம் தரிசாகக் கிடந்த நிலம் முது தரிசு என அழைக்கப்பட்டது.
34. எஸ்.ஐ.ஐ., தொகுதி 17, எண்.546, பரம்பரையாக பாழ்நிலமாக (தரிசாக) இருப்பது பரம்பரைப் பாழ் என அழைக்கப்பட்டது.
35. புதுக்கோட்டை சமசுத்தானக் கல்வெட்டுக்கள் எண். 406
36. ஏ.ஆர்.இ., 1924, எண்.15, பத்தி 38
37. புதுக் கோட்டை சமசுதானக் கல்வெட்டுக்கள், எண்.475

38. மேற்படி, எண்.383.
39. மேற்படி, எண்.325
40. மேற்படி, மேக்கல்லு மலையும், பெருமரக் காடாய் திட்டும் திடலுமாய்க் கிடந்த -எண்.325.
41. ஏ.ஆர்.இ. , 1924, எண். 15
42. மேற்படி, 1924, எண்.16, பத்தி 38
43. K.A.N. Sastri, The Colas, p. 571
44. புதுக்கோட்டை சமசுத்தானக் கல்வெட்டுக்கள், எண்.376
45. ஏ.ஆர்.இ., 1962-63, எண்.520
46. ஏ.ஆர்.இ., 1950-51 , எண்.265
47. ஏ.ஆர்.இ., 1913, 277, ஏ.ஆர்.இ. , 1914, பத்தி.18
48. கிராமத்தின் வைத்தியருக்குக் கொடுக்கப்பட்ட நிலம் வைத்திய விருத்தி என அழைக்கப்பட்டது.
49. புதுக்கோட்டை சமசுதானக் கல்வெட்டுக்கள், எண்.575
50. எஸ்.ஐ.ஐ., தொகுதி 7, எண். 107.
51. A.Appadurai, Economic Conditions of Southern India, Vol. I, p 165
52. ஏ.ஆர்.இ., 1922,எண்.543
53. ஏ.ஆர்.இ., 1913, எண். 277, ஏ.ஆர்.இ., 1914, பத்தி.18
54. ஏ.ஆர்.இ., 1922, எண்.46.
55. ஏ.ஆர்.இ., 1926, எண்.533
56. ஏ.ஆர்.இ., 1927, எண்.64
57. எஸ்.ஐ.ஐ., தொகுதி 23, எண்.428
58. ஏ.ஆர்.இ., 1928-29, எண்.25
59. எஸ்.ஐ.ஐ., தொகுதி 23, எண்.150
60. ஏ.ஆர்.இ., 1941-42, எண். 276.
61. மேற்படி, எண்.279
62. ஏ.ஆர்.இ., 1931-32, எண்.48
63. ஏ.ஆர்.இ., 1913, எண்.288
64. ஏ.ஆர்.இ., 1962-63, எண்.520

65. T.V .Mahalingam, Readings in South Indian History, p 97
66. எஸ்.ஐ.டி.ஐ., தொகுதி-1, எண்.32
67. மேற்படி, எண்.121
68. புதுக்கோட்டை சமசுத்தானக் கல்வெட்டுக்கள், எண்.272, 375 மற்றும் 601
69. மேற்படி, எண்.581.
70. இ.ஐ., தொகுதி 3, பக்.88
    1. ஒரு மகனை ஈன்றெடுத்தல்.
    2. ஒரு பாடல் இயற்றுதல்.
    3. ஒரு புதையலை புதைத்து வைத்தல்
    4. ஒரு மரத்தை நடுதல்.
    5. ஒரு பிராமணப் பெண்ணுக்கு திருமணம் செய்து வைத்தல்.
    6. ஒரு கோயில் கட்டுதல்.
    7. ஒரு குளம் வெட்டுதல்.
71. புதுக்கோட்டை சமசுத்தானக் கல்வெட்டுக்கள், எண்கள். 361, 384 மற்றும் 534.
72. ஏ.ஆர்.இ., 1905, எண்கள். 54 மற்றும் 59.
73. புதுக்கோட்டை சமசுத்தானக் கல்வெட்டுக்கள் . எண். 478
74. K.V. Subramania Iyer, Historical Sketches of Ancient Deccan, Vol. I, p 368
75. ஏ.ஆர்.இ., 1963-64, எண்.262
76. மேற்படி, 1963-64 எண்.263.
77. ஏ.ஆர்.இ.,1927, எண்.38
78. மேற்படி., 1914, எண்.211
79. மேற்படி., 1927, எண்.38
80. மேற்படி., 1914 , எண்.211
81. மேற்படி.,1927, எண்.38
82. மேற்படி., 1923, எண்.322
83. மேற்படி., 1909, எண். 459
84. மேற்படி., 1935-36, எண்.125

85. ஏ.ஆர்.இ., 1908, எண்.149
86. புதுக்கோட்டை சமசுத்தானக் கல்வெட்டுக்கள், எண்.620
87. மேற்படி, எண்.482
88. எஸ்.ஐ.டி.ஐ., தொகுதி 1, எண்.267
89. மேற்படி, எ்ண்.336
90. R. Nagasamy, South Indian Studies, Vol. I., p 99
91. புதுக்கோட்டை சமசுத்தானக் கல்வெட்டுக்கள் , எண்.573
92. மேற்படி, எண்.582
93. ஏ.ஆர்.இ., 1928-29, எண்.27, பத்தி.51
94. மேற்படி 1927, எண். 27 பத்தி 51.
95. ஏ.ஆர்.இ., 1916, எண்கள். 399, 405 மற்றும் 406.
96. ஏ.ஆர்.இ., 1950 - 51, எண். 265.
97. ஏ.ஆர்.இ., 1949 - 50, எண். 291.
98. பி.எஸ்.ஐ., எண்.480
99. எஸ்.ஐ.ஐ., தொகுதி 24, எண்கள் 227 மற்றும் 245.
100. எஸ்.ஐ.ஐ., தொகுதி 24, எண்கள் 223, 226 மற்றும் 228
101. பி.எஸ்ஐ., எண்.434
102. ஏ.ஆர்.இ., 1924, பத்தி 31
103. பி.எஸ்.ஐ., எண்கள் 281, 625 மற்றும் 638
104. ஏ.ஆர்.இ. 1929-30 எண்.275, பத்தி 9.
105. பி.எஸ்.ஐ. எண்.265
106. மேற்படி., எண்.308
107. ஏ.ஆர்.இ., 1911, எண்.544. 1912, பத்தி 37 1916, பத்தி 8 பி.எஸ்.ஐ., எண்கள் 277, 327, 395,421, 439,453,588 எண்.ஐ.ஐ.,தொகுதி 24, எண்.221
108. எஸ்.ஐ.ஐ., தொகுதி 24 எண்கள் 223 மற்றும 226
109. ஏ.ஆர்.இ., 1916, எண்.90
110. பி.எஸ்.ஐ., எண். 421
111. மேற்படி., எண்.588
112. மேற்படி., எண்.453

113. மேற்படி., எண். 260
114. மேற்படி., எண்.439
115. ஏ.ஆர்.இ., 1938 -39, எண்.183
116. எஸ்.ஐ.ஐ. ,தொகுதி 24 , எண்கள் 221 மற்றும் 277
117. ஏ.ஆர்.இ., 1943-44, எண்.282
118. ஏ.ஆர்.இ., 1938-39, எண். 377
119. ஏ.ஆர்.இ., 1921. எண்.506
120. எஸ்.ஐ.ஐ., தொகுதி 24, எண்கள். 227 மற்றும் 245 ஏ.ஆர்.இ., 1938-39 எண்கள் 171 மற்றும் 183 பி.எஸ்.ஐ., எண்.442.
121. எஸ்.ஐ.ஐ., தொகுதி 24, எண்கள் 223, 226 மற்றும் 228, பி.எஸ்.ஐ., எண்.559
122. எஸ்.ஐ.ஐ., தொகுதி 24, எண்கள் 223, 227 மற்றும் 228 ஏ.ஆர்.இ., 1938-39 எண்கள். 171 மற்றும் 192, எஸ்.ஐ.ஐ., எண்கள். 393 மற்றும் 599.
123. ஏ.ஆர்.இ., 1913, எண்.31
124. ஏ.ஆர்.இ., 1908. எண்.116 1940-41 எண்.231, 1954-55 எண்.407
125. ஏ.ஆர்.இ., 1933-34. எண்.94 1938-39அ எண்.174, பி.எஸ்.ஐ., எண்.246.
126. ஏ.ஆர்.இ., 1915, எண்.581, 1926 எண்.522
127. ஏ.ஆர்.இ., 1916. பத்தி.25
128. ஏ.ஆர்.இ., 1916 பத்தி. 25
129. ஏ.ஆர்.இ., 1924 எண்.234
130. ஏ.ஆர்.இ., 1913, எண்.288
131. ஏ.ஆர்.இ., 1905, எண்.80
132. ஏ.ஆர்.இ., 1927-28, எண்.308, 1964-65 எண்.283.
133. ஏ.ஆர்.இ., 1927-28, பத்தி. 20 1936-37, எண்.52
134. ஏ.ஆர்.இ., 1961-62 , எண்.342.
135. மேல் வாரம் என்பது நிலச் சொந்தக்காரர் பெறும் குத்தகைப் பணம் அல்லது தானியத்தைக் குறிக்கும். இக்கல்வெட்டில் நிலச் சொந்தக்காரராகக் கோயில் குறிப்பிடப்பட்டுள்ளது.

136. ஏ.ஆர்.இ., 1926,எண்.554
137. ஏ.ஆர்.இ., 1924, பத்தி.31
138. ஏ.ஆர்.இ., 1924, பத்தி.31
139. ஏ.ஆர்.இ., 1911, எண்.93, பத்தி 40
140. ஏ.ஆர்.இ., 1928-29, எண். 284
141. பி.எஸ்.ஐ., எண்.399
142. ஏ.ஆர்.இ., 1924, எண்.107
143. எஸ்.ஐ.ஐ., தொகுதி 24, எண். 223
144. ஏ.ஆர்.இ., 1940-41, எண்.261
145. எஸ். ஐ.ஐ., தொகுதி 24, எண்.223
146. எஸ்.ஐ.ஐ., தொகுதி 24, எண்.228
147. ஏ.ஆர்.இ., 1924, எண்.10 1963-64. எண். 274, பி.எஸ்.ஐ., எண்.365.
148. எஸ்.ஐ.ஐ., தொகுதி 8, எண்.442, ஏ.ஆர்.இ., 1903, எண்.154.
149. எஸ்.ஐ.ஐ., தொகுதி 17, எண்.145
150. ஏ.ஆர்.இ., 1934-35, எண்.72
151. ஏ.ஆர்.இ., 1943-44,எண்.282
152. பி.எஸ்.ஐ. எண்.427.
153. ஏ.ஆர்.இ., 1932, எண்.203
154. எஸ்.ஐ.ஐ., தொகுதி8, எண்.916
155. எஸ்.ஐ.ஐ., தொகுதி 17, எண்.143.
156. எஸ்.ஐ.ஐ., தொகுதி 17, எண்.127
157. எஸ்.ஐ.ஐ., தொகுதி 7, எண்.55.
158. எஸ்.ஐ.ஐ., தொகுதி 17, எண்.127
159. ஏ.ஆர்.இ., 1943-44 , எண்.282
160. ஏ.ஆர்.இ., 1932-33, எண். 236
161. ஏ.ஆர்.இ., 1916, பத்தி 8
162. ஏ.ஆர்.இ., 1932-33, எண்.236
163. எஸ்.ஐ.ஐ., தொகுதி 17, எண்.141

164. எஸ்.ஐ.ஐ., தொகுதி 17, எண்.55
165. எஸ்.ஐ.ஐ., தொகுதி 17, எண்.145
166. எஸ்.ஐ.ஐ., தொகுதி 17, எண்.145
167. எஸ்.ஐ.ஐ., தொகுதி 17, எண்.141.
168. எஸ்.ஐ.ஐ., தொகுதி 17, எண்.128
169. எஸ்.ஐ.ஐ., தொகுதி 27, எண்.127
170. ஏ.ஆர்.இ., 1970-71, எண்.523
171. எஸ்.ஐ.ஐ., தொகுதி 27,எண்.117.
172. எஸ்.ஐ.ஐ., தொகுதி 27,எண்.143.
173. ஏ.ஆர்.இ., 1970-71, எண்.607
174. மேற்படி
175. எஸ்.ஐ.ஐ., தொகுதி 17, எண்.127
176. எஸ்.ஐ.ஐ., தொகுதி 23, எண்.111
177. எஸ்.ஐ.ஐ., தொகுதி 17, எண்.143
178. ஏ.ஆர்.இ., 1962-63, எண்.482
179. ஏ.ஆர்.இ., 1916, எண்.588
180. ஏ.ஆர்.இ., 1935-36, எண்.73
181. எஸ்.ஐ.ஐ., தொகுதி 8, எண்.177
182. பி.எஸ்.ஐ., எண்.596
183. ஏ.ஆர்.இ., 1963-64, எண்.237
184. பி.எஸ்.ஐ., எண்.598
185. ஏ.ஆர்.இ., 1935-36, எண்.170, பத்தி 52
186. ஏ.ஆர்.இ., 1932-33, எண்.232, பத்தி.32
187. K.A.N. Sastri Ed. Foreign Notes of South India P. 166
188. V.N. Hari Rao, History of the Sri Rangam Temple P. 78
189. ஏ.ஆர்.இ., 1916, எண்.720.
190. K.A.N. Sastri Ed. Foreign Notices of South India P. 154.
191. மேற்படி, பக்.163
192. ஏ.ஆர்.இ., 1937-38, எண்.3 பத்தி 44

193. ஏ.ஆர்.இ., 1916, எண்.425, 1932-33, எண்.236
194. ஏ.ஆர்.இ., 1921, எண்.405
195. K.A.N. Sastri Ed. Foreign Notices of South India P. 162 - 163.
196. மேற்படி. பக்.197
197. ஏ.ஆர்.இ., 1915, எண்.97, 1926, எண்.8, 1930-31, எண்.113.
198. ஏ.ஆர்.இ., 1921, எண்.458, 1952-53, எண்.338, பி.எஸ்.ஐ., எண்.361
199. பி.எஸ்.ஐ., எண்.361
200. ஏ.ஆர்.இ., 1952-53, எண்.338
201. எஸ்.ஐ.ஐ., தொகுதி 8, எண்.442
202. எஸ்.ஐ.ஐ., தொகுதி 8, எண்.405
203. ஏ.ஆர்.இ., 1914, எண்.158, எண். 1923
204. T.V. Mahalingam, South Indian Polity P. 394.
205. I.A. Vol. IV, P. 153
206. E.I. Vol. IV, P. 263
207. E.I. Vol. IV, P. 290, ஏ.ஆர்.இ., 1926-27, பத்தி.47
208. ஏ.ஆர்.இ., 1926-27, பத்தி.47
209. எஸ்.ஐ.ஐ., தொகுதி 4, எண்.147, ஏ.ஆர்.இ., 1917 எண்.439
210. ஏ.ஆர்.இ., 1930-31, எண்.46, E.I. Vol. VI, P. 83 - 84
211. ஏ.ஆர்.இ., 1926-27, பத்தி.47
212. ஏ.ஆர்.இ., 1905, எண்.519
213. எஸ்.ஐ.ஐ., தொகுதி 4, எண். 147
214. ஏ.ஆர்.இ., 1917, எண்.439
215. ஏ.ஆர்.இ., 1926, எண்.617, 1926-27, பத்தி. 45
216. ஏ.ஆர்.இ., 1905, எண்கள் 180 மற்றும் 275, E.I. Vol. XIX, P. 30
217. T.V. Mahalingam, South Indian Polity P. 390
218. எஸ்.ஐ.ஐ., தொகுதி 8, எண்.442, ஏ.ஆர்.இ., 1960-61, பக்.23-24.
219. E.C. Vol. X, K1. 170.
220. T.V. Mahalingam, South Indian Polity, P. 390.

221. ஏ.ஆர்.இ., 1964-65, எண். 286
222. K.A.N. Sastri, The Colas, P. 595.
223. R.C. Majumdar (Ed.,) The Struggle for Empire, P. 526.
224. E.I. Vol. VII, P. 197 - 198.
225. E.C. Vol. IV, Hg. 17, Vol. VII, Sk. 118.
226. K.A.N. Sastri, The Colas, P. 596.
227. ஏ.ஆர்.இ., 1914, எண்கள் 406 மற்றும் 407, 1915, பத்தி.32
228. A. Appadurai, Economic conditions of Southern India, Vol. II, P. 519.
229. A. Appadurai, Economic Conditions of Southern India, Vol. II, P. 520 - 534, K.A.N. Sastri (Ed.,) Foreign Notices of South India, P. 187 - 188.
230. சா-ஜூ-கா, 12 மற்றும் 13ஆம் நூற்றாண்டின் நிகழ்ந்த சீன வணிகம் பற்றி சுஃபான்சி (Chufachi)என்ற தலைப்பில் ஒரு புத்தகம் எழுதியிருக்கிறார்.
231. Hirth and Rock Hill (Ed.) Chau Ju Kua, P. 240.
232. K.A.N. Sastri (Ed.) Foreign Notices of South India, P. 150 - 156.
233. ஏ.ஆர்.இ., 1907, எண்.161, 1936-37, பத்தி.38
234. K.A.N. Sastri, (Ed.) Foreign Notices of South India, P. 166 - 167.
235. K.A.N. Sastri, The Pandiyan Kingdom, P. 170.
236. Elliot and Dowson, History of India as told by its own Historians, Vol. III, P. 33 - 34.
237. A. Appadurai, Economic conditions of Southern India Vol. II, P. 709.
238. மேற்படி.
239. T. Desikachari, South Indian Coins, P. 162.
240. பி.எஸ்.ஐ., எண்.239
241. ஏ.ஆர்.இ., 1961-62, எண்.இ.223
242. தி.வை.சதாசிவ பண்டாரத்தார், பாண்டியர் வரலாறு பக்.139
243. ஏ.ஆர்.இ., 1961-62, எண்.இ.222
244. T. Desikachari, South Indian Coins, P. 160.

245. Vidya Prakash, Coinage of South India, P. 63.
246. K.A.N. Sastri, The Pandiyan Kingdom, P. 135.
247. K.V. Raman, Some aspects of Pandiyan History in the Light of Recent Discoveries, P. 53.
248. ஏ.ஆர்.இ., 1914, பத்தி.18
249. தி.வை. சதாசிவப்பண்டாரத்தார், பாண்டியர் வரலாறு, பக்.139
250. B. Chattopadhyaya, Coins and Currency System in south India, P. 67.
251. T. Desikachari, South Indian Coins, P. 34.
252. மேற்படி
253. மேற்படி பக்.37
254. மேற்படி, பக்.38
255. மேற்படி, பக்.39
256. ஏ.ஆர்.இ., 1959-60, எண்.இ.86
257. T. Desikachari, South Indian Coins, P. 160.
258. K.A.N. Sastri, The Pandiyan Kingdom, P. 151.
259. B. Chattopadhyaya, Coins and Currency System in South India, P. 68.
260. K.V. Subramania Aiyer, Historical Sketches of Ancient Deccan, Vol. I, P. 167.
261. T. Desikachari, South Indian coins, P. 56.
262. R. Nagasamy, Tamil Coins, P. 106.
263. மேற்படி, பக்.106
264. ஏ.ஆர்.இ., 40

# 5. சமயம்

தொடக்கக் காலந்தொட்டே பாண்டியப் பேரரசர்கள் இந்து சமயத்தின் பல்வேறு பிரிவுகளைப் போற்றியும், ஆதரித்தும் வந்துள்ளனர். அதோடு, சமண, பௌத்த சமயத்தவருக்கும் ஆதரவு நல்கியிருக்கின்றனர். இரண்டாவது அல்லது பிற்காலப் பாண்டியப் பேரரசர்கள் தமது முன்னோர்களின் பாரம்பரியத்தைக் காத்து வந்துள்ளனர் என்பது வெள்ளிடைமலையாகும். சோழப்பேரரசர்களின் ஆதிக்கத்திலிருந்து பாண்டியநாட்டையும் அதன் பெருமையையும் மீட்ட முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியனின் மெய்க்கீர்த்தி, அக்காலத்தில் அறுவகைச் சமயம் விளங்கியதாகக் கூறுகின்றது. இந்த அறுவகைச் சமயம் என்பது, கி.பி. எட்டாம் நூற்றாண்டிலேயே பாண்டியர்தம் குகைக் கோயில்களில் புகுந்துவிட்ட சண்மத வழிபாட்டின் தொடர்ச்சியே யாகும்.[1] ஏனைய துறைகளில் செல்வாக்குப் பெற்றிருந்ததுபோலவே இரண்டாவது பாண்டியப் பேரரசர்கள் சமயத்துறையிலும் பல்வகைச் சாதனைகள் புரிந்து, சமயப்பொறையைக் காத்துவந்துள்ளனர். சமய மடங்களை உருவாக்கி ஆதரவளித்துள்ளனர். சமயப் பெரியார்களைச் சந்தித்து ஆசிபெற்றனர். சமய இலக்கியங்களை ஆதரித்தனர். அவர்தம் காலத்தில் ஒவ்வொரு சமயப்பிரிவும் எவ்வாறு வளர்ந்து வந்துள்ளது என்பதைக் காண்பது அவசியமாகும்.

## சைவம்

சோழநாட்டைப் போன்றே பாண்டிய நாட்டிலும் சைவசமயம் சிறந்தோங்கி வளர்ந்தது. இப்பகுதியில் தேவாரமுதலிகளின் பாடல்பெற்ற பதினான்கு சைவத்திருக்கோயில்கள் உள்ளன. இவை பிற்காலப் பாண்டியர்காலத்தில் விரிவுபடுத்தப்பட்டன. இவற்றில் சிறப்பு வழிபாடுகள் நடத்தப்பட்டன. நடராசர் நடனமாடியதாகக் கருதப்படும் ஐந்து சபைகளில் மூன்று (மதுரை, குற்றாலம், திருநெல்வேலி) பாண்டியநாட்டில் அமைந்திருப்பது குறிப்பிடத்தக்கதாகும். இவற்றில் மதுரையில் பாண்டியருக்காகச் சிவபெருமான் கால்மாறி ஆடியதாகத் திருவிளையாடற் புராணம் கூறுகின்றது. முற்காலப் பாண்டியர் காலத்தில் சைவநாயன்மார்களும், சிவபக்தர்களும் சைவத்தலங்களைப் போற்றினர். மன்னர்களும் சைவக்கோயில்களில் திருப்பணிகள் செய்தனர்; புதிய கோயில்களை எழுப்பினர்; நிவந்தங்களும், நிலத் தானங்களும் கொடுத்தனர். சைவத்துறவிகளுக்குக் கோயில்களில் சிற்பங்களும் அமைத்தனர். இரண்டாவது பாண்டியப் பேரரசர்களும் இப்பணிகளைத் தொடர்ந்து நடத்தி வந்தனர். கோயில்களில் தேவாரம், திருவாசகம், திருவெம்பாவை ஆகியவை பாடப்பெற்றன. சிவதர்மம், திருஞானம் போன்ற சமயநூல்களும் படிக்கப்பட்டன. இப்பாடல்கள் பாடுவதற்குக்

கட்டளைகளும் ஏற்படுத்தப்பட்டன. இசையும் நடனமும் போற்றப்பட்டன. இசைக்கலைஞர்கள் ஆதரிக்கப்பட்டனர்.

முதலாம் சடையவர்மன் குலசேகரன் (கி.பி. 1191 - 1216) காலத்தில் மீனாட்சி சுந்தரேசுவரர் கோயில் திருத்திக் கட்டப்பட்டது[2]. தொடர்ந்து வந்த பாண்டியப் பேரரசர்களும் நாயக்கமன்னர்களும் இச்சன்னதிக்குத் திருப்பணி செய்துள்ளனர்[3]. முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் (கி.பி. 1216 - 1244) காலத்தில்[4] இக்கோயிலின் கிழக்குக் கோபுரம் கட்டத் தொடங்கப்பட்டு முதலாம் சடையவர்மன் சுந்தரபாண்டியன் காலத்தில்[5] இன்றைக்குள்ள நிலையையடைந்ததெனத் தெரிகின்றது. பாண்டியரின் மீன் இலச்சினை இக்கோபுரத்தின் அடித்தளத்தில் பொறிக்கப்பட்டுள்ளதைக் காணலாம். முதலாம் சடையவர்மன் குலசேகரன் சுந்தரேசுவரர் சன்னதியில் உள்ள அர்த்தமண்டபம், மணிமண்டபம் ஆகியவற்றையும் சன்னதிக்கு முன்புள்ள சிறுகோபுரத்தையும்[6] கட்டியுள்ளான். பிற்கால இலக்கியமான திருவாலவாயுடையார் கோயில் திருப்பணி விவரம், இங்குள்ள சுந்தரபாண்டியன் மண்டபம், சுந்தரமாறன் திருமதில் ஆகியவற்றை முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் கட்டியதாகக் கூறுகின்றது[7]. இக்கோயிலின் மேற்குக் கோபுரத்தினைப் பராக்கிரம பாண்டியன் (கி.பி. 1315 - 1347) கட்டினான்[8]. இங்கும் மீன் இலச்சினை காணக்கிடைக்கின்றது. சடையவர்மன் குலசேகரன், பத்தமடை சிவன் கோயிலில் நந்தாவிளக்கேற்ற தானம் அளித்துள்ளான்[9]. இவனது அதிகாரி ஒருவன் திருப்பத்தூர்த் திருத்தளிநாதர் கோயிலில் சன்னதி ஒன்றைக் கட்டினான்.[10] முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் காலத்திலேயே சுந்தரமூர்த்தி நாயனாருக்கும் பரவை நாச்சியாருக்கும் தென்திருப்பேரூர் சிவன் கோயிலில் விக்கிரகங்கள் வைத்து வழிபாடு நடத்தப்பட்டது.[11] அவனது காலத்தில் திருப்பெருந்துறை ஆளுடையாரின் (மாணிக்க வாசகர்) சிற்பம் ஒன்று திருக்கோடிக்காவல் கோயிலில் நிறுவப்பட்டது.[12] அவனது காலத்தில்தான் மதுரையில் மேலமாசி வீதியில் உள்ள, இம்மையில் நன்மை - தருவார் கோயில் கட்டப்பட்டதெனப் பிற்காலத்து நூலான திருவாலவாயுடையார் கோயில் திருப்பணிவிவரம் கூறுகின்றது.[13] இம்மன்னனின்கீழ்ப் பணிபுரிந்த அதிகாரி திருத்தங்கல் சிவன்கோயிலில் திருப்பணி செய்துள்ளான்.[14] முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் சிதம்பரம் நடராசர் மீது எல்லையற்ற அன்பு கொண்டு மகிழ்ந்தான் என்பதனை அவனது மெய்க்கீர்த்தி கீழ்வருமாறு கூறுகின்றது.

''தெய்வப் புலியூர்த் திருவெல்லையுட் புக்கு
பொன் னம்பலம் பொலிய ஆடுவார் பூவையுடன்
மன்னு திருமேனி கண்டு மனங்களித்து''

இவ்வாறு நடராசர் மீது கொண்ட பேருவகையின் விளைவே பாண்டியநாட்டிலும் திருவேகம்பத்துப் பகுதியில் நடராசரை மூல நாயகனின் பெயராகக் கொண்டு கோயில் ஒன்று தோன்றுவதற்கும் காரணமாக அமைந்தது[15]. இம்மன்னன் காலத்தில் மதுரை மீனாட்சி சுந்தரேசுவரர் கோயிலில் பணியாற்றிய ஓர் இசைக்கலைஞருக்கு நிலத்தானம் கொடுக்கப்பட்டது. இதுபோன்று மத்தளம், வீரமத்தளம், திமிலை, சேமக்கலம், திருச்சின்னம் போன்ற இசைக்கருவிகளை வாசித்த பதினோரு இசைக் கலைஞர்களுக்கும் தானம் வழங்கப்பட்டது.[16] கோட்டையூர்க் கோயிலில் ''சுந்தரபாண்டியன் சந்தி'' ஏற்படுத்தப்பட்டு, அதற்கான நிலத்தானம் அளிக்கப்பட்டது. இம்மன்னன் பிறந்த ஆவணி அவிட்டத்திருநாள் கொண்டாடப்படுவதற்காகப் பல கோயில்களுக்கு நிவந்தங்கள் கொடுக்கப்பட்டன. பெரிச்சிகோயில் என்ற இடத்தில் கி.பி. 1230இல் இம்மன்னன் திருமட்துக்கரையாண்ட நாயனார் கோயிலைக் கட்டினான்.[17]

இரண்டாவது பாண்டியப் பேரரசர்களில் சிறந்தவனான முதலாம் சடையவர்மன் சுந்தரபாண்டியன் (கி.பி. 1250 - 1284) சிதம்பரத்தில் பலமுறை துலாபாரம் ஏறி, நடராசப் பெருமானின் கோயிலுக்குப் பொன்வேய்ந்தான்.[18] இக்கோயிலில் பொன்னாலான மண்டபம் ஒன்றையும் கட்டினான்.[19] இக்கோயிலின் மேற்குக் கோபுரம் இவனால் கட்டப்பட்டு, சுந்தரபாண்டியன் கோபுரம் எனப் பெயரிடப்பட்டது.[20] சிதம்பரத்திற்கு அருகில் தனது அண்ணன் பெயரால் விக்கிரமபாண்டியச் சதுர்வேதிமங்கலம் தோற்றுவித்து அவ்வூரில் விக்கிரமபாண்டியீசுவரம் என்ற கோயிலையும் கட்டினான்.[21] இம்மன்னன் உத்தரவுப்படி, 1282இல் சுந்தரமூர்த்தி நாயனார்க்குப் புக்கொளியூரில் (அவினாசி) கோயில் கட்டப்பட்டது.[22] சேலம் மாவட்டத்தில் ஆறகளூரில் குலசேகர ஆவுடையார் கோயிலையும் இம்மன்னன் எடுப்பித்துள்ளான்.[23] திருவந்திபுரம், திருக்குவளைக் கோயில்களுக்கு நிலத்தானமளித்துள்ளான். கி.பி. 1254இல் முதலாம் சடையவர்மன் சுந்தரபாண்டியன், திருக்கார்த்தீசுவரம் திருனபதீசுவரர் கோயிலில் ''கோயிற்பொன் வேய்ந்த பெருமான்'' என்ற பெயரில் திருமேனி ஒன்றை அமைத்தான்.[24] சித்திரை மூலத்தில் பிறந்த இம்மன்னன் தனது பிறந்தநாளைக் கொண்டாடும் வகையில் திருவானைக்காத் திருக்கோயிலில் சேரனைவென்றான் திருநாளை ஆண்டுதோறும் நடத்த வழி செய்தான்.[25]

முதலாம் மாறவர்மன் விக்கிரமபாண்டியனின் திருமலைக் கல்வெட்டு அம்மன்னன், அக்கோயிலிலிருந்த திருச்சிற்றம்பல சேத்திரபாலப்பிள்ளையார் திருவுருவத்திற்குப் பூசை செய்யவும் திருவமுதுகாட்டவும் வரி நீக்கி நிலக்கொடையளித்ததாகக் கூறுகின்றது.[26] சடையவர்மன் முதலாம் விக்கிரமபாண்டியனின் தேவிபட்டினம் கல்வெட்டு கி.பி. 1242இல் இரண்டாம் மாறவர்மன் சுந்தரபாண்டியனால்

கட்டப்பட்ட கோயில் ஒன்றிற்கு நிலம் வழங்கியதாகக் கூறுகின்றது.[27] இரண்டாம் மாறவர்மன் விக்கிரம பாண்டியன் திக்குவிசயம் செல்வதற்கு முன் அரகண்டநல்லூரில் இறைவனுக்குச் சிறப்பு வழிபாடுகள் நடத்தியதோடு தன் வெற்றிக்குப்பின் அக்கோயிலில் பல திருப்பணிகள் செய்துள்ளான். இங்குள்ள நடராசர் கோயிலும், மடப்பள்ளியும், திருநடைமாளிகைத் திருமண்டபமும் இம்மன்னனால் கட்டப்பட்டன.[28] தனது ஆறாவது ஆட்சியாண்டில் திருவெண்ணெய் நல்லூரில் குலசேகரஈசுவரம் என்ற சிவன் கோயிலைத் தனது அண்ணன் பெயரில் இம்மன்னன் எடுப்பித்துள்ளான்.[29] புவனேகவீரன் என அழைக்கப்படும் இவன் சிதம்பரம் சிவகாமி அன்னையின் கோயிலுக்குப் பொன்வேய்ந்தான் என்று அவனது சிதம்பரம் கல்வெட்டு கூறுகின்றது.[30] தனது பதினேழாவது ஆட்சி யாண்டில் ஐம்பை கோயிலில் புவனேகவீரன் சந்தியை ஏற்படுத்தி யிருக்கிறான்.[31] திருவண்ணாமலையைச் சுற்றிவரும் மலைப்பாதை (கிரிவலம்) ''விக்கிரமபாண்டியன் திருவீதி'' என அழைக்கப்பட்டது. ''விக்கிரமபாண்டியன் திருவீதி'' என்ற பெயர் பொறித்த கற்பலகைக் கல்வெட்டுகள் இப்பாதையில் கண்டறியப்பட்டுள்ளன. இம்மன்னன் ''அஷ்ய்யநங்கா'' என்னும் கிராமத்தை, வேதங்களிலும், சாத்திரங் களிலும் கோயில் வழிபாட்டு முறைகளிலும் தேர்ச்சி பெற்றிருந்த 24 பிராமணர்களுக்குத் தானமளித்தான்.[32]

மூன்றாம் சடையவர்மன் வீரபாண்டியன் (கி.பி. 1297 - 1342) திருவெண்காட்டில் வீரபாண்டிய ஈசுவரமுடையார் கோயிலைக் கட்டினான்.[33] திருக்கோயிலூர்க் கல்வெட்டு 'எல்லாந்தலையான பெருமாள்' என்னும் சிலை அமைக்கப்பட்டது என்று கூறுகின்றது.[34] மூன்றாம் சடையவர்மன் வீரபாண்டியனுக்கும் 'எல்லாந்தலையானான்' என்ற விருதுப்பெயர் உண்டாகையால் இது அவனது காலத்தைச் சேர்ந்தது என என். சேதுராமன் கருதுகின்றார்.[35] மூன்றாம் மாறவர்மன் சுந்தரபாண்டியனின் (கி.பி. 1303 - 22) அரகண்டநல்லூர்க் கல்வெட்டு (கி.பி. 1313) கோயிலில் மண்டபம் கட்டிய செய்தியையும், அதுகட்டி முடிக்கப்பட்டவுடன் அக்கோயில் பணியாளன் ஒருவன் தன்தலையை அரிந்து நவகண்டமளித்த செய்தியையும் கூறுகின்றது.[36] கி.பி. 1303இல் முதலாம் மாறவர்மன் குலசேகரன் (கி.பி. 1268 - 1318) அவனது மகன் வீரபாண்டியன் ஆகியோரின் நன்மைக்காக வாணாதிராயன் காலிங்கராயன் என்பவன் கோயில்கள் கட்டினான்.[37] சிதம்பரம் கோயிலுக்கு நிவந்தம் அளித்தான் என்றும் சேரர், சோழர், போசளர் ஆகியோரைப் போரில் வென்றதனால் கிடைத்த பொருட்களைக் கொண்டு திருநெல்வேலி கோயிற் பிரகாரங்களை முதலாம் மாறவர்மன் குலசேகரன் கட்டியதாகவும் தெரிகின்றது.[38] இவனது காலத்தில் திசையாயிரத்தைந்நூற்றுவர் போன்ற பல வணிகக்குழுக்களின்

பிரதிநிதிகள் ஒன்றுகூடிக் கோயில் திருப்பணிகள் செய்தனர். இராமநாதபுரம் பகுதியில் வணிகர்கள் ஒன்றுகூடி அங்குள்ள கோயிலைப் புதுப்பித்தனர்.[39]

இம்மன்னன் ''சேரனைவென்றான் சந்தி'' நடைபெறுவதற்காக நிலத்தானமளித்தான். இவனது காலத்தில் 'செண்பகக்கலைசிகரன்' என்ற சந்திபூசையையும், 'திருவாணித் திருநாளையும்' நடத்த ஏற்பாடு செய்தான் என இவனது திருக்கோளக்குடிக் கல்வெட்டு குறிப்பிடு கின்றது.[40] இதற்காக விருதராச பயங்கரவளநாடு என்னும் கானநாட்டு மக்கள் பெருநல்லூர் என்ற கிராமத்தைத் தானமாக அளித்தனர். இவனது காலத்தில் மருதூர் என்ற ஊரில் நிலங்களில் பயிர் செய்யப்படாத காரணத்தால் அங்கு வரி செலுத்துவது தடைப்பட்டது. இதனால் அப்பகுதி மக்கள் வேம்பற்றூர்க்கோயிலில் பூசைகள் சரிவர நடைபெற வேண்டி அக்கோயிலுக்கு அக் கிராமத்தைத் தானமளித்தனர்.[41] கண்ணனூர்க் கோயில் நிலங்களுக்கு வரி விலக்களிக்கப்பட்டது.[42]

ஐந்தாம் மாறவர்மன் விக்கிரமபாண்டியன் (கி.பி. 1323 - 30) காலத்தில் கங்கைகொண்ட சோழீச்சுவரமுடையார் கோயிலில் அரசன் பெயரில் ஏற்படுத்தப்பட்டு 'இராஜாக்கள்நாயன் சந்திக்கு' அமுதுப்படி, சாத்துப்படி உள்ளிட்ட நிவந்தங்களுக்கு நிலங்கள் அளிக்கப்பட்டன.[43] திருவிடைமருதூரில் மகாலிங்கேசுவரர் கோயிலில் விக்கிரம பாண்டியனின் மூன்றாவது ஆட்சியாண்டில் இறைவனுக்குப் பூசை செய்யவும், முக்கியத் திருவிழாக்கள் நடத்தவும், வழிவகை செய்யப்பட்டன.[44]

சிவன்கோயில்களில் அம்மன் திருக்கோயில்களும் இக்காலத்தில் கட்டப்பட்டுச் சக்தி வழிபாடும் பெருகத் தொடங்கியது. பாண்டிய நாட்டுச் சிவன்கோயிலில் தொடக்கத்தில், கோயில் முன்மண்டபத்தில் தெற்கு நோக்கிய நிலையில், திருக்காமக்கோட்டமுடைய நாச்சியார் கோயில்கள் எடுக்கப்பட்டன. இதற்கு எடுத்துக்காட்டாகத் திருவேகம்பத்து, இளையான்குடி, பத்தமடைக் கோயில்களைச் சொல்லலாம். அதன்பின்பு சிவனது கருவறைக்கு வடக்கே, தனியாகக் கிழக்கு நோக்கிய கோயில்கள், இடைக்காட்டூர் போன்ற இடங்களில் எழுப்பப்பட்டன. இம்முறை முதன்முதலில் சோழமன்னன் முதலாம் இராசேந்திரனின் (கி.பி. 1014 - 1044) கங்கைகொண்ட சோழீச்சுவரர் கோயிலில் ஏற்படுத்தப்பட்டது. விசயநகர நாயக்கர் காலங்களில் சிவனது கருவறைக்குத் தெற்கே - அதாவது சிவபெருமானுக்கு வலப்புறத்தில் அம்மன் கோயில்கள் அமைக்கப்பட்டன. இன்றும் திருமணங்களில் ஆணுக்கு வலப்புறத்திலேயே மணமகள் அமர்த்தப்படுவதைக் காணலாம். கி.பி 12ஆம் நூற்றாண்டில் மதுரைக்கோயிலில் திருக்காமக் கோட்டமுடைய நாச்சியார்கோயில் கட்டப்பட்டது.[45] பாண்டியநாட்டுச் சிவன் கோயில்களில் பதின்மூன்றாம் நூற்றாண்டில், அரசர்கள்,

அதிகாரிகள் போன்றோர் திருக்காமக்கோட்டமுடைய நாச்சியார் கோயிலைக் கட்டியுள்ளனர்.[46] கல்வெட்டுகளில் இந் நாச்சியாருக்குச் சிவனை முழுதுடைய நாச்சியார், சிவநேசவல்லி நாச்சியார், அபயநாயகி, ஆளுடைய நாச்சியார், உலகுடைய நாச்சியார், தண்மென் முலையார், ஒப்பிலாமுலையார், அங்கயற்கண்ணியார், பெரியநாச்சியார் போன்ற பெயர்கள் காணப்படுகின்றன.[47] சிவனைப் போலவே, நித்திய வழிபாடும், திங்கள் வழிபாடுகளும், இன்னபிறவும் காமக்கோட்ட நாச்சியாருக்குச் செய்யப்பட்டன.[48] தனிமரபாக விளங்கிய சக்திவழிபாடு பாண்டியர்காலத்துச் சிவன் கோயில்களில் இடம் பெற்றுச் சிவனையொத்த நிலையைப் பிற்காலத்தில் எட்டிப்பிடித்தது என்பதனை இதன் மூலம் அறிய முடிகின்றது.[49] பள்ளியறை நாச்சியார் மரபும் கி.பி. 12ஆம் நூற்றாண்டு வாக்கில் பாண்டியநாட்டில் பின்பற்றப்படத் தொடங்கியதெனத் தெரிகின்றது.[50] இந்நாச்சியாரது வழிபாடு, வளமைச் சடங்கு என்ற நாட்டுப்புற நம்பிக்கையின் தாக்கமாக இருக்கலாம்.[51] ஏறக்குறைய இதே காலக்கட்டத்தில்தான் கோனார்க், கஜுராஹோ கோயில்களின் சிற்பவமைதிகளிலும் இக்கருத்தை வலியுறுத்தும் மரபு பின்பற்றப்பட்டது.

கி.பி. 13ஆம் நூற்றாண்டில் சிவன்கோயில்களில் வடமேற்கு மூலையில் முருகனுக்கென்று கோயில் எழுப்புவது பரவலாக இருந்தது.[52] ஆனால் அட்டபரிவாரத் தேவதைகளில் ஒன்றாகக் காட்டப்படும் இம்மரபு பின்பற்றப்பட்டது, மிக முந்திய காலத்தியதாகும். இரண்டாவது பாண்டியப் பேரரசர்கள் காலக் கல்வெட்டுகளில் முருகப்பெருமானுக்குச் சுப்பிரமணியப்பிள்ளையார், இளைய பிள்ளையார், குன்றமெறிந்த பிள்ளையார் என்ற பெயர்கள் இருந்திருப்பதைக் காணமுடிகின்றது.[53] தேனி மாவட்டத்துக் கம்பம் என்ற ஊரில் இக்காலத்தில் சுப்பிரமணியருக் கெனத் தனிக்கோயில் கட்டப்பட்டது.[54] இக்காலத்தில் கணபதி வழிபாடும் இருந்து வந்துள்ளது. பாண்டியர்களின் குகைக்கோயில்களிலேயே கணபதியைக் காணலாம். திருநெல்வேலிக் கோயில் கல்வெட்டொன்றில் கணபதி பொல்லாப்பிள்ளையார் என அழைக்கப்படுவதைக் காணலாம். சிவன்கோயில்களில் தென்மேற்கு மூலையிலும், அக்கசாலைகளை யொட்டியும் ஊருணிக்கரைகளிலும் கணபதிக்குக் கோயில்கள் எழுப்பப்பட்டு வந்துள்ளன.[55] சிவன்கோயிலின் வடகிழக்கு மூலையில் சேத்திரபாலர் எனப்படும் பைரவருக்குச் சிற்றாலயம் கட்டப்பட்டது. இவர் கல்வெட்டுகளில் வடுகப்பிள்ளையார் என அழைக்கப் படுகின்றார்.[56] சேத்திரபாலர் வழிபாடு தெலுங்கு, கருநாடகம் ஆகிய பகுதியிலிருந்து சோழ நாட்டிற்கு வந்து, அங்கிருந்து பின் பாண்டிய நாட்டிலும் பரவியிருக்க வேண்டும் என்பதே இதற்குக் காரணம் என்ற கருத்து நிலவுகின்றது.[57]

மன்னரும் அதிகாரிகளும் மட்டுமன்றி அரசியரும் சைவ சமய வளர்ச்சியில் இக்காலத்தில் பங்கெடுத்துள்ளனர். திருவக்கரையில் (கி.பி. 1266 - 87இல்) சந்திரமௌலீசுவரர் கோயிலில், விக்கிரமபாண்டியனின் மனைவி ஒரு மண்டபம் கட்டினாள். இதனை அங்குள்ள கல்வெட்டு, ''பெருமாள் விக்கிரம பாண்டியதேவர் நம்பிராட்டியார் உலக முழுதுடையாள் செய்வித்த திருமண்டபம்'' என்று குறிக்கின்றது.[58] இவ்வரசியார் திருவண்ணாமலைக் கோயிலில் ''உலகமுழுதுடையாள் சந்தி''யை ஏற்படுத்தினாள்.[59] சேந்தமங்கலம் பகுதியில் ஒயூர் என்ற கிராமம் இவ்வரசியார் பெயரில் ஏற்படுத்தப்பட்ட சந்திக்காகத் தானமளிக்கப்பட்டது.[60] வீரபாண்டியனின் மனைவி திருவத்தியூரிலுள்ள சிவன்கோயிலுக்குத் தானங்களும், அங்குள்ள நடராசப் பெருமானுக்குப் பொன் ஆபரணங்களும் அளித்துள்ளாள்.[61] இவ்வாறு மன்னரும், அதிகாரிகளும், அரசியரும் சைவ சமயத்தினையும், சாக்த, கௌமார, காணபதீயப் பிரிவுகளையும் போற்றியும் ஆதரித்தும், அரவணைத்தும் வந்துள்ளனர்.

பிற்காலப் பாண்டியர் காலத்தின் இறுதியில் பெரும்பற்றப் புலியூர்நம்பி எழுதிய திருவிளையாடற்புராணம் வெளிவந்துள்ளது. பாண்டியரின் தலைநகரான மதுரையிலும் அதனைச் சார்ந்த இடங்களிலும் சிவபெருமான் நடத்திக் காட்டிய அறுபத்திநான்கு திருவிளையாடல்கள் பற்றி இந்நூல் எடுத்துக் கூறுகின்றது. மேலும் சைவத்திற்குப் பாண்டியமன்னர்கள் அளித்த ஆதரவு இதில் விரிவாகச் சேர்க்கப்பட்டுள்ளது. மெய்கண்டார் எழுதிய சிவஞானபோதமும், அருள்நந்தி சிவாச்சாரியார் எழுதிய சிவஞானசித்தியாரும் பிற்காலப் பாண்டியர் காலத்தில் வெளிவந்துள்ளன.[62] இவை இக்காலத்தில் ஏற்பட்ட சைவ சித்தாந்த வளர்ச்சியைக் காட்டும் அரிய நூல்களாகும்.

## வைணவம்

வைணவ சமயத்தின் திவ்விய தேசங்கள் 108இல், 18 தலங்கள் பாண்டிய நாட்டில் அமைந்துள்ளன. தாமிரபரணிக்கரையில் வைணவ சமய எழுச்சியின் காரணமாக ஒன்பது வைணவக் கோயில்கள் 'நவதிருப்பதி' என்ற பெயரில் இக்காலத்தில் வளர்ந்துள்ளன. தொடக்கக் காலத்திலிருந்தே பாண்டியநாடு, முக்கியமான வைணவப் பிறப்பிடமாயிருந்து வந்துள்ளது. பிற்கால வைணவப் பெரியார்களில் குறிப்பிடத் தக்கவர் பன்னிரெண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த இராமானுசர் ஆவார். சரணாகதி மார்க்கமும், தேவியின் துணையோடு இறையன்பைப் பெறுதலும் இவர்தம் வழிகளாகும். இவர் பாண்டிய நாட்டோடு நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தார். பாண்டிய நாட்டில் திருக்கோட்டியூரில் வாழ்ந்த நம்பிகளிடம் மந்திர உபதேசம் பெற்றார். தானறிந்ததைத் திருக்கோட்டியூர் கோபுரம் ஏறி உலகுக்குத் தெரிவித்தார்.

இவருக்குப் பின்பு பதினான்காம் நூற்றாண்டில் வைணவப் பெரியார்கள் பலர் அங்கு வாழ்ந்து வைணவ சமயக் கருத்துகள் மக்களிடம் செல்வாக்கு பெறத் துணைபுரிந்துள்ளனர். ஆழ்வார்திருநகரியில் வாழ்ந்த திருவாய் மொழிப்பிள்ளை என்பவர் திருக்குருகூரில் இராமானுசருக்குக் கோயில் எடுப்பித்ததோடு, அவரது பக்தர்கள் உறைவதற்காக இராமானுச சதுர்வேதிமங்கலம் என்ற தெருவொன்றையும் உருவாக்கினார்.[63] இவரைத் தொடர்ந்து வந்த மணவாளமாமுனிகள் ''உபதேசரத்தின மாலை'', ''திருவாய்மொழி நூற்றந்தாதி'' ஆகிய பாடல் தொகுதிகளை எழுதினார். முன்னது ஆழ்வார்கள், ஆச்சாரியார்கள் ஆகியோரின் வரலாற்றையும், பின்னது நம்மாழ்வாரது திருவாய்மொழியின் சிறப்பையும் கூறும். இவர் இராமானுசரின் கருத்துகளைத் தமிழகத்தின் பிற இடங்களிலும் பரப்பப் பெரிதும் பாடுபட்டார். தென்கலைப்பிரிவைச் சேர்ந்த வைணவர்கள் இவரை இராமானுசருக்கு அடுத்தபடியாக வைத்து வணங்கலாயினர். இவரது எட்டுச் சீடர்களுள் குறிப்பிடத்தக்கவர் வானமாமலை ஜீயர் ஆவார்.

பாண்டியமன்னர்கள் சைவ சமயத்தினை ஆதரித்தது போன்றே வைணவத்தையும் தொன்றுதொட்டே போற்றி வந்துள்ளனர். ஆழ்வார் களை ஆதரித்ததோடு, அவர்களது உருவச்சிலைகளையும் கோயிலில் வைத்து அவற்றை மக்கள் வழிபட ஏற்பாடுகள் செய்தனர். முதலாம் சடையவர்மன் குலசேகரன் (கி.பி. 1190 - 1216) காலத்தில் திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள மன்னார்கோயில் இராசகோபால சுவாமி கோயிலில், ஆழ்வார்களில் ஒருவரான குலசேகர ஆழ்வாருக்கு தென் மலை மண்டலத்து (கேரளம்) முல்லைப் பள்ளியைச் சேர்ந்த, வாசுதேவன் கேசவன் என்ற செண்டலங்காரதாசன் தனிச்சன்னதி ஒன்றை நிறுவினான்.[63அ] பாண்டிய மன்னர்கள் புதிய வைணவக் கோயில்கள் பலவற்றைக் கட்டினர். பழைய கோயில்களை விரிவுபடுத்தினர். அவற்றுக்கு நிலத்தானங்களும், நிவந்தங்களும் வழங்கினர். இரண்டாம் சடையவர்மன் குலசேகரனின் அதிகாரி காங்கேயன் விருதுராசபயங்கர வளநாட்டின் பகுதியான பெருந்துறை என்ற ஊரில் உள்ள விஷ்ணு கோயிலுக்கு மானியம் அளித்துள்ளான்.[64] மற்றொரு அதிகாரியின் திருத்தங்கல் கல்வெட்டு, அங்குள்ள கோயிலில் சுந்தரபாண்டியன் சந்தி ஏற்படுத்துவதற்காக ஆனையூரில் நிலத்தானம் செய்தான் என்று குறிப்பிடுகின்றது.[65] மாறவர்மன் விக்கிரமபாண்டியன் சடையவர்மன் குலசேகரனின் பிறந்த நாளில் குலசேகரன் சந்தியை நடத்த, ஸ்ரீவரமங்கைக் கோயிலுக்குத் தானம் அளித்தான். தென்திருப்பேரையிலுள்ள விஷ்ணு கோயிலில் முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் பெயரில் நிவந்தங்கள் வழங்கிய காலத்தில் ''ஞான சமுத்திரம்'' என்ற மண்டபம் கட்டப்பட்டதோடு, பூதேவிக்குச் சிலையும் நிறுவப்பட்டது.[66] வரியில்லாத் தேவதானக் கொடை இம்மன்னன்

காலத்தில் ஏராளமாக வழங்கப்பட்டது. சேலூர், மஞ்சைக்குடி ஆகிய ஊர்கள் அழகப்பெருமாள் விஷ்ணு கோயிலுக்குத் தேவதானமாக வழங்கப்பட்டன என்ற செய்தியைப் பொன்னமராவதிக் கல்வெட்டு மூலம் அறியமுடிகின்றது.[67] இவன் காலத்தில் ஜம்புகேசுவரத் தில் எழுநிலைக்கோபுரம் கட்டப்பட்டது.[68] இவனது அதிகாரிகளில் ஒருவனான குருகுலத்தரையன் திருத்தங்கலில் சிவன்கோயில் ஒன்றைக் கி.பி. 1232இல் கட்டினான்.[69] மற்றொரு அதிகாரியான காங்கேயன் என்பான் நெல்வயல் என்ற ஊரில் உள்ள கோயிலுக்கு நிவந்தங்கள் அளித்தான்.[70] உலகுஉய்ய வந்த பெருமாளும் அவனது கோயிலுக்குக் கொடை கொடுத்துள்ளான்.[71] முதலாம் சடையவர்மன் சுந்தரபாண்டியன் திருவரங்கம் (ஸ்ரீரங்கம்) கோயிலில் பலமுறை துலாபாரம் செய்துள்ளான். திருவரங்கநாதர் சன்னதிக்குப் பொன் வேய்ந்தான்.[72] அப்பெருமாளுக்கு விலையுயர்ந்த கற்களோடு கூடிய திருமுடியும், பொன்னாலான சேஷசயன படுக்கையும் (பாம்பணை) செய்வித்தான். நரசிங்கப்பெருமாள் எழுந்தருளியிருக்கும் கருவறையின்மேல் பொன்னாலான விமானம் எடுப்பித்தான். விஷ்வக்ஷேனருக்கு விமானம் எழுப்பினான். பொன்னாலான மகரதோரணம், கருடன் திருமேனி, தங்கத்தேர் ஆகியவற்றையும் செய்தான்.[73] ''சேரனை வென்றான் திருமண்டபம்'' கட்டினான். இதனால் ''ஹேமச்சாதனராசா'' என்ற பட்டம் பெற்றான்.[74] இம்மன்னன், அழகர்கோயிலில், தன் பெயரிலேயே ''கோயில் பொன்வேய்ந்த பெருமாள் மண்டபம்'' என்ற ஒரு மண்டபத்தை அமைத்தான்.[75] திருவைகுண்டத்தில் சுந்தரபாண்டியன் கோபுரம் இவனது காலத்தில் கட்டப்பட்டது.[76] இவனே திருப்பதி வெங்கடேசுவரர் சன்னதி விமானத்தில் பொற்கலசம் அமைத்தான்.[77] இவன் காலத்திலேயே இக்கோயிலில் நம்மாழ்வார்கோயில் விமானமும், திருமண்டபமும், திருச்சுற்றுமாளிகையும் கட்டப்பட்டன.[78]

முதலாம் சடையவர்மன் சுந்தரபாண்டியன் (கி.பி. 1254 - 1283) தனது இரண்டாவது ஆட்சியாண்டில் விரதவகுளத்தில் தங்கியிருந்த போது தேவபிரான்தாதர் எனும் வைணவப் பெரியாரைச் சந்தித்து வாழ்த்து பெற்றான்.[79] இம்மன்னனின் அதிகாரிகளில் ஒருவனான காடுவெட்டி என்ற குணநல்லுலான் திருவலஞ்சுழி உடையான் அழகப் பெருமாள் என்பவன் மன்னனின் உடல்நலம் காக்கும் பொருட்டுத் திருக்கோயிலூர்த் திருவிக்கிரமப் பெருமாள் கோயிலில் இரண்டு நந்தா விளக்கேற்றினான். இதே காரணத்திற்காக அங்கு ஒரு மண்டபமும் கட்டினான்.[80] மாறவர்மன் இரண்டாம் சுந்தரபாண்டியன் தமது 11ஆவது ஆட்சியாண்டில், மாமனான போசளவீரசோமேசுவரனின் வேண்டு கோளின்படி அழகர்கோயிலில் திருமாலிருஞ்சோலை பரமசாமி களுக்குப் பூசை செய்ய நிவந்தம் அளித்தான்.[81] மாறவர்மன் விக்கிரமபாண்டியன் (கி.பி. 1250 - 1276) காலத்தில் அவன் அண்ணன்

பெயரால் ''குலசேகர விண்ணகரம்'' என்ற பெருமாள் கோயில் எடுப்பிக்கப்பட்டதெனத் திருவெண்ணெய்நல்லூர்க் கல்வெட்டு குறிப்பிடுகின்றது.[82] மூன்றாம் சடையவர்மன் வீரபாண்டியன் (கி.பி. 1297 - 1342) ஒரு சிறந்த வைணவ பக்தன். அவன் தன்னைக் 'கலியுகராமன்' என்று அழைத்துக் கொண்டான். திருவரங்கத்திற்கு அருகே கலியுகராமன் சதுர்வேதிமங்கலம் ஒன்றை ஏற்படுத்தி அங்கு வேதம் வல்ல அந்தணர்களைக் குடியேற்றினான். நிலங்களை விற்க நினைக்கும் அந்தணர்கள் தங்களுக்குள்ளேயே விற்றுக்கொள்ள வேண்டும்; இல்லையெனில் இராமானுச தர்சனத்தைப் பின்பற்றும் பாகவதர்களுக்கு விற்கலாம் என்றும் இம்மன்னன் ஆணையிட்டான்.[83] இவன் திருவரங்கம் கோயிலில் ''கலியுகராமன் மதில்'' என்னும் திருச்சுற்றுமதிலைக் கட்டியதாகக் கோயில்ஒழுகு கூறுகின்றது.[84] ஐந்தாம் சடையவர்மன் சுந்தரபாண்டியன் (கி.பி. 1304 - 1319) திருவரங்கத்தில் கோதண்டராமப் பெருமாள் கோயிலையும் இலட்சுமி நாராயணப்பெருமாள் கோயிலையும் கட்டியுள்ளான்.[85]

1322ஆம் ஆண்டைச் சேர்ந்த ஆனைமலைக் கல்வெட்டு (கோவை மாவட்டம்) ஒன்று (சடையவர்மன் ஆறாம் சுந்தரபாண்டியன் காலம்) சுந்தரபெருமாள் வாழ்வித்தான் பல்லவரையன் என்பவன் அம்மன் சிலையைப் பிரதிட்டை செய்து அம்மனுக்குத் திருஅமுதூட்ட ஆண்டுதோறும் 30 கலம் நெல் கிடைக்கவும் வழிவகுத்தான் என்று கூறுகின்றது.[86] மாறவர்மன் குலசேகரன் (13ஆம் நூற்றாண்டு) திருவைகுண்டத்தில் இராமானுசருக்குப் படிமம் அமைத்தான்.[87] ''நாலாயிரவன் திருமண்டபத்தில்'' ஆண்டாளின் திருப்பாவை சேவிக்கப்பட்டு வந்தது. அவ்வூரில் குலசேகரஆழ்வாருக்கெனத் தனியொரு சன்னதியும் அமைக்கப்பட்டது.[88] முதலாம் மாறவர்மன் குலசேகரன் நோயுற்றிருந்தபோது அரசன் உடல்நலம் பெறவேண்டி - ''பெருமாள் திருமேனி கல்யாணத் திருமேனியாக வேண்டுமென்று'' அவனது இரு மகன்களால் நிலத்தானமும் வழங்கிக் கோயிலில் பூசையும், விழாவும், நடத்த வழி செய்யப்பட்டதெனத் தஞ்சைமாவட்டம் அகத்தியன்பள்ளிக் கல்வெட்டு கூறுகின்றது.[89] சடையவர்மன் குலசேகரனின் அரசியார் தரணிமுழுதுடையாள் அழகர்மலையின் சுனைக்கருகில் ஒரு நந்தவனத்தை அமைத்தார்.[90] திருவேந்திபுரத்தில் பெருமாள் கோயிலில் மாறவர்மன் விக்கிரமபாண்டியன் (கி.பி. 1283) பிறந்தநாளிலும், அரியணையேறிய நாளிலும் முறையே ராஜாக்கள் நாயன் சந்தியும், விக்கிரம பாண்டியன் சந்தியும் ஏற்படுத்தப்பட்டன.[91] இவ்வாறு பிற்காலப் பாண்டிய மன்னர்கள் சைவ சமயத்தோடு வைணவ சமயத்தினையும் ஆதரித்து வந்துள்ளனர். திருமயத்தில் சைவ - வைணவ சமயத்தவர்களிடையே பூசல் நடைபெற்றது. இதனால் கோயில் வழிபாடு நின்று போனது. போசளமன்னருடைய படைத்தளபதியின்

தலையீட்டினால் சமரசம் ஏற்பட வழிவகை செய்யப்பட்டதையும் இக்காலச் சமய வரலாற்றில் காணலாம்.[92]

## சைவ - வைணவ மடங்கள்

கோயில்களைப் போன்றே மடங்களும் சைவ - வைணவ சமயங்களின் வளர்ச்சிக்குப் பெருந்தொண்டாற்றி வந்தன. இம்மடங்களின் கொள்கைகளும், வழிபாட்டு முறைகளும் பிற கோயில்களிலிருந்து சிறிது வேறுபட்டிருந்த போதிலும், அரசரும் பிறரும் அவர்களுக்கு ஆதரவும் கொடுத்து வந்தனர். பத்தாம் நூற்றாண்டிலிருந்து சைவ மடங்களைப் பற்றிய கல்வெட்டுகள் பாண்டியநாட்டில் கிடைத்துள்ளன. பெரும்பாலான இடங்களில் மடங்கள் கோயில் ஆட்சியையும் கவனித்தன. பயணிகள் தங்குவதற்கு, மடங்களில் வசதி செய்யப்பட்டது. ஒழுக்கத்தையும் சமய சாத்திர அறிவையும் புகட்ட இம்மடங்கள் பயன்பட்டன.[93] சைவ சமயத்தினரின் உட்பிரிவுகளான பாசுபதர், காபாலிகர், காளாமுகர் போன்றோர் தத்தமக்குரிய மடங்களைப் பெற்றிருந்தனர். இவைதவிர வேறு பல மடங்களும் இருந்து வந்துள்ளன. கொடும்பாளூரிலிருந்த காளாமுக மடத்தின் தலைவராக மதுரை சாத்திரவல்லுநர் மல்லிகார்ஜுனர் விளங்கி வந்தார். இம்மடத்தின் துறவிகளுக்கு அப்பகுதியின் அரசன் பூதிவிக்கிரமகேசரி பதினோரு கிராமங்களைத் தானமாகக் கொடுத்தான்.[94] திருச்சுழிக்கருகில் உள்ள சிவன்கோயில் பகுதியில், ''மாவீரதிகள்'' எனப்படும் காளாமுகர்களின் மடம் ஒன்று இருந்தது.[95] இக்காலத்தில் குற்றாலத்தில் உள்ள சிவன்கோயில் பாசுபத பெருமக்களின் நிருவாகத்தில் இருந்து வந்துள்ளதெனத் தெரிகின்றது.[96] கி.பி. 11-12ஆம் நூற்றாண்டுகளைச் சேர்ந்த சைவமடங்கள் அம்பாசமுத்திரம், தென்கரை, சிவபுரி, மதுரை ஆகிய இடங்களில் இருந்துள்ளன.[97] கி.பி. 13ஆம் நூற்றாண்டிலும் ஏராளமான சைவமடங்கள் இருந்துள்ளன. முதலாம் மாறவர்மன் குலசேகரன் காலத்தில் திருவானைக் கோயிலருகில் திருக்கொடுங் குன்றத்து முதலியார்மடம் ஒன்றிருந்துள்ளது.[98] கி.பி. 13ஆம் நூற்றாண்டில் (வீரபாண்டியனின் 10ஆம் ஆண்டில்) சேலத்தில் கிளிவன்னமுடைய நாயனார் கோயிலில் மகேசுவரர்மடம் உருவாக்கப் பட்டது.[99] முதலாம் சடையவர்மன் சுந்தரபாண்டியன் காலத்தில் திருவேந்திபுரத்தில் இரண்டாயிரவன் மடத்திற்கு மடப்புற இறையிலி நிலம் வழங்கப்பட்டது.[100] புதுக்கோட்டைக்கருகே குடுமியான்மலையில், மேலைக்கோயில் மலைமங்கை அம்மன்கோயில் கல்வெட்டு ஒன்று அவ்வூர் நாற்பத்தெண்ணாயிரவன் திருமடத்திற்கு மடப்புறமாக நிலம் தானம் கொடுத்த செய்தியைத் தெரிவிக்கின்றது.[101] தஞ்சை மாவட்டம் அகத்தியான்பள்ளி என்ற ஊரில், முதலாம் மாறவர்மன் குலசேகரன் காலத்தில், அகத்தியதேவர் திருமடத்தில் மகேசுவரிப் பூசைக்காக கௌதமன் ஆண்டான் குன்றமேறிந்தான் என்பவனால் 150 பணம்

தானமாகக் கொடுக்கப்பட்டது.[102] திருத்துறைப்பூண்டிக்கருகே களப்பால் என்ற இடத்தில் மாறவர்மன் குலசேகரனின் 34ஆவது ஆண்டுக் காலத்தில் கோமடம் என்று ஒன்றிருந்திருக்கின்றது.[103] சைவப் பிரிவுகளில் ஒன்றான காளாமுகர்கள் வடஇந்தியாவிலும், தக்காணத்திலும் பரவிப் பல மடங்களை நிறுவினர். அவற்றுள் ஒன்றான இக்கோமடத்துத் துறவிகளில் குறிப்பிடத்தக்கவர்கள் சைராசி, ஞானராசி என்பவர்களாவர். இவர்கள் செங்கல்பட்டை அடுத்துள்ள களத்தூர்கோவில், ஆலக்கோயில் ஆகியவற்றிற்கு அருகே மடங்களை அமைத்திருந்தனர்.[104]

சைவ சமய மடங்களிலேயே குறிப்பிடத்தக்க வளர்ச்சி பெற்றது கோளகிமடமாகும். இம்மடத்தினர் பாசுபதம், லகுலீச பாசுபதம், காளாமுகம் என்னும் சைவப்பிரிவுகளைச் சேர்ந்தவர்களாவர். கோளகிமடம் நூற்றுக்கணக்கான துறவிகளுக்குப் பாடம் கற்பித்து வந்தது. கி.பி.13ஆம் நூற்றாண்டில் தென்னாட்டில் இருந்த மடங்களின் ஆசாரியார்கள் பலர், சந்தானங்களைச் சேர்ந்தவராவர்.[105] அம்பா சமுத்திரத்திற்கு அருகே உள்ள திருவாலீசுவரத்தில் புலிப்பெருமாள், அகோதரதேவர் என்னும் துறவிகள் இருந்தனர். அவர்கள் ஞானாமிர்த சந்தானத்தைச் சேர்ந்தவராவர்.[106] திருச்செந்தூர் வட்டத்திலுள்ள ஆத்தூரில் கி.பி. 1250இல் கோளகிமடம் ஒன்றிருந்தது. அவ்வூர்க் கோயிலில் திருஞானத்தைப் பாடத் தென்னிந்திய மடங்களிலிருந்த பதினொரு சீடர்கள் நியமனம் பெற்றிருந்தனர்.[107] திருநெல்வேலி நெல்லையப்பர் திருக்கோயிலில் பதினோரு துறவிகள் நாள்தோறும் திருஞானத்தைப் பாடக் கட்டளை வழங்கப்பட்டிருந்தது.[108] இப்பதினொரு பேரும் விஷகண்ட தேவசந்தான மடம் பட்டவீர சந்தானம், திருவாரூர் மடம், பிட்சமடம், மதுரைமடம், அழகிய நாயக சந்தானம் ஆகிய மடங்களைச் சேர்ந்த துறவிகள் ஆவர்.[109] 13ஆம் நூற்றாண்டின் மத்தியில் பிட்சமடம் ஒன்று திருப்பத்தூர்க் கோயிலின் கீழத்தெருவில் இருந்ததெனத் தெரிகின்றது. இதன் தலைவராகச் சர்வேச்சுரர் என்பார் இருந்து வந்தார். இது சைவசித்தாந்தப் பிரிவைச் சார்ந்ததாக இருந்திருக்க வேண்டும் என்று கே.வி. இராமன் கருதுகின்றார்.[110] கோளகிமடத்தினைச் சார்ந்த பிட்சமடம் ஒன்று 16ஆம் நூற்றாண்டில் சில கோயில்களைத் தன் கட்டுப்பாட்டில் வைத்திருந்த தெனக் கல்வெட்டு மூலம் அறிய முடிகின்றது.[111] பிட்சமடத்தைக் கோளகிமடத்தைச் சேர்ந்த ஒன்றாகவே கருதலாம் என்று மா. இராச மாணிக்கனார் கூறுகின்றார்.[112] முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியனின் மற்றொரு அதிகாரியான திருக்கானப் பேருடையான் மாளவசக்கரவர்த்தி திருப்பத்தூர்க் கோயிலில் திருஞான சம்பந்தர் திருமடத்தில் வசித்து வந்த சைவ ஆச்சாரியர் ஸ்ரீகாந்தசிவம் என்பாருக்குத் தானம் அளித்துள்ளான். இவன் திருவாரூர் தட்சிணகோளகி மடத்திலிருந்து குடிபெயர்ந்து வந்து கருங்குளம் நல்லபெருமாள் மடத்தில் தங்கியிருந்த ஈசானதேவருக்கும்

அவரது சீடர்களுக்கும் உணவளிக்க வகைசெய்தான்.[113] திருப்பத்தூரில் திருத்தொண்டத் தொகையான் திருமடம் என்ற ஒன்றும்,[114] திருஞான சம்பந்தன் திருமடம் என்ற ஒன்றும் இருந்ததாகத் தெரிகின்றது.[115] அக்காலத்தில் திருப்பத்தூர் மிகச்சிறந்த சைவத்தலங்களுள் ஒன்றாயிருந் திருக்கவேண்டும் என்பது இதன் மூலம் புலப்படுகின்றது.

மதுரைக்கருகே அமைந்துள்ள இடைக்காட்டூர் என்னும் சிற்றூரில் திருவாரூர் கீழைமடம் என்ற பெயரில் சைவமடம் ஒன்றிருந்திருக்கின்றது. காளையார் கோயிலில் இருந்த திருவாரூர் தட்சிணகோளகி மடத்திற்கு இடைக்காட்டூரில் நிலமளிக்கப்பட்டிருக்கின்றது.[116] இரண்டாம் சடையவர்மன் குலசேகரன் மதுரை திருஞானசம்பந்தர் மடத்திற்கு மானியம் வழங்கினான். அவனது ஆசிரியர் தத்புருசசிவம் திருவாரூர் தட்சிணகோளகிமடத்தில் வசித்தார்.[117] இம்மன்னன் தான்பிறந்த விசாக நட்சத்திரத்தில் திருநெல்வேலி நெல்லையப்பர் கோயிலில் தவறாமல் பூசை நடத்த வேண்டி நிலமளித்தான்.[118] இராமேசுவரத்தில் இரண்டாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் காலத்தில் சுந்தரபாண்டியன் மடம் ஒன்று இருந்தது. இம்மடத்துறவிகளுக்கு உணவளிக்கக் கொடுக்கப்பட்ட நிலத்திற்கு வரி கொடுக்கப்பட்டது.[119] இவன் காலத்தில் திருநெல்வேலித் தெற்குத் தெருவில் இவனது அத்தையின் பேரில் ''செய்யநம்பிராட்டி மடம்'' என்ற மடம் இருந்தது. இம்மன்னன் அங்கிருந்த முப்பத்தி எட்டு தேசாந்திரிகளுக்கும், புலவர்களுக்கும், மற்றும் கோயில் சேவகர் களுக்கும் உணவளிக்க ஏராளமான நிலங்களை அளித்தான்.[120] திருநெல்வேலி கோயில் கல்தச்சர்கள் திருவலஞ்சுழி உடையார் என்னும் தானபதிமுதலியாருக்குத் தங்கள் வருமானத்தில் பத்தில் ஒரு பங்கு வழங்குவதாகவும், அதில் ஆறில் ஒரு பகுதியை இம்மடத்துக்கு முதலியார் வழங்குவதாகவும் முடிவானது.[121] குகை என்னும் ஒருவகை மடம் சிவன்கோயிலைச் சார்ந்து இக்காலத்தில் தோற்றுவிக்கப்பட்டது.[122]

சைவமடங்களைப் போன்றே வைணவ மடங்களும் சமயத் தொண்டாற்றின. சுந்தரபாண்டிய பெருமாளின் (முதலாம் சடையவர்மன் சுந்தரபாண்டியன்) நன்மைக்காகத் துஞ்சலூர் பல்லவராயன் என்பவனால் நடுவிற்கூற்றத்தில் சுந்தரபாண்டியன் மடம் ஒன்று ஏற்படுத்தப்பட்ட தெனத் திருவரங்கம் மணவாளமடத்தில் உள்ள கல்வெட்டு கூறுகின்றது. இம்மடம் திரிதண்டி சந்நியாசிகளுக்கென அமைக்கப்பட்டது.[123] திருவரங்கம் வடக்குச் சித்திரை வீதியில் உள்ள சிதைந்த கல்வெட் டொன்று பாண்டியர்களின் மீன் இலச்சினைகளைக் காட்டுவதோடு சுந்தரபாண்டியன் என்ற பெயரையும் மடத்தையும் குறிப்பிடுகின்றது. இங்குச் சங்கும் சக்கரமும் காட்டப்பட்டுள்ளன.[124]

இவைதவிர வைணவ மடங்களில் குறிப்பிடத்தக்கவை ஆந்திராவில் உள்ள அகோபிலத்தைத் தலைமையிடமாகக் கொண்ட அகோபிலமடமும், திருநெல்வேலிப் பகுதியில் உள்ள வானமாமலை

மடமும் ஆகும். பாண்டியநாட்டு வைணவ மடத்துறவிகள் 'ஜீயர்' என்று சொல்லப்படும் திரிதண்டி துறவிகள் ஆவர். இவர்கள் இராமானுசர் கொள்கைப்படி கோயில் பூசைகளை நடத்தவும், சமயக்கொள்கைகளைப் பரப்பவும் ஆங்காங்குச் செயற்பட்டு வந்தனர் என்று தெரிகின்றது.[125] பதின்மூன்றாம் நூற்றாண்டில் அழகர்கோயிலில், நாராயணன்மடம், வாணாதிராயன் மடம், திருநாடுடையார்மடம், குலசேகரமடம் ஆகியவை இருந்தன.[126] திருநாடுடையார் மடத்தில் திரிதண்டி சந்நியாசி களுக்கும் ஏகாங்கி வைணவர்களுக்கும் உணவளிக்கப்பட்டது.[127] திருக்குறுங்குடி திருமங்கைமடத்தில் திரிதண்டி துறவிகள் தங்கியிருந்து சமயத் தொண்டாற்றியுள்ளனர்.[128] பதின்மூன்றாம் நூற்றாண்டில் திருநகரியில் அருளாளதாசன் மடம் ஒன்று இருந்துள்ளது.[129] இதனை நிறுவியவர் திருக்குருகூர் மாமுனிகள் என்று கூறப்படுகின்றது. சேரமாதேவியில் அப்பன் கோயிலுக்கருகே முடிவழங்குபெருமாள்மடம் ஒன்றிருந்துள்ளது.[130] பாண்டியநாட்டு வைணவமடங்களில் ஸ்ரீவைணவர் களுக்கும், திரிதண்டி சந்நியாசிகளுக்கும் உணவு வழங்கப் பட்டதோடு, சமயக்கொள்கை, வேதம், இதிகாசபுராணங்கள், பிற வைணவ இலக்கியங்கள் ஆகியவை கற்பிக்கப்பட்டன.[131]

சில மடங்களுக்குத் தேவரடியார்கள் அர்ப்பணிக்கப்பட்டதாகத் தெரிகின்றது. மடத்தில் வாழ்ந்த துறவிகள் தங்கள் தெய்வங்களுக்கு விருந்து வைத்து விழா எடுத்த சமயத்தில் தேவரடியார்களை வரவழைத்து நடனமாடச் செய்தனர் என்று மார்க்கோபோலோ குறிப்பிடுகின்றார். மடங்களிலும் கோயில்களிலும் ''சரசுவதி பண்டாரம்'' என்னும் நூலகங்கள் இருந்து வந்தன. சிதம்பரத்திலும் சேரன்மாதேவியிலும் செயற்பட்ட இவ்வகை நூலகங்களில் வேதமும் புராணமும் கற்றுக் கொடுக்கப்பட்டன.[132]

## சிறுதெய்வ வழிபாடு

வைதீகப் பிரிவுகளான சைவ, வைணவ, சாக்த, கௌமார, காணபதிய சமயங்களைத் தவிர, கிராமப்புறங்களில் சிறுதெய்வ வழிபாடுகளும் நடத்தப்பட்டன. சிலவேளைகளில் இந்நாட்டுப்புற அல்லது கிராமத் தெய்வங்களுக்குச் செப்புத்திருமேனிகள் அமைத்து வழிபாடு நடத்தப்பட்டது.[133] பெருந்தெய்வ வழிபாட்டுக்கு அளிக்கப் பெற்ற நிலத்தானங்களுக்குக் கல்வெட்டுகளில் எல்லை குறிப்பிடும்போது இச்சிறுதெய்வங்களுக்கான நிலங்களும் குறிப்பிடப்பட்டிருப்பதைக் காணலாம். கல்வெட்டுகளில் வடவாயில் அமர்ந்தாள், பிடாரி, துர்க்கை, அய்யனார் முதலிய தெய்வங்களின் கோயில்கள் இடம் பெற்றுள்ளன. கிராமங்களில் பெண் தெய்வவழிபாடே பெருமளவில் நடத்தப் பட்டுள்ளது.[134] ஊரின் வடஎல்லையில் காளிகோயில் அமைத்து வழிபடப்பட்டது. வடக்கில் இருந்த அம்மன் 'வடவாயில் அமர்ந்தாள்'

என்று அழைக்கப்பட்டாள். திருநெல்வேலி நெல்லையப்பர் கோயிலின் வடபகுதியிலுள்ள பூந்தோட்டத்தில் பதின்மூன்றாம் நூற்றாண்டில் ஒரு காளிகோயில் இருந்துள்ளது.[135] ஊரின் எல்லைக் காவல்தெய்வமாகப் படாரி அல்லது பிடாரி எனப்படும் பெண் தெய்வம் வழிபடப்பட்டது. பன்னிரெண்டாம் நூற்றாண்டுக்குப்பின் இத்தெய்வம் பகவதியம்மன் வழிபாட்டோடு தொடர்புபடுத்தப்பட்டது.[136] பதின்மூன்றாம் நூற்றாண்டில், பாண்டியநாட்டில், திருக்கோளக்குடியிலிருந்த பிடாரி, அழகிய நாச்சியார் என்றழைக்கப்பட்டாள்.[137] சடையவர்மன் வீரபாண்டியனின் கல்வெட்டு, இரணியூர் பத்திரகாளியம்மன் கோயிலிலிருந்த பெண் தெய்வத்தைப் பிடாரியார் பத்திரகாளியம்மன் என்ற காளியோடு தொடர்புபடுத்துகின்றது.[138]

பதின்மூன்றாம் நூற்றாண்டில் திருக்கோட்டியூரில் துர்க்கை, பிடாரியோடு தொடர்புபடுத்தப்பட்டு, துர்க்காபிடாரி என்று வழிபடப்பட்டிருக்கின்றாள்.[139] ஊருக்கு வெளியே நீர்நிலைகளைக் காக்கும் தெய்வமாக அய்யனார் வழிபடப்பட்டுள்ளதைக் காணலாம். இரண்டாவது பாண்டியப் பேரரசுக் காலத்தில் 'அய்யன்பாத்தி', 'அய்யன் சுவந்திரம்', 'அய்யன்போகம்' என்று அய்யனார் கோயிலுக்கு நிலக்கொடையளிக்கப்பட்டது.[140]

சிறுதெய்வவழிபாட்டோடு நடுகல் வழிபாடும் இக்காலத்தில் இருந்து வந்துள்ளது. ஆனால் பாண்டிய நாட்டில் தமிழகத்தின் மற்றப் பகுதிகளோடு ஒப்பிடும்போது இவ்வழிபாடு மிகக் குறைவாகவே இருந்திருக்க வேண்டும். நவகண்டம் என்னும் மரபு, தொண்டை நாட்டில் ''தூங்குதலை நோற்றல்'' என்ற பெயரில் வழங்கி வந்தது. ஏதேனும் ஒரு நன்மைக்காகத் தன் தலையை வெட்டிப் படைக்கும் முறையே இவ்வாறு வழக்கிலிருந்தது. மூன்றாம் மாறவர்மன் சுந்தரபாண்டியனின் அரகண்டநல்லூர்க் கல்வெட்டு, மண்டபம் ஒன்று கட்டிமுடிக்கப்பட்டு விட்டதால் அதற்காக வேண்டிக்கொண்டபடி ஒரு கோயில் பணியாள் தன் தலையைத் தானே அரிந்து கொண்டு இறந்து போனான் என்றும் அவன் நினைவாக ஆயிரம் குழி நிலங்கள் உதிரப்பட்டியாக அவனது குடும்பத்தாருக்கு வழங்கப்பட்டதென்றும் தெரிவிக்கின்றது.[141]

## சமணம்

சங்ககாலத்திலிருந்தே தமிழ்நாட்டில் சமணர்கள் வாழ்ந்துள்ளனர். மதுரையைச் சுற்றியும், பிற இடங்களிலும் அவர்களின் குகைகளும், பாறைப்படுக்கைகளும், கல்வெட்டுகளும், சிற்பங்களும் காணக்கிடைக்கின்றன. இடைக்காலத்தில் சைவ, வைணவ வளர்ச்சியின் காரணமாகச் சமணர்கள் தடைப்படுத்தப்பட்டனர். பின்பு 8, 9, 10ஆம் நூற்றாண்டு களில் அவர்கள் பெருஞ்செல்வாக்குப் பெற்றுத் திகழ்ந்த நிலையை அவர்களது குகைகளின் மூலம் தெரிந்து கொள்ள முடிகின்றது. மதுரைக்கு

அருகில் உள்ள சமணர்மலை, 12ஆம் நூற்றாண்டில்கூட சமணர்தம் முக்கிய இருப்பிடமாக இருந்துள்ளது. இக்காலத்தில் சிரவணபெள கோலாவிலிருந்து வந்த ஆரியதேவர், பாலச்சந்திரதேவர் போன்ற துறவிகள் சமணர் மலையில் உண்ணாநோன்பிருந்து உயிர் துறந்துள்ளனர் என்று தெரிகின்றது.[142] அஜிதசேனதேவர், நேமிதேவர், கோவர்த்தன தேவர் போன்ற துறவிகளும் இங்குத் தங்கியிருந்தனர்.[143] சமணரின் செல்வாக்கு முற்காலத்திலிருந்தே கொற்கையில் ஓங்கியிருந்தது. இவ்வூரின் நடுவில் கிடைத்துள்ள தீர்த்தங்கரரின் சிற்பம் 12ஆம் நூற்றாண்டைச் சேர்ந்ததெனத் தெரிகின்றது. முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் காலத்தில், புதுக்கோட்டை மாவட்டம் அம்பாச்சத்திரம் கல்வெட்டில்,பெரியபள்ளி வயலில் நாயனார் திருமானைமலை ஆழ்வார்பள்ளிச்சந்தம் என்ற குறிப்பு காணப்படுகிறது. முதலாம் சடையவர்மன் சுந்தரபாண்டியன் சமணப்பள்ளிகளுக்கு நிவந்தங்கள் வழங்கினான் என்று கல்வெட்டுகள் கூறுகின்றன.[144] மாங்காட்டில் உள்ள கல்வெட்டு இதற்கு முக்கிய ஆதாரமாகும்.[145] புதுக்கோட்டைக் கல்வெட்டு சுந்தரபாண்டியன் பெயரையும், சமணத்துறவிகளான தருமதேவ ஆச்சாரியாரையும், கனககசுந்தரபண்டிதரையும் குறிப்பிடுகின்றது.[146] முதலாம் சடையவர்மன் சுந்தரபாண்டியன் வழியில் வந்தோர் வைதீக சமயத்தோராயினும் சமணசமயத்தை ஆதரிக்கத் தவறவில்லை. இவர்கள் திருநறுங்கொண்டை, பொன்னூர், ஓதலவாடி, திருமலை முதலிய தலங்களிலுள்ள சமணக் கோயில்களுக்கு ஏதாவது ஒருவகையில் தானங்கள் அல்லது பிற அறப்பணிகள் செய்துள்ளனர்.[147] ஓதலப்பாடியில் உள்ள சமணர்கோயிலுக்குத் திரிபுவனச் சக்கரவர்த்தி குலசேகர பாண்டியன் (கி.பி. 1271) காலத்தில் ஓதலன் சோழன் மூர்த்தி ஆழ்வார் என்பவனால் வரிவிலக்குப் பெற்ற நிலம் நிவந்தமாக வழங்கப்பட்டது.[148] இப்பகுதியைச் சேர்ந்த பொன்னூர்க் (இன்று சொர்ணபுரம்) கல்வெட்டொன்று மாறவர்மன் விக்கிரமபாண்டியன் காலத்தில் (கி.பி. 1298) விடால்பற்று நாட்டவர் ஆதிநாதர் கோயிலைப் புதுப்பிக்கச் செய்த அறப்பணியைக் குறிப்பிடுகின்றது.[149] திருநறுங்கொண்டை நாற்பத்தெண்ணாயிரம் பெரும்பள்ளியில் மாறவர்மன் விக்கிரமபாண்டியன் தனது பிறந்த நாளான தைத் திருநாளில் ''இராஜாக்கள் நாயன் திருவிழா'' நடத்த இறையிலியாக நிலம் வழங்கினான்.[150] ஏறக்குறைய இதற்குச் சற்று முன்பு இளையாங்குடியில் இருந்த நாற்பத்தெண்ணாயிரம் பெரும் பள்ளிக்குப் பள்ளிச்சந்தநிலங்கள் வழங்கப்பட்டன.[151] இங்குள்ள சிவன்கோயிலின் முன் தீர்த்தங்கரர் சிற்பம் ஒன்று வைக்கப்பட்டுள்ளது. இது முற்கூறப்பட்ட பள்ளியைச் சேர்ந்ததாயிருக்கலாம். அருப்புக்கோட்டைக்கருகே தொப்புலாக் கரையில் ''விற்பொறிவீரப்பெரும்பள்ளி'' என்ற சமணப்பள்ளி இருந்துள்ளது. முதலாம் மாறவர்மன் குலசேகரன் காலத்தில்

இப்பள்ளிக்கு நிலத்தானம் அளிக்கப்பட்டுள்ளது. தீர்த்தங்கரர் சிற்பங்களும் இவ்வூர்க்குளக்கரையில் காணப்படுகின்றன.[152] நாகர் கோயில் நாகராசர் சன்னதி பதினைந்தாம் நூற்றாண்டு முடியச் சமணப் பள்ளியாகவும் சமண வழிபாட்டுத் தலமாகவும் இருந்து வந்துள்ளது. மதுரையில் 12-13ஆம் நூற்றாண்டுகளில் சீவலப்பெரும்பள்ளி ஒன்று இருந்தது. இதற்குப் பள்ளிச்சந்தமாக அணைப்பட்டிக்கு அருகில் இன்றுள்ள சித்தர்கள் நத்தம் (அக்காலத்தில் தேவேந்திரவல்லபபுரம்) என்ற ஊர் வழங்கப்பட்டிருந்தது.[153] இக்காலத்தில் திருவைகுண்டத்தில் நிகராகரப்பெரும்பள்ளி ஒன்றிற்கு நிலத்தானம் வழங்கப்பட்டது.[154] பாண்டியநாட்டில் சிறப்புடன் இருந்த இச்சமணப் பள்ளிகளில் சமணத்துறவிகள் வாழ்ந்ததோடு, அங்குத் தீர்த்தங்கரருக்கும், இயக்கிகளுக்கும் உருவங்கள் அமைக்கப்பட்டு வழிபாடு செய்யப்பட்டது. திருவமுது படைக்கப்பட்டது. வைதீகக் கோயில்களைப் போன்று அங்கும் திருவிளக்குகள் எரிக்கப்பட்டன. சமணப்பள்ளிகள் பெரும்பாலும் வணிகவழிகளில் அமைந்திருந்தன. வரும் பயணிகளுக்குத் தாகம் தீர்க்கத் தண்ணீர்ப்பந்தல்கள் அவர்களால் நடத்தப்பட்டன. இச் சமணப் பள்ளிகளுக்கும், சமணத்துறவிகளுக்கும் மன்னரும், மற்றோரும், கிராமத்தாரும் ஆதரவளித்ததோடு பாதுகாப்பும் நல்கியுள்ளனர்.

## பௌத்தம்

பாண்டிய நாட்டில் பத்தாம் நூற்றாண்டுக்குப்பின்னர், பௌத்தசமயத் தொடர்பான இலக்கியங்களும் கல்வெட்டுகளும் கிடைக்கப் பெறவில்லை.[155] இருப்பினும் கடற்கரையோரங்களில் பிற்காலப்பாண்டியர் காலத்தைச் சேர்ந்த பௌத்தச் சிற்பங்கள் கிடைத்துள்ளமை அங்குப் பௌத்த சமயம் வழக்கிலிருந்ததை நமக்கு எடுத்துக் காட்டுகின்றது. இராமநாதபுரத்திற்கு அருகில் மணிகண்டி என்னும் ஊரில் கிடைத்த புத்தர் கற்சிலை சென்னை அருங்காட்சியகத்தில் வைக்கப்பட்டுள்ளது. இச்சிலை கி.பி. 14ஆம் நூற்றாண்டினைச் சேர்ந்ததென அறியப்பட்டுள்ளது.[156] இராமேசுவரம் தீவில் அரியாங் குன்று என்ற பகுதியில் பெரும்பௌத்தப் பள்ளி இருந்திருக்க வேண்டும். அழிந்துபோன அப்பள்ளியிலிருந்த சில செப்புத்திருமேனிகளும் புத்தரின் கற்சிற்பமும் தமிழ்நாடு அரசுத் தொல்லியல் துறையால் கண்டெடுக்கப்பட்டுள்ளன. தர்மகீர்த்தி என்ற பௌத்தப் பெரியார் 13ஆம் நூற்றாண்டில் பாண்டிய நாட்டில் வாழ்ந்துள்ளார். இவர் இலங்கை மன்னன் பராக்கிரமபாகு (கி.பி. 1263 - 68) இலங்கையில் கூட்டிய பௌத்த மாநாட்டில் கலந்து கொண்டுள்ளார்.[157] எனினும், வைதீக சமயப் பிரிவுகளைப் போன்றோ, சமணத்தைப் போன்றோ இக்காலத்தில் பௌத்தம் ஆதரிக்கப் பெறவில்லை.

## இசுலாமிய சமயம்

பிற்காலப் பாண்டியர்காலத்தில் மாலிக்காபூர் படையெடுப்பு வரை இசுலாமிய சமயம் ஆதரிக்கப்பட்டு வந்ததெனத் தெரிகின்றது. பாண்டியருடைய படையில் 'ராகுத்தர்' என்றழைக்கப்பட்ட குதிரைப்படை வீரர்கள் இருந்துள்ளனர். இவர்கள் சைவ,வைணவக் கோயில்களுக்குக் கொடையளித்துள்ளனர். அழகர் கோயிலுக்கு, மகாபிரதானியாக விளங்கிய ராகுத்தராயன் மச்சப்பதண்ட நாயகனான பின் சென்ற வில்லிதாசன் கொடை வழங்கியிருக்கிறான்.[158] பாண்டிய மன்னர்களும் இச்சமயத்திற்கு ஆதரவு அளித்துள்ளனர். சான்றாக இரண்டாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் காலத்தில் திருப்புல்லாணிக்கு அருகில், பெரியபட்டினத்தில் (பவித்திரமாணிக்கப்பட்டினம்) இருந்த பள்ளிவாசல் ஒன்றிற்குத் திருப்பணிக்காக ஆம்பத்தூர், மருதூர் முதலிய ஊர்களில் உள்ள நிலங்கள் இறையிலியாகக் கொடுக்கப்பட்டன.[159] திருநெல்வேலி மாவட்டம் கரிசூழ்ந்த மங்கலத்தில் உள்ள வெங்கடா சலபதி கோயில் கல்வெட்டொன்று மாறவர்மன் குலசேகரனின் (கி.பி.1263-1318) 29ஆவது ஆட்சியாண்டில் இக்கோயில் கலிசராகுத்தரின் மைந்தன் பித்தூசிராகுத்தரால் புதுப்பிக்கப்பட்ட தெனவும் திருத்திக் கட்டப்பட்டதெனவும் கூறுகின்றது.[160]

## முடிவுரை

இரண்டாவது பாண்டியப் பேரரசுக் காலத்தில் சைவ, வைணவ சமய வழிபாடுகளும் சக்தி வழிபாடும் போற்றப்பட்டன. பொதுமக்களால் சிறுதெய்வ வழிபாட்டிற்கும் ஊக்கமும் ஆதரவும் அளிக்கப்பட்டது. காளிகோயிலுக்கு நவகண்டம் அளிக்கும் மரபும் ஆங்காங்கே வழக்கில் இருந்துள்ளது. நடுகல் வழிபாடு அவ்வளவாகப் பெருகவில்லை. ஆனால், அது தொடர்ந்து வழக்கில் இருந்தது.

சமண சமயமும் பௌத்த சமயமும் ஓரளவு வளர்ச்சியடைந்தன. பௌத்த சமயத்தைவிடச் சமண சமயம் வளர்ந்தோங்கியிருந்தது. இதனை முதலாம் சடையவர்மன் சுந்தரபாண்டியனும் அவனுக்குப்பின் வந்த மன்னர்களும் சமணப்பள்ளிகளுக்கும் கோயில்களுக்கும் செய்த அறப்பணிகள் மூலம் அறியலாம். எனினும் சைவ, வைணவ எழுச்சியினால் சமண சமயத்திற்கு மன்னர்கள் அளித்துவந்த ஆதரவு படிப்படியாகக் குறையலாயிற்று. இதனால் சமணமும் பௌத்தமும் செல்வாக்கிழக்கத் தொடங்கின. நாட்டில் சமயப்பொறை குறைந்தது. அருகருகே கோயில்களைப் பெற்றிருந்த சைவர்களும் வைணவர்களும் தங்களுக்குள் முரண்பட்டனர். கோயிலில் வழிபாடு நிற்கும் அளவிற்குத் திருமயம் போன்ற இடங்களில் சமயப்பூசல் நடைபெற்றுள்ளது. திருப்பரங்குன்றம் மலையின் பின்புறமிருந்த பழைமையான சமணக் குடைவரைக் கோயில், முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் பெயரால்

சைவக்கோயிலாகச் சைவத்துறவி ஒருவரால் மாற்றப்பட்டிருப்பது, சைவம் சமணத்தோடு பூசல் செய்து வெற்றி கண்டதைக் காட்டுகிறது.

அரசரும் அரசியரும் அமைச்சரும் அதிகாரிகளும் போற்றிவந்த சைவ, வைணவக் கோயில்களில் சமய இலக்கியங்கள் அல்லது பாடல்கள் படிக்கப்பட்டன. மக்களுக்கு அவற்றின் தன்மையைப் புரிய வைக்க ஏற்பாடு செய்யப்பட்டது. கோயில்களில் அதிக அளவில் திருவிழாக்கள், சடங்குகள், பூசைகள் ஆகியவை நடத்தி இறைவனையும் மக்களையும் மகிழ்வித்தனர். மன்னர்கள் பிறந்தநாளில் கோயில்களில் சிறப்பு வழிபாடு அவர்கள் பெயரால் நடைபெற்றது. அவர்களது வெற்றியைக் கொண்டாடும் வகையில் திருவிழாக்கள் நடத்தப்பெற்றன. பொதுவாகக் கோயில்கள் மேற்கொண்ட அனைத்து வகை வழிபாட்டிற்கும் நிலங்கள் அதிக அளவில் தானமளிக்கப்பட்டன. நிலவுடைமை ஆட்சியுடன் விளங்கிய கோயில்கள் பலருக்கு வேலைவாய்ப்பு அளிக்கும் நிறுவனங்களாகவும் விளங்கியுள்ளன. மன்னரும் மற்றவர்களும் நோய்வாய்ப்பட்டிருந்தபோது அவர்கள் பெயரில் கோயில்களில் அர்ச்சனை செய்யவும் நந்தாவிளக்குகள் எரிக்கவும் ஏற்பாடு செய்யப்பட்டது.

பாண்டியர் காலத்தில் அவர்களது தலைநகரமும் அதனைச் சார்ந்த பகுதிகளும் சமய முக்கியத்துவம் வாய்ந்த பகுதிகளாக மாறின. இதனைக் காட்டும் வகையில் பெரும்பற்றப்புலியூர் நம்பி திருவிளையாடல் புராணம் இக்காலத்தின் இறுதியில் தோன்றியுள்ளது. சோழர்களை வென்று தம் சுதந்திரத்தினை நிலைநாட்டிய பாண்டியர்கள், நடராசப் பெருமான் மதுரையில் பாண்டியன் வேண்டுதலுக்கு இணங்கக் கால்மாறி யாடினார் என்ற கருத்தைத் தெரிவிக்கும் வகையில், வலக்காலையூன்றி நடனமிடும் நடராசர் படிவத்திற்கு மதுரைக்கோயிலில் சிற்றாலயம் அமைத்தனர். சோழரினும் மேலாகச் சிவனது அன்பைப் பெற்றவர்கள் பாண்டியர்கள் என்பதை உணர்த்தவே இவ்வாறு செய்திருக்க வேண்டும்.

சமய நிறுவனங்களாக விளங்கிய கோயில்கள் மக்களது வாழ்வில் பிரிக்கமுடியாத அங்கமாகி, அவர்கள் சமயவாழ்வு நடத்த வழிகோலியது எனலாம். மக்கள் வாழ்வோடு பல்வகையிலும் தொடர்புடைய இடமாகக் கோயில்கள் விளங்கின. கோயில் நிலங்களிலிருந்து வந்த தானியங்கள் பாதுகாக்கப்பட்டன. பஞ்சக்காலங்களில் பட்டினியால் வாடிய மக்களுக்கு உணவளிக்கும் அன்னதானச் சத்திரங்களாகக் கோயில்கள் இருந்தன. வழிப்போக்கர்களாக வரும் தேசாந்திரிகளுக்கும் இங்கு உணவளிக்கப்பட்டது. பொதுமக்களுக்குத் துன்பக் காலங்களில் உதவும் கடன்வங்கியாகவும் கோயில்கள் செயற்பட்டன. இதற்கு இளையான்குடிக் கல்வெட்டு ஓர் எடுத்துக்காட்டாகும். அவ்வூர்மக்கள் போசளர் படையெடுப்பின்போது வரி செலுத்துவதற்காகக் கோயில்

அணிகளை விற்று வரி செலுத்தியதையும், பின்னர் வசதி வந்ததும் அக்கோயில் அணிகளை இளையான்குடி ஊரார் செய்து வைத்ததையும் இக்கல்வெட்டு தெரிவிக்கிறது.

கோயில்கள் கல்விக்கூடங்களாக இருந்துவந்துள்ளன. அங்கிருந்த நூலகங்கள் ''சரசுவதிபண்டாரம்'' எனப்பட்டன. இவற்றில் சமய நூற்கள் சேகரித்து வைக்கப்பட்டன. இவற்றில் வேதமும் புராணமும் கற்றுக் கொடுக்கப்பட்டன. பல்சமய மடங்களும் கல்வி கற்பிக்கும் பணியில் ஈடுபட்டுள்ளன. சேரமாதேவி, திருக்குறுங்குடி, வானமாமலை, அருவியூர், அழகர்கோயில் போன்ற மடங்களில் சமயத் தத்துவங்கள், இலக்கியங்கள், புராணங்கள் கற்பிக்கப்பட்டன. கோயில்களில் இதிகாச - புராணச் செய்திகளை விளக்கும் சிற்பங்கள் செய்விக்கப்பட்டன. இராமானுசரின் கருத்திற்கேற்பவும் அவருடைய வழிவந்தோரின் கருத்திற்கேற்பவும் அழகர்கோயிலிலும் திருவரங்கத்திலும் நான்காம் வருணத்தினர் கோயிற்பணிகளில் அமர்த்தப்பட்டனர். இதனால் கோயில்கள் சாதி முரண்பாடுகளுக்கு எதிராக ஒற்றுமையை வலியுறுத்த முற்பட்டன எனலாம்.

கோயில்களில் நடனக்கலை வளர்க்கப்பட்டது. இசையும் போற்றப்பட்டது. கோயில்களில் தேவரடியார் நடனமாடி ஆடற்கலையை வளர்த்தனர். ஆடல், பாடல் கலைஞர்களுக்கு ஜீவிதமாக நிலங்கள் அளிக்கப்பட்டன. கோயில்கள் சாக்கைக்கூத்து போன்ற கூத்துகள் நடைபெறும் அரங்கங்களாகத் திகழ்ந்தன என்று கூறலாம்.

## அடிக்குறிப்புகள்

1. சண்மதங்களாவன : சைவம், வைணவம், சாக்தம், காணபதீயம், கௌமாரம், சௌரவம் (சூரிய வழிபாடு) ஆகும். இவற்றைத் திருப்பரங்குன்றம், திருச்சி கீழ்க் குடைவரைக்கோயில்களில் காணலாம்.
2. ARE 327, 359 / 1916 - 17; ARE 275 / 1941 - 45
3. D. Devakunjari, Madurai through the ages, Saher, Madras, 1979, pp. 228 - 232.
4. மேலது பக்கம். 221 - 222.
5. மேலது பக்கம். 222
6. மேலது பக்கம். 226
7. Quoted from A.J. Thinakaran, The Second Pandiyan Empire (AD 1190 - 1312), Madurai, 1987, p. 47.
8. D. Devakunjari, Op. Cit., பக்கம். 222 - 223.
9. ARE 540 / 1516.

10. ARE 123 / 1908.
11. ARE 288 / 1940 - 41.
12. ARE 54 / 1930 - 31.
13. Quoted from A.J. Thinakaran, Op. Cit. p. 47.
14. ARE 554 / 1922.
15. வெ. வேதாசலம், ''திருவேகம்பத்து கோயில் வரலாறு'' திருவேகம்பத்து கோயில் வரலாறும் வழிபாட்டு முறைகளும் என்ற நூலில் (1998) பக்கம். 19.
16. கே.வி. இராமன், பாண்டியர் வரலாறு, தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை, 1977, பக்கம். 228.
17. A.J. Thinakaran, Op. Cit. p. 79.
18. ARE 57 / 1963, ARE 363 / 1918.
19. ARE 179, 182 / 1992.
20. SII. Vol. IV No. 624.
21. ARE 277 / 1913.
22. என். சேதுராமன், பாண்டியர் வரலாறு (கி.பி. 550 - 1371), கும்பகோணம், 1989, பக்கம். 126.
23. மேலது பக்கம். 124.
24. SII. Vo.l XVII No. 202.
25. ARE 28 / 1937 - 38.
26. ARE 22 / 1924.
27. ARE 117 / 1903.
28. ARE 120, 127; 129 / 1935.
29. ARE 462 / 1921.
30. ARE 509 / 1963.
31. ARE 76 / 1906.
32. ARE 46 / 1922.
33. ARE 510, 511 / 1918.
34. ARE 329 / 1912.
35. என். சேதுராமன், முன்னது, பக்கம். 155.
36. ARE 197 / 1935.
37. ARE 306 / 1940.

38. ARE 29 / 1927.
39. K.V. Raman, Some aspects of Pandiya History in the light of recent discoveries, 1972, p. 61.
40. ARE 166 / 1916.
41. ARE 357 / 1922.
42. ARE 355 / 1922.
43. SII. Vol. IV No. 523.
44. SII. XXIII No. 313.
45. வெ. வேதாசலம், தமிழ் இலக்கியங்கள் கல்வெட்டுகள் காட்டும் பாண்டியநாட்டுச் சமுதாயமும் பண்பாடும், பிஎச்.டி., ஆய்வுநூல், 1993, பக்கம். 424.
46. ARE 615 / 1926 - 27; ARE 233 / 1940 - 41.
47. ARE 613 / 1917 - 18; ARE 466 / 1916 - 17; SII. Vol. VIII No. 175.
48. SII. Vol. V. No. 408.
49. வெ. வேதாசலம், தமிழ் இலக்கியங்கள் கல்வெட்டுகள் காட்டும் பாண்டியநாட்டுச் சமுதாயமும் பண்பாடும், 1993, பக்கம் 424.
50. SII. Vol. XXIII No. 120.
51. வெ. வேதாசலம்,மேலது, 1993 பக்கம். 425.
52. ARE 341 / 1916 - 17; ARE 231 / 1932 - 33.
53. SII. Vol. VIII No. 440; ARE 360 / 1916 - 17.
54. SII. Vol. XXIII No. 421.
55. SII. Vol. XXIII No. 114.
56. ARE 114 / 1908.
57. வெ. வேதாசலம், மேலது, 1993 பக்கம். 427.
58. SII. Vol. XVII No. 210.
59. கே.வி. இராமன், பாண்டியர் வரலாறு, பக்கம். 247.
60. ARE 252 / 1940.
61. கே.வி. இராமன், மேலது, பக்கம். 248
62. A.J. Thinakaran, Op. Cit. p. 197.
63. மேலது, பக்கம். 257.
63அ. ARE 402 / 1916
64. IPS No. 336.

65. ARE 548 / 1922.
66. ARE 284 / 1940 - 41.
67. A.J. Thinakaran, Op. Cit. p. 69.
68. மேலது.
69. ARE 1923, P. II Para 49 - 50.
70. IPS No. 268.
71. ARE 32 / 1927.
72. SII. Vol. XXIV No. 203; ARE 89 / 1938 - 39.
73. Ibid. Nos. 194 - 195.
74. K.V. Raman, Some aspects of Pandiya History ... Op. Cit. p. 30.
75. ARE 85 / 1928 - 29.
76. ARE 373 / 1959 - 60.
77. கே.வி. இராமன், மேலது, பக்கம். 259.
78. TTDI. Vol. I No. 57.
79. K.V. Raman, Op. Cit. p. 25.
80. ARE 116 / 1900.
81. ARE 291 / 1929.
82. ARE 462 / 1921.
83. SII. Vol. XXIV Nos. 209, 210, 211.
84. என். சேதுராமன், மேலது, பக்கம். 154.
85. மேலது, பக்கம். 167.
86. ARE, 223, 224 / 1928.
87. கே.வி. இராமன், மேலது, பக்கம் 260
88. ARE, 402 / 1916.
89. ARE, 506 / 1904.
90. ARE, 300 / 1929 - 30.
91. ARE, 247 / 1955 - 56.
92. K.R. Venkataraman, "An interesting Award (Thirteenth Century AD)" Nagaswamy, R - (1st Ed. Seminar on Inscriptions, 1966) Madras, Books India Pvt. Ltd., 1968, pp. 178 - 188.

93. மா. இராசமாணிக்கனார்,சைவசமய வளர்ச்சி, பாரி நிலையம், சென்னை, 1972, பக்கம். 223.
94. ARE 101 / 1915.
95. SII. Vol. XIV No. 66.
96. மா. இராசமாணிக்கனார், மேலது, பக்கம். 212.
97. வெ. வேதாசலம், மேலது, 1993, பக்கம். 428
98. SII. Vol. IV No. 426.
99. Ibid. No. 152.
100. SII. Vol. VIII No. 761.
101. IPS No. 366.
102. SII. Vol. XCII No. 550.
103. SII. Vol. VIII No. 266.
104. மா. இராசமாணிக்கனார், மேலது, பக்கம். 209 - 210.
105. மேலது, பக்கம். 210 - 211.
106. ARE 359, 361 / 1916.
107. மா. இராசமாணிக்கனார், மேலது, பக்கம். 212 - 213.
108. ARE 463 / 1929 - 30.
109. கே.வி. இராமன், மேலது, பக்கம் 212 - 213.
110. மேலது
111. ARE 178 / 1929 - 30.
112. மா. இராசமாணிக்கனார், மேலது, பக்கம். 212 - 213.
113. ARe 1909, part - II, Para 25.
114. ARE, 104 / 1908.
115. ARE 129 / 1908.
116. வெ. வேதாசலம், இடைக்காட்டூர் திருமணிகண்டேசுவரர் கோயில் கல்வெட்டுகள், ஆவணம், ஜுலை 1997, பக்கம். 50.
117. SII. Vol. V No. 301.
118. மேலது, எண். 428
119. ARE 197 / 1943 - 44.
120. ARE 292 / 1914.
121. ARE 295 / 1941.
122. ARE 311 / 1928.

123. ARE 99 / 1937 - 37.
124. ARE 122 / 1937 - 38.
125. கே.வி. இராமன், மேலது, பக்கம். 258.
126. ARE 277 & 279 / 1929 - 30; 130 / 1921.
127. கே.வி. இராமன், மேலது, பக்கம். 258.
128. ARE 350 / 1959 - 60.
129. கே.வி. இராமன், மேலது, பக்கம். 259.
130. ARE 523 / 1958 - 59.
131. வெ. வேதாசலம், மேலது, 1993, பக்கம். 432.
132. கே.வி. இராமன், மேலது, பக்கம். 226.
133. ARE 62 / 1915 - 16.
134. வெ. வேதாசலம், மேலது, 1993, பக்கம். 435.
135. ARE 364 / 1929 - 30.
136. வெ. வேதாசலம், மேலது, 1993, பக்கம். 436
137. ARE 62 / 1915 - 16.
138. இக்கல்வெட்டைக் கண்டறிந்தோர் வெ. வேதாசலம், வ. தேனப்பன் ஆவர்.
139. ARE 306 / 1923.
140. SII. Vol. VIII 174 & 177.
141. ARE 197 / 1935.
142. ARE 242 / 1950 - 51.
143. ARE, 244 / 1950 - 51.
144. K.A.N. Sastri, The Pandiyan Kingdom, Swathi Publications, Madras, 1972, p. 150.
145. ARE 358 / 1908.
146. க.ப. அறவாணன், சைனரின் தமிழிலக்கண நன்கொடை, சைன இளைஞர் மன்றம், 1979, பக்கம். 96.
147. ஏ. ஏகாம்பரநாதன், திருமலைச் சமணத் திருக்கோயில்கள், 1992, பக்கம் 24 - 25.
148. க.ப. அறவாணன், மேலது, பக்கம். 95.
149. மேலது.
150. SII. Vol. VII, 1014.

151. ARE 33 / 1932 - 33.
152. இங்குள்ள கல்வெட்டுகளையும் சிற்பங்களையும் கண்டறிவித்தவர் வெ. வேதாசலம் ஆவார்.
153. இக்கல்வெட்டைப் படித்தறிவித்தவர் வெ. வேதாசலம்.
154. ARE 243 / 1932 - 33.
155. வெ. வேதாசலம், மேலது, 1993, பக்கம். 442.
156. கே.வி. இராமன், மேலது, பக்கம். 263.
157. மேலது, பக்கம். 262.
158. ARE 329 / 1929 - 30, மற்றும் வெ. வேதாசலம், மேலது, 1993, பக்கம். 450.
159. SII. Vol. VIII 402.
160. ARE 568 / 1916.

# 6. இலக்கியம்

தமிழ் இலக்கிய வரலாற்றின் பொற்காலம் என்று கூறப்படும் சோழர் காலம் கி.பி.13ஆம் நூற்றாண்டின் தொடக்கத்திலேயே வீழ்ச்சியுறத் தொடங்கியது. அந்த நூற்றாண்டின் இறுதியிலேயே சோழர் ஆட்சி முடிவுக்கு வந்துவிட்டது எனலாம். சோழர் ஆட்சியின் முடிவு பாண்டியர் ஆட்சியின் எழுச்சிக்கு வித்திட்டது. எழுச்சியுற்ற பாண்டியர் இனம் அதனைத் தக்க வைத்துக் கொண்டு பேராட்சி ஒன்றை நிறுவத் தவறிவிட்டது. கிடைத்த வாய்ப்பைத் தாயாதிச் சண்டைகளைத் தீர்த்துக்கொள்வதில் தொலைத்துவிட்டது.

தமிழ் இலக்கிய வரலாற்றில் இந்தக் காலக்கட்டத்தில் பெரிய இலக்கியத் தோற்றங்கள் சுருங்கிச் சிறுசிறு இலக்கிய வடிவங்கள் பெருகியதை இலக்கிய வரலாறு பதிவு செய்திருக்கிறது. 'சிற்றிலக்கியக் காலம்' என்றே இதை வரலாற்று ஆசிரியர்கள் குறிக்கிறார்கள் (கி.பி. 1300 - 1400). ஆனால் வெறும் சிற்றிலக்கியங்கள் மட்டும்தான் தோன்றின என்று கருதிவிட முடியாது. பெருங்காப்பியத்தை ஒத்த வில்லிபாரதம் போன்ற நூல்களும் பெருங்காப்பியம் என்றே தமிழ் மக்கள் போற்றுகின்ற கந்தபுராணம் போன்ற நூல்களும் இக்காலக்கட்ட வரலாற்றைப் புராண இலக்கியங்களால் செழுமைப்படுத்துகின்றன.

அரசியல் நிலை ஆட்டங்கண்டதனால் சமயத்துறையில் பலரும் தங்களின் கவனத்தைச் செலுத்தினர். பெரும்பாலான நூல்கள் சமயத்தை அடிப்படையாகக் கொண்டே எழுந்தன. சாத்திர-தோத்திரங்கள் இக்காலத்தில் மிகுதியாக இயற்றப்பட்டன. சைவ, வைணவ சமயங்களில் மட்டுமன்றிச் சமணம் போன்ற புறச்சமயங்களிலும் நூல்கள் பல தோன்றின.

நூல்கள் பலவற்றைத் திரட்டி வைக்கும் முயற்சி இக்காலத்தில் இலக்கியத்தின் பல பிரிவுகளிலும் நிகழ்ந்தது. இது தவிர, தமிழ் மொழிக்குக் கிடைத்த பன்முக வளர்ச்சியினால் தோன்றிய இலக்கண - இலக்கிய - உரைவிளக்கங்களும் இதே காலத்தில் பலரால் எழுதப்பட்டன.

## புராண இலக்கியங்கள்

புராணம் என்ற பெயரில் தமிழில் காப்பிய அமைப்புள்ள இலக்கியங்கள் பழங்காலத்திலிருந்தே வழங்கி வந்திருக்கின்றன. பன்னிரண்டாம் நூற்றாண்டில் சேக்கிழார் பாடிய 'திருத்தொண்டர் புராணம்' மக்களிடையே மிகச் சிறப்பாக விளங்கியது. சைவ, வைணவ சமயப் புராணங்கள் பல எழுந்தன.

## கந்தபுராணம்

இந்நூல் முருகப் பெருமானின் வரலாற்றைக் கூறுவது. வடமொழிக் கந்தபுராணத்தின் ஒரு பகுதியாகிய 'சங்கரசங்கிதை'யினை மூலநூலாகக் கொண்டு திகழ்வது. இது பெருங்காப்பிய இலக்கணத்தை முற்றிலும் பெற்றது என்பர்[1].

கச்சியப்ப சிவாசாரியார் என்பவரே இந்நூலின் ஆசிரியர். முருகப்பெருமான் இவரது கனவில் தோன்றித் தனது வரலாற்றைப் பாடுமாறு கூறித் 'திகடசக்கரம்' என்ற அடியை எடுத்துத் தந்ததாகவும் இவரைப் பற்றி ஒரு கதை நிலவுகிறது. இப்புராணம் உற்பத்திக் காண்டம், அசுர காண்டம், மகேந்திர காண்டம், யுத்த காண்டம், தேவகாண்டம், தட்சகாண்டம் என்ற ஆறு காண்டங்களையும் 10,345 பாடல்களையும் கொண்டுள்ளது.

முருகப் பெருமானின் வரலாற்றின்வழி சிவபரத்துவத்தையும் சைவசித்தாந்த நுட்பங்களையும் திருமுறைகளின் பெருமைகளையும் இது விளக்குகிறது. இலக்கியச்சுவை ததும்பும் இதனுள் சிவபிரானே முருகனாகத் தோற்றம் அளித்தான் என்னும் செய்தியைப் பல இடங்களில் காணலாம். இதன் காலத்தை 14ஆம் நூற்றாண்டிற்குச் சற்று முன்னதாக வரையறுப்பர்[2].

கந்தபுராணத்தின் ஏழாவது காண்டம் 'உபதேசகாண்டம்' என்பதாகும். இதனை இயற்றியவர் கோனேரியப்ப நாவலர் என்றும் இவர் கச்சியப்பரின் மாணவர் என்றும் கூறுவர்[3].

## மகாபாரதம்

தமிழில் வழங்கும் மகாபாரதத்தைப் பாடியவர் வில்லிபுத்தூரார். இவர் திருமுனைப்பாடி நாட்டில் சனியூரில் பிறந்தவர். இவருடைய இயற்பெயர் என்னவென்பதை அறிய முடியவில்லை என்றும், வில்லிபுத்தூரார் என்று அழைக்கப்படுவதன் காரணமும் தெரியவில்லை என்றும் கூறுவர்[4].

இந்நூல் பத்துப் பருவங்களை உடையது. பெருங்காப்பியமாகிய இதனுள் நாட்டுப் படலம், நகரப் படலம் ஆகியவை பாடப்படாமல் நேரடியாகச் சரிதத்தைப் பாடியிருப்பது குறிப்பிடத் தக்கது. வில்லி புத்தூரார் பாரதத்திற்கு அடிப்படையாக அமைந்தது வியாசரின் பாரதமே என்றாலும் இதில் சில வேறுபாடுகள் காணப்படுகின்றன. வியாச பாரதத்தில் காணப்படும் பல பருவங்களை இதில் காணமுடியவில்லை. பதிப்பாளர்கள் காரணமாகப் பாடல்களின் மொத்த எண்ணிக்கை 4339 என்றும் 4351 என்றும் மாறுபடுகிறது[5].

வில்லியார் திருமாலிடத்தில் மிகுந்த பக்தியுடையவர். தம்மை ஆதரித்த 'வக்கபாகை வரபதி ஆட்கொண்டானை' நன்றி மறவாது தனது

நூலில் நான்கு இடங்களில் போற்றியுள்ளார். இவரது காலம் 14ஆம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியாகும்[6].

## சிற்றிலக்கியங்கள்

பாட்டுடைத் தலைவன் வீதியுலா வருவதை வருணித்துக் கூறும் 'உலா', பேசும் திறனில்லாத அஃறிணைகளைக் கூடத் தூது விடும் 'தூது', பலவகையான உறுப்புகளைக் கொண்ட - நூறு பாடல்கள் அந்தாதித் தொடையில் அமைந்த 'கலம்பகம்', பலவகைச் செய்யுள்களைத் தொடர்புபடுத்திப் பாடும் 'கோவை', போர்க்களத்தில் ஆயிரம் யானைகளைக் கொன்று குவித்து வெற்றிக்கொடி நாட்டும் வீரனைப் புகழ்ந்து பாடும் 'பரணி' ஆகியவற்றுடன் 'மாலை', 'அந்தாதி', 'சதகம்' போன்ற சிற்றிலக்கிய வகைகளும் கிளைத்தெழுந்த காலம் இது.

## மாலை

### பல்சந்தமாலை

களவியற் காரிகை உரையாசிரியர் மேற்கோளாகக் காட்டியுள்ள நூல்களுள் ஒன்று பல்சந்தமாலை. சிற்றிலக்கியங்களுக்கு இலக்கணம் கூறும் பன்னிரு பாட்டியலின் இலக்கணமோ மற்றப் பாட்டியல்களின் இலக்கணமோ இதற்குப் பொருந்தவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. இது கட்டளைக் கலித்துறையால் அமைந்தது. இந்நூலின் 8 பாடல்கள் மட்டுமே கிடைக்கின்றன.

தற்போது கிடைக்கின்ற இப்பாடல்கள் முழுவதும் அகப் பொருளைச் சார்ந்தது என்பதால் இது கோவை நூலாக இருக்கலாம் என்று கருதுவர்[7]. இதன் காலம் 13ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியாகும்[8].

## கோவை

### கருமாணிக்கன் கப்பல் கோவை

பாண்டிய மன்னனின் படைத்தலைவனாக விளங்கிய கருமாணிக்கன் என்பவன்மீது இக்கோவை பாடப்பட்டது. இதன் ஆசிரியரின் பெயர் தெரியவில்லை. பல காலம் அச்சாகாமலிருந்த இந்நூல் 1958இல் வெளியானது. இதில் 398 பாடல்கள் மட்டுமே உள்ளன. இதன் காலம் 13ஆம் நூற்றாண்டு[9].

## சமய இலக்கியங்கள்

### சைவ இலக்கியம்

சைவம், வைணவம், சமணம் முதலிய பலதரப்பட்ட சமயத்தினரும் பல்வேறு நூல்களை எழுதினர். இதில்,சைவ இலக்கியம் என்பது மெய்கண்டார் பரம்பரையில் தோன்றிய இலக்கியம் ஆகும்.

அருள்நந்தி சிவாசாரியார், மனவாசகங்கடந்தார் ஆகிய இருவரது படைப்புகளி லிருந்து இது தொடங்குகிறது.

## சதமணிக் கோவை

'நூறு மணிகளாகிய வெண்பாக்கள் கோத்த மாலை' என்பது இந்நூலின் பொருள். இந்நூலானது காப்பு உள்பட 107 நேரிசை வெண்பாக்களால் ஆனது. இதன் ஆசிரியர் மறைஞானசம்பந்தர். சதமணிக் கோவை சித்தாந்த ஞானபோதம் என்ற பெயரில் 1898இல் மறைமலையடிகளால் பதிப்பிக்கப்பட்டது[10]. இதன் காலம் 14ஆம் நூற்றாண்டு[11].

## மெய்கண்ட சாத்திரங்கள்

'உந்தி களிறே உயர்போதம் சித்தி' என்று தொடங்குகின்ற வெண்பா மெய்கண்ட சாத்திரங்கள் 14 என்பதைப் புலப்படுத்தும். இவற்றுள் திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார், சிவஞானபோதம் நீங்கலாக மற்றவை இக்காலத்தே எழுந்தவை.

## சிவஞான சித்தியார்

சிவஞான சித்தி என்னும் இந்நூலின் சிறப்பு கருதி 'ஆர்' விகுதி சேர்க்கப்பட்டுச் சித்தியார் என்று அழைக்கப்படுகிறது. இது 629 விருத்தப்பாக்களால் ஆனது. 'சுபக்கம்', 'பரபக்கம்' என்னும் இரு பிரிவுகளைக் கொண்டது. இதன் ஆசிரியர் அருள்நந்தி சிவாசாரியார்.

'சிவத்தின் மேல் தெய்வமில்லை, சிவஞான சித்திக்கு மேல் சாத்திரம் இல்லை' என்னும் பழமொழி இந்நூலின் பெருமையை நமக்கு உணர்த்தும். இதன் காலம் 13ஆம் நூற்றாண்டு[12] ஆகும்.

## இருபா இருபஃது

வெண்பா, அகவல் என்னும் இரு பாக்கள் மாறி மாறி வரும்படி இருபது பாடல்களால் எழுதப்பட்டது இந்நூல். ஆசிரியர் அருள்நந்தி சிவாசாரியார். சைவ சித்தாந்த நுண்பொருள் பலவும் இதில் விவரிக்கப்பட்டுள்ளன.

## உண்மை விளக்கம்

மெய்கண்டாரை நோக்கித் தமது ஐயங்களை வினவுவது போலவும், அதற்கு அவர் விடையளிப்பது போலவும் வெண்பாவால் இயற்றப்பட்டது இந்நூல். இதன் மூலமாக ஞானேந்திரியம், கன்மேந்திரியம், கரணம் முதலியனவும், சிவபிரானது நடனச்சிறப்பு, ஐந்தெழுத்தின் உட்பொருள் முதலியனவும் விளக்கப்படுகின்றன. இந்நூலின் ஆசிரியர் திருவதிகை மனவாசகம்கடந்தார். இவர், 'குருமொழி வினா அகவல்' என்னும் நூலை எழுதியதாகவும் கூறுவர்[13]. இதன் காலம் 13ஆம் நூற்றாண்டு[14] ஆகும்.

## சிவப்பிரகாசம்

சிவஞான போதம் முதல் நூலாகவும், சித்தியார் வழிநூலாகவும் திகழ, இது சார்பு நூலாக விளங்குகிறது. தன்னை ஓதியுணர்ந்தவரின் அறிவில் சிவம் பிரகாசிக்கச் செய்தலின், இது சிவப்பிரகாசம் என்று கூறப்படுகிறது என்பர்.

இந்நூலைப் பாடியவர் உமாபதி சிவாசாரியார். இவரது காலம் 13ஆம் நூற்றாண்டு[15]. பின்வரும் மற்ற ஏழு நூல்களைப் பாடியவரும் இவரே.

## திருவருட் பயன்

'பதிமுது நிலை' தொடங்கி 'அணைந்தோர் தன்மை' ஈறாகப் பத்து அதிகாரங்களைக் கொண்டது இந்நூல். அதிகாரம் ஒவ்வொன்றும் 10 குறட்பாக்களைக் கொண்டது. இது குறள் வெண்பாவால் ஆனது. கரு இருள் பந்தம் நீங்கி, உலகம் திருவருள் பயனடையவே இந்நூல் இயற்றப்பட்டது என்று கூறுவர்.

## வினா வெண்பா

இந்நூலாசிரியர், தமது ஆசிரியர் மறைஞானசம்பந்தரை முன்னிறுத்தி வினவும் முகத்தால் பாசம் நீங்கவும், வீட்டின்பம் எய்தவும், திருவருள் நேசம் கூடவும் செய்தருளியதே இந்நூல் என்பர். இது 13 வெண்பாக்களைக் கொண்டது.

## போற்றிப் பஃறொடை

இந்நூல் இறைவன் திருவருளால் பந்தபாசங்களும், வீட்டின்பமும் நிகழும் முறையினை உலகோர் உணர இயற்றப்பட்டது. கலிவெண்பாவால் ஆன இந்நூலின் இடையிடையே 'போற்றி' 'போற்றி' என்று இருப்பதால் இப்பெயர் பெற்றது. ஒருமலம் (ஆணவம்), இருமலம் (ஆணவம், கன்மம்), மும்மலம் (ஆணவம், கன்மம், மாயை) ஆகியவை அமைந்த உயிர்களை இறைவன் அருள் செய்து தன்னடி சேர்க்கும் முறை இந்நூலில் விளக்கப்பட்டுள்ளது.

## கொடிக்கவி

தில்லை நடராசப் பெருமானின் திருவிழாவில் கொடிமரத்தில் ஏற்றிய கொடி நிற்காமல் அற்று அற்று விழுந்தபோது அதனை நிறுத்துவதற்காகப் பாடப்பட்டது இந்நூல். நான்கு பாடல்களைக் கொண்ட இந்நூலில் ஒரு கட்டளைக் கலித்துறையும், மூன்று வெண்பாக்களும் உள்ளன.

## நெஞ்சுவிடு தூது

தனது ஆசிரியர் மறைஞான சம்பந்தரிடத்தில் தனது நெஞ்சைத் தூதாக அனுப்பியது பற்றி இந்நூல் கூறுகிறது. மறைஞானசம்பந்தரைச் சிவபெருமானாகவே ஆசிரியர் பாடியுள்ளார்.

## உண்மை நெறி விளக்கம்

இந்நூல் தத்துவரூபம், தத்துவதரிசனம், தத்துவசுத்தி, ஆன்மரூபம், சிவரூபம், சிவதரிசனம், சிவயோகம், சிவபோகம் ஆகியவற்றை உணர்ந்தால் சிவானுபவம் பெறலாம் என்பதை உணர்த்துகிறது. இந்நூலை எழுதியவர் உமாபதி சிவாசாரியார் என்றும், சீர்காழித் தத்துவநாதர் என்றும் இருவேறு கருத்துகள் நிலவுகின்றன[16].

## சங்கற்ப நிராகரணம்

சங்கற்பம் - கொள்கை; நிராகரணம் - மறுப்பு. அதாவது, பிற மதக்கொள்கைகளை மறுப்பது என்பது இதன் பொருள். மாயாவாதி, ஐக்கியவாதி, போதவாதி முதலான வாதிகளின் தத்துவங்களைத் தருக்க முறையில் கண்டித்து, சித்தாந்தத் தெளிவை நிலைநிறுத்துகிறது இந்நூல். இதற்கு ஞானப்பிரகாச தேசிகர் உரை எழுதியுள்ளார்.

சைவ சித்தாந்த சாத்திரங்கள் பதினான்கினுள் எட்டு நூல்களைப் பாடிய உமாபதி சிவாசாரியார், இவற்றைத் தவிர திருமுறைத் திரட்டு, கோயிற் புராணம், திருமறை கண்ட புராணம், திருத்தொண்டர் புராண சாரம், சேக்கிழார் புராணம், பௌஷ்கரபாஷ்யம், சதரத்தினசங்கிரகம் ஆகிய நூல்களையும் பாடியுள்ளார்.

## ஞான சாத்திர பஞ்சகம் (ஞான சரிதம்)

ஞான பூசாகரணம், ஞான பூசாவிதி, ஞான தீக்ஷாவிதி, ஞான அந்தியேட்டி, போசன விதி என்னும் ஐந்து சிறு சாத்திர நூல்களின் தொகுப்பே ஞான சாத்திர பஞ்சகம் எனப்படும். இதன் ஆசிரியர் அருள் நமசிவாய தேசிகர். இவர் உமாபதி சிவத்தின் உடன் மாணாக்கர்.

## சாத்திரக் கொத்து

'சிற்றம்பல நாடிகள்' என்னும் பெரியார் செய்தருளிய நூல் சாத்திரக் கொத்து என்பதாகும். இதனுள் துகளறு போதம், செல்காலத் திரங்கல், வருங்காலத்திரங்கல், நிகழ்காலத்திரங்கல், திருப்புன் முறுவல், அனுபூதி விளக்கம், தாலாட்டு, வெண்பா, கட்டளைக் கலித்துறை என்னும் ஒன்பது நூல்கள் அடங்கியுள்ளன. முதல் ஐந்து நூல்கள் மட்டுமே சிற்றம்பல நாடிகள் பாடியவை. மற்றவை அவரது மாணவர்கள் பாடியவை. இதன் காலம் 14ஆம் நூற்றாண்டு[17].

### தத்துவப் பிரகாசம்

சீர்காழித் தத்துவப் பிரகாசரால் இந்நூல் இயற்றப்பட்டது. இதற்குத் 'தத்துவ சரிதை' என்ற பெயரும் உண்டு. சிவஞான சித்தியாரைப் போலவே இதுவும் மிகச் சிறந்த சாத்திர நூல். 337 விருத்தங்களைக் கொண்ட இந்நூலை 1893இல் யாழ்ப்பாணம் கந்தப்பிள்ளை பதிப்பித்தார். இதன் காலம் 13ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதி ஆகும்[18].

### சித்தாந்த சாரம்

'சித்தாந்த சாரம்' என்னும் நூல் பரம முனிவர் என்பவரால் எழுதப்பட்டது. காப்பு வெண்பா ஒன்றையும் 32 எண்சீர் ஆசிரிய விருத்தங்களையும் கொண்ட இந்நூலை 1888இல் ரிப்பன் பிரஸ் வெளியிட்டது.

### சிவானந்த மாலை

இந்நூலின் ஆசிரியர் சம்பந்த முனிவர். 'பழுதை கட்டி சம்பந்த பண்டாரம்' என்று இவரை வெள்ளி அம்பலவாணத் தம்பிரான் கூறுவார். இந்நூல் 414 வெண்பாக்களைக் கொண்டது. தில்லையையும் காழியையும் சம்பந்தரையும் மிகுதியாகப் போற்றுகிறது. இவர் சாத்திரக் கொத்திலுள்ள வெண்பா, தாலாட்டு என்ற நூல்களைப் பாடியவர். இதன் காலம் கி.பி. 1350 - 75[19] ஆகும்.

## வைணவ இலக்கியம்

### தேசிகப் பிரபந்தம்

இது வேதாந்த தேசிகர் பாடிய 24 பிரபந்தங்களின் தொகுப்பு நூல். பாடல்களின் மொத்த எண்ணிக்கை 405. இதில் சில கிடைக்கவில்லை. இதன் காலம் 13ஆம் நூற்றாண்டு[20] ஆகும்.

### ஆசார்ய ஹிருதயம்

வடகலை வேதாந்த தேசிகருக்கு மறுப்புக் கூறும் விதத்தில் இந்நூலை அழகிய மணவாளப் பெருமாள் பாடினார். நம்மாழ்வாருடைய சிறப்பையும், அவரது நூல்களின் சிறப்பையும் எடுத்தோதும் நூலாக இது திகழ்கிறது என்பர். இது தவிர 6000படி, திருவந்தாதி, மாணிக்கமாலை, அருளிச்செயல் ரகசியம், கண்ணிநுண் சிறுத்தாம்பு வியாக்கியானம் போன்றவற்றையும் இந்நூலாசிரியர் படைத்துள்ளார். காலம் 13ஆம் நூற்றாண்டு[21] ஆகும்.

### பகவத்கீதை வெண்பா

இந்நூல் மணவாளப் பெருமாள் ஜீயரால் எழுதப்பட்டது. இந்நூல் 223 வெண்பாக்களையும் 13 பாயிரப்பாடல்களையும் கொண்டது. வடமொழிக் கீதையில் 'யோகம்' என்று அமைந்துள்ள அத்தியாயப்

பெயர் இதில் 'ஒத்து' எனப்படுகிறது. ஒவ்வொரு அத்தியாயத்தின் முதலிலும், முடிவிலும் நூலுக்குப் புறத்தே வெண்பா அமைக்கப்பட்டுள்ளது. தத்துவதீபம், தத்துவபூஷணம் போன்ற நூல்களையும் இவர் எழுதி யுள்ளார்.

## சமண இலக்கியம்

### ஜைன இராமாயணம்

2500 ஆண்டுகளுக்கு முன் பிறந்த வர்த்தமான மகாவீரர் ஞானம் பெற்ற பிறகு 'பத்ம பல தேவர்' வரலாற்றை (பத்ம பலதேவரைச் சமணர்கள் ராமர் என்பர்) கௌதம கணதரருக்குக் கூற, அதை அவர் கீர்த்திதர ஆசாரியருக்குக் கூறினார்.

'இரவிசேனாசாரியார்' அவரிடமிருந்து இராம வரலாற்றைக் கேட்டறிந்து 18, 023 செய்யுட்களால் ஆன 'பத்ம புராணம்' என்னும் காப்பியத்தை இயற்றினார் என்பர்[22]. கி.பி. 1766இல் பண்டிதர் தௌலத்ராம் காச்லீவால் இந்த வடமொழிப் பத்ம புராணத்தைப் பழைய இந்தியில் உரைநடையில் எழுதினார். இந்நூலே ஜைன ராமாயணம் என்று தமிழில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது.

இரவிசேனாசாரியாருக்கு முன்பே விமலசூரி என்பவர் 'பவும சரியம்' என்ற பெயரில் இராமனது வரலாற்றைக் கி.பி. நான்காம் நூற்றாண்டில் பாடினார் என்றும் அது பத்மபுராணத்தோடு ஒத்தது என்றும் கூறுவர். இந்தியாவில் வழங்கிவரும் இராம கதைக்கு முற்றிலும் மாறுபட்டிருக்கிறது இந்நூல். இது இராக்கதர் குல வரலாறு தொடங்கி இராமர் வீடுபேறு அடைதல் வரை 39 அத்தியாயங்களைக் கொண்டது.

ஸ்ரீ புராணம் என்னும் நூலில் இராமனது வரலாற்றைக் குறிக்கும் சில பகுதிகள் மேற்கோளாகக் காட்டப்பட்டுள்ளன. அவை ஜைன இராமாயணம் என்னும் நூலிலிருந்து எடுக்கப்பட்டன என்பர். இதன் காலம் 13ஆம் நூற்றாண்டு[23] ஆகும்.

### திருநூற்றந்தாதி

அவிரோதி நாதர் எழுதிய இந்நூல் கட்டளைக் கலித்துறை 100 அந்தாதியாக வருமாறு பாடப்பட்டது. அருகக் கடவுளைப் போற்றும் இந்நூலை ரா. இராகவையங்கார் செந்தமிழ்ப் பிரசுரமாகச் சீரிய முறையில் பதிப்பித்துள்ளார். இதன் காலம் 13ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதி[24] ஆகும்.

### திருவெம்பாவை

மாணிக்கவாசகர் எழுதிய திருவெம்பாவை சைவ மக்களிடையே மிகவும் பரவலாக விளங்குவதைப் போல அவிரோதி நாதர் எழுதிய இத்

திருவெம்பாவை சமணர்களிடையே புகழ் வாய்ந்தது. மார்கழி மாதத்தில் இப்பாடல்களைச் சமணர்கள் பாடி வருகின்றனர். பாடல்களின் எண்ணிக்கை 20 ஆகும்.

மணிவாசகரின் திருவெம்பாவையையும், அவிரோதிநாதரின் திருவெம்பாவையையும் ஒப்பிட்டு அண்மையில் முனைவர் ஜே.ஆர். இலட்சுமி என்பவர் எழுதிய கட்டுரை இங்குக் குறிப்பிடத்தக்கது[25]. ஆனால் இந்நூல் அவிரோதிநாதர் பாடியதன்று என மறுப்பார் மு. அருணாசலம்[26]. இந்நூலுக்குக் கு. பாலசுந்தர முதலியார் எழுதிய உரை, ஜினகாஞ்சி ஜைனத் தமிழ் இலக்கிய மன்றத்தாரால் 1963இல் வெளியிடப்பட்டுள்ளது. இதன் காலம் 13ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதி ஆகும்.

## மேருமந்தர புராணம்

வாமன முனிவர் இயற்றிய இந்நூல் 13 சருக்கங்களையும் 1405 பாடல்களையும் கொண்டது. கதையளவில் சுவையில்லாத போதும் இதில் உலகநீதி சிறப்பாய்க் கூறப்பட்டுள்ளது. இந்நூலைச் சுருக்கி மேருமந்திர மாலை என்ற பெயரில் ஒரு நூலினையும் எழுதியுள்ளனர். இதன் காலம் 13ஆம் நூற்றாண்டின் இறுதி[27] ஆகும்.

## நீலகேசி விருத்தியுரை

ஐஞ்சிறு காப்பியங்களுள் ஒன்றான நீலகேசிக்குச் சமய திவாகர வாமன முனிவர் உரை எழுதியுள்ளார். இது சமய திவாகர விருத்தி எனவும் அழைக்கப்படும். குண்டலகேசி என்ற நூலின் சில பகுதிகளை இவ்வுரையின் வாயிலாகவே அறிய முடிகிறது. இதுமட்டுமன்றி கிடைக்கப் பெறாத பல இலக்கண, இலக்கியங்களையும் இது கூறியுள்ளது. இதன் காலம் 13ஆம் நூற்றாண்டின் இறுதி[28] ஆகும்.

## சீவசம்போதனை

சமண சமயத்தின் கொள்கைகள் சிலவற்றைத் தெளிவுற விளக்கும் இந்நூலின் ஆசிரியர் தேவேந்திர மாமுனிவர் ஆவார். இது 550 பாடல்களை உடையது. இதன் காலம் 13ஆம் நூற்றாண்டு[29] ஆகும்.

## இலக்கணம்

புத்திலக்கணம் படைப்பதில், இதுவரை கூறப்பட்டு வந்த ஐந்திலக்கணம் தவிர நிகண்டுகள் இயற்றும் போக்கினை இக்காலத்தில் தான் அதிகம் காணமுடிகிறது. ஆதி நிகண்டுகளான திவாகரமும் பிங்கலந்தையும் சோழர்காலத்திலேயே உருப்பெற்றன. அதன் வளர்ச்சிப் படியினைப் பாண்டியர் காலத்தில் காணலாம். பாட்டியல் என்பது யாப்பினுள் அடங்கும் என்றாலும் அது தனியொரு பிரிவாக இக்காலத்தில் தான் மலர்ந்தது.

## நவநீதப் பாட்டியல்

நவநீத நடனார் என்பது நூலாசிரியரின் பெயர். இதுவே நூலுக்கும் வழங்குவதாயிற்று. இந்நூலின் செய்யுட்கள் கலித்துறை யாப்பினால் இயன்றமையின் இதற்குக் கலித்துறைப் பாட்டியல் எனும் வேறொரு பெயரும் அமைந்தது. முன்னர்க் கூறிய பெயர் செய்தோன் அடிப்படையிலும் பின்னர்க் கூறிய பெயர் யாப்படிப்படையிலும் அமைந்தன என்பர்.

இவரது காலம் கி.பி. 14ஆம் நூற்றாண்டு[30]. பாட்டியல் இலக்கண நெறிகளில் 'அகத்தியர் நெறி', 'இந்திர காளிய நெறி' என இருவகை நெறிகள் இருந்தன. அவற்றுள் நவநீதப் பாட்டியல் அகத்தியர் நெறிவழி எழுந்த நூல் என்பதை இந்நூலின் அவையடக்கச் செய்யுளால் அறியலாம்.

நூலில் செய்திகள் மூன்று தலைப்புகளின்கீழ்ப் பிரிக்கப்பட்டுள்ளன. அவை : 1. பொருத்தவியல் 2. செய்யுள் மொழியியல் 3. பொது மொழியியல். இந்நூலின் பல செய்யுட்கள் மகடூஉ முன்னிலையில் அமைந்துள்ளன.

வெண்பாப் பாட்டியலுக்குப் பின்னர் தெளிவான இயல் பகுப்பு வகைப்பாட்டுடன் தோன்றிய பாட்டியல் நூல் இது. 'பொருத்தம்' பற்றிக் கூறும் பகுதிக்குப் பொருத்தவியல் எனும் பெயர் இந்நூலில்தான் முதல் முதலில் அமைகிறது. இதுவரை கிடைத்துள்ள பாட்டியல் நூல்கள் எவற்றிலும் இல்லாத வகையில் பிற நூல்களிலிருந்து மிகுதியான மேற்கோள்கள் இந்நூலுரையில் காட்டப்பட்டுள்ளன. மறைந்துபோன பல பாட்டியல் நூல்களைப் பற்றி அறிந்து கொள்ள இது உதவுகிறது. இலக்கியம் பற்றிய ஒரு முழுமையான கண்ணோட்டத்துடன் இந்நூல் அமைந்துள்ளமை இந்நூலின் சிறப்புகளில் தலையாயதாகும்.

## வரையறுத்த பாட்டியல்

வரையறுத்த பாட்டியல் பத்து வகைப் பொருத்தங்களில் மங்கலப் பொருத்தத்தை மட்டுமே கூறுகிறது. பாட்டியலுக்குரிய பிற செய்திகள் எவையும் இந்நூலில் கூறப்படவில்லை. எனவே குறிப்பிட்ட செய்தியை (மங்கலப் பொருத்தம்) மட்டும் வரையறுத்துக் கூறுவதால் இந்நூலுக்கு வரையறுத்த பாட்டியல் என்னும் பெயர் அமைந்திருக்கலாம். இந்நூலுக்குச் 'சம்பந்தப் பாட்டியல்' என்றொரு பெயரும் உண்டு.

இந்நூல் பழைய இலக்கண நூல்களைப் போன்ற அதிகார அமைப்புடனோ இயல் அமைப்புடனோ அமையவில்லை. கட்டளைக் கலித்துறை யாப்பினால் செய்யப்பட்ட முதல் இலக்கண நூலாகிய இது அந்தாதித் தொடை அமைப்பில் உள்ளது.

இந்நூலின் முதல் செய்யுளில் இந்நூலாசிரியர் தமது ஆசிரியருக்கு வணக்கத்தையும், நூல் செய்ததன் நோக்கத்தையும் குறிப்பிட்டுள்ளார்.

இரண்டாவது செய்யுள் அவையடக்கம் ஆகும். மூன்றாவது செய்யுளில் இந்நூலினால் வரும் பயன் குறித்துக் கூறப்பட்டுள்ளது. நான்காவது செய்யுளிலிருந்து பாட்டியல் செய்தி தொடங்குகிறது.

இதற்கு முன்னர்த் தோன்றிய பாட்டியல் நூல்கள் மங்கலப் பொருத்தத்தில் மங்கலச் சொற்களின் பட்டியலை மட்டுமே தந்தன. ஆனால் இந்நூலில் இன்னின்ன எழுத்துகளுக்கு இன்னின்ன மங்கலச் சொற்கள் உரியன எனக் கூறப்பட்டுள்ளது. பொதுவான பாட்டியல் இலக்கணக் கொள்கையிலிருந்து பொருத்தச் செய்தியை மட்டும் தனியே பிரித்து, தனியொரு பாட்டியல் இலக்கணக் கோட்பாட்டை உருவாக்க முயன்றுள்ளமையை இந்நூலின் சிறப்பாகக் கருதலாம். இதன் காலம் 14ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதி[31] ஆகும்.

## உரிச்சொல் நிகண்டு

இந்நிகண்டு உரிச்சொற்களைத் திரட்டிக் கூறினமையால் உரிச்சொல் நிகண்டு எனப் பெயர் பெற்றது. இதன் ஆசிரியர் காங்கேயர் ஆவார். உரிச்சொல் நிகண்டின் காலம் இதுவரை இன்னதெனத் திட்டமாகச் சொல்ல முடியவில்லை. இதன் காலம் கி.பி. 1400க்குச் சற்று முற்பட்டது என்பர்[32]. இதன் காலத்தை 17ஆம் நூற்றாண்டு என்று கூறுவாரும் உளர்[33].

இந்நூல் 287 வெண்பாக்களால் ஆனது. தேவப் பெயர்த் தொகுதி முதல் பல்பெயர்க்கொருபெயர்த் தொகுதி ஈறாகப் பன்னிரு தொகுதிகளை யுடையது. இதில் 3200 சொற்களுக்குப் பொருள் விளக்கம் தரப் பட்டுள்ளது. இதனை முதன் முதலில் 1840இல் புதுவை அரசினர் அச்சுக்கூடத்தில் பதிப்பித்துள்ளனர்.

## இலக்கண உரைகள்

இறையனார் களவியல் உரையே தமிழில் தோன்றிய முதல் உரையாகும். இதனை அடுத்து 13ஆம் நூற்றாண்டு வரை பல உரைகள் தோன்றின. பாண்டியர் காலத்தில் தோன்றிய முதல் உரையாகக் கருதப்படுவது மயிலைநாதர் எழுதிய நன்னூல் விருத்தியுரையே. இவருக்குப் பின் பரிதியார் திருக்குறளுக்கு உரை எழுதியிருக்கலாம் என்பர். தொல்காப்பியத்திற்கு இக்காலத்தில் எழுந்த உரைகளே அதிகம். இக்காலத்திய நச்சினார்க்கினியரின் உரை குறிப்பிடத்தக்கது.

### மயிலை நாதர்

நன்னூலுக்கு உரை எழுதியவருள் மயிலைநாதர் பழைய உரையாசிரியர் ஆவார். வழக்கத்திலிருக்கக்கூடிய சங்கர நமசிவாயர் உரையைவிடக் காலத்தால் முந்தியது மயிலைநாதர் உரையே. இவருக்கு முன்பு நன்னூலுக்கு உரைகள் இருந்ததை உரையின் வாயிலாக அறியலாம். அவ்வுரைகள் கிடைக்கவில்லை.

இவர் சைன சமயத்தினர். நன்னூலைச் செய்வித்த சீயகங்கனைப் பற்றிக் குறிப்பிடுவதாலும், குடிப் பெயருக்கு எடுத்துக்காட்டாகக் 'கங்கன்' என்ற பெயரைக் கூறுவதாலும் மயிலைநாதர் கங்க மரபினரால் ஆதரிக்கப் பெற்றிருக்கலாம் என்று உ.வே.சா. கருதுகிறார். மயிலைநாதரின் காலம் 14ஆம் நூற்றாண்டு[34] ஆகும்.

உரையைச் சுவைபட எழுதுவதில் இவர் வல்லுவர். எதுகை, மோனைத் தொடைகளை நயம்படக் குறிப்பிடுவார். நூலாசிரியர்களுக்கு அடைமொழி கொடுத்து அழைப்பதை இவரது உரைகளில் பரக்கக் காணலாம். இவரது உரையிலக்கணம் முழுமை பொருந்தியது. சுருக்கியும், விரித்தும், தனியாகவும், பிண்டமாகவும் இவரது உரை அமைந்திருக்கும்.

நன்னூலில் காணப்படும் பாயிரம் பவணந்தி எழுதியது அல்ல என்பதை இவரது உரை கூறுகிறது. 'ஐம்பெருங் காப்பியங்கள்' என்பதைத் தொகையாக்கி முதன்முதலில் வழங்கியவர் இவரே என்பர்[35].

## நச்சினார்க்கினியர்

'உச்சிமேற் புலவர் கொள் நச்சினார்க்கினியர்' என்று பாராட்டப் பெறுபவர் இவர். 'நச்சர்' என்று சுருக்கமாகவும் இவரை அழைப்பதுண்டு. அத்துடன் 'மதுரையாசிரியர்' என்னும் பெயரும் இவருக்குண்டு. இவர் மதுரையில் பிறந்தவர். இவரது காலம் 14ஆம் நூற்றாண்டு[36] ஆகும்.

இளம்பூரணருக்கு அடுத்ததாகத் தொல்காப்பியம் முழுமைக்கும் உரைகண்டவர் இவர் மட்டுமே. ஆனால், தொல்காப்பியப் பொருளதிகாரத்தில் உள்ள உவமவியல், மெய்ப்பாட்டியல், செய்யுளியல், மரபியல் ஆகியவற்றிற்கு இவர் எழுதிய உரை தற்போது கிடைக்கவில்லை. பத்துப்பாட்டு முழுமைக்கும் இவர் உரை எழுதியுள்ளது குறிப்பிடத்தக்கது. சீவகசிந்தாமணி, கலித்தொகை, குறுந்தொகை (20 பாடல்கள்) ஆகிய இலக்கியங்களுக்கும் உரை எழுதியுள்ளார்.

நச்சினார்க்கினியர் இன்றியமையாத இடங்களில் பதப் பொருளையும், இலக்கணக் குறிப்பையும் எழுதுவார். கொண்டு கூட்டிப் பொருளுரைக்கும் முறை இவரது உரைச் சிறப்பாகும். மூல நூல்மீது தனது கருத்தை ஏற்றியும், முந்தைய உரைகளைக் கண்டித்தும் எழுதும் தன்மை இவரிடம் உண்டு. விளக்கமாக உரை எழுதும் இவரது சிறப்பை அயல்நாட்டவரும் புகழ்ந்துள்ளனர்[37].

## அடிக்குறிப்புகள்

1. பாலூர் கண்ணப்ப முதலியார்,தமிழ் நூல் வரலாறு, ஆசிரியர் நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1962, ப. 297.
2. மு. அருணாசலம், தமிழ் இலக்கிய வரலாறு, பதினான்காம் நூற்றாண்டு, ப. 88.
3. பாலூர் கண்ணப்ப முதலியார், தமிழ் நூல் வரலாறு, ப. 298.
4. மு. அருணாசலம், தமிழ் இலக்கிய வரலாறு, பதினான்காம் நூற்றாண்டு, காந்தி வித்தியாலயம், மாயூரம், 1969, ப. 20
5. மேற்படி நூல், ப. 22.
6. மேற்படி நூல், ப. 32.
7. மேற்படி நூல்,ப. 335.
8. மேற்படி நூல், ப. 334
9. மேற்படி நூல், ப. 323.
10. மேற்படி நூல், ப. 143.
11. மேற்படி நூல், ப. 131.
12. பாலூர் கண்ணப்ப முதலியார்,தமிழ் நூல் வரலாறு, ப. 262.
13. மேற்படி நூல், ப. 263.
14. மேற்படி நூல், ப. 263.
15. மேற்படி நூல், ப. 264.
16. மேற்படி நூல், ப. 267.
17. மு. அருணாசலம், தமிழ் இலக்கிய வரலாறு, பதினான்காம் நூற்றாண்டு, ப. 177.
18. மேற்படி நூல், ப. 206.
19. மேற்படி நூல், ப. 423.
20. மேற்படி நூல், ப. 66.
21. மேற்படி நூல், ப. 414.
22. கஜபதி ஜைன் (மொ.ஆ.)., ஜைன ராமாயணம், ஜைன இளைஞர் மன்றம், சென்னை, 1979, முன்னுரை, பக்கம். viii, ix.
23. மு. அருணாசலம்,தமிழ் இலக்கிய வரலாறு, பதினான்காம் நூற்றாண்டு, ப. 296.
24. மேற்படி நூல், ப. 413.
25. இந்தியப் பல்கலைக்கழக முப்பதாவது கருத்தரங்க ஆய்வுக் கோவை, தொகுதி 1, 1999, ப. 249.

26. மு. அருணாசலம், தமிழ் இலக்கிய வரலாறு, பதினான்காம் நூற்றாண்டு, ப. 303.
27. மேற்படி நூல், ப. 416.
28. மேற்படி நூல், ப. 416.
29. மேற்படி நூல், ப. 413.
30. மேற்படி நூல், ப. 99.
31. மேற்படி நூல், ப. 101.
32. மேற்படி நூல், ப. 103.
33. இரண்டாம் உலகத்தமிழ் மாநாட்டுக் கருத்தரங்கக் கையேடு, சென்னை, 1968, ப. 52.
34. மு. அருணாசலம், தமிழ் இலக்கிய வரலாறு, பதினான்காம் நூற்றாண்டு, ப. 113.
35. மேற்படி நூல், ப. 114.
36. மேற்படி நூல், ப. 115.
37. பாலூர் கண்ணப்ப முதலியார், தமிழ் நூல் வரலாறு, ப. 324

    Dr. Bower இவரைப் பற்றிக் கூறும்போது, Nachinarkiniar's comments are very much on the plane of European annotations. He paraphrases the text, and points out grammatical peculiarities; his style is condensed and his language pedantic எனக் குறிப்பிடுகின்றார்.

# 7. கலைகள்

## (அ) கட்டடக் கலை

முற்காலப் பாண்டியர்கள் கட்டடக்கலையை வளர்ப்பதில் பேரார்வம் கொண்டு விளங்கினர். கி.பி. 6 - 7ஆம் நூற்றாண்டில் தமிழ்நாட்டில் ஏற்பட்ட பக்தி இயக்கம் பாண்டிய நாட்டில் வேரூன்றிக் கோயில்கள் எடுப்பிக்கப்படுவதற்கு வழிவகை செய்தது. மாறன் சேந்தனின் 17ஆம் ஆட்சியாண்டில் அமைக்கப்பட்ட மலையடிக்குறிச்சி குகைக்கோயில் (கி.பி.620 - 42) பாண்டிய நாட்டின் குடைவரைக் கலைக்கு ஓர் எடுத்துக்காட்டாகும். இப்பணி பல்லவர் கட்டடக்கலைக்குப் பின்னர் தொடங்கப்பட்டது.

மலையடிக்குறிச்சியில் அமைக்கப்பட்ட குடைவரைக்கோயில் சிறிய மண்டபத்துடனும் ஒரு கருவறையுடனும் விளங்குகிறது. இதுபோன்ற குடைவரைக் கோயில்கள் சற்றேறக்குறைய ஐம்பதுக்கும் மேலுள்ளன. பல்லவர்களுக்குப் பின்னர் பாண்டியர்கள் இத்துறையில் ஈடுபட்டாலும் அவர்கள் கட்டிய கோயில்கள் எண்ணிக்கையில் பல்லவர்களை மிஞ்சிவிட்டது எனக் கே.வி. இராமன் கருதுகிறார்[1]. பாண்டியரின் குடைவரைக் கோயில்கள் பல்லவர்களுடைய குடைவரைக் கோயில்கள் போல் எளிய தோற்றத்துடன் அமைக்கப்பட்டவையாகும். குடைவரையின் பின்புறச் சுவரில் கருவறையும் அவற்றின் முன்புறம் தூண்களுடன் கூடிய மண்டபமும் உள்ளன. குடைவரையின் பக்கச் சுவரில் ஒன்று அல்லது இரண்டு கருவறைகள் அமைக்கப்பட்டிருப்பது பாண்டியரின் கோயில்களில் காணப்படும் தனிச்சிறப்பாகும். குடைவரைக்கோயிலை அமைத்து மகிழ்ந்த பின்னர் பாண்டியர்கள் கட்டுமானக் கோயில்களைக் கட்ட முற்பட்டனர். கட்டுமானக் கோயில் வழக்கத்திற்கு வந்த பின்னர் குடைவரைக் கோயில்களை உருவாக்கும் பணி வெகுவாகக் குறையத் தொடங்கியது.

பாண்டியர்கள் கட்டுமானக் கோயில்களை நடுத்தர அளவில் கட்டினர். கோயிலின் விமானம் 20 அல்லது 30 அடி உயரம் கொண்டவை. விமானம் இரண்டு அல்லது மூன்று நிலைகளைக் கொண்டிருக்கும். கோயில், கருவறை அர்த்தமண்டபம், மகாமண்டபம் போன்ற கட்டட உறுப்புகளைக் கொண்டு விளங்கும். கழுத்தும் (கிரீவமும்) சிகரமும் சதுரவடிவமாகவோ எண்கோண வடிவமாகவோ இருக்கும். பல்லவர்களால் கையாளப்பட்ட அட்டாங்க விமானம், பாண்டியர்களாலும் பாண்டிய நாட்டில் அமைக்கப்படும் வழக்கம் உண்டாயிற்று.

பாண்டிய நாடு சோழர்களுடைய ஆட்சியின்கீழ் கி.பி. 10ஆம் நூற்றாண்டிலிருந்து வந்தபோதிலும் கட்டடக்கலை வளர்ச்சியில்

யாதொரு முன்னேற்றமும் ஏற்படவில்லை. ஆனால் கி.பி. 12ஆம் நூற்றாண்டின் இறுதியில் பாண்டிய நாட்டில் பாண்டியப் பெருவேந்தர்களின் ஆட்சி ஏற்பட்டவுடன் அவர்களுடைய கலைப்படைப்புகள் புத்தொளி பெற்று வளரத் தொடங்கின. முதலாம் சடையவர்மன் சுந்தரபாண்டியன் (கி.பி. 1261-71) தன் வெற்றிகளின் மூலம் திரட்டிய பொன்னையும் பொருள்களையும் கொண்டு பல கோயில் திருப்பணிகளைச் செய்தானென்பதை இவனுடைய திருவரங்கக் கல்வெட்டின் வாயிலாக அறிகிறோம்[2].

கி.பி. 12 - 14ஆம் நூற்றாண்டு வரை ஆட்சி செலுத்திய பாண்டியப் பெருவேந்தர்கள் ஏற்கனவே உள்ள கோயில்களில் வாயிற்கோபுரங்கள், பிரகாரங்கள், மண்டபங்கள் ஆகியவற்றைச் சேர்த்துக் கட்டினர். இவர்களுடைய ஆட்சிக் காலத்தில் எல்லாப் பழைய கோயில்களிலும் பெரிய அளவில் விரிவாக்கம் செய்யும் ஒரு புதிய கட்டம் தொடங்கப்பட்டது. சோழர்களுடைய காலத்தில் கோயிலின் கருவறையின் மீது தோற்றுவிக்கப்பட்ட விமானத்திற்கு முக்கியத்துவம் கொடுக்கப்பட்டது. ஆனால் பாண்டியர்களுடைய காலத்தில் திருமதிலி லுள்ள நுழைவாயிலின் மேல் எழுப்பப்பெற்ற கோபுரங்களுக்குச் சிறப்பிடம் தரப்பட்டது. மன்னர் சிலர் கோயில் கருவறையின் மீது கட்டப்பட்ட விமானங்களைப் பொன்வேய்ந்து மகிழ்ந்தனர்[3]. மேலும் வெளிப்பிரகாரத்திலுள்ள துணைக் கோயில்களையும், மண்டபங்களை யும், கோபுரங்களையும் கட்டுவதில் பேரார்வம் செலுத்தினர். மதுரை மீனாட்சி அம்மன்கோயில், நெல்லையப்பர் கோயில், தென்காசி அழகர் கோயில் ஆகியவை பாண்டியப் பெருவேந்தர் காலத்தில்தான் விரிவாக்கம் செய்யப்பட்டன.

மதுரை மீனாட்சியம்மன் கோயில் திருச்சுற்றுகளும்,கோபுர நுழைவாயில்களும் பாண்டியர்காலக் கட்டடக்கலையைச் சேர்ந்தவை. கிழக்கிலும்,மேற்கிலுமுள்ள கோபுர நுழைவாயில்களின் அதிட்டானங் களும், மற்றும் சில கோயில்களும் பாண்டியர் காலக் கட்டடக் கலையின் தன்மையை வெளிப்படுத்துவனவாக உள்ளன. இங்குள்ள கோபுரங்கள் புனரமைக்கப்பட்டாலும் பெரும்பாலான கோபுரங்களின் உட்புறங்கள் தொடக்கக் காலப் பாண்டியர் கட்டடக் கலையின் சாயலையே கொண்டுள்ளன.

## மதுரை மீனாட்சியம்மன் கோயில் கிழக்குக் கோபுரம்

இக்கோபுரத்தின் அடித்தளம் கருங்கல்லால் கட்டப்பட்டது. இக்கோபுரத்தின் மேல் பகுதியின் நடுவில் சாலையும், இருமருங்கிலும் சாலை, பஞ்சரம், கூடு போன்ற கட்டட அமைப்புகளும் உள்ளன. இக்கோபுரம் ஒன்பது நிலைகளைக் கொண்டு விளங்குகிறது. இதன் உயரம் 150 அடியாகும். இக்கோபுரத்தின் இருமருங்கும் சாய்வாக

வளைந்தும் உட்குழிவான வடிவம் கொண்டும் காணப்படுகிறது. இக்கோபுரம் உயர்ந்து வானளாவப் பரந்து கலையுணர்வைத் தூண்டக் கூடியதாகவுள்ளதெனப் பெர்சிபிரவுன் என்பவர் தன் "இந்தியக் கட்டடக் கலை" எனும் நூலில் குறிப்பிட்டுள்ளார்[4].

இக்கோயிலிலுள்ள வெளிப்புறக் கோபுரங்களில் மிகவும் பழைமையானது கிழக்குக் கோபுரமேயாகும். அதில் சிறிதளவே பழைமையை வெளிப்படுத்தக்கூடிய கட்டட உறுப்புகள் உள்ளன. இக்கோபுரத்திலுள்ள தேவ கோட்டங்களும் கூடுகளும் மிகவும் அழிந்த நிலையிலுள்ளன. இக்கோபுர நுழைவாயிலின் கதவு 35 அடி உயரம் உள்ளது. அழகிய வேலைப்பாடுகளுடன் திகழ்வது குறிப்பிடத்தக்க தாகும். இக்கோபுரத்தின் மீது செங்கற்களால் கட்டப்பட்ட ஒன்பது நிலைகளும் கூடு, பஞ்சரம், சாலை போன்ற கட்டட அமைப்புகளைக் கொண்டு விளங்குகின்றன. இக்கோபுரத்திலுள்ள பழைய சுதை உருவங்கள் அகற்றப்பட்டுப் புதிய உருவங்கள் அமைக்கப்பட்டுள்ளன. இவ்வுருவங்கள் திருவிளையாடல் புராணக் கதைகளை வெளிப்படுத்து வனவாக உள்ளன.

இக்கோபுரத்திலுள்ள கல்வெட்டொன்று முதலாம் சடையவர்மன் சுந்தரபாண்டியனால் (கி.பி. 1250 - 1284) இக்கோபுரம் கட்டப்பட்ட தென்பதைக் குறிப்பிடுகிறது. இக்கோபுரத்தில் பாண்டியர்களின் இலச்சினையான இரண்டு கயல் மீன்கள் செண்டுடன் காணப்படுகின்றன. இக்கோபுரத்தின் இரண்டாம் நிலையிலுள்ள ஐந்து தூண்களில் நான்கு கல்வெட்டுகளுள்ளன. அவை சடையவர்மன் குலசேகரனின் (கி.பி. 1190 - 1218) இரண்டாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு, முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியனின் (கி.பி. 1216 - 1244) 10, 15ஆம் ஆட்சி ஆண்டுக் கல்வெட்டுகள், இரண்டாம் சடையவர்மன் குலசேகரனின் (கி.பி. 1237 - 1256) இரண்டாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டுகளாகும். இரண்டாம் சடையவர்மன் குலசேகரனின் மெய்க்கீர்த்தி 'பூதலவனிறை' என்று தொடங்குவதால் இக்கோபுரத்தின் கட்டுமானப் பணி முதலாம் சடையவர்மன் சுந்தரபாண்டியனுக்கு முன்னர் ஆட்சி செய்த பாண்டியர்களால் தொடங்கப்பட்டு, சடையவர்மன் சுந்தரபாண்டியனால் முடிக்கப்பட்டதென அறியமுடிகிறது[5].

## மதுரை மீனாட்சியம்மன் கோயில் மேற்குக் கோபுரம்

இக்கோபுரம் தொடக்கக் காலக் கட்டட அமைப்புகளுடன் காணப்படுகிறது. இக்கோபுரத்தின் மீது ஒன்பது நிலைகள் கட்டப்பட்டுள்ளன. புராணக் கதைகளைச் சித்திரிக்கும் சுதை உருவங்கள் இக்கோபுரத்தில் காணப்படுகின்றன. இக்கோபுரத்தில் காணப்படும் திருப்பாற்கடலைக் கடையும் காட்சியும், ரிஷபாருடர் சுதை உருவமும் போற்றக்கூடிய அளவில் அமைக்கப்பட்டுள்ளன. 'திருப்பணி விவரம்'

என்னும் நூல் இக்கோபுரம் பராக்கிரம பாண்டியனால் (கி.பி. 1323) கட்டப்பட்டதெனக் குறிப்பிடுகிறது[6]. 'திருப்பணி மாலை' என்னும் நூலும் இதே செய்தியை அறிவிக்கிறது[7]. இக்கோபுர நுழைவாயிலின் உட்பகுதியில் பாண்டியர்களின் இலச்சினையாகிய இரு கயல்மீன்களும் செண்டும் காணப்படுகின்றன. பராக்கிரம பாண்டியனைப் புகழ்ந்து பாடும் கல்வெட்டொன்றும் இங்குக் காணப்படுகிறது.

## அழகர் கோயில்

அழகர்கோயில், மதுரையிலிருந்து வடக்கே 20 கி.மீ. தொலைவிலுள்ளது. இங்குள்ள கள்ளழகர் கோயில் வளாகத்தில் மேட்டுக்கிருட்டிணன் கோயிலொன்றுள்ளது. இக்கோயிலில் ஒரு பெரிய மண்டபம் ஏழு வரிசைகள் கொண்ட தூண்களுடன் காணப்படுகிறது. இம்மண்டபத்தின் தென் பக்கச் சுவரில் முதலாம் சடையவர்மன் சுந்தரபாண்டியனின் கல்வெட்டொன்று பொறிக்கப்பட்டுள்ளது. அக்கல்வெட்டு இம்மண்டபத்தைக் 'கோயில் பொன்வேய்ந்த பெருமாள் திருமண்டப'மெனக் குறிப்பிடுகிறது. இம்மண்டபத்தை முதலாம் சடையவர்மன் சுந்தரபாண்டியன் கட்டினான் என இதன் மூலம் உணரமுடிகிறது[8]. ஏனெனில் அவனுக்குக் ''கோயில் பொன்வேய்ந்த பெருமாள்'' என்ற பட்டப்பெயருண்டு. மேட்டுக் கிருட்டிணன் கோயில் உபானம், பத்மம், குமுதம், கண்டம், கபோதம் போன்ற உறுப்புகளைக் கொண்ட அதிட்டானத்துடன் காணப்படுகிறது. கபோதத்திற்கு மேல் 'கால்' (சுவர்ப் பகுதி) உள்ளது. சுவர்ப் பகுதியிலுள்ள அரைத் தூண்கள் புட்ப போதிகை கொண்டு விளங்குகின்றன. கால் பகுதி மேல் பிரஸ்தரமும், கருவறைக்கு மேல் விமானமும், கிரீவமும், சிகரமும் உள்ளன. அழகர் கோயிலில் காணப்படும் கல்வெட்டுகள் பாண்டிய மன்னர்களும், அவர்களுடைய அதிகாரிகளும், பொது மக்களும் கட்டுவித்த கோயில்களைப் பற்றிக் குறிப்பிடுகின்றன.

முதலாம் சடையவர்மன் குலசேகரனின் அதிகாரியான நரசிங்கன் என்பவன் தன்னுடைய பெயரால் திருப்பரங்குன்றத்தில் ஒரு மண்டபத்தைக் கட்டினான்[9]. சேந்தப்பிள்ளை என்பவன் திருப்பரங்குன்றத்தில் திருக்காமத்துக் கோட்டத்து ஆளுடைய நாச்சியாருக்கு முதலாம் மாறவர்மன் குலசேகரன் ஆட்சியில் கோயிலொன்றைக் கட்டுவித்தான்[10].

## சிதம்பரம் நடராசர் கோயில் மேற்குக் கோபுரம்

சிதம்பரம் நடராசர் கோயிலிலுள்ள வெளிப்புறக் கோபுரங்கள் 150 அடி உயரம் கொண்டவை. கோபுரங்களில் ஏழு நிலைகள் உள்ளன. இக்கோபுரங்கள் சாலை, கோட்டம், கூடு போன்ற கட்டட அமைப்புகளைக் கொண்டு விளங்குகின்றன. இங்குள்ள கோபுரங்களில் மேற்குக் கோபுரம் குறிப்பிடத்தக்கதாகும். மேற்குக் கோபுரத்தின்

நாசிப்பகுதி சுதைச் சிற்பங்களால் அலங்கரிக்கப்பட்டுள்ளது. மேற்குக் கோபுரம் துணைப் பீடம், அதிட்டானம் போன்ற கட்டட உறுப்புகளைக் கொண்டு விளங்குகிறது. கோபுரத்தின் கீழ்ப்பகுதி கல்லால் கட்டப்பட்டுள்ளது. இது இரண்டு நிலைகளைக் கொண்டு விளங்குகிறது. இக்கீழ்ப்பகுதி, துணைப் பீடம், கும்ப பஞ்சரம் போன்ற கட்டட உறுப்புகள் அமைப்பதற்கு ஏற்றாற்போல் கட்டப்பட்டுள்ளது. இம்மேற்குக் கோபுரம் முதலாம் சடையவர்மன் சுந்தரபாண்டியனால் (கி.பி. 1250 - 1284) கட்டப்பட்டது. இக்கோபுரத்தில் ஆலிங்கன சந்திர சேகர மூர்த்தியின் சிற்பமும், கிராதார்ஜுன மூர்த்தியின் சிற்பமும் அழகுற அமைக்கப் பட்டுள்ளன. கோபுர நுழைவாயிலின் கீழ்ப்பகுதியிலுள்ள நிலைத் தூண்களில் கங்கையின் சிற்பமும், யமுனையின் சிற்பமும் இடம் பெற்றுள்ளன. கங்கையின் சிற்பத்தைக் குறிக்கக் 'கங்காதேவி' என்று எழுதப்பெற்றுள்ளது. இத்தேவி திரிபங்க வடிவிலுள்ளாள். இவள் எப்பொழுதும் தன் வாகனமாகிய மகரத்தின் மேலிருப்பதாகக் காட்டப்படுவாள். ஆனால் அவள் வாகனமாகிய மகரம் இங்கு இடம் பெறவில்லையென்பது குறிப்பிடத்தக்கதாகும். யமுனையின் சிற்பமும் திரிபங்க வடிவில் தோற்றுவிக்கப்பட்டுள்ளது. யமுனை தன் கையில் நீலோற்பல மலரைக் கொண்டுள்ளாள். அவளுடைய தலை, கரண்ட மகுடத்தால் அணி செய்யப்பட்டுள்ளது. யமுனையின் வாகனமாகிய ஆமையும் இங்கு இடம்பெறவில்லை. பொதுவாகக் கோபுர நுழைவாயிலின் பக்கமுள்ள நிலைத்தூண்களில் கங்கை, யமுனை போன்ற ஆற்றுத் தெய்வங்களின் சிற்பங்களை அமைக்கும் பொழுது அத்தெய்வங்களின் வாகனங்களாகிய மகரம், ஆமை போன்ற உருவங்களைக் காட்டுவது வழக்கமாகும். இக்கோபுரச் சிற்பங்களை நோக்கும்பொழுது கி.பி. பதின்மூன்றாம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் வாகனங்களை அமைக்கும் வழக்கம் சிற்பிகளால் கைவிடப்பட்டுள்ள தெனத் தோன்றுகிறது.

## திருவானைக்கா சுந்தரபாண்டியன் கோபுரம்

இக்கோபுரம் ஜம்புகேசுவரர் கோயிலின் இரண்டாம் பிரகாரத்தில் கிழக்கேயுள்ளது. ஏழுநிலைகளைக் கொண்டது. கோபுர நுழைவாயில் நிலையில் மேலுள்ள உத்திரத்தில் பாண்டியர்களின் இலச்சினையாகிய இரு கயல்களும் அவற்றிற்கிடையில் செண்டும் பொறிக்கப்பட்டுள்ளன. இக்கோபுரம் 'அய்யன்' கோபுரமென்றும் வழங்கப்படுகிறது. இக்கோபுரத்தில் கல்வெட்டுகள் இல்லை. இக்கோபுரத்தின் ஏழு நிலைகளிலும் அழகிய சிற்பங்கள் அமைக்கப்பட்டுள்ளன. இக்கோபுரத்தின் அளவும் அமைப்பும் சிதம்பரம் மேற்குக் கோபுரத்தின் அளவையும் அமைப்பையும் ஒத்துள்ளதால் இக்கோபுரம் முதலாம் சடையவர்மன் சுந்தரபாண்டியனால் (1250 - 1284)கட்டப்பட்டிருக்கலா மென எண்ணத் தோன்றுகிறது. ஜோவியோ துப்ரேய் இக்கோபுரத்தில்

காணப்படும் போதிகையின் வடிவமைப்பைக் கொண்டு சுமார் கி.பி.1350ஆம் ஆண்டில் இக்கோபுரம் கட்டப்பட்டதாகக் கருதுகிறார்[11]. பாண்டியர்களின் இலச்சினையான கயலும் செண்டும் பாண்டியரின் ஆட்சி வலுவிழந்து வரும் நேரத்தில் - அதாவது கி.பி. 13ஆம் நூற்றாண்டிற்குப் பின்னர் பொறிக்கப்பட்டிருக்கலாமெனக் கருதுகிறார். ''இந்தியக் கட்டடக்கலை'' என்னும் நூலையெழுதிய பெர்சி பிரவுன், இக்கோபுரம் கி.பி. 1250இல் கட்டப்பட்டதாகக் கூறுகிறார்[12]. இக்கோபுர நுழைவாயிலின் இருமருங்கிலும் சங்கநிதி பதுமநிதி ஆகிய சிற்பங்க ளுள்ளன. இக்கோபுரத்தின் வடகிழக்கே துர்க்கையின் சிற்பமும், தென் கிழக்கே க்ஷேத்ரபாலரின் சிற்பமும் காணப்படுகின்றன. இக்கோபுரம் கும்பபஞ்சரம், கூடு போன்ற கட்டட அமைப்புகளைக் கொண்டு அழகாகக் காட்சியளிக்கிறது.

## திருவரங்கம் கோயில் ஆறாவது திருச்சுற்று (பிரகாரம்)

இக்கோயிலின் ஆறாவது திருச்சுற்று (பிரகாரம்) 'கலியுகராமன்' என்னும் பட்டப்பெயர் கொண்ட இரண்டாம் சடையவர்மன் வீரபாண்டியனால் (கி.பி.1254-1285) கட்டப்பட்டது[13]. அங்குள்ள திருவீதியும் கலியுகராமன் என்ற பட்டப்பெயர் கொண்டே விளங்கியது. திருவரங்கம் கோயிலிலுள்ள நான்கு கோபுர நுழைவாயில்களிலும் கி.பி.13ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த கிரந்த எழுத்தில் கலியுகராமன் என்று பொறிக்கப்பட்டுள்ளது. இதன் கீழ் போசளர்களின் இலச்சினையாகிய இருதலைக் கொண்ட கண்ட பேருண்ட பறவை பொறிக்கப்பட்டுள்ளது. இதனை நோக்கும்பொழுது போசளர்களால் கட்டத் தொடங்கப்பட்ட கோபுரம் இரண்டாம் சடையவர்மன் வீரபாண்டியனால் கட்டி முடிக்கப் பெற்றிருக்கலாமென எண்ணத் தோன்றுகிறது. கோபுர நுழைவாயில் நிலையின் மேலுள்ள உத்திரத்தில் பாண்டியர்களின் இலச்சினையாகிய இரு கயல்களும் அவைகளுக்கிடையில் செண்டும் பொறிக்கப்பட்டுள்ளன.

சோழநாட்டில் பாண்டியர்களால் கட்டப்பட்ட கோயில் ஒன்று உள்ளது. அது சிதம்பரத்திற்கு அருகிலுள்ள காட்டுமன்னார் குடியிலுள்ள வீரநாராயணப் பெருமாள் கோயிலாகும். தொண்டை நாட்டில் காட்டுமன்னார் குடியிலுள்ள திருமால் கோயிலைப் பாண்டியர்கள் கல்லால் அமைத்துள்ளனர்

## திருவதிகை வீரட்டானேசுவரர் கோபுரம்

திருவதிகை வீரட்டானேசுவரர் கோயிலில் இரண்டு கோபுரங்கள் உள்ளன. அவற்றில் ஒரு கோபுரம் சிறியதாகும். அக்கோபுரம் ஐந்து நிலைகளைக் கொண்டு விளங்குகிறது. அக்கோபுரத்தில் பாண்டியரின் இலச்சினையாகிய இரு கயல்களும் அவற்றிற்கிடையில் செண்டும் பொறிக்கப்பட்டுள்ளன. இக்கோபுரத்தில் கோப்பெருஞ்சிங்கன், திரிபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீவீரபாண்டியதேவர், ஸ்ரீவிக்கிரம

பாண்டியதேவர், ஸ்ரீவல்லபதேவர் ஆகியோரின் கல்வெட்டுகள் உள்ளன. எனவே, கோப்பெருஞ்சிங்கன் காலத்திற்கும் முன்னர் பாண்டிய மன்னன் ஒருவனால் இக்கோபுரம் கட்டப்பட்டிருக்க வேண்டும்[14]. இக்கோபுரம் முழுமையாகக் கட்டிமுடிக்கப்படாமல் அரைகுறையாக நின்றுவிட்டது.

## கல்வெட்டுகள் வாயிலாக அறிய முடியும் பாண்டியர் கோயில்கள்

பாண்டியப் பெருவேந்தர்களின் காலத்தில் மன்னர்களாலும், அரசு அலுவலர்களாலும், மக்களாலும் கட்டப்பட்ட கோயில்களைப் பற்றியும் அவை தொடர்பான ஏனைய கட்டடங்களைப் பற்றியும் கல்வெட்டுகளின் வாயிலாக அறியமுடிகிறது.

சான்றாக, முதலாம் மாறவர்மன் குலசேகரன் (1268-1318) தன் பெயரால் திருமோகூரில் வேலநாதன் என்ற கோயிலைக் கட்டினான்[15]. மதுரை மாவட்டத்தில் குருவித்துறை என்ற ஊரில் கண்டறியப்பட்ட 'பூதலமடந்தை' என்று தொடங்கும் மெய்க்கீர்த்திகொண்ட சடையவர்மன் குலசேகரனின் கல்வெட்டு சோழாந்தகச் சதுர்வேதி மங்கலத்திலுள்ள திருச்சக்கரத்தாழ்வார் கோயில் மண்டபமும், மாளிகையும் கட்டு வித்ததைக் குறிப்பிடுகிறது[16].

தடங்கண்ணிச் சிற்றூரைச் சேர்ந்த முதலாம் மாறவர்மன் சுந்தர பாண்டியனுடைய அமைச்சர் குருகுலத்தரையன் திருத்தங்கல் என்னும் ஊரில் நின்ற நாராயணன் பெருமாளுக்குக் கருவறையும் இடைநாழிகை யும் மகாமண்டபமும் கொண்ட எழில்மிகு கோயிலைச் சக ஆண்டு 1149-இல் (கி.பி.1227) கட்டினான்[17].

## குள்ளபுரம் நீலகண்டேசுவரர் கோயில்

குள்ளபுரம் பண்டை நாளில் இராசசூடாமணி சதுர்வேதிமங்கலம் என்ற பெயரில் அழைக்கப்பட்டது. பிற்காலத்தில் இது குள்ளபுரம் என்றும் கிருஷ்ண பூபாலசமுத்திரம் என்றும் அழைக்கப்பட்டு வந்துள்ளது. இவ்வூரில் சிவனுக்கும் திருமாலுக்குமாகக் கட்டப்பட்ட இரண்டு கோயில்கள் உள்ளன.

சிவன்கோயிலின் மூலவர் பெயர் நீலகண்டேசுவரர் என்று அழைக்கப்பட்டு வருகிறது. இறைவியின் பெயர் அன்னபூரணி எனச் சொல்லப்படுகிறது. இக்கோயில் கிழக்குப் பார்த்துள்ளது. இக்கோயிலின் கருவறை, இடைநாழிகை (அர்த்தமண்டபம்), மகாமண்டபம், முக மண்டபம் ஆகிய பகுதிகள் பாண்டியர் காலத்துப் பணியாகும். விமானத்தின் அதிட்டானம் முதல் பிரஸ்தரம் வரை உள்ள பகுதிகள் கருங்கல்லால் கட்டப்பட்டுள்ளன. இது அதிட்டானம், உபானம், ஜகதி, முப்பட்டை குமுதம், கண்டம், பட்டிகை, வேதிகை ஆகிய உறுப்புகளை

உடையது. பிரஸ்தரத்தில் பூதவரியிலும், யாளி வரியிலும் சிற்பங்கள் இல்லை. கபோதக வரியில் மட்டும் கூடுகளில் சிற்பங்கள் உள்ளன. இக்கோயில் பிற்காலப் பாண்டியர் காலத்தது.

## உத்தண்ட சௌந்தரராசப் பெருமாள் கோயில்

இந்த விட்ணு கோயிலின் விமானம், கருவறை, இடைநாழிகை (அர்த்தமண்டபம்), முகமண்டபம் ஆகிய பகுதிகள் பிற்காலப் பாண்டியர் காலத்தன எனக் கருதப்படுகிறது. இதன் கிரீவமும், சிகரமும் நாகர வடிவுடையவை. கருவறை புறச்சுவரின் கர்ணகூடு பத்தியும், முகபத்திர பத்தியும் முன்புறம் பிதுங்கியும், அகாரை பத்தி உள்ளடங்கியும் இருப்பது இக்கோயில் கட்டடக் கலையின் சிறப்பு அம்சமாகும்.[18] அதிட்டான மானது உபானம், ஜகதி, முப்பட்டை, குமுதம், கண்டம், பட்டிகை, வேதிகை ஆகிய பகுதிகளைக் கொண்டுள்ளது. இக்கோயில் கி.பி.13 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியைச் சார்ந்தது.

## தருவை சிவன் கோயில்

திருநெல்வேலியிலிருந்து எட்டு கிலோ மீட்டர் தொலைவில் தருவை என்னும் சிற்றூர் உள்ளது. அவ்வூரில் வாளவல்ல பாண்டீசுவரர் என்னும் சிவன் கோயிலுள்ளது. இக்கோயில் கி.பி.13ஆம் நூற்றாண்டில் இரவி சங்கரன் என்னும் கூபகராயனால், இரண்டாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் காலத்தில் கட்டப்பட்டது. இக்கோயில் கருவறை, இடைநாழிகை (அர்த்த மண்டபம்) முகமண்டபம் போன்ற கட்டடப் பகுதிகளைக் கொண்டு விளங்குகிறது[19].

பாண்டியப் பெருவேந்தர்களின் காலத்தில் கட்டப்பட்ட மேற்கூறிய கோபுரங்களும், மண்டபங்களும், கோயில்களும் கட்டடக்கலை வரலாற்றில் ஒரு குறிப்பிடத்தக்க இடத்தைப் பெற்றுள்ளன. அவர்கள் எடுப்பித்துள்ள கோபுரங்களின் அடித்தளம் கருங்கல்லாலும், மேல்தளம் சுதையாலும் கட்டப்பட்டிருக்கும். அதில் எண்ணற்ற சிற்பங்கள் இடம்பெற மாடங்களும், கூடுகளுமிருக்கும். கோபுர நுழைவாயில் நிலையில் பாண்டியருடைய இலச்சினையாகிய இரு கயல் செண்டுடன் பொறிக்கப்பட்டிருக்கும். கோபுரத்தின் அடித்தளத்தில் சுற்றியிருக்கும் அரைக்கம்பங்களும், மாடங்களும் நல்ல வேலைப்பாடு களுடன் காணப்படும். கும்ப பஞ்சரம், கோஷ்டபஞ்சரம் போன்ற அரைக்கம்பங்களுமிருக்கும். மண்டபங்களில் இடம்பெறும் தூணிலுள்ள இதழ் சோழர்காலத்தூணிலுள்ள இதழைக் காட்டிலும் முனைப்பாய் இருக்கும். போதிகை மேற்கவிழ்ந்து தொங்குகிற உறுப்பாய் உருவாக்கப்பட்டிருக்கும். தூணிலுள்ள பலகையும் சற்று அகலமாய் இருக்கும். தூண்களில் நாகபந்தம் இடம் பெற்றிருக்கும்.

கோயிலிலுள்ள தேவகோட்டங்கள் வெற்றிடமாக இருக்கும். ஒரு சில கோயில் தேவகோட்டங்களில் அரிதாகச் சிற்பங்கள் காணப்பெறும். சான்றாகச் சோழவந்தான் அருகிலுள்ள தென்கரைக் கோயிலிலும் காளையார் கோயில் அருகிலுள்ள திருவேகம்பத்துடையார் கோயிலிலும் தேவ கோட்டங்களில் சிற்பங்கள் காணப்படுகின்றன. கருவறையின் மேல் தளத்தில் சாய்சதுர வடிவில் கற்களை அடுக்கிக் கூரை அமைக்கும் பணி இக்காலத்தில் மேற்கொள்ளப்பட்டது. இதனைச் சிதம்பரம் நடராசர் கோயிலிலும், குடுமியான்மலை திருநலக்குன்றமுடைய நாயனார் கோயிலிலும் காணலாம்.

கட்டடங்களின் அழகிற்கு அழகூட்டிய பாண்டிய நாட்டுக் கட்டடக் கலைஞர்கள் அணி வேலைப்பாடுகளைப் புகுத்தினர். வரலாற்றறிஞர் பேராசிரியர் க.அ.நீலகண்ட சாத்திரி கூறியுள்ளது போல் சோழர் காலக் கட்டடக் கலை அடக்கமான முதிர்ச்சியுடையது. பிற்கால விசயநகரக் கலை மிக நேர்த்தியாக இருந்தாலும் அளவுகடந்த அணிவேலைப் பாட்டுக் கூறுகளை உடையது. இவ்விரு கலைப்பாணிகளும் ஒன்று மற்றொன்றாய் மாறுவதற்குத் தேவையான இடைக்காலப் பாணியாகப் பாண்டியர் கலை விளங்கியது[20].

மேற்கூறியவற்றிலிருந்து பாண்டியப் பெருவேந்தர் காலக் கட்டடக் கலைத் தமிழகக் கட்டடக் கலை வரலாற்றில் ஓர் உன்னதமான இடத்தைப் பெற்றுத் திகழ்கிறதெனத் தெளியலாம்.

## அடிக்குறிப்புகள்

1. டாக்டர் கே.வி.ராமன் - பாண்டியர் வரலாறு, தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம் - 1977ஆம் ஆண்டு, பக்கம் - 272
2. M.E.R. 19 of 1899.
3. டாக்டர் கே.வி. ராமன் - பாண்டியர் வரலாறு, தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம் - 1977, பக்கம் எண். 279
4. Percy Brown, Indian Architecture. Buddhist & Hindu Periods, Sixth Reprint 1971.
5. Dr. (Miss) Devakunjari, Madurai through the Ages, 1979 P.No.222
6. Ibid. page 223.
7. Ibid. page 223.
8. Ibid. Page No.152
9. M.E.R. 251 of 1942
10. M.E.R. 337, 338, 339 of 1918

11. Jamea C.Haris Temple gateways in South India, 1963 page - 77
12. Ibid.
13. Dr. A.J.Thinakaran, The Second Pandiyan Empire (A.D.1190-1312) 1987 Madurai, page Nos. 202, 203
14. முனைவர் மார்க்சீயகாந்தி, திருவதிகை வீரட்டானம் - 1994 பக்கம் 70
15. M.E.R. 80 of 1905, M.E.R. 176 of 1892.
16. M.E.R. 327 of 1908
17. M.E.R. 554 of 1922
18. பராக்கிரமபாண்டியபுரம் - பாண்டியர்காலக் கல்வெட்டும் கலையும் - மா. சந்திரமூர்த்தி, வெ.வேதாசலம் - அச்சில் வராத ஆய்வேடு 1978.
19. திரு. நடன. காசிநாதன், காலச்சுவடுகள் 1973, பக்கம் 65
20. K.A. Nilakanda Sastri, A History of South India, Third Edition, 1966, page 473.

# (ஆ) ஓவியக் கலை

தமிழகத்தில், தொல்பழங்காலத்தில் மனிதன் வாழ்ந்திருந்த தற்கான சான்றுகள் பல கிடைத்துள்ளன. அவற்றுள் ஒன்றான ஓவியங்கள் பல இடங்களில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. தொல்பழங்கால ஓவியங்களை அடுத்து, சங்க கால அரசர், பல்லவர், சோழர், பாண்டியர், விசயநகர வேந்தர், நாயக்கர், மராட்டியர், சேதுபதிகள் ஆகிய அரச மரபினரின் காலக் கட்டங்களைச் சேர்ந்த ஓவியங்கள், அக்காலத்திற்குரிய கோயில்கள், மண்டபங்கள், அரண்மனைகள் ஆகிய இடங்களில் காணப்படுகின்றன.

தமிழக ஓவியக்கலை வரலாற்றில் முற்காலப் பாண்டியர் காலத்தைச் சேர்ந்த சித்தன்ன வாசல் ஓவியங்கள், புகழ் பெற்றவை களாகும். முற்காலப் பாண்டியர் காலத்திய ஓவியங்கள் போன்று பாண்டியப் பெருவேந்தர் கால ஓவியங்கள் அதிக அளவில் கிடைக்கவில்லை. ஆயினும் இக்காலக்கட்டத்தைச் சேர்ந்த ஓவியங்கள் திண்டுக்கல் மாவட்டம் சித்தையன் கோட்டை என்ற இடத்தில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன[1].

## சித்தையன் கோட்டை

திண்டுக்கல் மாவட்டம் ஆத்தூருக்கு அருகில் சித்தையன் கோட்டை என்ற ஊருக்கு வடக்கே உள்ள ஆண்டுரணி என்னும் குளத்திற்கு அருகில் உள்ள புஞ்சைக் காட்டுப் பகுதியில் சிவன் கோயில் ஒன்று காணப்படுகின்றது. இக்கோயிலில் காணப்படும் கல்வெட்டுகளும், கோயிலின் கட்டட அமைப்பும் இக்கோயில் கி.பி. 13ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தது என்பதை உறுதி செய்கின்றன.

## கட்டட அமைப்பு

இக்கோயிலின் கட்டட அமைப்பு சிறிய கருவறையுடனும் முன்புறமுள்ள அர்த்தமண்டபத்துடனும் காணப்படுகின்றது. கருவறையில் உள்ள சிவலிங்கம் ஆவுடையாருடன் உள்ளது. மேல் விமானத்தின் பகுதி சிதைந்துள்ளது. கருவறைச் சுவரிலும் அர்த்த மண்டபச் சுவர்களிலும் தேவகோட்டங்களும், கும்பப்பஞ்சரங்களும் மாறி மாறி அமைக்கப் பட்டுள்ளன.

## கல்வெட்டுகள்

இக்கோயிலின் வடபுற அதிட்டானப் பகுதியில், பிற்காலப் பாண்டியர்களின் சிற்றரசர்களான சேதிராயர்களின் நான்கு கல்வெட்டுகள் காணப்படுகின்றன. இவர்களின் ஆட்சிப் பகுதியாக ஆற்றூர் நாடு, நெடுங்களநாடு போன்றவை இருந்துள்ளன எனக் கல்வெட்டின் மூலம் தெரிகின்றது[2].

எடுப்புபொத்தி அஞ்சாத பெருமானான சேதிராயன் என்பவன் தனது தந்தையான பொத்தியான் சேதிராயன் பெயரால் சிவாலயம் எடுப்பித்ததும், தானங்கள் அளித்ததும், அவற்றை நிருவகிக்கும் பொறுப்பை ஆமுண்ண மடத்து ஸ்ரீ நந்தி தேவரிடம் அளித்ததுமான செய்திகள் இக்கல்வெட்டுகள் மூலம் தெரிகின்றன. மேலும் இவ்வூரின் அண்மையில் தென்கரையில் உள்ள கோயிலின் சொத்துகளும் தாபாஸ்ய மடம் மூலம் நிருவகிக்கப்பட்டதை அக்கோயில் கல்வெட்டு கூறுகின்றது. இக்கோயிலை எடுப்பித்த சேதிராயர்களின் பெயராலேயே இக்கோயில் சேதிராய ஈசுவரம் என்றும், இறைவன் சேதிராய ஈசுவரமுடையார் என்றும் வழங்கப்பட்டுள்ளது. இப்பகுதி சிறந்த வணிகத் தலமாக விளங்கியது என்பதையும் ஐயம் பொழில் ஆயிரத்து ஐந்நூற்றுவர் என்ற வணிகக் குழுக்கள் இருந்துள்ளன என்பதையும் கல்வெட்டுகள் மூலம் அறிய முடிகின்றது.

## ஓவியங்கள்

தெற்குப்பக்க வெளிப்புறச் சுவரில் பிற்காலப் பாண்டியர் காலத்தைச் சார்ந்த அருமையான வண்ண ஓவியங்கள் காணப்படுகின்றன. கருவறையின் தென்புறத் தேவ கோட்டத்தில் தென்திசைக் கடவுளான தட்சிணாமூர்த்தி உருவமும், அர்த்த மண்டபப் பகுதியில் உள்ள தேவ கோட்டத்தில் ஆடல் வல்லானான நடராசப் பெருமானின் திருவுருவமும், அவரது ஆடலைக் கண்டுகளிக்கும் சிவகாமியின் உருவமும் எழிலார்ந்த ஓவியங்களாகத் திகழ்கின்றன.

## தட்சிணாமூர்த்தி

இறைவன், வலது காலைத் தொங்கவிட்டு இடது காலை வலது காலின் மீது மடித்து வைத்து அமர்ந்த நிலையில் காட்சி அளிக்கின்றார். இவரின் தலைப்பகுதி அழிந்துள்ளது. தட்சிணாமூர்த்தியின் அருகில் இரண்டு முனிவர்கள் தாடியுடன் காட்சியளிக்கின்றனர். அவர்களின் அருகில் மானின் உருவமும் வேறு சில விலங்குகளின் உருவங்களும் தீட்டப் பெற்றுள்ளன.

கல்லாலின் புடையமர்ந்து நான் மறை
ஆறங்கமுதல் கற்ற கேள்வி
வல்லார்கள் நால்வருக்கும் வாக்கிருந்த
பூரணமாய் மறைக்கப் பாலாய்
எல்லாமாய் அல்லதுமாய் இருந்ததனை
இருந்தபடி இருந்து காட்டிச்
சொல்லாமல் சொன் னவரை நினையாமல்
நினைந்துபவத் தொடக்கை வெல்வாம்

என்ற திருவிளையாடற் புராணப் பாடலை இங்கு நினைக்கத் தோன்றுகிறது.

## நடராசர்

இடக்காலைத் தூக்கி ஆடும் நிலையில் உள்ள நடராசர், மேல் வலக்கரத்தில் உடுக்கையும், மேல் இடக்கரத்தில் அக்கினியும் ஏந்தியுள்ளார். வலக் கீழ்க்கை அபய முத்திரையுடனும் இடக் கீழ்க்கை வீசிய கரமாகவும் பார்ப்போரைப் பரவசப்படுத்தும் வண்ணம் தீட்டப்பெற்றுள்ளன. அருகில் இடப் புறத்தில் சிவகாமி அம்மை நின்ற கோலத்தில் காட்சியளிக்கின்றாள்.

## ஓவியங்களின் தன்மை

ஓவியங்கள் அனைத்தும் மஞ்சளும், வெண்மையும் கலந்த பழுப்பு நிற அடித்தளத்தின் மீது, செம்பஞ்சுக் குழம்பு வண்ணத்தில், மெல்லிய கோடுகளாகத் தீட்டப்பட்டுள்ளன. இக்கோயில் கட்டப்பட்டபோது, கோயிலின் வெளிப்புறப் பகுதி அனைத்துமே அழகிய வண்ணங்களால் பூசப்பெற்றிருந்திருக்க வேண்டும் எனத் தோன்றுகின்றது. ஏனெனில் கோயிலின் வெளிப்புறப் பகுதிகளில் ஆங்காங்கே வண்ண எச்சங்களும் வண்ணக் கோடுகளும் காணப்படு கின்றன. இவை பிற்காலத்தில் இயற்கையின் சீற்றத்தால் அழிந்திருக்கலாம். தற்போது கிடைத்துள்ள தேவகோட்டங்களின் ஓவியங்களே பாண்டியப் பெருவேந்தர் காலத்தின் ஓவியக் கலைக்குச் சிறந்த சான்றாகத் திகழ்கின்றன. இவ்வோவியங்கள் மாடத்தை அலங்கரிக்கும் சிலைகளுக்குப் பதிலாகச் சித்திரமாகக் காணப்படு கின்றன. பெரும்பாலும் பிற்காலப் பாண்டியர் கோயில் தேவகோட்டங் களில் சிலைகள் அமைக்கப்படுவதில்லை. எனவே சிலை இல்லாத தேவகோட்டங்களில் சித்திரங்கள் தீட்டப் பெற்றிருப்பது ஒரு புதுமையாகும்.

## போசளர் ஓவியங்கள்

பாண்டியப் பெருவேந்தர்களின் சமகாலக்கட்டத்திலேயே தீட்டப்பெற்றுள்ளவை போசளர்களின் ஓவியங்களாகும். திருச்சியை அடுத்த கண்ணனூரில் போசளேசுவரர் என்ற சிவன் கோயிலைக் கி.பி. 1235இல் வீரசோமேசுவரன் என்பவன் கட்டியுள்ளான்[3]. திருவரங்கத்தில் உள்ள குழலூதும் பிள்ளைக் கோயில், போசள அரசன் வீரராமநாதனால் கட்டப்பட்டது. தற்போது வேணுகோபாலசாமி சன்னதி எனப்படும் இக்கோயில் திருவரங்கப் பெருமான் கோயிலின் வளாகத்தினுள்ளேயே உள்ளது. இக்கோயிலின் முன் மண்டப விதானத்தில் ஓவியங்கள் காணப்படுகின்றன. விதானத்தின் ஒரு பகுதியில் உள்ள கண்ணனின் உருவமும், ஆயர்குலத்து அணங்குகளின் உருவங்களும், அவர்கள் உடுத்தியுள்ள சேலைகளும், அவற்றில் தீட்டப்பட்டுள்ள பொருட்களும், பூக்களும், கொடிகளும், கோடுகளும், கோலங்களும் நம் மனத்தை

எளிதில் கவர்கின்றன. மேலே எடுத்துக் கட்டிய கொண்டை போல் கண்ணனுடைய முடி காட்டப்பட்டுள்ளது. ஆயர் மகளிரின் கொண்டைகள் சற்று சரிந்துள்ளன. இவ்வோவியத்தின் மற்றொரு பகுதியில் கண்ணன் ஆயர் குலப்பெண்ணை இறுக அணைத்தவாறு இருக்கையில் அமர்ந்திருக்கும் நிலையும் காணத்தக்கது. இதற்கு நடுவில் பெரிதாக அமைந்த கட்டத்தினுள் கண்ணன் குழலூதும் காட்சி தீட்டப்பட்டுள்ளது. அவனது வேணுகானத்தில் மயங்கிய பறவைகள் கூடு துறந்து பறந்து வந்து நிற்கின்றன. ஆவின் கூட்டம் மேய் தொழிலை மறந்து கடைவாய் நுரையுடன் கால் பரப்பிக் குழலோசையில் இலயித்திருக்கின்றன. இப்போசளர்களின் ஓவியம் பாண்டியர்கள் கால ஓவியக்கலையைப் பிரதிபலிப்பவையாகக் காணப்படுகின்றன[4].

## விசயநகர அரசர்கள் கால ஓவியங்கள்

கி.பி. 14ஆம் நூற்றாண்டில் விசயநகரப் பேரரசின் கலைப் பாணி பிற்காலச் சோழர், பாண்டியர் மரபினைப் பின்பற்றியதாகக் காணப்படுகின்றது.

காஞ்சிபுரத்திற்கு அருகில் உள்ள திருப்பருத்திக் குன்றத்தில் கி.பி. 14ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த ஓவியங்கள் காணப்படுகின்றன. ஆண், பெண் உருவங்கள் ஒருவருக்கொருவர் முடிசூட்டுவது போலவும், நீராட்டுவது போலவும் சித்திரிக்கப்பட்டுள்ளன. இச்சித்திரங்களில் கருவுற்ற பெண் ஓவியம் குறிப்பிடத்தக்கது[5]. மேலும் திருவண்ணா மலையில் உள்ள யானை வேட்டைக் காட்சியும்[6], காஞ்சிபுரத்தில் அருளாளப் பெருமாள் கோயிலில் 108 வைணவத் திவ்வியத் தலங்களின் காட்சியும், திருவீழிமிழலையில் குழலூதும் கண்ணன், காளிங்க மர்த்தனன், கோபியர் ஆகியோர் காட்சியும் ஆயர்குல அணங்கு ஒருத்தி நெஞ்சிலும் நிறை வயிற்றிலும் சுமையுடன் தாதியர் இருவருடன் நிற்கும் காட்சியும்[7], திருமலையில் சமணத்துறவியர் உருவங்களும் பூவேலைப் பாடுகளும் குறிப்பிடத் தக்கவைகளாகும்[8]. திருவெள்ளறையில் இராமாயணக் கதைக் காட்சிகளும், பூ வேலைப்பாடுகளும் காண் போரைப் பரவசப்படுத்துகின்றன[9]. திருவலஞ்சுழியில், பதினாறு கைகளுடன் தாண்டவமாடும் சிவன், பிச்சாடனர், முனிப்பெண்டிர், இரதி மன்மதன் ஆகிய ஓவியங்களும்[10], திருப்புடைமருதூரில் கப்பலொன்றில் அரேபிய வணிகர்கள் குதிரைகளோடு வந்திறங்கும் ஓவியக் காட்சியும் குறிப்பிடத்தக்கவைகளாகும்[11].

மேலே சுட்டிக்காட்டப்பட்டுள்ள ஓவியுங்கள் பாண்டியப் பெருவேந்தர் காலத்தில் நிலவிய ஓவியக்கலையின் வளர்ச்சி என்று கூறலாம்.

மக்களின் அன்றாட வாழ்க்கை நிலை, சமய நிலை, ஆடை அணிகலன்கள் ஆகியவற்றைச் சித்திரிக்கும் இவ்வோவியங்கள்

பாண்டியப் பெருவேந்தர்காலச் சமுதாயத்தைப் படம்பிடித்துக் காட்டு வதாக உள்ளன. பாண்டியப் பெருவேந்தர் கால ஓவியங்கள் இதுவரை மிகக் குறைந்த அளவே தெரிய வந்திருப்பினும், ஒரு மரபின் ஓவியக் கலையை அறிந்து கொள்ளக்கூடிய வாய்ப்பு இதன் மூலம் கிட்டியுள்ளமை குறித்து இறும்பூது எய்த முடிகிறது.

## அடிக்குறிப்புகள்


1. நடன காசிநாதன், தொல்லியல் நோக்கில், சென்னை - 5, 1993 பக் 32 - 35.
2. ப. சாந்தலிங்கம், 'சித்தையன் கோட்டைக் கல்வெட்டுகள்', ஆவணம், தொ. 4, தமிழகத் தொல்லியல் கழகம், தஞ்சாவூர், சனவரி 1994, பக். 34.
3. என். சேதுராமன், 'பாண்டியர் வரலாறு', கும்பகோணம், 1989, பக் 112.
4. இரா. நாகசாமி, 'ஓவியப்பாவை' தொல்பொருள் ஆய்வுத்துறை, சென்னை. 1979, பக். 121.
5. மேற்படி பக். 123.
6. நடன காசிநாதன். 'தமிழர் நாகரிகம்', தொல்பொருள் ஆய்வுத் துறை, சென்னை 1994, பக். 33.
7. Natana Kasinathan, Delivery system in Ancient Tamil Nadu, கல்வெட்டு காலாண்டிதழ், எண் 35, பக். 34
8. தமிழர் நாகரிகம் பக். 34.
9. V. Vedachalam, Thiruvellarai Paintings, South Indian Studies Vol. I Saher, Madras - 2.
10. ஓவியப்பாவை, பக். 159 - 160.
11. S. Hariharan, Thiruppudaimarudur Paintings, South Indian Studies, Vol. II. Saher, Madras, 1979, Pg. 176.

# (இ) செப்புத்திருமேனிகள்

தென்னிந்தியாவில் குறிப்பாகப் பல்லவர் ஆட்சிக் காலத்திலும் முற்காலப் பாண்டியர் ஆட்சிக் காலத்திலும் செய்து அளிக்கப்பட்ட செப்புத் திருமேனிகள் எண்ணிக்கையில் குறைவே. எனினும் உலகம் போற்றும் மிகச் சிறந்த கலைப்படைப்புகள், சிறப்புமிக்க சோழப் பேரரசின் ஆட்சியின் போது உலோகத்தில் எழுந்தன. இக்கலைச் செல்வங்களைச் செய்யும் கலை ஒரு தனிப்பாணியாக அமைந்து நாட்டையும் விஞ்சும் வண்ணம் சிறப்புற்றது.

சோழர் காலத்துச் செப்புத்திருமேனிகள் மிகவும் மேன்மை வாய்ந்தவை. அளவான உடல்வாகும், அளவிடமுடியாத எழிலும் கொண்டவை. விசயநகர காலத்துச் சிலைகள் சோழர் காலத்துச் சிலை களைவிட உயரமானதாகவும், அணிகள் நிறைந்தும் காணப்பட்டன. நாயக்கர்காலச் சிலைகள் நெடிய தோற்றம், வலுவான உடலமைப்பு ஆகியவற்றைப் பெற்றிருந்தன. பருத்த தசைப்பற்றும் கொண்டிருந்தன.

சோழர்களைத் தொடர்ந்து, பாண்டியப் பெருவேந்தர்களும் இக்கலைப்பணியை ஆதரித்து வந்தனர். உலோகத்தாலான இக்காலத்துக் கலைச் செல்வங்களைப் பாண்டியரது ஆலயங்களில் இன்றும் காணலாம்.

தொடக்கக்காலத்தில் பாண்டியர் காலச் செப்புத் திருமேனிகளில் சோழர்களின் கலைச்சாயல் மிகுதியாகக் காணப்படினும் பிற்காலப் பாண்டியரது சிலைகளில் அவை குறைந்தன, வட்டார வழக்குகளை மண்வாசனையோடு தம்முடன் இணைத்துக் கொண்டன. தனித்தன்மை யுடன் தோன்றத் தொடங்கின.

சோழர்காலத்துச் சிலைகளில் உள்ள முதிர்ச்சியும், மென்மையும் நெகிழ்ச்சியும் இவற்றில் குறைந்திருப்பினும் இவை அளவில் சற்றுப் பெரியதாகவும், செங்குத்தான நீண்ட மகுடங்களைத் தரித்தும், அளவான அணிகள் பூண்டும், அழகுபடுத்தப்பட்டும் அமைந்திருந்தன.

பிற்காலப் பாண்டியர் காலச் சிற்பிகள் தாங்கள் வார்த்த செப்புச் சிலைகளைச் சாதாரண மனித உடலமைப்புடன் வடித்துக்காட்டினர். தசைகளைக் கொண்ட பல பிரிவுகள் வெறும் உடம்பாய்க் காட்டப்பட் டிருப்பது இவற்றில் காணப்படும் சிறந்த அம்சமாகும்.

உடலுறுப்புத் தோற்றங்களும், முகத்திலும் பிற உறுப்புகளிலும் காணப்படும் மேடு பள்ளங்களும், ஒரு குறிக்கோளைக் கொண்டதாயும், அளவு முறைகளில் சிற்பநூல் ஆசிரியர் வகுத்த விதிகளுக்குட்பட்டதாயும் தொன்றுதொட்டு வந்த மரபினைத் தழுவியதாயும் அமைந்தன.

பொதுவாகப் பாண்டியப் பெருவேந்தர் காலச் சிலைகள், தலையில் உயர்ந்த மகுடமும், காதில் மகர ஒலைக் குழைகளும் தரித்துக்

காணப்படும். கழுத்தில் மணிவடம், முத்துவடம், சவடி ஆகிய அணிகளும், தோளில் எளிய தோள்வளையும், முழங்கையில் கடகமும், முன் கைகளில் இரு கைவளைகளும் அணிந்திருக்கும். மார்பில் முத்துப் புரிநூல் (அ) முப்புரிநூல் தரித்தும், இடுப்பில் கச்சை அணிந்தும் கால்களில் தண்டையும், சிலம்பும் பொருந்தியும் அலங்கரிக்கப்பட்டிருக்கும். இடுப்பு ஆடை தொடைவரை காட்டப்பட்டிருந்தால் முழங்கால், மூட்டுப் பகுதியைத் தெளிவாகக் காணலாம்.

ஆடும் பெருமானின் தலை விரிசடையின்றி நீண்ட சடை மகுடத்துடனும் கொக்கிறகுக் கொண்டையுடனும் காணப்படும்.

இவற்றையெல்லாம்விடக் ''குனித்த புருவமுங் கொவ்வைச் செவ்வாயிற் குமிழ் சிரிப்பும்'' என்ற தேவாரப் பாடல் வரிக்கு வடிவம் கொடுத்தது போன்று, உதட்டைக் குவித்துச் சிரிப்பதைப் போன்று - சிலையில் உதடுகளை அமைத்துள்ளனர்[1]. இது அவர்தம் சிற்பக் கலையின் தனித்தன்மை என்றே கூறலாம்.

## ஆடும் கூத்தன்

ஆடும் கூத்தனை ஆலயங்களில் செப்புத் திருமேனியாக வடித்து வைக்கும் வழக்கினைப் பல்லவர், சோழர் ஆகியோரைப் போன்று முற்காலப் பாண்டியரும் பின்பற்றினர். எனினும் இவர்கள் காலத்துச் சிலைகள் பல்லவர் காலத்துச் சிலைகளைப் போன்று மிக அரிதாகவே காணக்கிடக்கின்றன[2]. முற்காலப் பாண்டியர் காலத்துச் செப்புத் திருமேனிகள் பாண்டிய நாட்டில் சிவகங்கைப் பகுதியில் சுந்தரபாண்டியப் பட்டினத்தில் கிடைத்துள்ளன. இதன் காலம் கி.பி. 10ஆம் நூற்றாண்டு. வலக் காதில் சிம்மக் குண்டலம் தரித்து ஆடும் சிவனது அரிய திருமேனி இதுவாகும். சற்றேறக்குறைய இதே காலத்தைச் சார்ந்த ஆடும் கூத்தனின் செப்புச் சிலையினைப் பழனி பெருவுடையார் கோயிலில் காணலாம்[6]. தென்பாண்டி நாட்டுப் பகுதியில் உள்ள குற்றாலநாதர் கோயிலில் அழகிய, ஆடும் கூத்தனின் செப்புத் திருமேனியொன்று உள்ளது[7]. துடியும், அனலும் ஏந்தி ஆடும் அழகனின் வனப்புமிகு வடிவமிது. இங்குள்ள அண்ணலின் முன்னழகும், பின்னழகும் போற்றத்தக்கது. தலையில் உள்ள சடைமுடி தாழ்சடையாகப் பின் தோள்களில் விழுந்து சரிந்து செல்லும் அழகு இங்குக் காணத்தக்கது. இடையில் கட்டப்பட்டுள்ள கச்சை, பீடம் வரை சரிந்து நிற்கத் திருவாசி இன்றிக் காட்சியளிக்கிறது. இது கி.பி. 10ஆம் நூற்றாண்டின் முற்பகுதியைச் சார்ந்தது.

பாண்டியர் கலைப்பாணியில் அமைந்த அரிய நடராசரின் சிலையொன்று மதுரை மாவட்டம் பொருப்புமேட்டுப் பட்டியில் கிடைத்துள்ளது. தனித்தன்மையுடைய இச்செப்புத் திருமேனியின் சிறப்பு இயல்பான நடராசர் உருவத்தினின்று வேறுபட்டு இருப்பதுதான்

அதாவது வழக்கமாக இடப் பாதம் தூக்கியாடும் நடராசப் பெருமானின் உருவமே எங்கும் காணக்கிடைக்கின்றன. மாறாகப் பொருப்பு மேட்டுப்பட்டி நடராசர் சிலை வலப் பாதம் தூக்கி ஆடும் நிலையில் வடிக்கப்பட்டு இருப்பது தனித்தன்மை வாய்ந்தது எனலாம்[10]. இச்சிலை தற்போது சென்னை அருங்காட்சியகத்தில் உள்ளது[11]. இது போன்று தனிச் சிறப்பு வாய்ந்த உருவத்தை மதுரை வெள்ளியம்பலத்திலும் காணலாம். இவ்விறைவன் 'மாறுகால் நடராசர்' என்றும் 'கால்மாறி ஆடும் நடராசர்' என்றும் அழைக்கப்படுகிறார்.

பாண்டியப் பெருவேந்தர்களும், முற்காலப் பாண்டியர்களைத் தொடர்ந்து ஆடும் பெருமானைப் பல்வேறு கோலங்களில் வடித்து வார்த்தனர். இக்கால நடராசர் வடிவங்களை மகுடத்தோடு மட்டும் கூடியவை, கொக்கிறகு முடியோடு கூடியவை, மகுடத்தோடும் விரிசடையோடும் கூடியவை என மூன்று வகையாகப் பிரிக்கலாம்.

இக்காலத்திய ஆடும் பெருமானுடைய ஊன்றிய திருவடியின் பின்புறம் அமைந்த முயலகன் கையில் உள்ள நாகம் அணைத்த நிலையில் வார்க்கப்பட்ட மரபினையும் ஒருசில படிமங்களில் காணமுடிகிறது. சோழ நாட்டு நடராசரது சிலைகளின் விரிசடையில் காணும் கங்கையும், இளம்பிறையும் பாண்டியநாட்டுச் சிலைகளில் மகுடத்தில் அமைத்துக் காட்டியுள்ள முறை குறிப்பிடத்தக்கது. இக்கலைக் கூறுகளைப் பாண்டிய நாட்டு நடராசர் படிமங்களின் சிறப்பு அம்சங்களாகக் கூறலாம்.

## இலுப்பைக்குடி - ஆடவல்லான், சிவகாமி

காரைக்குடி மாவட்டம், இலுப்பைக்குடித் தான்தோன்றீசுவரர் கோயிலில் உள்ள ஆடவல்லான் திருமேனி முயலகன் மீது வலக்காலை ஊன்றி இடக்காலைத் தூக்கி நான்கு திருக்கைகளுடன் கூத்தாடும் நிலையில் அற்புதமாக வடிக்கப்பட்டுள்ளது. உயர்ந்த சடைமகுடம் தலையை அலங்கரிக்கிறது. மகுடத்தின் மேல் வலப்புறம் ஆடும் அரவமும் இடப்புறம் இளம்பிறையும், முன்புறம் கொக்கிறகும், மகுடத்தின் நான்கு பக்கங்களிலும் மகர பூரிமங்களும் பொருத்தப்பட்டு உயர்ந்து விளங்குகிறது. சடைமகுடத்தின் பின்புறம் விரிசடைகள் பக்கத்திற்கு ஆறாக அமைந்து மேல்நோக்கி விரிந்து வனப்பூட்டுகின்றன. வலப்புற மேற்சடையில் அஞ்சலித்த நிலையில் கங்கையும், இடப்புறச் சடையில் ஆடும் அரவமும் அமைந்து அழகு ஊட்டுகின்றன.

ஆடும் பெருமானின் மேல்வலக்கை உடுக்கையைப் பற்றியிருக்க இடக்கை அரைநிலா (அர்த்த சந்திர) முத்திரையில் அனலை ஏந்தியுள்ளது. கீழ் வலக்கை அபயம் காட்ட, இடக்கை மார்புக்குக் குறுக்கே நீண்டு வேழ முத்திரை காட்டுகிறது.

ஆடும் பெருமானின் முகம் பெருமிதமாக நிமிர்ந்து தோற்றமளிக்கிறது. இப்படிமம் பிற்காலப் பாண்டியரின் புகழ்மிக்க

ஆடவல்லானின் படைப்புகளில் சிகரமாக விளங்குகிறது. இங்குக் காட்டப்பட்டுள்ள விரிசடையின் அமைப்பு தனிச்சிறப்புடையது.

ஆடும் பெருமானின் திருவடியின் கீழே முயலகன் விழுந்து கிடக்கிறான். அவனது இடக்கரம் ஆடும் அரவத்தைப் பற்றியுள்ளது. வலக்கரம் சுட்டுவிரலால் முத்திரை காட்டுகிறது. முயலகனின் முதுகில் கால்வைத்து. அதிரவீசி ஆடும் பெருமானின் ஆடலை முழுதும் காணவேண்டித் தன் கழுத்தைச் சாய்த்து முகத்தை மேல்நோக்கித் திருப்பிக் காணும் பாம்பின் காட்சி அற்புதமானது.

## சிவகாமி

அண்ணலின் அருகில் தனியிருக்கையில் இடையை வலப்புறமாக ஒடித்து இடக் காலை மடித்து முன்வைத்த நிலையில் நின்ற கோலத்தில் சிவகாமியின் சிலை வார்க்கப்பட்டுள்ளது. சிவகாமியின் முடியை உயர்ந்த கரண்ட மகுடமும், நெற்றியை முத்துப்பட்டமும் அணி செய்கின்றன. நீள் செவிகளில் அழகு சேர்க்கும் மகரக் குழையும், தோள்களில் மலர் மாலையும், கழுத்தில் பொட்டு மணி, கண்டிகை, மணியாரம், சரப்பளி முதலியவையும் அழகு ஊட்டுகின்றன. கச்சையற்ற குவிந்த தனங்களிடையே ஓடும் நூலும் கொடியிடையின் கீழே அணிசெய்யும் மேகலையும் இடைவாரும் வேலைப்பாடும் மிக்க இடைக்கச்சையும் பாதங்களில் சரமும் அன்னையின் அழகுக்கேற்ப மிகப் பொருத்தமாக வடிக்கப்பட்டுள்ளன.

இப்படிமம் பாண்டியர் காலத்துப் படிமக்கலைக்குச் சிறந்த எடுத்துக்காட்டாகத் திகழ்கிறது. இவ்வாலயத் தொகுப்பிலுள்ள பாண்டியர் காலப் படிமங்களான ஆடவல்லானும், சிவகாமியும் கலைச்சிகரமாக விளங்குவன. இவற்றின் காலம் கி.பி. 12-13ஆம் நூற்றாண்டு எனலாம்[14].

## கோட்டூர் - நடராசர்

புதுக்கோட்டை மாவட்டம் கோட்டூர் அருள்மிகு சோழீசுவர முடையார் கோயிலில் உள்ள நடராசர், சிவகாமி ஆகிய படிமங்கள் கி.பி. 12ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவை. இவ்வூர் நடராசரைச் சுற்றிலும் வட்டமான திருவாசி அலங்கரிக்கிறது. நடராசர், விழுந்து கிடக்கும் முயலகன் முதுகில் வலக்காலை ஊன்றி இடக்காலைத் தூக்கியுள்ளார். கீழ்க் கரங்களில் அபய முத்திரையும் அமைந்து காணப்படுகின்றன. சிவனது தலையில் கொக்கிறகு செங்குத்தாக அலங்கரிக்கிறது. தலையின் இருபக்கங்களிலும் உள்ள விரிசடைகள் தோள்வரை சுருண்டு வனப்பூட்டுகின்றன. மேல் வயிற்றை அலங்கரிக்கும் கச்சை பரந்து திருவாசியுடன் இணைந்துள்ளது. திருவடியின் கீழ்க் கிடக்கும் முயலகன் முகத்தைத் திருப்பி ஆடும்பெருமானை நோக்கும் வண்ணம் காட்டப்

பட்டுள்ளான். முகத்தில் இளநகை தவழக் கரங்களை வீசி ஒளி வட்டத்திற்குள் ஆடும் இப்பெருமானின் திருமேனி பன்னிரண்டாம் நூற்றாண்டைச் சார்ந்தது.

சோழர் காலக் கலையின் சாயல் இச்சிலையில் படிந்து இருப்பதைக் காணமுடிகிறது. ஆடும் பெருமானின் அருகில் உள்ள சிவகாமியின் திருமேனி தாமரை இருக்கை மீது, இடையை இடப்புறம் ஒடித்த நிலையில் ஒயிலாக நிற்கிறது. அன்னையின் இருகரங்களில் வலக்கரம் நீலோற்பல மலரைக் கடகமுத்திரையில் பற்றியுள்ளது. இடக்கரம் தாழ்கரமாக நீண்டு நிற்கிறது. கரண்ட மகுடம், மகரக் குழைகள், கண்டசரம், மணிவடம், முத்துவடம், தோள்வளை, சுருள்வளைகள், பூக்கள் பொறித்த இடைக்கச்சை, வங்கி, பாதசரம் ஆகிய அணிகள் அன்னையின் முடி முதல் அடி வரை அலங்கரிக்கக் காண்கிறோம். இச்சிலை கி.பி. 12ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது. இவ்விரு சிலைகளிலும் சோழர் காலக் கலையின் சாயல் படிந்து இருப்பதைக் காணலாம்.

## திருவரங்குளம் - கூத்தபிரான்

புதுக்கோட்டை மாவட்டம் திருவரங்குளம் அருங்குள நாதசுவாமி ஆலயத்தில் உள்ள கூத்தபிரானும், பிராட்டியாரும், ஆலங்குடி நாமபுரீசுவரர் ஆலயத்துக் கூத்தனும், தேவியும் வனப்புமிக்க செப்புத் திருமேனிகளாக வடிக்கப்பட்டுள்ளனர். கூத்தனின் தலையில் கொக்கிறகுக் கொண்டையும், பின்தோளில் தாழ்சடையும் அமையுமாறு காட்டியுள்ள முறை அற்புதமானது. வராப்பூர் கூத்தபிரானின் தலையை அலங்கரிக்கும் வேலைப்பாடுமிக்க மகுடம் வனப்புமிக்கது. இவை கி.பி. 12-13ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவை.

## விராச்சிலை - நடராசர்

புதுக்கோட்டை மாவட்டம் விராச்சிலை வில்வவனேசுவரர் கோயிலில் உள்ள நடராசரின் படிமம் ஓங்கார வடிவுடைய திருவாசியின் நடுவே ஆடுங்கோலத்தில் வடிக்கப்பட்டுள்ளது. ஆடும் அண்ணலின் வலக்கால், முயலகன் முதுகில் குறுக்காக ஊன்றப்பட்டுள்ளது. கரங்கள் நான்கினில் மேற்கரங்கள் இரண்டும் துடியும், அழலும் கொண்டுள்ளன. கீழ்க்கரங்கள் இரண்டும் அபய - வேழ முத்திரையில் அமைந்துள்ளன. உச்சந்தலையில் கொக்கிறகு சூடிப் பக்கங்களில் விரிசடைகள் வனப்பூட்டக் கைகளை வீசி ஆடும் நிலை அமைந்துள்ளது. கங்கையும், பிறையும் விரிசடையின் வலப்புறத்திலும், இடப்புறத்திலும் காட்டப்பட்டுள்ளன. முயலகனின் முகம் ஆடும் அண்ணலைக் காணும் நிலையில் திரும்பியுள்ளது. இப்படிமம் கி.பி. 13ஆம் நூற்றாண்டின் முற்பகுதியைச் சார்ந்த பிற்காலப் பாண்டியர் காலத்தது.

## கீரனூர் - நடராசர்

இவ்வூரின் உத்தமநாத சுவாமி கோயிலில் உள்ள ஆடும் அழகர், தலையில் கொக்கிறகைச் செங்குத்தாகச் சூடி விரிசடைகளுடன் ஆடுகிறார். தலையின் பக்கங்களில் பக்கத்திற்கு ஐந்து சடைகள் வனப்புடன் விரிந்து திருவாசியுடன் இணைகின்றன. கொக்கிறகின் மேல்முனையும் திருவாசியுடன் சேர்கிறது. ஆடும் அண்ணலைச் சுற்றியுள்ள பிரபாவலியான ஒளிமண்டலத்தில் தீச்சுடர்கள் அலங்கரிக்கின்றன. அண்ணலுடைய காலின் கீழ் உள்ள முயலகனின் வடிவம் சிறியது.

உயர்ந்த கேச மகுடம்அன்னை சிவகாமி தலையைஅழகு செய்ய இடையை வலப்புறம் ஒடித்து ஒயிலாக நிற்கிறார். கைகள் கடக முத்திரையிலும், லோல முத்திரையிலும் அமைந்துள்ளன. இவ்விரு சிலைகளும் கி.பி. 12ஆம் நூற்றாண்டின் தொடக்கப்பகுதியைச் சார்ந்த பாண்டியர் காலத்தவை.

## துர்வாசபுரம்-நடராசர்

புதுக்கோட்டை மாவட்டத்தில் திருமயத்திற்கு மேற்கே 8 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ள ஊர் துர்வாசபுரம் ஆகும். இவ்வூர் சுந்தரேசுவரர் ஆலயத்தில் 1991ஆம் ஆண்டு கிணற்றினைத் தூர்வாரும் போது நடராசர், சிவகாமி, நர்த்தன ஞானசம்பந்தர் ஆகிய மூன்று செப்புச் சிலைகள் புதையலாகக் கண்டுபிடிக்கப்பட்டன. இம்மூன்றும் பாண்டியர் காலத்தைச் சேர்ந்த கலைச்செல்வங்கள் ஆகும். இவை சமயச் சிறப்பும், கலைச் சிறப்பும் மிக்கவை.

நடராசர் படிமம் உயர்ந்த பீடத்தின் மேல் உள்ள வட்டமான பத்ம பீடத்தில் பக்கவாட்டில் கவிழ்ந்து கிடக்கும் முயலகனின் முதுகின் மேல் வலப்புறத் திருவடியை ஊன்றி, இடப்புறக் காலை எழிலாகத் தூக்கி நான்கு கைகளை வீசிஆடும் நிலையில் உள்ளது. மேல் வலக்கை சிறிய துடியை விரல்களில் பற்றிய நிலையில் உள்ளது. இடப்புற உள்ளங்கையின் மேல் சுடர்விட்டு எரியும் தீ அகல் அர்த்த சந்திர முத்திரையில் உள்ளது. முன் இடக்கரம் மார்பின் குறுக்கே அமைய வலக்கரம் அபய முத்திரையைக் காட்டுகிறது. இந்த நடராசர் சிலையை உயர்ந்த ஜடாமகுடம் அலங்கரிக்கிறது. தலையின் பக்கங்களில் விரிசடை காட்டப்படவில்லை.

அழகிய அங்கங்களும், அளவான உடல்வாகும் பெற்று எடுப்பான தோற்றத்துடன் இவ்வுருவம் வார்க்கப்பட்டுள்ளது. திருவடியின் கீழ் உள்ள முயலகனின் முகம் பக்கவாட்டில் திரும்பி உள்ளது. இவனது இடக்கை நாகத்தைப் பிடித்தும் வலக்கை முத்திரை காட்டும் நிலையிலும் உள்ளது.

நடராசரின் தேவியான சிவகாமியின் செப்புத்திருமேனி வட்டமான தாமைரைப் பீடத்தில் உள்ளது. திரிபங்கியாக நின்ற தேவியின் வலக்கையில் நீலோற்பல மலர் காணப்படுகிறது இடக்கை லோல முத்திரையில் அமைந்துள்ளளது. இவ்விரு சிலைகளும் இடைப் பாண்டியர் காலத்தவை. ஒரே சிற்பியின் கைவினையால் உருவாக்கப் பட்டவை. இதன் காலம் கி.பி.11ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி எனலாம்.

## இரணியூர்-நடராசர்

காரைக்குடி மாவட்டம் இரணியூர்ஆட்கொண்டநாதர் கோயிலில் உள்ள ஆடும் கூத்தனின் செப்புத் திருமேனி கலையழகு மிக்கது. இச்சிலை தாமரை இருக்கையின் மீது விழுந்து கிடக்கும் முயலகன் மேல் வலத் திருவடியைக் குறுக்காக ஊன்றி, இடத் திருவடியைத் தூக்கி ஆடும் நிலையில் நான்கு கைகளுடன் காட்சி அளிக்கின்றது. மேல் வலக்கை ஒலிமிக்க உடுக்கையை டமருக முத்திரையிலும், மேல் இடக்கை எரி அகலை அர்த்த சந்திர முத்திரையிலும் கொண்டு காட்சியளிக்கிறது. ஏனைய முன் கரங்கள் இரண்டும் அபய முத்திரையிலும், வேழ முத்திரையிலும் காட்டப்பட்டுள்ளன. பொதுவாக ஆடும் பெருமானின் தலையின் பக்கங்களில் காணும் விரிசடைகள் இங்கு இல்லை. அவ்வாறே கொக்கிறகு அணிசெய்யும் மகுடமும் இங்கு இல்லை. இளம்பிறையும், நாகமும், ஊமத்தம் பூவும் எருக்கும் அணி செய்யும் மகுடமும் இங்கு இல்லை. ஆனால் நீண்ட சடைமுடியை உயர்ந்த மகுடமாக்கி அதன் முன் புறத்திலும் பக்கங்களிலும் மலர்ந்த பூரிமங்கள் பதித்து எழில்மிகு கலைக்கோலமாகப் பாண்டியர் காலச் சிற்பிகள் அலங்கரித்துள்ளனர்.

சிவனின் அகன்ற நெற்றியில் செங்குத்தாக மூன்றாவது கண் காட்டப்பட்டுள்ளது. ஆடும் பெருமானின் ஒளிமயமான ஒடுங்கிய முகத்தில் பெருமிதமான புன்னகை வெளிப்படுகிறது. கழுத்தைச் சற்று இடப்புறமாகத் திருப்பி மிடுக்காகப் பார்க்கும் நிலையில் காட்டப்பட் டுள்ளது. அளவான அங்கங்கள் யாவும் மிகவும் கவனமாக வார்க்கப் பட்டு வனப்போடு விளங்குகின்றன.

ஒலியும் ஒளியும் மிக்க உடுக்கையையும், அனலையும் பற்றி நான்கு கரங்களை வீசியாடும் அண்ணலின் வேகம் சிலையின் ஒவ்வொரு அசைவிலும் காணப்படுகிறது. இறைவனின் இவ்வியக்கம் ஒருவகை யான கட்டுப்பாட்டுக்கு உட்பட்டு இசை பட நிகழ்வதைக் காணமுடிகிறது. இப்படிவம் பாண்டியர் கலைச் சிறப்பை வெளிப்படுத்தி நிற்கிறது. இதன் காலம் கி.பி. 12-13 ஆம் நூற்றாண்டு எனலாம். இச்சிலை திருவாசி இன்றிக் காணப்படுகிறது.

பெருமான் முயலகன் மீது தாள்வைத்து ஆடுகிறார். முயலகனது வலக்கை தரையில் ஊன்றி நிற்க இடக்கை ஆடும் கூத்தனின் திருவடியை ஒட்டிப் படமெடுத்தாடும் பெரும் நாகத்திற்கு நாகமுத்திரை காட்டுகிறது.

முயலகனின் பின்புறம் உள்ள ஆடும் அரவம் பெருமானின் வலது திருவடி முழங்காலின் கீழ் சாய்ந்த வண்ணம் காட்டப்பட்டுள்ளது. இவ்விதம் ஆடும் பெருமானின் உருவத்தைச் செங்குத்தாக நிறுத்துவதற்கு அவருடைய திருவடியில் ஆடும் நாகத்தை இணைத்து வார்த்துள்ள பாண்டியர் காலச் சிற்பியின் கலைப்பாங்கு போற்றுதற்கு உரியது. இது சோழர் காலப் படிம வார்ப்பிலிருந்து பாண்டியரது வார்ப்பு முறையினைத் தனித்து அடையாளம் காண வகை செய்கிறது.

பிற்காலப் பாண்டியர் நடராசர் சிலையினைத் திருவாசியோடும், திருவாசியில்லாமலும் வார்த்துள்ளமைக்குக் கோட்டூர், இரணியூர்ச் சிலைகளை எடுத்துக்காட்டாகக் கூறலாம்.

இராமநாதபுரம் மாவட்டம் உத்தரகோசமங்கை மங்கள நாயகப்பெருமான் கோயிலிலும், திருநெல்வேலி நெல்லையப்பர் கோயிலிலும் உள்ள கூத்தபிரானின் உருவங்கள் கி.பி. 12ஆம் நூற்றாண்டைச் சார்ந்தன எனக் கருதுவர்[20]. இங்கெல்லாம் விரிசடைகள் காணப்படவில்லை. கட்டி முடித்த சடைதான் உள்ளது. பெரிய அளவில் படிமங்கள் செய்யப்பெற்றுள்ளன. சோழர் காலப் படிமங்களில் முகம் உருண்டு திரண்டு விளங்கப் பாண்டிய நாட்டுப் படிமங்களில் அது நீண்டு ஒடுங்கி இருக்கிறது.

## வீரபாண்டிப் புதையல்

மதுரை மாவட்டம் வீரபாண்டிக் கண்ணீசுவரமுடையார் கோயில் வளாகத்தில் கி.பி.1969ஆம் ஆண்டு புதையலாகக் கிடைத்த நடராசர், சிவகாமி, சோமாசுகந்தர், தனியம்மன், பிறை அண்ணல் ஆகிய படிமங்கள் கலை வரலாற்றுச் சிறப்பு வாய்ந்தவை. இவை கி.பி. 14ஆம் நூற்றாண்டைச் சார்ந்த கடைப் பாண்டியர் காலத்தவை. நீண்ட உடல்வாகும், நெடிய மகுடமும், இளநகை தவழும் சதுரமான சிறிய முகமும், கனமான ஆடை அணிகளும், இடையின் பக்கங்களில் எழிலாகச் சரிந்து நிற்கும் ஆடைகளும் முழங்கால் முட்டியெலும்புகளும் இச்சிலைகளில் காணும் சிறப்பு அம்சங்களாகும்.

## வீரபாண்டி - ஆடவல்லழகர்

இப்படிமம் வலப்பக்கத் திருவடியை முயலகனின் முதுகுத் தண்டுவடத்தினூடே குறுக்காக ஊன்றியும் முழங்காலை நன்கு மடித்தும் ஆடும் நிலையில் உள்ளது. சிறிய உடுக்கையை வலக்கையிலும், எரியனலை அரைநிலா முத்திரையில் கொண்டும் முன் இடக்கரத்தை வீசியாடுகிறது. இதன் மகுடம் இளம்பிறையும், ஊமத்தையும் அணிசெய்யச் செங்குத்தாக உயர்ந்து நிற்கிறது. இதற்கு விரிசடை இல்லை. காதிலும், கழுத்திலும் காலிலும் கனமான அணிகள் உள்ளன. இச்சிலையில் சதுரமான சிறிய முகமும், நீளச்சடை முடியும், நெற்றிக்கண்ணும் அரவம் சுற்றப்பட்ட வலப்பக்கக் கீழ்க்கரமும்

காணத்தக்கவை. இதன் காலம் கி.பி. 14ஆம் நூற்றாண்டு. கடைப்பாண்டியர் காலத்துப் படிமக் கலைக்குச் சான்றாக இச்செப்புத் திருமேனி திகழ்கிறது.

இவை யாவும் நடராசர் படிமக்கலையில் பாண்டியப் பெருவேந்தர் பெற்றிருந்த திறமைக்குச் சிறந்த சான்றுகளாக விளங்குகின்றன.

## விநாயகர்

சைவப் படிமங்களில் குறிப்பாக விநாயகர், முருகன் ஆகிய செப்புச் சிலைகளும், சிறப்பாகச் சிவனது இருபத்தைந்து வடிவங்களும் குறிப்பிடத்தக்கவை. இவற்றில் விநாயகரது சிற்பங்களும், சிலைகளும் பாண்டிய நாட்டில் மிகப்பழங்காலம் தொட்டே காணக்கிடக்கின்றன. பிள்ளையார்ப் பட்டி விநாயகர் உருவம் கி.பி. 5-6ஆம் நூற்றாண்டாகக் கருதப்படுகிறது. பாண்டிய நாட்டில் விநாயகரது படிமங்கள் கி.பி. 9-10ஆம் நூற்றாண்டு முதல் காணப்படுகின்றன. இவை நின்ற கோலத்தில் நான்கு கைகளுடன் யானை முகமும், மனித உடலும் கொண்டு காணப்படுகின்றன. கரங்களில் அங்குசம், பாசக் கயிறு, தந்தம், மோதகம், மாம்பழம், கதாயுதம் ஆகியவற்றைக் காணலாம்.

புதுக்கோட்டை மாவட்டத்தில் அழகிய சில செப்புப்படிமங்கள் கிடைக்கின்றன. புதுக்கோட்டை அருள்மிகு சித்திவிநாயகர் ஆலயத்திலுள்ள ஆனைமுகத்தானின் செப்புத் திருமேனி கி.பி. 11ஆம் நூற்றாண்டினைச் சார்ந்தது. இது அங்குசம், பாசம், தந்தம், மோதகம் ஆகியவற்றைப் பற்றிய நிலையில் பழைமையான தோற்றத்துடன் காணப்படுகிறது. இடக்கையில் உள்ள மோதகத்தைத் துதிக்கையால் பற்றி நிற்கும் திருவரங்குளம் விநாயகர் படிமம் கி.பி. 12-13ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தது. அங்குசம், பாசம் முதலிய எடுப்பான ஆயுதங்களுடன் துதிக்கையை இடம்புரியாகக் கொண்டு நிற்கும் வெல்லனூர் அகத்தீசுவரர் ஆலயத்து விநாயகர் படிமம் கி.பி. 14ஆம் நூற்றாண்டின் தொடக்கப்பகுதியைச் சார்ந்தது. இம்மாவட்டத்துக் கீழ்க்குறிச்சி சோமாசுவரர் கோயிலிலுள்ள செப்புப்படிமம் பாண்டியப் பெருவேந்தர் இறுதிக் காலத்தைச் சேர்ந்தது. மேல்பனையூர் ஞானபுரீசுவரர் கோயிலில் வல்லப கணபதியின் செப்புத்திருமேனி ஒன்று காணப்படுகிறது. இப்படிமம் எண் கரங்களில் ஆயுதங்கள் தாங்கித் தாமரை இருக்கையில் அமர்ந்த கோலத்தில் வடிக்கப்பட்டுள்ளது. விநாயகரது இடத் தொடையின் மீது அவரது தேவியான வல்லபை அமர்ந்துள்ளாள். வல்லபையைத் தழுவிய கோலத்தில் வார்க்கப் பட்டுள்ள இவ்வுருவம் கி.பி. 12-13ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தது[24].

பாண்டிய நாட்டில் தேவதானம், இலுப்பைக்குடி, மதுரை, சோமவனம், திருப்பத்தூர், திருநெல்வேலி ஆகிய ஊர்களில் உள்ள விநாயகர் படிமங்கள் புகழ்பெற்றவை. இவை கி.பி. 12-13ஆம்

நூற்றாண்டைச் சார்ந்தவை. இவை பாண்டியர் காலப் படிமக்கலைக்கு எடுத்துக்காட்டாகத் திகழ்கின்றன.

## முருகன்

பாண்டிய நாட்டு ஆலயங்களில் முந்திய காலந்தொட்டு முருகனது சிலை உருவங்கள் கிடைக்கின்றன. இத்திருவுருவங்களை இருகோலங்களில் காணலாம். ஒருமுகமும் நான்கு கைகளும் கொண்டது ஒரு வகை. ஆறுமுகங்களும் பன்னிரண்டு கைகளும் கொண்டது மற்றொரு வகை. இவை தனித்து நின்ற கோலத்திலோ மயில் வாகனத்தில் அமர்ந்த கோலத்திலோ காணப்படுகின்றன. முருகனின் ஆறுபடை வீடுகளில் ஒன்றான ஆவிநன்குடி என்னும் பழனிப்பதியில் உள்ள முருகனது செப்புத்திருவுருவம் பிற்காலப் பாண்டியர் கலைக்குப் புகழ்பெற்றது. பழனி ஆண்டவர் செப்புத் திருமேனி ஒருமுகமும் இரண்டு கைகளும் கொண்டு நின்ற திருக்கோலத்தில் வார்க்கப்பட்டுள்ளது. இச்சிலையின் உருவமைப்பு, நிற்கும்நிலை, தலைக்கோலம், ஆடைகளின் தன்மை ஆகியவற்றைக் கொண்டு இதனைக் கி.பி. 13ஆம் நூற்றாண்டின் தொடக்கக் காலத்ததாகக் கருதலாம்[25].

முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியனது கல்வெட்டுகளில் ''வைகாவூர் நாட்டு ஆவிநன்குடி பழனிமலை மீது நின்றருளிய சுப்பிரமணிய சுவாமிகள்'' எனக் குறிக்கப்பட்டிருக்கிறது.

## ஆலங்குடி - சுப்பிரமணியர்

புதுக்கோட்டை மாவட்டம் ஆலங்குடியில் உள்ள சுப்பிரமணியரின் அழகிய செப்புத் திருமேனி நான்கு கைகளுடன் தாமரைப் பீடத்தின் மீது, நேராக நின்ற கோலத்தில் வடிக்கப்பட்டுள்ளது. மேற்கரங்களில் இரண்டும் வஜ்ஜிரப்படைகளைக் கத்தரி முத்திரையில் ஏந்தியுள்ளன. கீழ்க்கரங்கள் இரண்டும் அபய முத்திரையிலும், சிம்மகர்ண முத்திரையிலும் உள்ளன. பொதுவாகச் சுப்பிரமணியர், மேற்கரங்களில் சக்திப்படையையும், வஜ்ஜிரப்படையையும் இருகைகளில் பற்றிய நிலையில் காட்டப்படுவது சோழர் மரபு. இதற்கு மாறாக இச்சிலையின் மேற்கரங்கள் இரண்டிலும் வஜ்ஜிரப்படைகள் காட்டப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது.

மேலும் பாண்டிய நாட்டு ஆலயங்களில் சுப்பிரமணியர் செப்புப்படிமங்கள் மயில் வாகனத்தின் முன் நின்றகோலத்திலும், வள்ளி, தெய்வானை ஆகிய இருதேவியர் சூழ நின்ற கோலத்திலுமே மிகுதியாகக் காணக்கிடைக்கின்றன. இவை கி.பி. 12-13ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவை[26].

## சந்திரசேகர மூர்த்தி

இது சிவனது நின்றகோலத் திருமேனியாகும். தாமரை இருக்கையின் மீது நான்கு கைகளுடன் நேராகத் தனித்து நின்றகோலத்தில் காணப்படும். சிவனது மேற்கரங்கள் இரண்டும் அருள்கரமாகவும், வழங்கும் கரமாகவும் காணப்படுவது மரபு[27]. அவரது அருகில் உள்ள சந்திரசேகரச் செப்புப் படிமங்களும் தனித்து நின்றகோலத்தில் இருகைகளுடன் காணப்படும். உமையின் வலக்கரம் கடக முத்திரையிலும் இடக்கரம் லோல முத்திரையில் தாழ்கரமாகவும் அமைந்து விளங்கக் காண்கிறோம்.

அவற்றிற்கு எடுத்துக்காட்டாகப் பாண்டிய நாட்டில் பிள்ளையார்ப் பட்டி, திருநெல்வேலி, பாபநாசம், தேவதானம்,[28] மதுரை, வீரபாண்டி ஆகிய இடங்களில் உள்ள செப்புத் திருமேனிகளைக் கூறலாம். இவற்றில் வீரபாண்டிப் புதையலாகக் கிடைத்த பிறைமுடி அண்ணலின் சிலையைத் தவிர ஏனைய சிலைகள் கி.பி. 12-13ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவை. வீரபாண்டிச் சிலை கி.பி. 14ஆம் நூற்றாண்டைச் சார்ந்த கடைப்பாண்டியர் காலத்தது[29].

## கோவிலூர் - சந்திரசேகரர்

இப்படிமம் நான்கு கைகளுடன் தாமரை இருக்கையின் மீது நின்ற கோலத்தில் வார்க்கப்பட்டுள்ளது. இளம்பிறையுடன் கூடிய நீண்ட சடைமுடி, தலையை அலங்கரிக்கிறது. மழுவையும், மானையும் மேற்கரங்கள் பற்றி நிற்கக் கீழ்க்கரங்கள் இரண்டும் அபய - வரத முத்திரையில் அமைந்து காணப்படுகின்றன. இத்திருமேனியின் அமைப்பையும், அழகையும் கொண்டு இதனைக் கி.பி. 13-ஆம் நூற்றாண்டின் தொடக்கக் காலச் சிலை என்று கூறலாம்[30].

## உமாசகித சந்திரசேகர மூர்த்தி

இவ்வகைத் திருமேனிகள், நீண்ட பீடத்தின் மீதுள்ள தாமரை இருக்கைகளின் மீது சிவனும், உமையும் தனித்தனியாக நின்ற கோலத்தில் வார்ப்பில் வடிக்கப்படும். பாண்டியப் பெருவேந்தர் காலத்திய செப்புச் சிலை ஒன்றினைக் காரைக்குடி மாவட்டம் இலுப்பைக்குடி தான்தோன்றீசுவரர் கோயிலில் காணலாம்[31].

சிவனின் மேல் வலக்கையும், இடக்கையும் முறையே கத்தரி முத்திரையில் மழுவையும், மானையும் தாங்கி நிற்கின்றன. கீழ்வலக்கை அபயம் அளிக்கிறது. இடக்கை, அழைத்து வழங்கும் ஆகூய முத்திரையைக் காட்டுகிறது. சிவனின் இடப்புறத்தில் இரண்டு கைகளுடன் உமையின் நின்றகோலம் திரிபங்கத்தில் காட்டப்பட்டுள்ளது. உமையின் வலக்கை கடகமுத்திரையில் அல்லி மலரைப் பிடித்துள்ளது. இடக்கை தாழ்கையாக அமைந்துள்ளது. சிறிய கரண்ட மகுடம் உமையாளின் தலையை அலங்கரிக்கிறது.

## உமைதழுவிய சடைமுடி அண்ணல்

இவ்வகைப் படிமங்கள் ஒரே பீடத்தில் சிவனும் உமையும் நின்றகோலக் காட்சியில் வடிக்கப்படும். சிவனது வடிவம் நான்கு கரங்களைப் பெற்றுள்ளது. மேற்கரங்கள் மழுவையும், மானையும் பற்றி நிற்கும். கீழ்வலக்கரம் அபயகரமாக அமைந்து காணப்படும். இடக்கரம் உமையின் இடையைத் தழுவிய நிலையில் அமையும். இடப்புறமுள்ள உமை சிவனை அணைத்த நிலையில் வலக்கரத்தைக் கடக முத்திரையிலும், இடக்கரத்தை லோல முத்திரையிலும் கொண்டு காணப்படுவார். இருவரது தலைகளையும் சடைமகுடமும், கரண்டமகுடமும் அலங்கரிக்கும். சான்றாகத் திருவரங்குளம் ஆலயச்சிலையினைக் கூறலாம். இது கி.பி. 13-ஆம் நூற்றாண்டைச் சார்ந்த பாண்டியப் பெருவேந்தர் காலத்தியது[32]. இவ்வகைச் சிலைகள் 'பிரதோஷ் நாயகர்' என்ற பெயரில் அழைக்கப்பட்டு வருகின்றன.

## சோமாசுகந்தர்

தமிழகத்தில் பல்லவரைப் போன்று பாண்டியர்களும் தொடக்கக் காலத்திலிருந்து சோமாசுகந்தரின் இறைவுருவங்களைக்கல்லிலும் செம்பிலும் செய்தளிக்கும் முறையினை அறிந்திருந்தனர். குமரனுடன் சிவனும், உமையும் அம்மை அப்பனாகத் தோன்றும் தெய்வீகக் குடும்பமாக வார்ப்பிலே வடிக்கும் வழக்கினைக் கி.பி. 10ஆம் நூற்றாண்டு முதல் காணமுடிகிறது. இக்காலப் படிமக் குழுவினைப் புதுக்கோட்டை மாவட்டம் விராச்சிலை வில்வவனேசுவரர் கோயில், காரைக்குடி மாவட்டம் சூரக்குடி தேசிகநாதர் கோயில் ஆகிய இடங்களில் காணமுடிகிறது. மேலும் பாண்டியப் பெருவேந்தர் காலத்துச் சோமாசுகந்தர் செப்புத் திருமேனிகளை மதுரை மீனாட்சி சுந்தரேசுவரர் கோயில், பேரையூர் நாகநாத சுவாமி கோயில், வீரபாண்டிக் கண்ணீசுவரமுடையார் கோயில் ஆகிய இடங்களில் காணலாம். இச் செப்புத்திருமேனிகள் ஒவ்வொன்றும் தனிச்சிறப்பு வாய்ந்தவை. அவை வருமாறு.

## விராச்சிலை - சோமாசுகந்தர்

விராச்சிலையில் உள்ள சோமாசுகந்தர் சிலை காலத்தால் முந்தியது. ஈடில்லா எழில்வாய்ந்தது. அப்பனும் அன்னையும் நீண்ட இருக்கையில் அமர்ந்திருக்கக் குழந்தை முருகன் தாமரை இருக்கையின் மீது பக்கவாட்டில் நின்று பிஞ்சுக்கரங்களை வீசித் தளர்நடை பயிலும் அழகிய படிமக்கோலம் இது. அப்பன் அமர்ந்திருக்கும் ஏற்றமும், அன்னையின் எழில் உருவும் பார்க்கப் பார்க்கப் பரவசமூட்டுபவை. இப்படிமம் கி.பி. 10ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது.

### சூரக்குடி - சோமாசுகந்தர்

இப்படிமக் குழுவில் சிவன் இடதுகாலை மடித்து வலதுகாலைப் பீடத்தின் முன்புறம் தாழத் தொங்கவிட்டு நான்கு கைகளுடன் சுகாசனத்தில் வீற்றிருக்கிறார். இவரது மேல்வலக்கை மழுவாயுதத்தையும், இடக்கை முன்புறம் நீண்டு சிம்மகர்ண முத்திரையிலும் அமைந்துள்ளது. சிவனது தலையை உயர்ந்த சடைமகுடம் அலங்கரிக்கிறது. மகுடத்தின் மேல் இடப்புறம் இளம்பிறை அணிசெய்கிறது. சிவனது விரிந்த நெற்றியில் மூன்றாவது கண் செங்குத்தாகக் காட்டப்பட்டுள்ளது. சிவனது முகம் ஆன்மீக அழகு தவழ, அருள் சுரக்கும் முகமாக அமைந்துள்ளது. பாண்டியரின் கலைப்பாணி இவ்வுருவத்தின் அங்கங்களிலும், அசைவுகளிலும் வெளிப்படுவதை நேரில் கண்டுகளிக்கலாம்[33].

### பிரியாவிடை அம்மன்

உமையாள் சிவனது இடப்புறத்தில் பிரியாவிடையாக அமர்ந்த கோலத்தில் அழகே உருவாகக் காட்சியளிக்கிறார். உமையின் வலக்கை அல்லிமலரைப் பிடிக்கும் பாங்கில் முத்திரை காட்ட, அவளது இடக்கை எழிலாக முன்புறம் நீண்டு வழங்கும் கையாக வரத முத்திரை காட்டுகிறது.

உமையின் தலையைக் கரண்ட மகுடம் அலங்கரிக்கிறது. சுருண்ட கேசங்கள் பின் முதுகில் தாழ்சடையாக விழுந்து வனப்பூட்டுகிறது. நாணத்தின் சாயலை வெளிப்படுத்தும் தேவியின் முகம் ஒளிமிக்கது. அவர் ஒயிலாக வீற்றிருக்கும் வனப்பு பெண்மையின் பேரழகைப் பிரதிபலிக்கின்றது.

### குமரன்

இறைவனுக்கும், இறைவிக்கும் நடுவே தோன்றும் குமரவேள் இங்கு ஆடையற்ற திருவுருவாய்ச் சிற்றிளம் குழந்தையாக நடனம் ஆடும் கோலத்தில் உள்ளார். அழகிய பாதங்களில் பாதசரம் தரித்துப் பாங்குறத் தோன்றுகிறார். இப்பாலகனின் வலக்கையில் அல்லி மலர் அழகு செய்ய, இடக்கை எழிலாக நீண்டு வனப்பூட்டுகிறது. இளமுகமும், முதிரா உடலும் கொண்டு கொற்றவை மைந்தனாக அத்தனுக்கும், அம்மைக்கும் நடுவே தோன்றும் தெய்வீகக் குழந்தையாக இப்படிமம் படைக்கப்பட்டுள்ளது.

ஐம்பொன் கலவையால் முழுவதும் கனமாக வார்க்கப்பட்டுள்ள இப்படிமத் திருக்கோலம் பேரழகு மிக்கது. சிவன், உமை, கந்தன் ஆகிய தெய்வீகக் குடும்பத்தின் கலைப்படைப்பு பாண்டிநாட்டுச் சிற்பியின் பேராற்றலை வெளிப்படுத்தும் பழைய வார்ப்பு எனக் கூறலாம். இதன் காலம் கி.பி. 11-12ஆம் நூற்றாண்டு ஆகும். பாண்டியப் பெருவேந்தரின் தொடக்கக்காலக் கலைப்பணிக்குச் சீரிய எடுத்துக் காட்டாக இதனைக் கூறலாம்[34].

## தனியம்மன்

சூரக்குடிப் புதையலில் கிடைத்த சோமாசுகந்தர் சிலையும் படிமக்குழுவுடன் கூடிய தனியம்மன் சிலையும் பேரழகு வாய்ந்தவை. நீண்டு மெலிந்த உடலும், நாணம் மேலிட நிற்கும் சாய்ந்த முகமும், வலப்புறம் ஒயிலாகச் சரிந்த இடையும், குவிந்த மார்பும் தசை மடிப்புடைய மேல் வயிறும், பதிந்த உந்தியும், அழகிய கீழ் உடலும், இடையில் இருந்து வனப்புடன் வெளிப்படும் கால்களும், முழங்கால் வரை நீண்டு நிற்கும் மூங்கிலை ஒத்த கரங்களும் இச்சிலையில் காணத்தக்கவை. கனமாக வார்க்கப்பட்ட உமையின் இப்படிமம் கி.பி. 11-12ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது. இப்படிமம் இவ்வாலயத்துக் கலைச் சிகரமாகத் திகழ்கிறது.

## மதுரை - சோமாசுகந்தர்

மதுரை மீனாட்சி சுந்தரேசுவரர் கோயிலில் அரிய சோமாசுகந்தரின் திருமேனி ஒன்றுள்ளது. ''ஏலவார் குழல் இறைவிக்கும் எம்பிரான் தனக்கும் பாலனாகிய முருகவேள் நடுவில் தோன்றும் கலைப்பாங்கும்'' கண்டு இன்புறத் தக்கது. இப்படிமக் குழுவில் குமரவேளின் முன்புறம் அவரது வாகனமான மயில் காட்டப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கது. சோழர் படைப்புகளிலும் காண முடியாத இவ்வரிய செப்புத் திருமேனி பாண்டியப் பெருவேந்தரின் கலைப்படைப்பிற்குச் சீரிய சான்றாக விளங்குகிறது. இச்சிலை கி.பி. 12ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது[35].

## கங்கைகொண்டான் - சோமாசுகந்தர்

கைலாசநாதர் கோயிலில் உள்ள படிமக்குழுவில் சிவனது உருவம் உயர்ந்த தாமரைப் பீடத்தின் மீது சுகாசனத்தில் நான்கு கைகளுடன் வடிக்கப்பட்டுள்ளது[36]. மேற்கரங்கள் இரண்டும் மழுவையும், மானையும் பற்றியுள்ளன. கீழ்க்கரங்கள் காக்கும் கரமாகச் சிம்மகர்ண முத்திரையில் அமைந்துள்ளன. தலையை அணிசெய்யும் செங்குத்தான உயர்ந்த சடைமகுடமும், நீள்செவிகளில் அணி செய்யும் மகரக்குழைகளும், அண்ணலை அலங்கரிக்கும் அளவான அணிகளும், தொடையை ஒட்டி அணிசெய்யும் ஆடையும், எடுப்பான தோற்றமும் இச்சிலையினைப் பாண்டியர் காலத்தியதாக அடையாளம் காட்டும். இதன் அருகில் உள்ள உமையன்னையின் அமர்ந்த கோலமும், ஆடை அணிகளும், முகப்பொலிவும், கூர்மையான கரண்ட மகுடமும் பாண்டியர் கலைப்பாங்கில் அமைந்துள்ளன. இக்குழுவிற்குரிய கந்தரின் சிலை காணப்படவில்லை. பெரிய அளவில் வார்க்கப்பட்டுள்ள இச்செப்புத் திருமேனிகள் கி.பி. 12ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியைச் சேர்ந்தவை யாகும். பெரும்பாலும் இக்காலத்தைச் சேர்ந்த சிவன், உமை ஆகியோரது

முன் இடக்கரங்கள் சிம்மகர்ண முத்திரையில் அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கது.

## பேரையூர் - சோமாசுகந்தர்

புதுக்கோட்டை மாவட்டம் பேரையூர் நாகநாதசாமி கோயிலில் உள்ள சோமாசுகந்தர் படிமக்குழு தனித்தனிப் பீடங்களில் வார்க்கப் பட்டுள்ளது. இக்குழுவிலுள்ள சோமாசுகந்தர் உருவம் தாமரை இருக்கையின் மீது இடது காலை மடித்து, வலது காலைத் தொங்கவிட்டுச் சுகாசனத்தில் நான்கு கைகளுடன் வார்க்கப்பட்டுள்ளது. சிவனது சடைமகுடம் செங்குத்தாக உயர்ந்து விளங்குகிறது. இது பிற்காலப் பாண்டியர் கலையினை அடையாளம் காணும் வகையில் அமைந்துள்ளது.

அண்ணலின் அருகில் இடப்புறத்தில் உமையின் உருவம் காணப்படுகிறது. இப்படிமம் தாமரை இருக்கையின் மீது இரு கைகளுடன் உள்ளது. வலக்கை சிம்ம கர்ண முத்திரையிலும், இடக்கை வரத முத்திரையிலும் அமைந்துள்ளன. உமையின் தலையினை அலங்கரிக்கும் மகுடம் செங்குத்தாக உயர்ந்து நிற்கிறது. தேவியின் மார்பில் குஜபந்தம் காட்டப்படவில்லை. இச்சிற்பக்குழுவின் அம்மையப்பனாகத் தோன்றும் சிவன் உமை ஆகிய இருவரது உருவமைப்பு, அமர்ந்த கோலம், ஆடை அணிகலன்கள், ஆயுதங்கள் யாவும் பிற்காலப் பாண்டியரின் படிமக் கலைக்குச் சிறந்த சான்றுகளாக விளங்குகின்றன. இதன் காலம் சுமார் கி.பி. 1200 எனலாம்[37].

## வீரபாண்டி - சோமாசுகந்தர்

இங்குச் சிவபிரான், முருகன், உமையன்னை ஆகிய மூவரும் செவ் வகப் பீடத்தின் மேலுள்ள பத்மாசனத்தில் அமர்ந்துள்ளனர்[38]. மானும், மழுவும் தாங்கிய மேலிருகரங்களும், அபய - வரதம் அளிக்கும் கீழிரு கரங்களும் கொண்ட சிவபிரானின் வலக்கால் கீழே தொங்கியும், இடக் கால் பீடத்தின் மீதும் உள்ளன. அமர்ந்திருக்கும் உமையம்மையின் வலக் கரம் குமுதத்தைத் தாங்கியுள்ளது. உமையம்மையைக் கரண்ட மகுடம் அணி செய்கிறது. கமல மலர்களைக் கரங்களிரண்டிலும் கொண்ட குகன், கரண்ட மகுடம் அணிந்து சற்றே குஞ்சித்த திருவடிகளுடன் நின்று கொண்டிருக்கிறார். இம்மூன்று திருமேனிகளையும் ஒளிமண்டலம் அழகு செய்கிறது.

விருதுநகர் மாவட்டம் தேவதானம் நச்சியாடை தவிர்த்த கோயிலில் சோமாசுகந்தர் குழுவொன்றுள்ளது. இங்குச் சிவனும், உமையும் நீண்ட பீடத்தில் அமர்ந்த கோலத்தில் நடுவே கந்தனுடன் தெய்வீகக் குடும்பமாகக் காட்டப்பட்டுள்ளனர். இவை கி.பி. 13-14ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவை[39].

தேவக்கோட்டை அருகில் உள்ள எழுவன்கோட்டை விசுவநாதசாமி கோயிலில் கி.பி. 13ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த பாண்டியர் காலப் படிமக் குழுவினைக் காணலாம். திருப்பத்தூர் அருகில் கண்டரமாணிக்கம் கைலாசநாதர் கோயிலிலும், கானாடுகாத்தான்[40] சிவலோகநாதசாமி கோயிலிலும் காரைக்குடி வட்டம் கோவிலூர் கொத்தவாலிஸ்வரர் கோயிலிலும் உள்ள சோமாசுகந்தர் படிமங்கள் வனப்புமிக்கவை. இவை கி.பி. 12-13ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவை.

புதுக்கோட்டை மாவட்டம் திருவரங்குளம் கோயிலில் சிவனும் அவர் அருகில் தேவியும் கொண்ட படிமம் உள்ளது. இவ்விரு படிமங்களுக்கிடையில் தாமரை மலரை இருகைகளில் பற்றி விளையாடும் நிலையில் அமைந்த குகனின் படிமம் காணத்தக்கது. இது கி.பி. 13ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியைச் சார்ந்தது. பிள்ளையார்ப்பட்டி கற்பகவிநாயகர் கோயிலில் உள்ள சோமாசுகந்தர் படிமக்குழு கி.பி. 13-14ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது[41]. புதுக்கோட்டைப் பகுதியைச் சார்ந்தது. மதுரை வீரபாண்டிப் படிமத்தை விடக் காலத்தால் பிற்பட்டது. இவற்றைப் பாண்டியப் பெருவேந்தர் காலத்து அழகிய படிமங்களாகக் கருதலாம்.

## தட்சிணாமூர்த்தி

சிவனது குருமூர்த்தமே தட்சிணாமூர்த்தி வடிவமெனப்படும். தட்சிணாமூர்த்தியினுடைய வடிவம் ஞானதட்சிணாமூர்த்தி, மோக தட்சிணாமூர்த்தி, வியாக்யான தட்சிணாமூர்த்தி, வீணாதர தட்சிணா மூர்த்தி என நான்கு வகைப்படும்.

இதில் இசையை உபதேசிக்கும் நிலை வீணாதர தட்சிணாமூர்த்தி வடிவம் எனப் பெயர் பெறும்[42]. இதனை வீணாதரர் எனவும் கூறுவர்.

பாண்டியப் பெருவேந்தர் காலத்து வீணாதரரின் செப்புத் திருமேனிகளைப் புதுக்கோட்டை மாவட்டம் தெக்காத்தூர் அகத்தீசுவரர் கோயிலிலும், ஆலங்குடி வட்டம் கோயிலூர் பாலபுரீசுவரர் கோயிலிலும், காரைக்குடி மாவட்டம் இலுப்பைக்குடித் தான்தோன்றீசுவரர் கோயிலிலும், மதுரை மாவட்டம் உத்தமபாளையம் சிவாலயத்திலும் காணலாம்.

## தெக்காத்தூர் - வீணாதரமூர்த்தி

இப்படிமம் சதுரமான பீடத்தின் மேல் உள்ள தாமரை இருக்கையில் வலக் காலை ஊன்றி இடக்காலைச் சற்று முன்வைத்து இடுப்பை வலப்புறம் சாய்த்த நிலையில் திரிபங்கத்தில் நான்கு கைகளுடன் நின்ற கோலத்தில் வடிக்கப்பட்டுள்ளது. இசையை உபதேசிக்கும் வீணாதரரின் மேற்கைகள் இரண்டும் மழுவையும், துள்ளிக்குதிக்கும் மானையும் கத்தரி முத்திரையில் பற்றியுள்ளன.

முன்கைகள் இரண்டும் வீணையை மீட்டும் பாவனையில் அமைந்து முத்திரை காட்டுகின்றன. இவ்வெழில் வாய்ந்த செப்புத் திருமேனி தலையில் நீண்ட சடைமுடி தரித்துக் காணப்படுகிறது. இதன் தோளில் அழகிய தோள் மாலையும், இடப்பக்க மார்பில் தடித்த புரிநூலும், மேல்வயிற்றில் உதரக்கச்சையும் அணி செய்கின்றன. இடையிலிருந்து மேல் தொடைவரை உடலையொட்டி இடைக்கச்சை தரித்துள்ளது. இடையைச் சுற்றிலும் இடைவாரும், தொடை மீது குறங்குசெறியும், கால்களில் கழலும், பாதங்களில் சிலம்பும் அணிந்து, வீணையின் நாதத்தில் இணைந்து எழில்வாய்ந்த திருவுருவாய் எழுந்தருளிய திருக்கோலமாக உள்ளது. இது சிறப்பு வாய்ந்த செப்புத் திருமேனியாகும்.

உருவமைதி, ஆடை அணிகள், ஆயுதங்களின் தன்மையினைக் கொண்டு இதை இடைப் பாண்டியர் காலச் செப்புச் திருமேனியாகக் கருதலாம். இவ்வூரிலுள்ள சடாவர்மன் திரிபுவனச் சக்கரவர்த்தி ஸ்ரீவல்லபனின் 3ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு (கி.பி. 1094) இக்கோயிலுக்கு அளிக்கப்பட்ட தானத்தைக் குறிப்பதால் வீணாதர மூர்த்தியின் காலம் கி.பி. 11ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியாகவோ கி.பி 12ஆம் நூற்றாண்டின் தொடக்கப் பகுதியாகவோ இருக்கலாம் எனக் கருதப்படுகிறது.

இது இக்காலத்துச் சிற்பங்களுக்கும், சிலைகளுக்கும் உரிய நுட்பமான வேலைப் பாட்டினையும், ஆடை அணிகலன்களையும் பெற்றுத் திகழ்கிறது.

## இலுப்பைக்குடி - வீணாதரமூர்த்தி

இப்படிமம் சதுரமான பீடத்தின் மீதுள்ள தாமரை இருக்கையில் உடலை மூன்று வளைவுகளாகக் கொண்டு நான்கு திருக்கைகளுடன் நின்ற கோலத்தில் வார்க்கப்பட்டுள்ளது. தலையில் உயர்ந்த சடா மகுடம் அலங்கரிக்கிறது.

வீணாதரமூர்த்தியின் மேல்வலக்கையில் மழுவும், இடக்கையில் மானும் கத்தரி முத்திரையில் காட்டப்பட்டுள்ளன. முன்கைகள் இரண்டும் தெக்காத்தூர் சிலையைப் போன்று வீணையை ஏந்தி மீட்டும் பாங்கில் முத்திரை காட்டுகின்றன.

வீணாதரரின் நுதலில் நெற்றிக்கண் அமையப் புருவங்கள் வில்லை ஒத்து வளைந்தும், கண்கள் பூவிதழ் வடிவில் நீண்டும், மூக்கு எள் பூவையொத்தும், இதழ்கள் விரிந்தும், முகம் இளம்புன்னகை தவழப் பொலிவுடனும் விளங்குகிறது.

வீணாதரரின் உடல் வாகு, நிற்கும்நிலை அங்கங்களின் அமைப்பு, விரல்களின் அசைவு, மேனியின் அழகு, முகத்தில் வெளிப்படும் பொலிவு யாவும் மிகவும் அளவுப் பொருத்தமாக அமைக்கப்பட்டுள்ளது.

பாண்டிய நாட்டுச் சிற்பியின் சீரிய திறமைக்கு இப்படிமம் சான்று பகர்கிறது. இதன் காலம் கி.பி. 12ஆம் நூற்றாண்டு. இப்படிமம் பிற்காலப் பாண்டியர் காலத்தது.

## கோவிலூர் - வீணாதரர்

புதுக்கோட்டை மாவட்டம் ஆலங்குடி வட்டம் கோவிலூர் பாலபுரீசுவரர் ஆலயத்தில் அரிய வீணாதரரின் செப்புத் திருமேனி ஒன்று உள்ளது. இப்படிமம் சதுரமான பீடத்தின் மீதுள்ள தாமரை இருக்கையில் வலக்காலை ஊன்றி இடக்காலைச் சற்று முன்வைத்து, நான்கு கைகளுடன் நின்ற கோலத்தில் வார்க்கப்பட்டுள்ளது. இவரது மேற்கரங்கள் முறையே மழுவையும், மானையும், கத்தரி முத்திரையில் பற்றியுள்ளன. கீழ்க்கரங்கள் இரண்டும் வீணையை ஏந்தி மீட்டும் பாவனையில் அமைந்துள்ளன. வீணாதரர் தலையை உயர்ந்த சடாமகுடம் அலங்கரிக்கிறது. மகுடத்தில் வலப்புறம் ஆடும் நாகமும், இடப்புறம் பிறைச்சந்திரனும் செருகப்பட்டுள்ளன. இச்சிலையின் பீடம் உபானம், பத்மம், முப்பட்டை, குமுதம், கண்டம், பட்டிகை ஆகிய அதிட்டான உறுப்புகளை உடையது. இப்பீடத்தின் அமைப்பு முறையும், சிலையின் உருவமைப்பும் பிற்காலப் பாண்டியர் கலைப் பாணியில் அமைந்துள்ளன. இதன் காலம் கி.பி. 12ஆம் நூற்றாண்டு எனலாம். இச்சிலை புதுக்கோட்டை மாவட்டம் தெக்காத்தூர் வீணாதரர் சிலையோடு ஒப்பிடத்தக்கது. இவ்விரு சிலைகளும் பாண்டியப் பெருவேந்தர் காலப் படிமக் கலைக்கு எடுத்துக்காட்டாகத் திகழ்கின்றன.

## உத்தமபாளையம் - வீணாதரமூர்த்தி

இப்படிமம் ஏனைய படிமங்களைப் போன்று, கைகளில் நீண்ட வீணையைப் பற்றி, மீட்டும் பாவனையில் உள்ளது. இது கால்களைத் தாமரை இருக்கையின் மீது ஊன்றி நான்கு கைகளுடன் வடிக்கப்பட்டுள்ளது. இச்சிலை நீண்ட சடைமகுடம், மகரக்குழை, சுருள்தோடு, கழுத்தணி, தோள்வளை, வளையம், வயிற்றுக் கச்சை, இடைக்கச்சை, கழல் ஆகியவை அணி செய்ய, முகத்தில் சிந்தனை தவழச் சிறுமுறுவல் கொப்பளிக்க, வீணையின் நாதத்தில் தன்னை இணைத்துக் கொண்டு, எழில் வாய்ந்த திருவுருவாய்க் காட்சியளிக்கிறது. இச்செப்புத் திருமேனி கி.பி. 13ஆம் நூற்றாண்டைச் சார்ந்த பிற்காலப் பாண்டியர் காலத்தது[46]. இலுப்பைக்குடி வீணாதரமூர்த்தியைவிடக் காலத்தால் சற்றுப் பிற்பட்டது.

பாண்டியப் பெருவேந்தர் காலத்துச் செப்புத் திருமேனிகளில் தட்சிணாமூர்த்தியின் நான்கு வடிவங்களில் வீணாதரமூர்த்தியின் வடிவத்தை மட்டுமே காணமுடிகிறது. ஏனைய வடிவங்களைச் செப்புத் திருமேனிகளாக வடிக்கும் வழக்கம் காணப்படவில்லை.

## திருப்பத்தூர் - சட்டைநாதர்

காரைக்குடி மாவட்டம், திருப்பத்தூர் திருக்கற்றளி நாதர் கோயிலில் அரிய பைரவர் செப்புத்திருமேனி ஒன்றுள்ளது. இப்பைரவர் பத்மபீடத்தின் மீது நின்ற நிலையில் இருகைகளுடன் காட்டப் பட்டுள்ளார். வலக்கை கதாயுதத்தின் மீதுள்ளது. இடக்கை கபாலத்தை ஏந்தியுள்ளது. தலையில் சடைப்பாரமும், காதில் பத்ர குண்டலமும், கழுத்தில் கண்ட மணியும் காட்சியளிக்கின்றன. இது கி.பி. 12-13ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த செப்புத் திருமேனியாகக் கருதப்படுகிறது[47].

இப்பைரவரது உருவம் தோளிலிருந்து கணுக்கால் வரை நீண்ட சட்டை போன்ற மேலாடையணிந்து காணப்படுகிறது. இச்செப்புத் திருமேனியை முதன் முதலாகப் பைரவர் என அடையாளம் கண்டவர் அறிஞர் டி.ஏ. கோபிநாத் ஆவார். பைரவர் வகையினைச் சார்ந்த இத்திருமேனியைச் சட்டைநாதர் என்று கூறும் வழக்கு தமிழகத்தில் உள்ளது. இது பாண்டியப் பெருவேந்தர் காலச் செப்புச் சிலையாகும். சோழ நாட்டிலும் இத்தகைய சட்டையணிந்த சிலையினைச் சீர்காழியிலும் வைத்தீசுவரன் கோயிலின் அருகில் பாபநாசத்தில் உள்ள கோயில்களிலும் காணலாம். அச்சிலைகளும் சட்டைநாதர் என்ற பெயரில் வழங்கப்படுவது குறிப்பிடத்தக்கது.

## சென்னை அருங்காட்சியகம் - பைரவர்

சென்னை அருங்காட்சியகத் தொகுப்பில் பாண்டியர் காலத்தைச் சார்ந்த பைரவரது சிறிய செப்புத் திருமேனியொன்று உள்ளது. கி.பி. 13ஆம் நூற்றாண்டைச் சார்ந்த இச்சிலை 14 செ.மீ. உயரமுடையது[48]. எண் கரங்களில் உடுக்கை, பாம்பு, அங்குசம், பாசம், திரிசூலம், கைமணி ஆகிய ஆயுதங்கள் தாங்கி, முன்கரங்களில் அபய, வரத முத்திரைகாட்டி ஆடையணியாத அழகராக இத்திருமேனி காட்சியளிக்கிறது. தலையில் அனல்மகுடமும், மார்பில் அரவப் புரிநூலும், தொடைவரை உடைமணியும் தரித்துத் தாமரைப் பீடத்தில் நிற்கிறது. பைரவரது பின்புறம் அவரது வாகனமான ஞமலி (நாய்) வாலைச் சுருட்டிய நிலையில் நிமிர்ந்து நிற்கிறது. கனமாக வார்க்கப்பட்டுள்ள இச்சிலை பிற்காலப் பாண்டியர் கலைப்பாணியில் அமைந்துள்ளது.

## தென்காசி - கங்காளமூர்த்தி

இப்படிமம் சதுரமான பீடத்தின் மீதுள்ள தாமரை இருக்கையில் உடுக்கை வாசித்தபடி அழகுசிந்த நடந்துவரும் பாவனையில் வார்க்கப்பட்டுள்ளது[49]. மேற்கரங்களில் இடக்கை கத்தரி முத்திரை காட்டும்பாங்கிலும், வலக்கை துள்ளிக் குதிக்கும் மானுக்குத் தளிர் கொடுக்கும் பாங்கிலும் அமைந்துள்ளன. அண்ணலின் வலப்புறம் மானும், இடப்புறம் தட்டைத் தலையில் தாங்கிவரும் சிவகணமும் செப்புச் சிலைகளாக வடிக்கப்பட்டுள்ளதைக் காணலாம். இவ்வாலயத்

தில் உள்ள ரிடபாந்திகர் என்னும் ஏறு ஊரும் பெருமானின் படிமமும் போற்றத்தக்கது. இது தன் வலக்கரத்தைத் தாழ்கரமாக நீட்டி இடக்கரத்தைக் காளை வாகனத்தின் மீது ஊன்றும் பாவனையில் கொண்டுள்ளது. இதன் தலையில் நீண்ட சடைமுடியும் இடையில் தொடைவரை கச்சையும் அணிந்து எடுப்பான தோற்றத்துடன் வடிக்கப்பட்டுள்ளது. இது தென்காசிப் பாண்டியரது கலைப்பாங்கினைத் தனித்து அடையாளம் காட்டுகிறது.

## இலுப்பைக்குடி - சண்டிகேசுவரர்

இப்படிமம் சதுரமான பீடத்தின் மீதுள்ள தாமரை இருக்கையில் இருகால்களையும் சமநிலையில் ஊன்றி, நின்ற கோலத்தில் வார்க்கப்பட்டுள்ளது. சண்டிகேசுவரரின் இருகைகளும் அஞ்சலித்த நிலையில் உள்ளன. நீண்ட தண்டையுடைய மழு வலப்புற முன்தோளில் சார்த்தப்பட்டுள்ளது. தலையை நீண்ட சடாமகுடம் அலங்கரிக்கிறது.

சண்டேசர் (சண்டிகேசுவரர்) படிமம் நீண்ட முகமும், உயர்ந்த புருவமும், விரிந்த கண்ணும், எடுப்பான மூக்கும், குவிந்த வாயும், மேல் தூக்கிய தாழ்வாயும், நீண்டு மெலிந்த உடல்வாகும் கொண்டு அமைந்துள்ளது. இப்படிமம் கி.பி. 12-13ஆம் நூற்றாண்டைச் சார்ந்த பிற்காலப் பாண்டியர் காலத்தது[50].

புதுக்கோட்டை மாவட்டம் ஆலங்குடி நாமபுரீசுவரர் கோயில், திருவரங்குளம் கோயில் ஆகியவற்றில் உள்ள சண்டிகேசுவரர் செப்புப்படிமங்கள் கி.பி. 13ஆம் நூற்றாண்டின் தொடக்கப்பகுதியைச் சார்ந்தவை. முதல் படிமம் தலையில் சடைமகுடம் தரித்துக் காதுகளில் ஓலைக்குழை அணிந்து, வலத் தோளில் மழுவாயுதத்தைக் கொண்டுள்ளது. இரண்டாவது படிமம் தலையில் சடைமகுடமும் செவிகளில் மகரக் குழையும் அணிந்து அஞ்சலித்து நிற்கிறது. இதன் தோளில் மழுப்படை காட்டப்படவில்லை.

## வீரபாண்டி - சண்டேசுவரர்

வீரபாண்டிக் கண்ணீசுவரமுடையார் கோயிலில் இரண்டாவது முறை புதையலாகக் கிடைத்த செப்புத் திருமேனிகளில் இப்படிமம் குறிப்பிடத்தக்கது. தாமரை இருக்கையின் மீது இருகைகளுடன் பணிந்து நின்றகோலத்தில் இச்சிலை வடிக்கப்பட்டுள்ளது. தலையில் நீள்சடை முடியும், காதுகளில் குழையும், கழுத்தில் மெல்லிய அணிகளும், இடையில் தொடைவரை கச்சையும் அணிந்து மழுவாயுதத்தைத் தோளில் தாங்கி நிற்கிறது. இதன் உடல் உறுப்புகள் நீண்டும், முழங்கால் முட்டி, காலெலும்புகள் ஆகியவை வெளிப்பட்ட நிலையிலும் காணப்படுகிறது. இச்சிலை கி.பி. 14ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது. இச்சிலையின் அமைப்பு முறையும், ஆடையணிகளும் விசயநகரர் படிமக்கலைக்கு ஒரு முன்னோடியாக அமைந்திருப்பதைக் காண்கிறோம்.

## சேரமாதேவி - அதிகாரநந்தி

திருநெல்வேலி மாவட்டம் சேரமாதேவி அம்மணநாதசுவாமி ஆலயத்தில் அதிகாரநந்தியின் செப்புத் திருமேனி ஒன்றுள்ளது[52]. இச்சிலை, தலையில் உயர்ந்த சடை மகுடம் தரித்து நான்கு கைகளுடன் தாமரை இருக்கையின் மீது நின்ற கோலத்தில் காட்சியளிக்கிறது. மேல் இருகைகள் சிவனின் அம்சங்களாக மானும், மழுவும் தாங்கிக் கொண்டுள்ளன. கீழிரு கைகள் கூப்பிய நிலையில் காணப்படுகின்றன. இதன் இடுப்பிலிருந்து தொடைவரை இடைக்கச்சை அணிந்துள்ளது. அதன் ஆடைக்கட்டு இடையின் பக்கங்களில் எழிலாகச் சரிந்து நிற்கின்றது. இது கி.பி. 14ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது எனலாம். இது பாண்டியப் பெருவேந்தரின் இறுதிக்காலத்தைச் சார்ந்தது. இது நெல்லை மாவட்டம், கங்கைகொண்டான் கயிலாசநாதர் ஆலயத்தில் உள்ள விசயநகரர் கால அதிகாரநந்தியைவிடக்[53] காலத்தால் முற்பட்டதாக அறிகிறோம். கங்கைகொண்டான் அதிகாரநந்தி மானிட உடலும், குரங்கின் முகமும் உடையதாகத் திகழ்கிறது. சேரமாதேவி அதிகாரநந்தி முற்றிலும் மானிட வடிவுடையது. இதேபோன்ற மானிட வடிவுடைய சிலைகளை மதுரை மீனாட்சி சுந்தரேசுவரர் கோயிலிலும், புதுக்கோட்டை அருகில் கோவிலூர் பாலபுரீசுவரர் கோயிலிலும் காணலாம். இவையும் பிற்காலப் பாண்டியர் காலத்தைச் சார்ந்தவை.

## நாயன்மார்கள்

சிவன் கோயில்களில் சமயக்குரவர் நால்வருடைய சிற்பங்களையும், சிலைகளையும், கல்லிலும், செப்பிலும் செய்து வைக்கும் வழக்கினைத் தமிழகம் முழுவதும் கி.பி. 10ஆம் நூற்றாண்டு முதல் காணமுடிகிறது[54]. குறிப்பாகச் சிவாலயங்களிலும், சிறப்பாகப் பாடல் பெற்ற தலங்களிலும் இவற்றை வடித்து வைக்கும் மரபு இருந்துவந்துள்ளது. இதனைக் கல்வெட்டுகள் குறிக்கக் காண்கிறோம்.

அப்பர், திருஞானசம்பந்தர், சுந்தரமூர்த்தி, மாணிக்கவாசகர் ஆகியோரது செப்புச்சிலைகள் பல பணிந்து நின்றகோலத்தில் பாண்டியநாட்டில் காணப்படுகின்றன.

## அப்பர்

அப்பரது உருவச்சிலை இடுப்பில் துண்டு உடுத்தி இருகைகளைக் கூப்பிவணங்கும் வகையில் தோளில் உழவாரப்படையைச் சாத்தியபடி காணப்படும். கோயில் திருப்பணிக்கு உதவும் இப்படையினைப் பெரும்பாலும் அப்பரது இடதுதோளிலோ வலதுதோளிலோ காணலாம். மிகச்சில திருமேனிகளில் உழவாரப்படை இல்லாமலும் காட்டப்படுவ துண்டு. இவரது தலையிலும் காதிலும் மார்பிலும் கையிலும் உருத்திராட்ச மணிகள் காணப்படும்.

பெரும்பாலும் இவரது கைகள் இரண்டும் அஞ்சலி முத்திரையிலும் சில நேரங்களில் கைத்தாளங்கள் பற்றியநிலையிலும் காணப்படுவதுண்டு. இடுப்பில் துண்டு உடுத்தியும், கோவணம் தரித்தும் காணமுடிகிறது. பாண்டியர் காலத்திய அப்பர் படிமங்களுக்கு மேலப்பனையூர், மதுரைக்கோயில் சிலைகள் சிறந்த சான்றாகத் திகழ்கின்றன.

மதுரை மீனாட்சி சுந்தரேசுவரர் கோயிலில் உள்ள அப்பரது சிலை இடையில் கௌபீனம் தரித்து, உழவாரப்படையை இடதுதோளில் சாய்த்தபடி அஞ்சலித்து நிற்கிறது. இச்சிலை கி.பி. 14ஆம் நூற்றாண்டின் இறுதிப்பகுதியைச் சார்ந்தது. இது கடைப் பாண்டியர் காலத்தது.

## திருஞானசம்பந்தர்

சீர்காழியில் தோன்றிய ஆளுடைய பிள்ளையான ஞான சம்பந்தரின் சிலைகள், சிற்றிளம் குழந்தை வடிவில் கையில் பொற்கிண்ணம் பற்றிச் சுட்டு விரலால் சூசி முத்திரை காட்டும் நிலையிலும் கைத்தாளம் பற்றி இன்னிசையால் தமிழ்பரப்பும் நிலையிலும் உள்ளன. மேலும் இவை ஆடும் நிலையிலும் காட்டப்படுவதுண்டு. பாண்டிய நாட்டில் கல்லிலும், செம்பிலும் இவரைக் காட்டும் மரபைக் காணமுடிகிறது.

## இலுப்பைக்குடி - ஞானசம்பந்தர்

இப்படிமம் தாமரை இருக்கையில் இடக்காலை ஊன்றி வலக்காலைத் தூக்கி அழகாக ஆடும் நிலையில் வார்க்கப்பட்டுள்ளது. வலக்கை கடக முத்திரையில் மேல் நோக்கிச் சுட்டும் கையாக அமைந்துள்ளது.

செங்குத்தாகத் தூக்கிமுடிந்த கேசபந்தம் தலைக்கோலமாகத் திகழ்கிறது. ஆளுடைப்பிள்ளையாரின் காதுகளை நீளக்குதம்பை அலங்கரிக்கிறது. முகத்தோற்றம், உடலமைப்பு, அணிகள் ஆகிய வற்றைக் கொண்டு இவை கி.பி. 12-13ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததாகக் கருதப்படுகிறது. இது பிற்காலப் பாண்டியர் கலையை வெளிப்படுத்துகிறது.

## பேரையூர் - ஞானசம்பந்தர்

இவ்வூர் நாகநாதசாமி ஆலயத்தில் உள்ள அழகிய ஆடும் ஞானசம்பந்தர் படிமம் முடி முதல் அடிவரை கேசபந்தம், நீலக்குதம்பை, மணிவடம், முத்துவடம், முத்துமாலை, சன்னவீரம், தோள்வளை, அரைஞாண், தண்டை, பாதசரம் ஆகிய அணிகலன்கள் பூண்டு, இடையில் ஆடையின்றி விளங்கும் இளம்பிள்ளையாகக் காட்டப் பட்டுள்ளது. இவரது வலக்கை சூசி முத்திரையைக் காட்டுகிறது. இது கி.பி. 12ஆம் நூற்றாண்டின் முற்பகுதியைச் சேர்ந்தது. பாண்டியர்

கலைப்பாணியில் அமைந்தது. இத்திருமேனியின் உயரம் 52 செ.மீ. அகலம் 22 செ.மீ. ஆகும்.

### சுந்தரமூர்த்தி

இப்படிமம் பொதுவாகத் தலையில் சரிந்த கொண்டையுடனும், கிரீடமகுடம் அல்லது இராசமகுடம் தரித்த நிலையிலும், இடையில் பட்டாடை உடுத்திப் பல்வகை அணிகள் பூண்டு தனித்து நின்ற கோலத்திலும் அமைந்துள்ளது. பரவை நாச்சியாருடனோ சங்கிலி நாச்சியாருடனோ தோளில் அணையும் பாங்கிலும் அமையும். இவரது வலக்கை கடக முத்திரையிலோ செண்டு பிடிக்கும் பாவனையிலோ காட்டப்படுவதுண்டு. இவற்றைப் பாண்டியப் பெருவேந்தர் காலச் சிலைகளில் காணலாம்.

### இலுப்பைக்குடி - சுந்தரர்

தேவார மூவரில் ஒருவரான சுந்தரர் படிமம் இலுப்பைக்குடித் தான்தோன்றீசுவரர் கோயிலில் காணப்படுகிறது. தாமரை இருக்கையில் வலக்காலை ஊன்றி இடக்காலைச் சிறிது மடக்கி முன்வைத்து இரண்டு கைகளுடன் நின்றகோலத்தில் இது வார்க்கப்பட்டுள்ளது. வலக்கை முன்னோக்கி நீண்டு முத்திரை காட்டுகிறது. இடக்கை நாச்சியார் தோளில் அமைந்த வண்ணம் விளங்குகிறது.

இப்படிமத்தில் சுந்தரரின் தலைக்கோலம் குறிப்பிடத்தக்கது. தலையின் முன்முடிகளைப் படியச்சீவிப் பின்புறம் அள்ளிக்கொண்டை யிட்டு அழகுடன் விளங்குகிறது. சுந்தரரின் அணிகளும், ஆடை யமைப்பும் படிமத்தை மேலும் அழகு செய்கின்றன. கனமாக வார்க்கப் பட்ட இச்செப்புத் திருமேனி பொன்வண்ணத்தில் மிளிர்கிறது.

### பரவைநாச்சியார்

சுந்தரரின் தேவியருள் ஒருவரான பரவைநாச்சியார் படிமத்தை இலுப்பைக்குடிக் கோயிலில் காணலாம். இப்படிமம் சதுரமான பீடத்தின் மீதுள்ள தாமரை இருக்கையில் இருகைகளுடன் திரிபங்கத்தில் நின்றகோலத்தில் வார்க்கப்பட்டுள்ளது. பரவையின் வலக்கை கடக முத்திரையில் நீலோற்பல மலரைப் பிடித்துள்ளது. இடக்கை தாழ்கையாக அமைந்து விளங்குகிறது. 'தமிழகம்' என்ற ஒருவகைத் தலைக்கோலம் நாச்சியாரின் இயல்பான முடியை மேன்மேலும் அழகுபடுத்தக் காண்கிறோம். இது தலையின் பின்புறம் வட்டவடிவமாக அமைந்து விளங்குகிறது. அணிகளும், ஆடைகளும் நாச்சியாரை மேலும் அழகு செய்கின்றன. இவ்விரு படிமங்களும் கி.பி. 12-13ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததாகக் கருதப்படுகின்றன[57].

## பேரையூர் - சுந்தரர்

இப்படிமம் உயர்ந்த தாமரைப் பீடத்தின் மேல் இரண்டு கைகளுடன் இடுப்பை வலப்புறம் ஒடித்து நிற்கிறது. வலக்கை, கடக முத்திரையில் செண்டு பிடிக்கும் பாவனையில் காட்டப்பட்டுள்ளது. இடக்கை, நாச்சியாரைத் தழுவும் பாங்கில் உயர்த்திய நிலையில் காட்டப்பட்டுள்ளது. இவரது முழங்காலில் வீரமணியைக் காண்கிறோம். இதன் காலம் கி.பி. 12ஆம் நூற்றாண்டின் முற்பகுதி எனலாம்.

## கல்வெட்டுச் செய்தி

முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் காலத்திலேயே (கி.பி. 1216-23) சுந்தரமூர்த்தி நாயனாருக்கும் பரவைநாச்சியாருக்கும் தென் திருப்பேரூர் சிவன் கோயிலில் செப்புத் திருமேனிகள் செய்துவைத்து வழிபாடு நடத்தப்பட்டதைக் கல்வெட்டுகளால் அறிய முடிகிறது. தொடர்ந்து முதலாம் சடையவர்மன் சுந்தரபாண்டியன் (கி.பி. 1260 - 1284) உத்தரவுப்படி புக்கொளியூர் என்னும் அவினாசியில் சுந்தரமூர்த்தி நாயனாருக்குக் கோயில் அமைத்துச் சிறப்பு செய்யப்பட்டதை அறிகிறோம். இதனால் பாண்டியப் பெருவேந்தர்கள் நாயன்மார்களுக்கு அளித்த மரியாதையையும், முதன்மையையும் அறியமுடிகிறது.

## மாணிக்கவாசகர்

திருவாதவூரில் பிறந்த வாதவூர் அடிகளான மாணிக்கவாசகரது சிலைகள் இடையில் கௌபீனம் தரித்து மேலாடை இன்றித் துறவு பூண்ட நிலையில் காணப்படும். இவரது வலக்கை சின்முத்திரையுடனும், உருத்திராட்ச மாலையைப் பற்றிய நிலையிலும், இடக்கை ஓலைச் சுவடியை ஏந்திய நிலையிலும் காணப்படுகிறது. சுவடியில் சிவாயநம என்றும் நமசிவாய என்றும் பண்டைய தமிழ் எழுத்துகளில் பொறிக்கப்பட்டுக் காணப்படுவதுண்டு.

## மதுரை - மாணிக்கவாசகர்

மதுரைக் கோயிலில் மாணிக்கவாசகரது செப்புச் சிலையொன்று உள்ளது. வலக்கை சின்முத்திரையுடனும், இடப்புற உள்ளங்கையில் திருவாசக ஏடும் உள்ளது. இது பாண்டியப் பெருவேந்தர் காலத்தது.

ஆத்தூர் சோமேசுவரர் கோயிலில் மாணிக்கவாசகர் செப்புத்திருமேனி ஒன்றுள்ளது[58]. இதன் வலக்கை சின்முத்திரை கொண்டும் இடக்கை ஏடு ஏந்தியுமுள்ளது. இது பாண்டியப் பெருவேந்தர் காலத்தது. இக்கோயிலில் சற்றுக் காலத்தால் பிற்பட்ட சேரமான் பெருமாள் நாயனாரது உருவச்சிலையும் உள்ளது.

பாண்டியர் கால மாணிக்கவாசகர் சிலைகளைத் திருவரங்குளம், பேரையூர், திருநெல்வேலி, திருவாதவூர், அரண்மனை சிறுவயல்,

திருப்பத்தூர், வடவம்பட்டி, கானாடுகாத்தான், கண்டதேவிக்கோட்டை ஆகிய இடங்களில் காணலாம்.

## காரைக்கால் அம்மையார்

நாயன்மார் அறுபத்து மூவரில் மூவர் பெண்கள். ஒருவர் காரைக்கால் அம்மையார், மற்றொருவர் பாண்டிமாதேவி மங்கையர்க் கரசியார். மூன்றாமவர் இசைஞானியார்.

காரைக்கால் அம்மையார் தம் கணவர் தம்மைத் தெய்வமெனப் போற்றி வணங்குவது கண்டு தன்னைப் பேயாக மாற்றி எஞ்ஞான்றும் இறைவனடிக் கீழிருக்க அருள வேண்டும் என்று இறைவனிடம் இறைஞ்சியவர். இறைவனே புனிதவதியாரை (இது காரைக்கால் அம்மையாரின் முதல் நிலைப் பெயர்) ''அம்மையே'' என்று அழைத்துப் பாராட்டிய பேறு பெற்றவர். சுந்தரமூர்த்தி நாயனாரும் அம்மையாரைப் ''பேயார்க்கும் அடியேன்'' என்று குறிப்பிடுகிறார்.

பாண்டிய நாட்டில் காரைக்கால் அம்மையாரின் செப்புச் சிலை சிலவற்றைக் கண்டுகளிக்கலாம். இளைத்த தோற்றத்துடன், எலும்பும் தோலுமாய்க் கைகளில் கைத்தாளம் பற்றிய நிலையில் கூத்த பெருமானடிக்கீழ் அமர்ந்திருக்கும் திருமேனி கண்டு கண்டு இன்புறத்தக்கது. திருக்குற்றாலநாதர் திருக்கோயிலின் சித்திரசபையில் ஆடும் பெருமானின் கீழ், காரைக்கால் அம்மையாரின் செப்புத் திருமேனியொன்று உள்ளது[59]. இது திருவாலங்காட்டுச் செப்புத் திருமேனியுடன் ஒப்பிடத்தக்கது.

தூத்துக்குடி மாவட்டம் ஆத்தூர் சோமேசுவரர் கோயிலில் ஆடவல்லான், சிவகாமி, மாணிக்கவாசகர் ஆகிய படிமக்குழுவுடன் காரைக்கால் அம்மையாரின் செப்புத்திருமேனி ஒன்றும் காணப்படுகிறது. இவ்வுருவம் இருகைகளிலும் கைத்தாளம் பற்றி, வற்றியமார்பும் சுருங்கிய வயிறும் கொண்டு அகவை முதிர்ந்த தோற்றத்தில் காட்சியளிக்கிறது. இச்சிலையினைச் சோழப் பாண்டியர் காலத்தியதாக அறிஞர் எஸ்.ஆர். பாலசுப்பிரமணியம் கருதுகிறார்[60]. ஆனால் இவற்றைக் கூர்ந்து நோக்கின் இச்சிலையில் சோழரது கலைச்சாயல் ஊடுருவி இருப்பினும் பாண்டியரது கலைப்பாங்கே மிகுந்து இருப்பதைக் காண முடிகிறது. எனவே காரைக்கால் அம்மையாருடன் கூடிய படிமத் தொகுப்பினைப் பாண்டியப் பெருவேந்தர் காலத்ததாகக் கருதலாம்.

## அரசரின் உருவச்சிலைகள்

சோழ மன்னர்களைப் போன்று பாண்டியப் பெருவேந்தர்களும் ஆங்காங்கே சில உருவச்சிலைகளை ஆலயங்களுக்குச் செய்து அளித்துள்ளனர். மூன்றாம் சடையவர்மன் வீரபாண்டியனது (கி.பி. 1297 - 1342) திருக்கோவிலூர்க் கல்வெட்டால் அங்கு எல்லாந்தலையான

பெருமாள் என்னும் சிலை எடுக்கப்பட்டதை அறியமுடிகிறது. எனவே இவ்விருதுப் பெயருக்குரிய இம்மன்னன் காலத்ததே இச்சிலை எனக் கருதலாம்.

## வைணவப் படிமங்கள்

ஆழ்வார்கள் மங்களாசாசனம் செய்த திருப்பதிகள் நூற்றெட்டு. அவைகளில் பரமபதம், திருப்பாற்கடல் ஆகியவை தவிரஎஞ்சிய நூற்றாறு திருப்பதிகளில் பாண்டிய நாட்டில் உள்ளவை பதினைந்து ஆகும். இங்கெல்லாம் வைணவ சமயச் சார்புடைய பல்வகைப் படிமங்களைப் பாண்டியப் பெருவேந்தர்கள் செய்தளித்துள்ளனர். அவற்றில் சிறப்பாகத் திருமாலின் செப்புத் திருமேனிகளை நின்ற, இருந்த, கிடந்த கோலம் என மூன்று நிலைகளில் காணலாம்.

நின்ற கோலத்தில் மேலிரு கைகள் சங்கு சக்கரங்கள் தாங்கியதாகவும், கீழ்க் கைகள் காக்கும் கரமாகவும், இடை அல்லது தொடைமீது அமைந்த கரமாகவும் விளங்குமாறு இத்திருமேனிகள் அமையும். திருமாலின் இருந்த கோலத் திருமேனிகளும் மேற்கரங்கள் சங்கு சக்கரங்களை உடையதாயும் கீழ்க்கரங்கள் அபய - வரத முத்திரை உடையதாயும் அமையும். கிடந்த கோலத்தில் பெரும்பாலும் கண்ணனது குழந்தைப் பருவப் படிமங்களைக் காணலாம். மிகச் சில இடங்களில் பள்ளிகொண்ட பெருமாளாகக் காட்டப்படுவதும் உண்டு. கிடந்தகோலத்தில் ஆலிலைக் கண்ணன், சந்தான கோபாலன் போன்ற திருமேனிகள் காணப்படுகின்றன.

பாண்டிய நாட்டில் கி.பி. 10ஆம் நூற்றாண்டிலிருந்து வைணவச் சார்புடைய செப்புத் திருமேனிகள் வழிபாட்டில் இருந்தன என்பதைப் பழனி. திருத்தங்கல்[61] போன்ற தலங்களில் கிடைத்த திருமால், திருமங்கை மன்னன் படிமங்கள் மூலம் அறியமுடிகிறது. முற்காலப் பாண்டியரைவிட இரண்டாம் பாண்டியப் பேரரசுக் காலம் தொட்டு வைணவ சமயச் சார்புடைய சிலைகளை இப்பகுதியில் மிகுதியாகக் காணமுடிகிறது. திருமோகூர், அழகர்கோயில்[62], ஆழ்வார்திருநகரி, திருவில்லிபுத்தூர்[63], திருவைகுண்டம், திருத்தங்கல், திருமயம், நான்குனேரி, வானவன்மா தேவி, சேரன் மாதேவி[64], கங்கைகொண்டான், ஆத்தூர்[65] திருக்கோளூர் ஆகிய தலங்களில் உள்ள வைணவ மரபில் அமைந்த சிற்பங்களையும், செப்புச் சிலைகளையும் பாண்டியர் காலக் கலைவளத்திற்கு எடுத்துக்காட்டாகக் கூறலாம்.

## திருமாலிருஞ்சோலை - சுந்தரத்தோளுடையான்

திருமாலிருஞ்சோலையில் எழுந்தருளும் சுந்தரத்தோளுடையான் செப்புப்படிமம் சீரிய கலைத்திறம் மிக்கது. இதன் அழகிய தோற்றமும் நிற்கும் நிலையும் பொருத்தமான அங்க அளவுகளும் மேனியின்

வண்ணமும் வார்ப்பிலே வார்த்த வனப்புமிகு படிமத்திற்குச் சிறந்த சான்றாகும். இவ்வுருவம் ஆழியும், சங்கமும் ஏந்தி அழகும், கம்பீரமும் தோன்ற, நின்ற திருக்கோலத்தில் காட்சி அளிக்கிறது. இச்சிலையை நேரில் காணும்போது,

"முடிச் சோதியாய் உனது முகச்சோதி மலர்ந்ததுவோ
சோதி நீ நின்ற தாமரையாய் அலர்ந்ததுவோ'."

என்ற நம்மாழ்வாரின் பாடற்பகுதி நம் மனத்திலே தோன்றும், இச்செப்புத் திருமேனி கி.பி. 13ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது.

## புதுக்கோட்டை - வரதராசப்பெருமாள்

புதுக்கோட்டைக் கோயிலிலுள்ள வரதராசப்பெருமாளின் செப்புத் திருமேனி அழகியதொரு படைப்பு. மேற்கைகள் ஆழியும், சங்கமும் ஏந்தியுள்ளன. இதன் தலையில் செங்குத்தாகச் செல்லும் அழகிய கிரீட மகுடம், காதுகளில் உள்ள மகர குண்டலங்கள், கழுத்தை அலங்கரிக்கும் மணிவடம், முத்துவடம், இடப்புறத் தோளிலிருந்து கீழ்வயிற்றைத் தொடும் புரிநூல், மேல்வயிற்றைச் சுற்றியுள்ள வயிற்றுக்கச்சை, இடையில் உள்ள பீதாம்பரம், அதன் குறுக்கே செல்லும் மெல்லிய கோடுகள், ஆடைக்கட்டில் காணும் முத்துச்சரங்கள் கோத்த அழகிய வரம்புகள் யாவும் இச்சிலையில் காணத்தக்கவை.

இம்மாவட்டத்தில் பொன்னமராவதிக் கோயிலில் உள்ள சீனிவாசன் என்னும் நெடுமாலின் செப்புத்திருமேனியும், இவரது தேவியரான திருமகளும், நிலமகளும், புதுக்கோட்டைச் சிலையை ஒத்த அமைப்புடையவை[66].

## சேரமாதேவி - விஷ்ணு

சேரமாதேவி என்னும் ஊரைச் சேர்ந்த விஷ்ணுவின் இருந்தகோலப் படிமம் சோமாசுகந்தத் திருமேனியில் உள்ள சிவனைப் போன்று சுகாசனத்தில் அமர்ந்து சங்கு, சக்கரம் ஏந்திய நிலையில் உள்ளது. இத்திருமேனி நேராக அமர்ந்திருக்கும் மாண்புமிகு தோற்றம் கொண்டது. இது கி.பி. 13ஆம் நூற்றாண்டுத் திருமேனியாகும். தற்போது இச்சிலை சென்னை அருங்காட்சியகத்திலுள்ளது[67].

## திருகோட்டியூர்ப் படிமங்கள்

திருக்கோட்டியூர்ச் சௌமியநாராயணப் பெருமாள் ஆலயத்தில் உள்ள, நின்ற கோல நரசிம்மன், அவரது தேவியரான நிலமகள், திருமகள் படிமங்கள் கி.பி. 13ஆம் நூற்றாண்டைச் சார்ந்த பாண்டியர் காலத்தவை. இக்கோயிலில் உள்ள 'ஸ்நபன பேரர்' என்னும் திருமால், 'பலிபேரர்' என்னும் நித்திய உற்சவர், அவர்களது தேவியர் படிமங்கள் கி.பி. 12-13ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவை. இவ்வாலயத்திற்குரிய சக்கரத்தாழ்வார் செப்புப் படிமமும் பாண்டியர் காலத்தது.

## திருவில்லிபுத்தூர்ப் படிமங்கள்

விருதுநகர் மாவட்டம் திருவில்லிபுத்தூரில் உள்ள சுந்தரபெருமாள், சீனிவாசப் பெருமாள், அரங்கமன்னார், கருடாழ்வார், சேனை முதலி, வடபத்ரசாயி அவரது தேவியார் படிமங்கள் யாவும் பாண்டியப் பெருவேந்தர் காலத்துச் சிறந்த படைப்புகளாகும்.

## திருப்புல்லாணிப் படிமங்கள்

இராமநாதபுரம் மாவட்டம் திருப்புல்லாணி செகந்நாதப் பெருமாள் கோயில் வழிபாட்டிலுள்ள செகந்நாதர், ஸ்ரீயாகபேரர், சேனைமுதலி, கருடாழ்வார், விஷ்ணு, பூதேவி, பத்மாவதித் தாயார், நர்த்தன கண்ணன் ஆகியோரது செப்புப்படிமங்கள் கி.பி. 14ஆம் நூற்றாண்டைச் சார்ந்த பாண்டியரது படிமங்களில் குறிப்பிடத் தக்கவை. இவற்றில் செகந்நாதப் பெருமாளான திருமாலின் நின்ற திருக்கோலமும், கம்பீரமான தோற்றமும் அவர் அருகில் உள்ள தேவியர் இருவரது பேரழகும் கண்டு களிக்கத்தக்கவை.

சிவகாசி அருகில் உள்ள திருத்தங்கல் திருநின்ற நாராயணப் பெருமாள் கோயிலில் வழிபாட்டில் உள்ள திருத்தங்கல் அப்பன் திருமேனி பிற்காலப் பாண்டியர் காலத்தைச் சார்ந்தது[68].

## கங்கைகொண்டான் - ஆடும் கண்ணன்

இப்படிமம் தாமரை இருக்கை மீது வலதுகாலைப் பக்கவாட்டில் ஊன்றி இடதுகாலை மெல்லத்தூக்கி ஆடும் நிலையில் இரண்டு கைகளுடன் வார்க்கப்பட்டுள்ளது. கண்ணனின் வலப்புற உள்ளங்கை வெண்ணெய் உருண்டையை ஏந்தியுள்ளது. இடக்கை பக்கவாட்டில் தூக்கி விசிறிய நிலையில் வனப்புடன் விரிந்து நிற்கிறது.

செங்குத்தாக உயர்ந்த கண்ணன்கொண்டை தலையை அலங்கரிக்கிறது. இளங்கண்ணனின் முகத்தில் இளமை அழகு இயற்கையாக வெளிப்பட்டுள்ளதை நன்கு காணலாம். இவ்வாறு வெண்ணெய் ஏந்தியாடும் கண்ணனின் உருவங்களைப் பாண்டிய நாட்டில் அழகர் கோவில், ஆத்தூர்[69] திருக்கோட்டியூர்,திருவில்லிபுத்தூர், திருநெல்வேலி ஆகிய ஊர்களில் காணலாம். இதன் அமைப்பும் அழகும் கொண்டு இதனைக் கி.பி. 13ஆம் நூற்றாண்டின் தொடக்கப் பகுதியாகக் கருதலாம். இத்தலத்திலுள்ள இராமர் குழுப் படிமத்தின் சமகாலத்ததாக இதனைக் கருதலாம்.

## சேரமாதேவி - ஆடும் கண்ணன்

ஆடும் கண்ணனின் மற்றொரு செப்புத் திருமேனியை இராமசுவாமி கோயிலில் காணலாம்[70]. இத்திருமேனி ஆத்தூர் ஆடும் கண்ணனுக்கு மாறாக வலக்காலைத் தாமரை இருக்கையில் ஊன்றி

இடக்காலைத் தூக்கியாடுகிறது. கண்ணனது வலக்கை பெரிய வெண்ணெய் உருண்டையை உள்ளங்கையில் பற்றியுள்ளது. இடக்கை மேலே தூக்கிய நிலையில் வீசியாடுகிறது.

தலையில் உயர்ந்த கேச பந்தமும், காதுகளில் வட்டக்குழையும், மார்பில் சன்னவீரமும், இடுப்பைச் சுற்றிச் சதங்கை கோத்த அரைஞ்ஞாணும், கை, கால்களில் தோள்வளை, கைவளை, தண்டை, சிலம்பு ஆகிய அணிகளும் கண்ணனை அலங்கரிக்கின்றன. முகத்தில் புன்னகை தவழ ஆடும் கண்ணனின் இப்படிமம் கி.பி. 14ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது. இது ஆத்தூர்ச் சிலையைவிடக் காலத்தால் பிற்பட்டது.

## இராமர், இலக்குவன், சீதை

பாண்டிய நாட்டில், முற்காலப் பாண்டியர் காலம் தொட்டு இராமர், சீதை, இலக்குவன், அனுமன் ஆகியோரது செப்புத் திருமேனிகளை வடிக்கும் வழக்கம் இருந்து வந்துள்ளது. இதனை இராமநாதசுவாமி ஆலயத்தொகுப்பில் கண்டறியப்பட்ட பழைய இராமர் குழு மூலமும்[71] திருப்பத்தூர்த் திருக்கற்றளிநாதர் கோயிலில் உள்ள இராமர் படிமத் தொகுப்பின் மூலமும்[72] நன்கு அறியலாம்.

திருப்பத்தூர் இராமர், சீதை, இலக்குவன் ஆகியோரது செப்புத் திருமேனிகள் மிகவும் வனப்பும், வரலாற்றுச் சிறப்பும் வாய்ந்தவை. இவை ஆடவல்லான் சன்னிதானத்தில் உள்ள சுரங்கத்திலிருந்து மீட்கப்பட்டவை[73]. கி.பி. 10ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவை. இச்சிலைகள் நீண்டு, மெலிந்த உடல்வாகும், மென்மையான தோற்றமும் கொண்டவை, பழைமைப் புகழும் மிக்கவை.

## சேரமாதேவி - இராமர் குழு

திருநெல்வேலி மாவட்டம் சேரமாதேவி இராமசுவாமி கோயிலில் உள்ள இராமன், சீதை, இலக்குவன், அனுமன் ஆகியோரது படிமக்குழு புகழ் பெற்றது. இச்செப்புத் திருமேனிகள் பிற்காலப் பாண்டியர் காலத்தில் செய்யப் பெற்ற வனப்புமிகு படிமங்களாகக் கருதப்படுகின்றன[74]. இப்படிமக் குழுவில் சோழரது கலைக்கூறுகள் படிந்து இருப்பினும் பிற்காலப் பாண்டியர் கலைப்பாணியே மிஞ்சி நிற்கிறது.

இக்காலத்தைச் சார்ந்த மற்றொரு படிமத் தொகுப்பினை, இராமநாதபுரத்தை அடுத்துள்ள திருப்புல்லாணியில் காணலாம். இவ்வூர்ச் செகந்நாதப் பெருமாள் கோயிலில் இராமன், சீதை, இலக்குவன், பரதன் ஆகியோரின் சிறந்த படிமத் தொகுப்பு காணக் கிடக்கிறது[75]. சேரமாதேவி படிமக் குழு கி.பி. 12ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது. திருப்புல்லாணிப் படிமக் குழு கி.பி. 13ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது.

தூத்துக்குடி மாவட்டம் கொற்கையை அடுத்துள்ள ஆத்தூர் சோமநாத ஈசுவரர் கோயிலில் பாண்டியப் பெருவேந்தர் காலத்து இராமரின் படிமக் குழுவொன்றுள்ளது[76].

## ஆத்தூர் - இராமர் குழு

அயோத்தி அண்ணல் இராமனது படிமம் தாமரைப் பீடத்தின் மீது வலதுகாலை ஊன்றி, இடது காலை முன் வைத்த நிலையில் இரண்டு கைகளுடன் எழிலாக நின்ற கோலத்தில் வடிக்கப்பட்டுள்ளது. வலது இடது கைகள் முறையே கணையும், சிலையும் பற்றும் பாங்கில் அமைந்து காட்சியளிக்கின்றன. வலக்கரம் கடக முத்திரையிலும், இடக்கரம் தனுர் முத்திரையிலும் காட்டடப்பட்டுள்ளன. செங்குத்தாக உயர்ந்த அரசமகுடம் தலையை அலங்கரிக்கிறது.

எடுப்பான முகப்பொலிவும், கவர்ச்சியான தோற்றமும், உயர்ந்த தோளும், விரிந்த மார்பும், அளவான அங்கங்களும் கட்டான உடல்வாகும் அமைந்ததாக இராமபிரானின் திருமேனி வார்க்கப்பட்டுள்ளது.

## மிதிலைச் செல்வி

தாமரை இருக்கையின் மீது இடையை வலப்புறம் ஒயிலாக ஒடித்த நிலையில் *சீதை*யின் படிமம் காட்சியளிக்கிறது[77]. வலக்கை அழகிய அல்லிமலரைப் பிடித்துள்ளது. இடக்கை லோல முத்திரையில் எழிலாக நீண்டுள்ளது. கரண்ட மகுடம், மகரக்குழைகள், மணிவடம், முத்துவடம், தோள்வளை, கடகம், கைவளை, இடைக்கச்சை, பாதசரம் யாவும் முடி முதல் அடி வரை அமைந்து *சீதை*யை அழகு செய்கின்றன. இடைக்கச்சை கீழ்ப்பாச்சு முறையில் கட்டடப்பட்டு முழங்காலுக்குக் கீழ்வரை அமைந்துள்ளது.

அமைதி தவழும் முகம், நீண்ட கைகள், அழகிய மேலுடல், இடைவனப்பு யாவும் இச்சிலையில் காணத்தக்கவை. இப்படிமக்குழுவின் நிற்கும் நிலை, ஆடையணிகளின் தோற்றம், மகுடத்தின் அமைப்பு ஆகியவற்றைக் கொண்டு இதனைப் பாண்டியர் காலத்ததாகக் கருதலாம். இவை கி.பி. 13ஆம் நூற்றாண்டின் தொடக்கப்பகுதியைச் சார்ந்தவை. சோழர் காலத்து இராமர் குழுவிலிருந்து மாறுபட்ட நிலையில் வேறுபட்ட சிறப்பு அம்சங்களுடன் இவை காட்சியளிக்கின்றன. இதனை எஸ்.ஆர். பாலசுப்பிரமணியம் இடைச் சோழர் காலத்ததாகக் கருதுகிறார். இப்படிமக் குழுவினைக் கூர்ந்து நோக்கும் போது சோழர் கலைப்பாணியி லிருந்து இது வேறுபட்டிருப்பதை நன்கு காணமுடிகிறது.

பன்னிரு ஆழ்வார்களில் நம்மாழ்வார், குலசேகர ஆழ்வார், திருமங்கையாழ்வார், பெரியாழ்வார், ஆண்டாள், ஆகியோர் படிமங்களிலும் இராமானுசர், மணவாளமாமுனி ஆகியோரது படிமப்

படைப்புகளிலும் பாண்டியரது சீரிய கலைத்திறனைக் காணலாம். திருக்கோட்டியூரில் உள்ள ஆழ்வாருடைய திருமேனிகள் கி.பி. 13-14ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவை[78].

பாண்டிய மன்னர்கள் சைவ சமயத்தை ஆதரித்தது போன்று வைணவத்தையும் போற்றி வந்துள்ளனர். ஆழ்வார்களை ஆதரித்ததோடு அவர்களது சிலைகளையும் ஆலயங்களில் வைத்து வழிபட ஏற்பாடும் செய்தனர்.

## பௌத்தப் படிமம்

இராமேசுவரம் தீவில் அரியாங்குன்று என்னும் பகுதியில் பெரும் பௌத்தபள்ளி ஒன்று இருந்துள்ளது. அழிந்து போன இப்பள்ளியிலிருந்து பௌத்த சமயத் தொடர்புடைய செப்புத் திருமேனிகள் சில அண்மையில் கண்டு பிடிக்கப்பட்டுள்ளன[79]. இதைத் தவிர வேறு பௌத்தப் படிமங்கள் பாண்டியநாட்டில் கிடைக்கவில்லை.

சமண சமயம் தொடர்பாக மகாவீரரது செப்புத் திருமேனி ஒன்று திருப்பத்தூர் அருகில் சுத்தமல்லி என்னும் கிராமத்தில்[80] கிடைத்துள்ளது. இதனைச் சென்னை அருங்காட்சியகத்தில் காணலாம். இப்பகுதியில் சமணசமயம் ஆதரிக்கப்பட்ட அளவிற்குப் பௌத்த சமயம் ஆதரிக்கப் படவில்லை என அறியமுடிகிறது.

இதுகாறும் கூறப்பட்டது போன்று பாண்டிய நாட்டுக் கோயில் களிலும், பாண்டியப் பெருவேந்தர்களின் ஆளுகைக்குட்பட்ட பகுதி களிலும் எண்ணிறந்த செப்புத் திருமேனிகளைக் காண்கிறோம். படிமக் கலை சோழநாட்டில் பெருமையடைந்த அளவிற்குப் பாண்டிய நாட்டில் பெருமையடையவில்லை எனினும் பாண்டியப் பெருவேந்தர்களால் இக்கலை நன்கு போற்றப்பட்டு வந்தது என்பதை அறியமுடிகிறது.

## அடிக்குறிப்புகள்

1. மா. செந்தில் செல்வக்குமரன், பிற்காலப் பாண்டியர் காலத்தி சிற்பக்கலை, கல்வெட்டு காலாண்டு இதழ் 41 தொல்பொரு ஆய்வுத்துறை, ஜனவரி, 1995 பக். 15.
2. மா. சந்திரமூர்த்தி மற்றும் வெ. வேதாசலம், பாண்டியர் கால கல்வெட்டும் கலையும், அச்சிடப்படாத ஆய்வு, பக். 122.
3. மேலது பக்கம் 135
4. R. Nagaswamy, Master Pieces of Early South Indian Bronzes, Plate 16.
5. பாண்டியர் காலக் கல்வெட்டும் கலையும் - பக். 133 - 34.
6. மேலது பக்கம் 136.

7. K.V. Soundara Rajan, Art of South India, Tamilnadu and Kerala, Fig. 44 & 45, Sundeep Prakashan, Delhi, 1978.

8. Ibid, P. 103

9. (அ) க.சி. கமலையா, தமிழகச் செப்புத் திருமேனிகள், தமிழக நுண்கலைகள், (பதி) வி.மி. ஞானப்பிரகாசம் மற்றும் க.சி. கமலையா தமிழ்ப் பண்பாட்டு மன்றம், முதற் பதிப்பு, சென்னை, 1978, பக்கம். 108

(ஆ) மே.சு. இராமசுவாமி தமிழ்நாட்டுச் செப்புத் திருமேனிகள், தொல்பொருள் ஆய்வுத்துறை, சென்னை, 1976, பக்கம் 60.

10. பாண்டியர் காலக் கல்வெட்டும் கலையும், பக்கம். 138.

11. V.N. Srinivasa Desikan, Guide to The Bronze Gallery, Plate. XXII, Government Museum, Madras, 1983

12. M. Raman, Select Bronzes in the Madras Museum, A descriptive Catalogue, Government Museum, Madras Egmore - 1992, Page 8.

13. மா. சந்திரமூர்த்தி, இலுப்பைக்குடி கோயில், முதற்பதிப்பு, மணிவாசகர் பதிப்பகம், சிதம்பரம், 1988, படம் 10, பக்கம் 43 - 45.

14. மேற்குறித்த நூல்கள் பக்கம் 42.

15. கள ஆய்வின்போது கட்டுரை ஆசிரியர் இச்சிலையை நேரில் பார்வையிட்டு ஆய்வு செய்தார்.

16. இச்சிலையைக் கட்டுரை ஆசிரியர் நேரில் ஆய்வு செய்தார்.

17. இச்சிலையைக் கட்டுரை ஆசிரியர் நேரில் ஆய்வு செய்தார்.

18. இச்சிலை குறித்துத் தகவல் அளித்தவர் திரு. முருகேசன், செயல் அலுவலர், புதுக்கோட்டைத் திருக்கோயில்கள், இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை.

19. மா. சந்திரமூர்த்தி, இரணியூர் கோயில், முதற்பதிப்பு, மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 1990, படம் 15, பக்கம் 110 - 114.

20. தமிழ் நாட்டுச் செப்புத் திருமேனிகள் பக்கம் - 61.

21. இரா. நாகசாமி, தமிழகம், பக்கம் - 11 படம், 23 அ - 23 இ தொல்பொருள் ஆய்வுத்துறை, சென்னை, 1972.

22. மா. சந்திரமூர்த்தி, பிள்ளையார்ப்பட்டி, முதற்பதிப்பு, மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 1992, பக்கம் 12-15.

42. மா. சந்திரமூர்த்தி, கி. சீதரன் மற்றும் இரா.ப. கருணானந்தன், இராசராச சோழன் வரலாற்றுக்கூடம், முதற்பதிப்பு, தமிழ்நாடு அரசுத் தொல்பொருள் ஆய்வுத் துறை, சென்னை, 1985, பக்கம் - 7.
43. S.R. Balasubrahmanyam, A Pandiyan Bronze From Tekkattur, Page, 58 - 59, Plate XXXVII Fig. 1 Lalit Kala, No. 10, (Ed) Karl Khandalavala and Moti Chandra, New Delhi, October 1961.
44. இலுப்பைக்குடிக் கோயில், பக்கம் 48 - 49.
45. கள ஆய்வின்போது கட்டுரை ஆசிரியர் இச்சிலையை பார்வையிட்டு ஆய்வு செய்தார்.
46. பாண்டியர் காலக் கல்வெட்டும் கலையும் - பக்கம் 142.
47. வள்ளி சொக்கலிங்கம், திருப்பத்தூர், முதற்பதிப்பு, தொல்பொருள் ஆய்வுத்துறை, சென்னை - 1981, பக்கம் 45 - 47.
48. Guide to the Bronze Gallery, Pl. XXIX
49. கே.வி. இராமன், பாண்டியர் வரலாறு, படம் 24.
50. இலுப்பைக்குடிக் கோயில், பக்கம் 53 - 54.
51. பாண்டியர் காலக் கல்வெட்டும் கலையும் - பக்கம் 145.
52. S.R. Balasubrahmanyam, Middle Chola Temples, Plate 163.
53. ச. அரிகரன், அதிகாரநந்தி - ஓர் அரிய செப்புத் திருமேனி, தொல்லியல் ஆய்வுத் தொகுதி, தொல்பொருள் தொழில் நுட்பப் பணியாளர் பண்பாட்டுக் கழகம், மதுரை, 1985, பக்கம் 195 - 198.
54. மா. சந்திரமூர்த்தி, 'முற்காலப் பாண்டியர் சிற்பங்களும் செப்புத் திருமேனிகளும்' அச்சிடப்படாத ஆய்வுக் கட்டுரை.
55. R. Nagaswamy, Siva Bhakti, Nav Rang, New Delhi, 1989 Fig. 57.
56. இலுப்பைக்குடிக் கோயில், பக்கம் 54 - 55.
57. மேற்குறித்த நூல், பக்கம் 55 - 57.
58. Middle Chola Temples, P. 183 - 184.
59. C. Sivaramamurti, Nataraja in Art, Thought and Literature, National Museum, New Delhi, 1974, P. 252, Fig. 110.
60. S.R. Balasubrahmanyam, Middle Chola Temples, P. 183 - 184.
61. A. M. Chandramurti, An Early Pandya Bronze from Tiruttangal South Indian Studies, Vol. II. (Ed) R. Nagaswamy, P. 186.

B. M. Chandramurti, Two Early Bronzes from Palani, Nunkalai Malar 5, 1986 - 87, Page 49 - 51.
62. D. Devakunjari, Madurai through the Ages, Society for Archaeological Historical and Epigraphical Research, Madras, 1979, P. 316 - 324.
63. கே.வி. இராமன், பாண்டியர் வரலாறு, தமிழ் நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை, 1977 பக்கம் - 283.
64. T.A. Gopinatha Rao, Elements of Hindu Iconography, Second Edition, Plate LIV, Page 192 - 193.
65. Middle Chola Temples, Plate 150 - 160.
66. இச்செப்புத் திருமேனிகள், கட்டுரை ஆசிரியரால் நேரில் ஆய்வு செய்யப்பட்டது.
67. வி.மி. ஞானபிரகாசம் மற்றும் க.சி. கமலையா தமிழக நுண்கலைகள், தமிழ்ப் பண்பாட்டு மன்றம், சென்னை, 1978, பக்கம். 116.
68. கு. தாமோதரன், செம்பும் சிலையும் தமிழர் நாகரிகம், (பதி) நடன. காசிநாதன், தொல்பொருள் ஆய்வுத்துறை, சென்னை, 1995, பக்கம், 53 - 54.
69. Middle Chola Temples, Plate 155.
70. Ibid, Plate, 162.
71. R. Nagaswamy, Rameswaram Bronzes, South Indian Studies, Vol. II.
72. வள்ளி சொக்கலிங்கம், திருப்பத்தூர், பக்கம் 44 - 45.
73. மேற்குறித்த நூல் - பக்கம் 44.
75. மே.சு. இராமசுவாமி, தமிழ்நாட்டுச் செப்புத் திருமேனிகள், பக்கம் 61.
75. மேற்குறித்த நூல் - பக்கம் 61.
76. Middle Chola Temples, Plate, 153 - 154.
77. Middle Chola Temples, Plate 154.
78. மா. சந்திரமூர்த்தி மற்றும் வெ. வேதாசலம் - பாண்டியர் காலக் கல்வெட்டும் கலையும், அச்சிடப்படாத ஆய்வு நூல், பக்கம் 170.
79. நடன. காசிநாதன் மற்றும் அர. வசந்த கல்யாணி, தொல்பொருள் ஆய்வுத்துறையின் அரிய கண்டுபிடிப்புகள் (1988 - 1998), தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை, சென்னை 1998, பக்கம் 4.
80. மா. சந்திரமூர்த்தி, சுத்தமல்லி சமண சிற்பம், கல்வெட்டு காலாண்டு இதழ், தொல்பொருள் ஆய்வுத் துறை, சென்னை.

# (ஈ) சிற்பக்கலை

## முன்னுரை

தமிழகத்தின் வடபகுதியில் ஆட்சி புரிந்த பல்லவர்கள் காலத்தில் சிற்பக்கலை சிறப்புற்று விளங்கியது. அதே காலக் கட்டத்தில் தமிழகத்தின் தென்பகுதியில் பாண்டியர்களும் சிற்பக்கலைக்குப் பெரும் தொண்டாற்றி யுள்ளனர். பல்லவர்களைப் போன்றே பாண்டியர்களும் குடைவரைக் கோயில்களை அமைத்துள்ளனர். அவற்றில் சிற்பக்கலையின் சிறப்பினைக் காணலாம். முற்காலப் பாண்டியர்களுக்கும், பல்லவர் களுக்கும் பிறகு ஆட்சிக்கு வந்த சோழ மாமன்னர்கள் கட்டடக் கோயில்களுக்குச் சிறப்பு கொடுத்து மிகுதியான கோயில்களை அமைத்துள்ளனர். இவர்கள் ஆட்சிக்காலத்தில் சிற்பக்கலையும் சிறந்து விளங்கியது. பிற்காலச் சோழர்களுக்குப் பிறகு சீரும் சிறப்புமாக ஆட்சி செய்த பாண்டியப் பெருவேந்தர்கள் காலத்திலும் சிற்பக்கலை வளர்ச்சி பெற்றது. சோழர்கள் அளவுக்குப் பாண்டியப் பெருவேந்தர்கள் சிற்பக்கலையை வளர்க்காவிட்டாலும் இவர்கள் தங்களுக்கென்று தனிக் கலைப்பாணியினைப் பின்பற்றியது சிறப்புடையதாகும்.

முற்காலப் பாண்டியரின் இறுதிக் காலத்தில் சோழர் கலை பாண்டிய நாட்டில் ஊடுருவத் தொடங்கியது. தொடர்ந்து கி.பி. 11 - 12ஆம் நூற்றாண்டுகளில் சோழரின் ஆட்சி பாண்டிய நாட்டில் நிலைக்கத் தொடங்கிய பொழுது ''சோழ - பாண்டியர் கலை'' என்னும் புதிய கலைப்பாணி பிறந்தது. பின்னர் ஆட்சிசெய்த பாண்டியப் பெருவேந்தர் காலத்தில் ''பிற்காலப் பாண்டியர் கலைப்பாணி'' என்னும் தனிப்பாணி பாண்டிய நாட்டில் உருவாகி வளர்ச்சி பெற்றது. இக்காலக் கட்டத்தில் பாண்டிய மன்னர்கள் தம் ஆளுகைக்குட்பட்ட இடங்களிலெல்லாம் கோயில்கள் கட்டித் திருப்பணி செய்து ஆங்காங்கே சிற்பச் செல்வங்களைத் தோற்றுவித்தனர்.

பிற்காலப் பாண்டியர் கலைப்பாணி என்பது சோழர் கலை மரபின் தொடர்ச்சியாக இருப்பினும் பாண்டிய நாட்டு வட்டார வழக்குகளுக் குரிய சில தனித்தன்மைகளை இணைத்துக் கொண்டு புதிய மரபாக வெளிப்பட்டது. இக்கலை மரபையே ''பாண்டியர் கலை'' என அழைக்கிறோம்.

வரலாற்றுப் பேரறிஞர் நீலகண்டசாத்திரியார் சோழர்களின் கலையையும் பாண்டியரின் கலை மரபையும் கூறும் பொழுது ''சோழர் காலக் கட்டடக் கலை அடக்கமான முதிர்ச்சியுடையது. பின்னர் வந்த விசயநகரக் கலை மிகவும் நேர்த்தியாகவும் அலங்காரக் கூறுகளையுடையதாயும் இருந்தது. இவ்விரு கலைப் பாணிகளும் ஒன்று

மற்றொன்றாய் மாறுவதற்குத் தேவையான இடைக்காலப் பாணியாகப் பாண்டியர் கலை விளங்கியது'', என்று குறிப்பிட்டுள்ளார்[1] இது சிற்பக் கலைக்கும் பொருந்தும்.

பாண்டியர் காலத்தில் தோற்றுவிக்கப்பட்ட சைவ - வைணவச் சிற்பங்கள் சோழரது சிற்பப் பாங்கிலிருந்து சற்று வேறுபட்டுத் தனித்தன்மையுடன் விளங்கக் காண்கிறோம். இக்காலச் சிற்பங்களின் மகுடங்கள் உயர்ந்தும், சோழர் காலத்தைவிட, சிற்பங்களில் அணிகலன்கள் அதிகரித்தும் இருப்பதைக் காண்கிறோம். மேலும் இக்காலச் சிற்பங்களின் தலைக்கோலம், முகப்பொலிவு, அங்கங்களின் அமைப்பு, ஆடை ஆபரணங்கள் ஆகியன யாவும் பாண்டிய நாட்டு வட்டார வழக்கினைத் தாங்கி நிற்பதைக் காணலாம்.

மேலும் பாண்டிய வேந்தர்கள் எடுப்பித்த கோயில்களின் திருவாயில்களைப் பல அரிய சிற்பங்கள் அழகு செய்கின்றன. குறிப்பாகக் கோபுர வாயில்களில் செண்டுடன் கூடிய இரு கயல்கள் பொறித்த அரசுச் சின்னங்களை அமைத்து வழிகாட்டியவர்கள் பாண்டியப் பெருவேந்தர்கள் எனலாம். இக்காலக் கட்டத்தில்தான் கோயில் வாயிலை அலங்கரிக்கும் கோபுரங்கள் விண்ணைத் தொடுமளவுக்கு உயரத் தொடங்கின எனலாம். திருநிலைகளின் எண்ணிக்கையும் அந்நிலைகளில் சைவ - வைணவச் சிற்பங்களும் தல புராணச் சிற்பங்களும் இடம் பெறும் நிலைமை அதிகரிக்கத் தொடங்கியது. இதனை முன்னோடியாகக் கொண்டு, இவர்களுக்குப் பின்வந்த விசயநகர மன்னர்களும் கோபுரங்களை உயர்த்தவும், வாயில்களில் அரசு இலச்சினைகளைப் பொறிக்கவும், கோபுர நிலைகளில் சிற்பங்களை அதிகரிக்கவும் தொடங்கினர். இவ்வகையில் பிற்காலப் பாண்டியர் கலை, விசயநகரப் பேரரசுக்கு முன்னோடியாக அமைந்துள்ளது எனலாம்.

பாண்டிய நாட்டில் மட்டுமல்லாமல் சோழ நாட்டிலும், நடுநாட்டிலும் (திருமுனைப்பாடி நாடு) பாண்டியர்கள் கலைப்பணியை மேற்கொண்டுள்ளனர். வடக்கே நெல்லூர் வரை பெற்ற வெற்றிகள் மூலம் பாண்டியர்களும் அவர்களது அதிகாரிகளும் தமிழகமெங்கும் ஏராளமான கோயில்களில் பல திருப்பணிகள் செய்துள்ளனர். அவற்றில் தொன்றுதொட்டு வந்த மரபைப் பின்பற்றிக் கருவறை, மண்டபங்கள், திருச்சுற்றாலயங்கள், திருவாயில்கள் போன்ற பல இடங்களில் பல்வேறு தெய்வ உருவங்களைப் புதிதாகச் செய்து வைத்தனர்.

பாண்டியப் பெருவேந்தர் காலச் சிற்பங்களைக் கீழ்க் கண்ட நான்கு வகையாகப் பிரிக்கலாம்.

1. சைவசமயச் சிற்பங்கள்
2. வைணவசமயச் சிற்பங்கள்

3. சமண, பௌத்த சமயச் சிற்பங்கள்

4. நாட்டுப்புறத் தெய்வங்களின் சிற்பங்கள்

## சைவசமயச் சிற்பங்கள்

சைவக் கோயில்களில் கருவறையிலுள்ள சிவலிங்கங்கள் பல இடங்களில் புதிதாக இக்காலத்தில் செய்துவைக்கப்பட்டுள்ளன. பல கோயில் விமானங்கள் புதுப்பிக்கப்பட்டன. அவற்றிலுள்ள தேவ கோட்டங்களில் துர்க்கை, விநாயகர், தட்சிணாமூர்த்தி, இலிங்கோத்பவர், நான்முகன் ஆகியோர் சிற்பங்கள் இடம் பெற்றன. கருவறை வாயிலில் கம்பீரமான துவாரபாலகர் திருவுருவங்கள் செய்து வைக்கப்பட்டன. கருவறையைச் சுற்றியமைத்த பரிவார ஆலயங்களில் முருகன், விநாயகர், சண்டிகேசுவரர், பைரவர், சேத்திரபாலர், சூரியன், சந்திரன், சுரதேவர், பிட்சாடனர், நாயன்மார்கள், சப்தமாதர், சேட்டை ஆகியோரின் சிற்பங்கள் பிற்காலப் பாண்டியரின் கலைச் சிறப்பை வெளிப்படுத்தும் முறையில் செய்து வைக்கப்பட்டுள்ளன. எடுப்பான முறையில் சிவனது வாகனமான காளையின் உருவங்களும் பிற்காலப் பாண்டியர் கோயிலில் வடிக்கப்பட்டுள்ளன. பாண்டிய நாட்டில் கி.பி. 12ஆம் நூற்றாண்டில் தொடங்கிய அம்மன்கோயில்கள் கி.பி. 13ஆம் நூற்றாண்டிலிருந்து பெருகத் தொடங்கின. அவற்றில் நிற்கும் நிலையிலுள்ள அழகிய அம்மனது உருவங்கள் எழுந்தருளிவிக்கப்பட்டன. இவற்றைத் தமிழகமெங்கும் உள்ள பாண்டியர் கல்வெட்டுகளும் - குறிப்பாகப் பாண்டிய நாட்டில் உள்ள கல்வெட்டுகளும் தெரிவிக்கின்றன.

சிவகங்கை மாவட்டம் திருப்பத்தூர் திருத்தளிநாதர் கோயிலில் 'பாணலிங்கம்' ஒன்று செய்து வைக்கப்பட்டுள்ளது[2]. இதேபோன்று கருவறையிலுள்ள சிவலிங்கம் புதியதாகச் செய்து வைக்கப்பட்டது என் பதற்கும் பாண்டியரின் கல்வெட்டுகள் சான்று தருகின்றன[3]. முற்காலப், பிற்காலச் சோழர்களது கோயில்களில் காணப்படும் கலை மரபைப் பின்பற்றிச் சிவன்கோயில் தேவகோட்டங்களில் பிற்காலப் பாண்டியர் காலத்தில் தெய்வ உருவங்கள் செய்து வைக்கப்பட்டன[4]. சிவகங்கை மாவட்டம் இடைக்காட்டூரில் கி.பி. 1253இல் 'மயிலேறுவான் அடியார்க்கு நல்லான்' என்பவன் விமானத்தின் தென்புறக் கோட்டத்தில் 'அழகிய பாண்டிய தட்சிணா மூர்த்தி' எனும் பெயரில் தெய்வ உருவம் ஒன்றைச் செய்து வைத்துள்ளான்.

விருதுநகர் மாவட்டம் அருப்புக்கோட்டை சொக்கநாத சுவாமிகோயில் விமானத்திலுள்ள கோட்டச் சிற்பங்களைக் கி.பி.13ஆம் நூற்றாண்டில் புதியதாகச் செய்து வைத்தவர்களின் பெயர்கள் அச்சிற்பங்களின் அருகில் கல்வெட்டாகப் பொறித்து வைக்கப்பட்டுள்ளமையைக் காணலாம். தென்னிலங்கை வளஞ்சியர் சேகவிதேவனான இலுப்பையூர் கிழவன், இலிங்கபுராணதேவரை (இலிங்கோத்பவரை) எழுந்தருளுவித்தான்[6]. துர்க்கையை மற்றொருவன் செய்வித்துள்ளான்[7].

இதேபோன்று திருச்சுற்றாலயங்களிலுள்ள சிற்பங்களைச் செய்வித்தமை பற்றியும் கல்வெட்டுகள் சான்றளிக்கின்றன. சேவலூர் பூமிசுவரர் கோயிலில் ஆளுடையான் செம்பன் உய்யவந்தானான தன்மபரிபாலர் சுப்பிரமணியப் பிள்ளையாரை எழுந்தருளுவித்தான்[8]. இடைக்காட்டூர் சிவன்கோயில் வியாபாரி பாலூருடையான் மாணிக்கக் கூத்தன் விநாயகப் பிள்ளையாரைச் செய்வித்துள்ளான்[9]. சன்னவனம் சிவன்கோயிலில் சேத்திரபாலர் திருவுருவம் மாறவர்மன் வீரபாண்டியன் காலத்தில் செய்து வைக்கப்பட்டுள்ளது[10]. இந்தச் செய்திகளைப் பிற்காலப் பாண்டியர் கல்வெட்டுகளின் மூலம் அறிகிறோம்.

சிவகங்கை மாவட்டம் திருமலைக்கோயிலில் ஆண்டபிரான் திருவெண்காட்டு நங்கை என்ற தேவரடியாள் சண்டிகேசுவரர் சிற்பத்தைச் செய்வித்துள்ளாள்[11] எனப் பிற்காலப் பாண்டியர் கல்வெட்டு மூலம் அறிகிறோம். மதுரைக்கோயிலில் கங்கைகொண்ட சூரியதேவர் வாணாதிராயனான காலிங்கராயர், சூரியதேவரை எழுந்தருளு வித்ததைப் பிற்காலப்பாண்டியர் கல்வெட்டு தெரிவிக்கிறது[12]. மூன்று கால், மூன்று தலை, மூன்றுகை கொண்ட சுரதேவர் சிற்பங்களும் இக்காலத்தில் சிவன் கோயில்களில் செய்து வைக்கப்பட்டன. பாண்டிய நாட்டிலுள்ள அம்மன் கோயில்களிலுள்ள சிற்பங்கள் அனைத்தும், நான்கு கைகளுடன் படைக்கப்படும் சோழநாட்டு அம்மன்கோயில் சிற்பங்களுக்கு மாறாக இரண்டு கைகளுடன் படைக்கப்பட்டுள்ளன. இவ்வம்மன், ''திருக்காமக்கோட்டமுடைய நாச்சியார்'' என்று கல்வெட்டுகளில் குறிப்பிடப்படுகின்றார்[13]. பாண்டியநாட்டுச் சிவன் கோயில்களில் பிற்காலப் பாண்டியர் காலத்தில் செய்து வைக்கப்பட்டுள்ள அழகிய காளையின் உருவத்தைக் காணமுடிகிறது.

மதுரை மீனாட்சியம்மன் கோயில் சொக்கநாதர் சன்னதிக் கருவறையும் அர்த்தமண்டபமும் பிற்காலப் பாண்டியர் காலத்தில் கட்டப்பட்டு நாயக்கர் காலத்தில் புதுப்பிக்கப்பட்டுள்ளன. இக்கோயில் கருவறை விமானம் நான்கு திசைகளிலும் திசைக்கு இரண்டு யானைகளாகத் தாங்கும் நிலையில் எழுப்பப்பட்டுள்ளன. கம்பீரமாகத் தோற்றமளிக்கும் இக்களிறுகளின் முகப் பொலிவு நேரில் கண்டுகளிக்கத் தக்கது. அகன்ற யானை முகமும், பெருத்த மத்தகமும், விரிந்த காதுகளும், நீண்ட தந்தமும், கூர்மையான கண்களும் கொண்ட இந்த யானைகள் தம் துதிக்கைகளைக் கீழ் நோக்கியவாறு தொங்கவிட்டு, மிக இயற்கையாக நிற்கும் கோலம் பாண்டியரது சிற்பக்கலைக்குச் சிறந்த சான்றாக அமைகிறது. தமிழகத்தில் வேறு எங்கும் காண முடியாதவாறு இக்கோயிலில் மட்டுமே எட்டு யானைகள் விமானத்தைத் தாங்கி நிற்பது குறிப்பிடத்தக்கதாகும். இதனை 'இந்திர விமானம்' என்றும், வெள்ளையானையே சுந்தரேசுவரர் உறையும் இவ்விமானத்தைத்

தாங்குகிறது என்றும் தல வரலாறு கூறும். அரிய இவ்விமானமும் யானைச் சிற்பங்களும் முதலாம் சடையவர்மன் குலசேகரன் காலத்தவையாகக் (கி.பி.1191 - 1216) கருதப்படுகின்றன. அவ்வாறு சுந்தரேசுவரர் சன்னதியின் முன்புறம் உள்ள அர்த்தமண்டபம், மணிமண்டபம், சன்னதிக் கோபுரம் ஆகியவையும் அவற்றிலுள்ள சிற்பங்களும் முதலாம் சடையவர்மன் குலசேகரன் காலத்தைச் சார்ந்தவை எனக் கருதலாம்.

மதுரைச் சுந்தரேசுவரர் கோயிலின் கருவறையின் மேற்குத் தேவகோட்டத்தில் இலிங்கத்தின் பிரம்மபாகத்திலிருந்து சிவன் அடியும் முடியும் காணா நிலையில்,அடிமுடி காணா அண்ணலாக வெளிப்பட்டு வரும் காட்சி சிறப்பாகச் சிற்ப வடிவில் சித்திரிக்கப்பட்டுள்ளது. இங்கு இலிங்கத்தின் பீடத்தில் வலப்புறத்திலும், இடப்புறத்திலுமாக நான்முகனும், திருமாலும் சிறிய உருவங்களாகக் காட்டப்பட்டுள்ளது. இச்சிற்பத்தின் சிறப்புகளுள் ஒன்றாகும். இங்கு இவ்விருவரும் நான்கு கைகளுடன் அஞ்சலித்த நிலையில் காட்டுப்பட்டுள்ளனர். இச்சிற்பம் முதலாம் சடையவர்மன் குலசேகரன் காலத்ததாகக் கருதப்படுகிறது. இடைப்பாண்டியர் காலச் சோழவந்தான் தென்கரையிலுள்ள அடிமுடிகாணா அண்ணலின் சிற்ப வடிவத்திலிருந்து இவ்வுருவம் சற்று மாறுபட்ட நிலையில் காட்டப்பட்டுள்ளது. இங்கு இலிங்க வடிவின் உள்ளேயே நான்முகனும், திருமாலும் காட்டப்பட்டுள்ளனர். தென்கரைச் சிற்பத்தைவிட மதுரை சுந்தரேசுவரர் கோயில் கருவறையை அலங்கரிக்கும் அடிமுடிகாணா அண்ணல் சிற்ப வடிவம் சற்றுக் காலத்தால் பிற்பட்டது. இதை முதலாம் சடையவர்மன் குலசேகரன் காலத்ததாகக் கருதலாம். எனவே கி.பி. 12-13ஆம் நூற்றாண்டைச் சார்ந்த, பிற்காலப்பாண்டியர் காலச் சிற்ப வடிவத்திற்கு இது எடுத்துக்காட்டாகத் திகழ்கிறது.

மீனாட்சியம்மன் கோயிலில் வடக்குத் திருச்சுற்றில் முனிவரது சிற்பம் ஒன்று யோகாசனத்தில் அமர்ந்து வணங்கும் நிலையில் காணப்படுகிறது என்பது கள ஆய்வின் மூலம் அறியப்பட்டது. இதனை ஊர்மக்கள் வால்மீகி முனிவர் என்று கூறுகின்றனர். இச்சிற்ப வடிவம் கி.பி.13ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியைச் சார்ந்ததாகக் கருதப்படுகிறது.

மதுரைக்கு அருகிலுள்ள திருப்பரங்குன்றத்தின் தென்புறம் முற்காலப்பாண்டியர் காலத்தில் அமைக்கப்பட்ட சமணக் குடைவரைக் கோயில் ஒன்று உள்ளது. இச்சமணக்கோயிலைக் கி.பி.13ஆம் நூற்றாண்டில் முதல் மாறவர்மன் சுந்தரபாண்டியன் காலத்தில் 'சுந்தரபாண்டிய ஈசுவரமுடையார் கோயில்' என்ற பெயரில் பிரசன்ன தேவர் என்ற சைவத்துறவி சைவக்கோயிலாக மாற்றியமைத்தார்[14]. இக்கோயிலின் கருவறையிலும் முகமண்டபத்திலும் கோயிலின் வெளிப்புறத்திலும் முதல் மாறவர்மன் சுந்தரபாண்டியன் காலத்துச் சிற்பங்கள் காணப்படுகின்றன. கிழக்குநோக்கிய கருவறையின்

உட்புறத்தில் நின்ற நிலையிலுள்ள உமையொருபாகனின் சிற்பம் உள்ளது. இதன் பின்புறம் அழகிய காளையின் உருவம் காணப்படுகின்றது. தென்புறம் நோக்கிய முகமண்டபத்தின் நடுவே எடுப்பான தோற்றத்துடன் (பிற்காலத்தில் சிதைவுண்டது) நடராசரின் கம்பீரமான நடனக்காட்சி இடம் பெற்றது. புடைப்புச் சிற்பமாக உள்ள இவ்வுருவத்தின் அருகில் நிற்கும் நிலையில் நடனத்தினைக் கண்டுகளிக்கும் சிவகாமியின் உருவமும் குடமுழா வாசிக்கும் நந்திதேவரின் உருவமும் உள்ளன. இந்நடராசருக்கு வலப்பக்க மேல்புறத்தில் பல தலைகளைக் கொண்ட ஏரம்பகணபதியின் உருவம் காட்சியளிக்கிறது. பாண்டிய நாட்டுக் கலைவரலாற்றில், காலத்தால் பழைமையான ஏரம்பகணபதியின் உருவம் இதுவாகும். நடராசரின் இடப்புறம் கணபதிக்கு இணையாக மயில்மீது அமர்ந்த சிவனது ஆனந்தத் தாண்டவத்தைக் காணவரும் முருகனின் புடைப்புச் சிற்பம் செய்விக்கப் பட்டுள்ளது.

உமையாண்டார் குடைவரையில் நடராசரின் உருவத்திற்குக் கீழ்ப்புறம் தெற்கு நோக்கிய நிலையில் முருகன், வள்ளி, தெய்வானையின் உருவங்கள் புடைப்புச் சிற்பங்களாக இடம் பெற்றுள்ளன. குடைவரையின் வெளிப் பக்கத்தின் கீழ்ப்புறத்தில் சமயக்குரவர்களான மாணிக்கவாசகர், அப்பர், சம்பந்தர், சுந்தரர் ஆகியோரது புடைப்புச் சிற்பங்கள் இடம் பெற்றுள்ளன. இதனையடுத்து நின்ற நிலையில் நாயுடன் காட்சி தரும் பைரவரின் உருவம் உள்ளது. குடைவரை வாயிலுக்கு மேல்புறம் வட்டமான தலைப்பாகையுடன் பெருந்தோற்றம் கொண்ட விநாயகரின் உருவம் பாறையில் புடைப்புச் சிற்பமாகக் காட்சி தருகிறது. இதற்கு அருகில் இக்கோயிலை உருவாக்கிய பிரசன்னதேவரின் உருவமும் அவரது சீடரின் உருவமும் அமர்ந்த நிலையில் உள்ளன. பிற்காலப்பாண்டியர் காலத்தில் சமயத் துறவியின் உருவங்கள் எவ்வாறு அமைந்திருந்தன என்பதற்கு இங்குள்ள சிற்பங்கள் சிறந்த சான்றாக உள்ளன. பிரசன்னதேவரின் இதேபோன்ற அமர்ந்த நிலையிலுள்ள மற்றொரு உருவச் சிற்பம் திருப்பரங்குன்றத்தின் வடபுறமுள்ள முருகன் கோயிலின் வாயிலில் வைக்கப்பட்டுள்ளது.

கொட்டாம்பட்டிக்கு அருகிலுள்ள தர்க்காகுடியில் பிற்காலப் பாண்டியர் காலத்தில் கட்டப்பட்ட கட்டடக் கோயில் ஒன்று உள்ளது. இக்கோயிலில் பிற்காலப் பாண்டியர் காலத்துக் கலைப்பாணியில் விளங்கும் பைரவர், சண்டிகேசுவரர், நந்தி ஆகியோரின் உருவங்கள் உள்ளன[15]. தர்க்காகுடியின் மற்றொரு பகுதியில் பிற்காலப்பாண்டியர் காலத்து யோகநரசிம்மர், பிரம்மா, இந்திரன் ஆகியோரது சிற்பங்கள் கிடைத்துள்ளன. மேலூருக்கு அருகிலுள்ள பதினெட்டாம்குடியில் கண்டறியப்பட்ட ஆறு முகங்களும் பன்னிரு கைகளும் உடைய மயில்மீது அமர்ந்த முருகனின் உருவம் ஒன்று தற்போது திருமலை

நாயக்கர் அரண்மனை அருங்காட்சியகத்தில் உள்ளது. திருவேங்கடத்திற்கு அருகிலுள்ள சதுர்வேதிமங்கலம் என்ற பகுதியில் கி.பி.13ஆம் நூற்றாண்டைச் சார்ந்த, மயிலுடன் கூடிய முருகனின் உருவம் ஒன்று கிடைத்துள்ளது.

திருமலை நாயக்கர் அருங்காட்சியகத்தில் நாயின்றித் தனித்த நிலையில் ஆடையுடன் காட்சிதரும் (கீழ்மாத்தூரைச் சார்ந்த) பைரவரின் உருவம் காணப்படுகிறது. இவ்வுருவம் கி.பி.14ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது. பாண்டியரின் துறைமுகப்பட்டினமாக விளங்கிய தொண்டியிலுள்ள தொண்டியம்மன் கோயில் வளாகத்தில் மயிலுடன் கூடிய முருகனின் சிற்பம் ஒன்று உள்ளது.

காரைக்குடிப் பகுதியிலுள்ள சூரக்குடி தேசிகநாதர் கோயிலிலுள்ள இரு சிற்பங்கள் பிற்காலப்பாண்டியர் காலத்தைச் சார்ந்தவையாகும். இக்கோயிலின் காமக்கோட்டமுடைய நாச்சியார் ஆவுடைநாயகி என்ற பெயரில் அழைக்கப்படுகிறார். அழகிய தோற்றத்துடன் அருள் தரும் முகத்தோடு காட்சியளிக்கும் ஆவுடைநாயகியின் திருவுருவம் பிற்காலப் பாண்டியர் கலைப் படைப்பிற்குச் சிறந்த எடுத்துக்காட்டாகும். இதன் காலம் கி.பி. 13ஆம் நூற்றாண்டாகும்[16].

காரைக்குடிப் பகுதியைச் சார்ந்த நகரசூரக்குடி தேசிகநாதர் கோயிலில் உள்ள பைரவமூர்த்தி சிற்பம் பிற்காலப்பாண்டியர் கலைக்குச் சிறந்த எடுத்துக்காட்டாக விளங்குகிறது. இச்சிற்பத்தின் பின்புறம் பைரவரின் வாகனமான நாயின் உருவம் காணப்படுகிறது. பெரும்பாலும் பைரவரின் கைகளில் உடுக்கை, பாசம், திரிசூலம், கபாலம் ஆகிய ஆயுதங்கள் காட்டப்படுவது மரபு. ஆனால் இங்குப் பைரவரின் கீழ் வலக்கை சூலம் இன்றி, கதாயுதத்தோடு கட்டப்பட்டுள்ளது சிறப்புடையதாகும்.[17] சூரக்குடிப் பகுதியிலேயே பிற்காலப்பாண்டியர் காலத்தைச் சார்ந்த முருகனின் சிற்பம் ஒன்றும் உள்ளது.

விருதுநகர் மாவட்டம் திருவில்லிபுத்தூர் அருகிலுள்ள மூவரை வென்றான் என்ற கிராமத்தில் காணப்படும் குடைவரையில் உள்ள சுப்பிரமணியர் புடைப்புச் சிற்பம் பிற்காலப் பாண்டியர் காலத்தது. இங்குக் குடைவரைச் சுவரில் நான்கு கைகளுடன், நின்ற கோலத்தில், முருகனின் சிற்பம் காணப்படுகிறது. மேல்வலக்கை சக்திப்படையும், கீழ் இடக்கை வச்சிரப்படையும் ஏந்தியுள்ளன. கீழ்க்கைகள் இரண்டும் அபய, வரத கரங்களாகக் காட்சி தருகின்றன. இச்சிற்பம் சூரக்குடி சுப்பிரமணியரை ஒத்த அமைப்புடையது எனினும் மலையைச் செதுக்கிப் புடைப்புச் சிற்பமாகச் செய்விக்கப்பட்டுள்ளது. இது கி.பி. 13ஆம் நூற்றாண்டைச் சார்ந்த பாண்டியர் படைப்பாகத் திகழ்கிறது. பாண்டியர்கள் முருகனின் சிற்ப வடிவத்தினை மயில் வாகனத்துடன் தனிக்கல்லிலும், குடைவரையிலும் செதுக்கியுள்ளனர்.

மூவரைவென்றான் குடைவரையில் நடராசரும், சிவகாமியும் புடைப்புச் சிற்பங்களாகச் செதுக்கப்பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கது. பிற்காலப் பாண்டியர்கள் முற்காலப் பாண்டியர்களின் குடைவரையில் திருப்பணி செய்தபோது, அதில் பல்வகைத் தெய்வ உருவங்களையும் பிற உருவங்களையும் அமைத்துள்ளனர். இதற்கு எடுத்துக்காட்டாக மூவரை வென்றான் குடைவரையிலும் திருப்பரங்குன்றம் உமையாண்டார் கோயிலிலும் உள்ள சிற்பங்களைக் கூறலாம். மூவரைவென்றான் குடைவரையில் உள்ள நடராசர், சிவகாமி ஆகியோரின் சிற்ப வடிவங்களை எடுத்துக் காட்டலாம். இங்கு நடராசர் முயலகன் மீது நின்று ஆடும் நிலையில் காட்டப்பட்டுள்ளார். அவரின் இடப்புறம், ஆடும் பெருமானின் ஆடலைக் கண்டுகளிக்கும் நிலையில் சிவகாமியின் திருக்கோலம் விளங்குகிறது. ஆடவல்லானும் சிவகாமியும் ஒருசேரத் தோன்றும் காட்சி பிற்காலப்பாண்டியர் கலைப்படைப்பிற்கு எடுத்துக் காட்டாக விளங்குகின்றது. இச்சிற்பத்தினைச் சுற்றி அழகிய திருவாசி விளங்குகிறது.

பிரான்மலைச் சிவன்கோயிலில் பிற்காலப் பாண்டியர் காலத்தைச் சார்ந்த தெய்வ உருவங்கள் காணப்படுகின்றன. இவற்றில் மிகப் பெரும் தோற்றத்துடன் காணப்படும் இரு வாயிற் காவலர் (துவாரபாலகர்) சிற்பங்கள் குறிப்பிடத்தக்கவை. இங்குத் தட்சிணாமூர்த்திக்கென்று தனி சன்னதி உள்ளது. மேல்மங்கலம் மாயாபாண்டீசுவரர் கோயிலில் பதிமூன்றாம் நூற்றாண்டின் தொடக்கப்பகுதியைச் சார்ந்த வாயிற் காவலர் பைரவர், ஞானதட்சிணாமூர்த்தி ஆகியோரது சிற்பங்கள் காணப்படு கின்றன. இங்குள்ள தட்சிணாமூர்த்தி[18] மேல்வலக்கையில் கடக முத்திரையில் அடக்கமாலையைப் பற்றியுள்ளார். வழக்கமாகக் கீழ் இடக்கையில் காணப்படும் சுவடி இல்லை. இக்கை தொங்கும் நிலையில் உள்ளது. மேல்மங்கலத்திற்கருகிலுள்ள பெரியகுளத்து இராசேந்திர சோழீசுவரர் கோயிலில் பிற்காலப் பாண்டியர் காலத்து விநாயகரின் உருவம் ஒன்று உள்ளது. பொதுவாகப் பாண்டியர் காலப் பைரவர் சிற்பங்கள் மூன்று வகையான முறையில் காணப்படுகின்றன. முதல் வகையில், கீழ் வலக்கையில் கதாயுதம் காட்டப்பட்டுள்ளது. இரண்டாம் வகையில், இரண்டு நாயுடன் பைரவர் காணப்படுகிறார். மூன்றாம் வகையில், சோழ நாட்டுப் பைரவர் சிற்பங்களைப் போன்று உடுக்கை, நாகபாசம், திரிசூலம், கபாலம் ஆகியவற்றுடன் நாயும் காணப்படுகிறது[19].

சின்னமனூர்ச் சிவன்கோயிலில் மூன்று கைகள், கால்கள், ஒருமுகம் கொண்ட பிற்காலப் பாண்டியர் காலத்துச் சுரகரேசுரர் சிற்பம் ஆடும் கோலத்தில் காட்சியளிக்கிறது. இவ்வுருவம் மேலிரு கைகளில் பாம்பினையும், அக்கினியையும் கொண்டுள்ளது. இதன் கீழ் வலக்கையில் பை உள்ளது. கீழ் இடக்கை 'கஜஹஸ்தமாக' விளங்குகிறது. இக்கோயிலில் பிற்காலப் பாண்டியர் காலத்து இடம்புரி விநாயகர் உருவம் ஒன்று உள்ளது.

பிற்காலப் பாண்டியர் காலத்தில் சேட்டை, சப்தமாதர், வழிபாடு குறைந்துள்ளது. மதுரைக்குக் கிழக்கே உள்ள குன்னத்தூர்க் குன்றில் சேட்டையின் (மூதேவி) உருவம் கிடைத்துள்ளது. இச்சிற்பம் பிற்காலப் பாண்டியர் காலத்தது. அமர்ந்துள்ள இச்சேட்டையின் இருபுறமும் பக்கத்துக்கு ஒன்றாக மாந்தன், மாந்தி ஆகியோரது உருவங்கள் அமர்ந்த நிலையில் காட்சியளிக்கின்றன.

திருப்பத்தூர் திருத்தளிநாதர் கோயிலில் பிற்காலப் பாண்டியர் காலத்தைச் சார்ந்த, திரிசூலத்தைக் கொண்ட அஸ்திரதேவரின் அரிய சிற்பத்தினைக் காணலாம். இது நிற்கும் நிலையில் காணப்படுகிறது.

பிற்காலப் பாண்டியர் காலத்தைச் சார்ந்த வாயிற்காவலர் உருவங்கள் நெட்டூர், மானாமதுரை, திருவேகம்பத்து, மதுரை, பெரியகுளம் போன்ற பல இடங்களிலுள்ள கோயில்களில் காணப்படு கின்றன. இவ்விடங்களிலேயே பிற்காலப் பாண்டியர் காலத்துக் காளையின் உருவங்கள் உள்ளன.

தேவகோட்டங்களில் தெய்வ உருவங்கள் இல்லாத பிற்காலப் பாண்டியர் கோயில்களில் தேவகோட்டங்களின் மேற்புறம் உள்ள மகர தோரணங்கள் மிகுந்த வேலைப்பாடுடன் காட்டப்பட்டுள்ளன. அவற்றின் நடுவே விநாயகர், நான்முகன், திருமால், நரசிம்மர் போன்ற தெய்வ உருவங்கள் காணப்படுகின்றன. இதற்கு எடுத்துக்காட்டாகக் கல்லிடைக் குறிச்சியில் உள்ள பிற்காலப் பாண்டியர் கோயிலைக் கூறலாம்.

## வைணவ சமயச் சிற்பங்கள்

பிற்காலப் பாண்டியர் காலத்தில் திருமால்கோயில் கருவறைகளில் திருமாலின் நின்ற, இருந்த, கிடந்த கோலங்கள் கலையழகுடன் வடிக்கப்பெற்றுள்ளன. மதுரைக்கு அருகிலுள்ள திருமோகூரில் தாயார் இருவருடன் பாம்பணையின் மீது பள்ளிகொண்ட பெருமாளைக் காணலாம். அமர்ந்த நிலையிலுள்ள பிற்காலப்பாண்டியர் காலத்துப் பெருமாளைக் கள்ளிக்குடியில் காணமுடிகிறது. கம்பம் பகுதியில் கிடைத்த தேவியர் இருவருடன் நின்ற நிலையிலுள்ள திருமாலின் உருவம் மதுரை அரசு அருங்காட்சியகத்தில் உள்ளது. ஆமூரில் கிடைத்த ஸ்ரீதேவியுடன் கூடிய திருமால் சிற்பங்கள் மதுரை அரசு அருங்காட்சி யகத்தில் காட்சியளிக்கின்றன. திருமால் கோயில்களில் ஸ்ரீதேவிக்கும், பூதேவிக்கும் தனிச் சிற்றாலயங்கள் எடுக்கப்பட்டுள்ளன. இவற்றில் பழைமையானது ஸ்ரீதேவிக்கு உரியதாகும். அழகர் கோயிலில் மாறவர்மன் குலசேகர பாண்டியன் காலத்தில் (கி.பி. 1268 - 1311) கங்கைகொண்ட சூரியதேவன் வாணாதிராயனான காலிங்கராயன்[20] சுந்தரவள்ளி நாச்சியாரை (ஸ்ரீதேவியை) பிரதிட்டை செய்துள்ளான்.

திருமால் கோயில்களில் நரசிங்கப்பெருமாள், வராகப் பெருமாள் ஆகியோரின் அவதார கோலங்களும், சிற்றாலயங்களில் அமைக்கப்

பெற்றுள்ளன. இது பிற்காலப் பாண்டியர்களுக்குரிய மற்றுமொரு சிறப்பாகும். சக்கரத்தாழ்வார் சேனைமுதல்வர் ஆகியோர்க்கும் சிற்பங்கள் செய்து வைக்கப்பட்டுள்ளமைக்குப் பிற்காலப் பாண்டியர் கல்வெட்டுகள் சான்றளிக்கின்றன[21].

தேனி மாவட்டம் பெரியகுளத்தை அடுத்த குள்ளபுரத்தில் பிற்காலப் பாண்டியர் காலத்தைச் சார்ந்த சௌந்தரராசப் பெருமாள் கோயிலில் அந்தக் காலத்தைச் சார்ந்த இலட்சுமி நரசிம்மர் சிற்பத்தைக் காணலாம். நரசிம்மரின் பக்கங்களில் திருமகளும், நிலமகளும் நின்ற திருக்கோலத்தில் காட்சியளிக்கின்றனர். இச்சிற்பங்கள் கி.பி. 13-14ஆம் நூற்றாண்டைச் சார்ந்த பிற்காலப் பாண்டியர் காலத்துச் சிற்பங்களுக்குச் சிறந்த எடுத்துக்காட்டாகும்.

திருமோகூர் காளமேகப் பெருமாள் கோயிலின் வெளித் திருச்சுற்றில் கி.பி. 13ஆம் நூற்றாண்டில் பாண்டிய அரசின் அதிகாரி ஒருவன் திருவாழி ஆழ்வார்க்கென்று (சக்கரத்தாழ்வார்) தனிக் கோயிலை எடுப்பித்துள்ளதிலிருந்து சக்கரத்தாழ்வார் வழிபாடு சிறப்புடன் விளங்கியது தெரிய வருகிறது.

## சமண சமயச் சிற்பங்கள்

பிற்காலப் பாண்டியர் காலத்தில் சமணசமயம் பாண்டிய நாட்டில் சிறப்புடன் திகழ்ந்தது. அக்காலத்தினைச் சார்ந்த தீர்த்தங்கரர் சிற்பங்கள் தொப்புலாக்கரை, ஆழ்வார் திருநகரி போன்ற இடங்களில் கிடைத் துள்ளமை இதற்குச் சான்றாகும்[22]. இவை முக்குடைக்கீழ் அர்த்த பரியங் காசனத்தில் காட்சியளிக்கின்றன. முக்குடையின் மேலே அசோகமரம் காட்டப்பெற்றுள்ளது. தீர்த்தங்கரரின் இருபுறமும் இயக்கர்கள் இருவர் பக்கத்திற்கு ஒருவராக இருந்து சாமரம் வீசும் நிலையில் காட்சியளிக்கின்றனர். சிம்மங்கள் சுமந்த இணையரிகள் ஆசனத்தில் தீர்த்தங்கரர் அமர்ந்த நிலையில் வடிக்கப்படுவது அக்கால வழக்கமாக இருந்துள்ளது.

சமண சமயத்தில் இருபத்திரண்டாவது தீர்த்தங்கரராக விளங்கிய நேமிநாதருக்குத் தூத்துக்குடி மாவட்டத்திலுள்ள விளாத்திகுளத்தில் கோயில் ஒன்று இருந்தது. இது பிற்காலத்தில் அழிந்து போனது. அழிந்து போன இக்கோயிலைச் சார்ந்த இயக்கி அம்பிகாவின் உருவம் ஒன்று விளாத்திகுளத்தில் கிடைத்துள்ளது[23]. கி.பி. 13ஆம் நூற்றாண்டைச் சார்ந்த அம்பிகாவின் உருவம் சேடிப் பெண்ணுடன் நின்ற நிலையில், இரு கைகளுடன் காட்சியளிக்கிறது. மிகுந்த வேலைப்பாடுடன்கூடிய அழகிய ஆபரணங்கள் அணிந்து விளங்கும் இவ்வம்பிகை தனது கரண்ட மகுடத்தில் அமர்ந்த நிலையில் உள்ள அருகனைச் சுமந்த நிலையில் காட்சியளிக்கின்றாள்.

## பௌத்த சமயச் சிற்பங்கள்

பிற்காலப் பாண்டியர் காலத்தில் பௌத்த சமயமும் பாண்டிய நாட்டில் வளர்ந்து வந்துள்ளது என்பதற்குச் சான்றாகப் புத்தரின் உருவங்கள் ஆங்காங்கே கிடைத்துள்ளன. திருப்பாச்சேத்திக்கு அருகில் உள்ள மார நாட்டில் பிற்காலப் பாண்டியர் காலத்தைச் சார்ந்த - அமர்ந்த நிலையில் உள்ள - புத்தபிரானின் சிற்பம் ஒன்று உள்ளது. இவ்வுருவத்தின் மார்பில் ஆடை காட்டப்பட்டுள்ளது. தொண்டிக்கு வடக்கே உள்ள சுந்தரபாண்டியப் பட்டினத்தில் உள்ள சிவன் கோயிலில் நின்ற நிலையில் உள்ள புத்த பெருமானின் உருவம் ஒன்று காணப்படுகிறது. இவ்வுருவம் கழுத்திலிருந்து கணுக்கால் வரை ஆடை அணிந்த நிலையில் விளங்குகிறது.

## நாட்டுப்புறத் தெய்வங்களின் சிற்பங்கள்

பாண்டிய நாட்டுப் பெருந்தெய்வங்களுக்கு மட்டுமல்லாமல், கிராமங்களின் சிறு தெய்வங்களுக்கும் கோயில்கள் எடுக்கப்பட்டுள்ளன. பிற்காலப் பாண்டியர் காலத்தைச் சார்ந்த பிடாரியம்மன், காளியம்மன், அய்யனார் ஆகியோரின் சிற்பங்கள் பாண்டி நாட்டுப் பகுதிகளில் கிடைக்கின்றன. இவற்றை நாட்டரசன்கோட்டை, காரைக்குடி, மாத்தூர், கட்டிக்குளம் ஆகிய இடங்களில் காணலாம். இவற்றைப்பற்றிக் கல்வெட்டுகள் சான்று கூறுகின்றன[24]. சித்தர்கள் நத்தம் பகுதியில் முதல் மாறவர்மன் குலசேகரபாண்டியன் காலத்தில் புலியுடன் சண்டையிட்டு வீரமரணம் அடைந்த வணிக வீரனின் நடுகல் சிற்பம் ஒன்று உள்ளது[25]. இச்சிற்பத்தில் புலியுடன் போராடும் வீரனின் உருவம் புடைப்புச் சிற்பமாக வடிக்கப்பட்டுள்ளது.

பார்த்திபனூருக்கருகிலுள்ள குடியூரில் கி.பி. 13ஆம் நூற்றாண்டைச் சார்ந்த, அமர்ந்த நிலையிலுள்ள அய்யனாரின் சிற்பம் உள்ளது.

## ஆடற்சிற்பங்கள்

திருவேகம்பத்துச் சிவன்கோயில் அதிட்டானத்தில் கி.பி. 13ஆம் நூற்றாண்டைச் சார்ந்த, ஆடற்கலையை விளக்கும் கரணசிற்பங்கள் காணப்படுகின்றன. இவை இப்பகுதியில் எடுப்பிக்கப்பட்ட நடராசீச்சுரம் கோயிலில் இருந்தவையாகும். இச்சிற்பங்கள் பாண்டிய நாட்டில் காணப்படும் பழமையான ஆடற்சிற்பங்களுக்குச் சிறந்த எடுத்துக் காட்டாகும்[26].

## சோழநாட்டில் பாண்டியர் கலைப்பணி

பாண்டியர் ஆட்சி, பாண்டிய நாட்டுக்கு வெளியே சோழ நாட்டிலும், நடுநாட்டிலும் நடைபெற்றபொழுது பாண்டிய அரசர்களும்,

அதிகாரிகளும் பல மண்டபங்களையும் கோயில்களையும் கோபுரங் களையும் அமைத்துள்ளனர். சமயச் சிறப்பு வாய்ந்த திருவானைக்காவல், திருவரங்கம், தில்லை ஆகிய இடங்களில் பாண்டியர்களின் சிற்பக் கலைச் சிறப்பினைக் காணமுடிகிறது. இரண்டாம் பாண்டியப் பேரரசின் பெருமன்னனாக விளங்கிய முதலாம் சடையவர்மன் சுந்தரபாண்டியன் தில்லையம்பதியில் பெருமளவில் திருப்பணிகள் செய்துள்ளான். தில்லை நடராசப் பெருமான் கோயிலுக்குப் பொன் வேய்ந்தான். இவனுக்குப் ''பொன் வேய்ந்த மகிபதி'' என்ற பட்டப் பெயருண்டு. தில்லை நடராசர் கோயிலில் மேலைக்கோபுரம் ''சுந்தரபாண்டியன் திருநிலைக் கோபுரம்'' என வழங்கப்படுகிறது. கோபுரத்திலுள்ள, பெயர்களுடன் கூடிய நாட்டிய கர்ணச் சிற்பங்களும், சுந்தரபாண்டியன் காலத்தில் உருவாக்கப்பட்டவை என்று கூறுவாருமுண்டு. இக்கோபுர வாயிலின் தென்புற மாடத்தில் வடக்கு நோக்கிய நிலையில் சுந்தரபாண்டியன் உருவம் இடம் பெற்றுள்ளது. மீசை, தாடியுடன் கூடிய இவ்வுருவத்தின் கைகள் உடைந்துள்ளன. இதன் அருகில் கழுத்து, கை, தலை ஆகியவற்றில் உருத்திராட்ச மாலை அணிந்த சிவனடியாரின் உருவம் காணப்படுகிறது. சடையவர்மன் சுந்தரபாண்டியன் தனது வெற்றிகள் மூலம் பெற்ற பொன்னையும், பொருளையும் கொண்டு பல திருப்பணிகளைத் திருவரங்கம் கோயிலுக்குச் செய்துள்ளதைத் திருவரங்கத்தில் உள்ள கல்வெட்டின் வாயிலாக அறிய முடிகிறது.

## அடிக்குறிப்புகள்

1. Sastri K.A.N., A History of south India p. 275 டாக்டர் கே.வி. இராமன், பாண்டியர் வரலாறு - பாண்டியர் கலை ப. 280
2. ARE 169 / 1935 - 36
3. IPS No. 132
4. வெ. வேதாசலம், தமிழ் இலக்கியங்கள், கல்வெட்டுகள் காட்டும் பாண்டியநாட்டுச் சமுதாயமும், பண்பாடும், பிஎச்.டி பட்டத்திற்கான ஆய்வேடு, மதுரைக் காமராசர் பல்கலைக்கழகம், மதுரை 1993.
5. வெ. வேதாசலம், ''இடைக்காட்டூர் திருமணிகண்டீசுவரர் கோயில் கல்வெட்டுகள்'' ஆவணம் இதழ் 8 (1997), ஆவணம் இதழ் 9 (1978), தஞ்சை.
6. ARE 407 / 1914 - 15
7. ARE 411 / 1914 - 15.
8. IPS. No. 627
9. வெ. வேதாசலம், ஆவணம் இதழ் 8, 9
10. ARE 24 / 1915 - 16 C.

11. ARE 39 / 1924 C.

12. ARE 306 / 1949 - 50

13. ARE 63 / 1924

14. S.I.I. Vol. IV No. 373

15. மா. சந்திரமூர்த்தி, ''தர்க்காகுடி சிவன் கோயில்'' கல்வெட்டு காலாண்டு இதழ் 12, தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை, சென்னை, பக்கம் 18-19.

16. மா. சந்திரமூர்த்தி, சூரக்குடி கோயில், மணிவாசகர் பதிப்பகம், சென்னை 1994, பக்கம் 48, 49 படம் 4.

17. மேலது, பக்கம் 73-76, படம் எண். 7

18. M. Chandramurthy, "The Icon of Dakshinamurthy and Cultural Milieu" paper presented in the Seminar on Socio - Cultural development, C.P. Ramaswami Aiyar Institute of Indological Research, Chennai 31.1.1998.

19. மா. சந்திரமூர்த்தி, சூரக்குடி கோயில், பக்கம் 73 மணிவாசகர் பதிப்பகம், சென்னை 1994

மா. சந்திரமூர்த்தி, இலுப்பைக்குடி கோயில், மணிவாசகர் பதிப்பகம், சென்னை 1988 பக்கம் 29-30, படம் 1.

மா. சந்திரமூர்த்தி, வைரவன் கோயில், மணிவாசகர் பதிப்பகம், சென்னை 1996 பக்கம் 40.

M. Chandramurthy "Later Pandia Sculpture from Kilamattur", South Indian Studies, R. Nagaswamy (Ed.) SAHER, pp. 160 - 161.

20. வெ. வேதாசலம், பாண்டிய நாட்டில் வாணாதிராயர்கள், தமிழகத் தொல்லியல் தொழில்நுட்பப் பணியாளர் பண்பாட்டுக் கழகம், மதுரை- பக்கம் 49.

21. ARE 294 / 1929 - 30, ARE 514 / 1916 - 17

22. இச்சிற்பங்கள் தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை கல்வெட்டாய் வாளர் முனைவர் வெ. வேதாசலம் அவர்களின் கள ஆய்வில் கண்டறியப்பட்டன.

23. வெ. வேதாசலம், செ. போசு, திருமலை மன்னர் கையேடு பக்கம் 62 தொல்பொருள் ஆய்வுத்துறை வெளியீடு சென்னை - 1995 மற்றும் வெ. வேதாசலம், இயக்கி வழிபாடு.

24. ARE 62 / 1915 / 16C.

25. இச்சிற்பம் மதுரைப் பல்கலைக்கழகப் பேராசிரியர் (ஓய்வு) திரு. கோ. விசயவேணுகோபால் அவர்களால் கள ஆய்வில் கண்டறியப்பட்டது.
26. வெ. வேதாசலம் ''நடராசீச்சுரம்'' தஞ்சையில் நடைபெற்ற அகில உலக சைவ மாநாட்டுக் கருத்தரங்கில் படிக்கப்பட்ட கட்டுரை (வெளியிடப் பெறாதது.)

# (உ) ஆடற்கலை

## முன்னுரை

மனித வாழ்க்கையில் நாகரிக வளர்ச்சியின் ஒரு பகுதியாக 'ஆடலும் பாடலும்' விளங்குகின்றன. இதனைக் 'கூத்தும் இசையும்' என்றும் கூறுவர். தமிழ்ச் சமுதாயத்தில் கூத்தும் இசையும் முக்கிய இடம்பெற்று விளங்கி வந்துள்ளதை வரலாற்றுச் சான்றுகளால் அறியமுடிகிறது.

நடனம் என்றால் என்ன? ஒரு கருத்தை நினைத்து அதை மற்றவர்கள் எளிதில் உணர்ந்து கொள்ளும் வகையில் அங்க அசைவுகளில் வெளிப்படுத்திக் காட்டுவது நடனமாகும்.

மன்னர்கள் காலத்தில் அரசும், சமயமும் அனைத்துப் பொருளாதார நடவடிக்கைகளுக்கும் நிலைக்களன் ஆயின. மக்களின் வாழ்க்கையும் இவ்விரண்டையும் சார்ந்து நிலைபெற்றது. சமயத்தின் ஓர் அங்கமாக ஆடலும், பாடலும் இடம் பெற்றன. ஆடலும், பாடலும் தனிக்கலையாகவே மாறின. இவற்றிற்காகப் பல நூல்கள் எழுதப்பட்டன. தமிழகத்தில் ஆடற்கலைக்கு ஆதாரமாகக் கோயில்களும், மூவரின் தேவாரப்பாடல்களும் அமைந்தன என்றால் மிகையில்லை[1].

திருக்கோயில்களில் காணப்பெறும் சிற்பங்களும், செப்புத் திருமேனிகளும், ஓவியங்களும் பாண்டியப் பெருவேந்தர் கால ஆடற்கலைச் சிறப்புக்கு ஆதாரமாக விளங்குகின்றன. திருக்கோயில் களில் நடைபெற்ற கூத்துகளைப் பற்றியும் ஆடற்கலைஞர்கள் திருக்கோயிலுக்குச் செய்த தொண்டுகளைப் பற்றியும் கல்வெட்டுச் செய்திகள் எடுத்துக் கூறுகின்றன.

## தேவரடியார்

கூத்திலும், இசையிலும் வல்லுநரான பெண்கள் பலர் கோயில் பணியில் ஈடுபட்டிருந்தார்கள். இவர்கள் 'தேவரடியார்கள்' எனக் கல்வெட்டுகளில் குறிக்கப்படுகின்றனர். இவர்களுக்குத் தலைக்கோலி கள், தளிச்சேரிப் பெண்டுகள், பதியிலார், கோயிற் பிணாக்கள் என்றும் பெயர்கள் வழங்கப்பட்டன. கோயில்களில் திருவலகிடுவதும், திருமெழுகிடுவதும், மலர் தொடுப்பதுமாகிய பணிகளை மேற்கொண் டிருந்தனர். அவர்கள் சிறப்பாக ஈடுபட்டிருந்த கலைத்தொண்டு நடனம் ஆடுவது எனலாம்[2].

இராமநாதபுரம் மாவட்டத்தில் திருமலை மலைக்கொழுந்தீசுவரர் கோயிலில் காணப்படும் திரிபுவன சக்கரவர்த்திகள் குலசேகர பாண்டியனின் (கி.பி.1195) கல்வெட்டு பதினெட்டுநாட்டு

மாகேசுவரர்கள் கூடித் தேவரடியார்கள் பல கோயில்களுக்குச் செய்த நற்செயல்களைப் பாராட்டியதாகக் கூறுகிறது. அவர்கள் பல திருக்கோயில்களுக்குத் திருச்சுற்றுகளை அமைத்துத் தந்துள்ளனர். தெய்வத் திருமேனிகளையும் செய்து அளித்துள்ளனர். இவர்கள் கோயிலுக்குள் நுழையும் பொழுது சங்கிணையும் மற்ற இசைக் கருவிகளையும் இசைத்துக் கொள்ள அனுமதி அளிக்கப்பட்டதை அறிய முடிகிறது[3].

ஆடற்கலையில் சிறந்து விளங்கியவர்கள் 'தலைக்கோலி' என்ற பட்டம் பெற்று விளங்கினார்கள். நக்கன் உரிமை அழகிய பெருமாள் தலைக்கோலி என்ற ஆடல் மகளிர், திருநெல்வேலி நெல்லையப்பர் கோயிலில் சுப்பிரமணியர், வள்ளி, தெய்வானை திருமேனிகளை எடுப்பித்து அவற்றின் வழிபாட்டிற்கும் தானம் அளித்ததாகக் கூறப்படுகிறது. மேலும் இக்கோயில் கல்வெட்டில் பெரியநாட்டு மாணிக்கம், பகவதி ஏறுதிருவுடையாள் என்ற நடன மகளிர்களின் பெயர்கள் குறிப்பிடப்படுகின்றன[4].

## ஆடல் மகளிரும் நாடகமும்

திருநெல்வேலி மாவட்டம் பத்தமடைக் கோயில் கல்வெட்டில், திருவிழா நாட்களில் நாடகம் நடத்த நடனமகளிர்க்குத் தானம் அளிக்கப்பட்ட செய்தி கூறப்படுகிறது.

ஆத்தூர் கோயிலில் காணப்படும் முதலாம் மாறவர்மன் விக்கிரம பாண்டியன் கல்வெட்டில் இக்கோயிலில் 'அழகிய பாண்டியன் கூடம்' என அழைக்கப்பட்ட நாடக சாலை இருந்த செய்தி கூறப்பட்டுள்ளது. மேலும் ஆவணித் திருநாளின்போது நாடகம் நடத்தத் திருமேனி பிரியாதாள் என்பவருக்கு இரண்டு மா நிலம் 'கூத்தாடும் காணியாக'க் குருகுலத்தரையன் என்பவனால் அளிக்கப்பட்ட செய்தியையும் அறிகிறோம்[5].

## சாந்திக்கூத்து

திருக்கோயில்களில் நடைபெற்ற பலவிதமான கூத்து வகைகளைப் பற்றிக் கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன. முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் காலத்தில் புதுக்கோட்டை மாவட்டம் திருவேங்க வாசல் கோயிலில் சாந்திக்கூத்து நடத்தத் தானம் அளிக்கப்பட்டதையும், சாந்திக் கூத்து ஆடுபவன் பெயர் அரையன் ஒன்றாயிரம் என்பதையும் அறியமுடிகிறது[6]. திருச்செந்தூர் வட்டம் ஆத்தூர் சோமநாதர் கோயிலில் சடாவர்மன் சிறீவல்லபன் காலத்தில் சோமன் என்ற சாந்திக்கூத்தன் சாந்திக் கூத்து ஆடுவதற்கு நிலம் தானமளிக்கப்பட்டது. இதனால் மகளிர் மட்டுமல்லாமல் ஆடவரும்[7] ஆடற்கலையில் சிறந்திருந்தனர் என்பதை அறிகிறோம்.

திருப்பத்தூர் கைலாசமுடையார் திருக்கோயிலில் திரிபுவன சக்கரவர்த்திகள் விக்கிரம பாண்டியன் காலத்தில் திருநாவுக்கரசர் திருமேனியை நிறுவி அதன் வழிபாட்டிற்காகத் தானம் அளிக்கப்பட்டதை யும், இக்கோயிலில் இருந்த தேவரடியாரின் பெயர் குலசேகர மாணிக்கம் என்பதையும் அறியமுடிகிறது[8].

இராமநாதபுரம் மாவட்டம் திருமால் உகந்தான்கோட்டை செஞ்சடை நாதர் கோயிலில் காணப்படும் முதலாம் மாறவர்மன் குலசேகரன் (கி.பி.1268 - 1318) கல்வெட்டு, தேவரடியார்களைப் பற்றிய அரிய செய்தியைத் தருகிறது. முனைவாலீசுவரமுடையார் கோயில் சிறீருத்திரர்கள், கோயிலில் பணிசெய்த தேவரடியார்கள் ஒவ்வொரு வருக்கும் 2 நாழி நெல் கொடுக்க ஒப்புக் கொண்டனர். தேவரடியார் களுக்கு ஆண் வாரிசு இல்லாமல் பெண் வாரிசுகள் இருந்தால் அப்பெண்களுக்கு நெல் கொடுக்கப்பட்டது. கோயிலில் பணிபுரியும் பொழுது தேவரடியார்கள் திருமணமாகி ஊரைவிட்டுச் சென்றால் அவர்களுக்கும் நெல் வழங்க ஏற்பாடு செய்யப்பட்டது. இவ்வாறு அளிக்க முடியாமல் போனால் 1/2 மா நிலம் அளிக்க உத்திரவிடப்பட்டது. தேவரடியார்கள் இறந்து விட்டால் ஈமக்கடனைச் செய்த ஆணுக்கும் அந்த நிலங்களில் உரிமை அளிக்கப்பட்டது. தேவரடியார்கள் கோயில்களில் பணிபுரிந்தனர். அவர்கள் திருமணம் செய்து கொள்ளலாம். அவருக்கு மகனோ உறவினர் ஒருவரோ ஈமக்கடன் செய்யலாம். ஈமக்கடன் செய்கிறவருக்கு நில உரிமை கிடைத்தது. சாதாரணக் குடிமகனுக்கு இருந்த உரிமை தேவரடியார்களுக்கும் இருந்தது[9]. ஆடற்கலையில் சிறந்து விளங்கிய மகளிருக்கு அக்காலத்தில் இருந்த உரிமைகளையும், சமுதாயத்தில் அவர்களுக்கு இருந்த உயரிய மதிப்பினையும் அறிந்து கொள்ள இக்கல்வெட்டு பெரிதும் உதவுகிறது.

## ஆடவல்லானும் சபைகளும்

ஆடற்கலையின் தெய்வமான நடராசப் பெருமானைப் பாண்டிய நாட்டில் தனிச்சிறப்புடன் போற்றுவதைக் காண்கிறோம். சிவபெருமான் நடனமாடியதாகச் சிறப்பாகப் போற்றப்படும் ஐந்து சபைகளில் மூன்று சபைகள் பாண்டிய நாட்டில் உள்ளன.

குற்றாலம் திருக்கோயிலில் சித்திரசபை உள்ளது. இங்கே நடராசர் வடிவம் ஓவியமாகத் தீட்டப்பட்டுக் காட்சி அளிக்கிறது. சிவபெருமான் ஆடிய பலவகைத் தாண்டவங்களுள் ஒன்றாகிய திரிபுரதாண்டவம் இங்கே நடைபெற்றது எனத் திருப்பத்தூர் புராணம் கூறுகிறது. இச்சித்திரசபையில் காணப்படும் மண்டைப்பாணன் சிற்பம், ஆடல் மகளிர் சிற்பங்கள் ஆகியவை பிற்காலப் பாண்டியர் கலைத்திறனுக்கு மிகச் சிறந்த சான்றுகள் எனலாம். மண்டைப்பாணனின் இசைக்கு ஏற்ப, மங்கை ஆடுகிறாள். சருகுச் சேலை அலைபாய நடனமாடுகிறாள்.

கயல்விழி விழித்துக் கைகளை வீசிக் காண்போரைக் கவரும் வண்ணம் பம்பரமாய் ஆடுகிறாள். பிற்காலப் பாண்டியர் காலச் சிற்பியின் உளியில்தான் எத்தனை நுணுக்கம்! தான் கண்ட நாட்டிய மகளிருக்கு அவன் கல்லிலே வடிவம் கொடுத்துள்ளான்[10].

மதுரை மீனாட்சி சுந்தரேசுவரர் கோயிலில் நடராசர் தாண்டவம் ஆடும் சபை 'வெள்ளியம்பலம்' என அழைக்கப்படுகிறது. இடக்காலை ஊன்றி வலக்காலைத் தூக்கி ஆடிய ஆடவல்லானின் வடிவத்தை இங்கே காணலாம். பாண்டிய மன்னனின் வேண்டுகோளுக்காக இறைவன் கால் மாற்றி ஆடியதாகக் கூறப்படுகிறது. இத்தாண்டவம் 'சுந்தரத் தாண்டவம்' என அழைக்கப்படுகிறது[11]. மேலும் இத்தாண்டவ அமைப்பும் பாண்டிய நாட்டுக்கே உரியது என்ற சிறப்புடன் விளங்குகிறது. மதுரை மாவட்டத்தில் பொருப்பு மேட்டுப்பட்டி என்ற ஊரில் கிடைத்த ஆடவல்லான் செப்புத்திருமேனி கால்மாறி ஆடிய ஆடவல்லான் திருமேனியாகக் காட்சி அளிப்பது சிறப்புக்குரியது.

திருநெல்வேலி நெல்லையப்பர் கோயிலில் உள்ள நடராசர் சபை 'தாமிர சபை' என அழைக்கப்படுகிறது. கலையழகு வாய்ந்த சிறிய மரச்சிற்பங்களைக் கொண்டு இச்சபை விளங்குகிறது.

### ஆடவல்லான் சிற்பங்கள்

மதுரைக்கு அருகே உள்ள திருப்பரங்குன்றம் மலையின் பின்புறத்தின் தென்பக்கத்தில் குடைவரைக் கோயில் ஒன்று உள்ளது. இதனை உமையாண்டார் கோயில் என அழைக்கின்றனர். இங்குக் காணப்படும் சிற்பங்கள் கி.பி.13ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவையாக விளங்குகின்றன. கி.பி. 1216 முதல் கி.பி. 1238 வரை பாண்டிய நாட்டை மதுரை நகரிலிருந்து ஆட்சி புரிந்த முதலாம் மாறவர்மன் சுந்தர பாண்டியன் காலத்தில் ஆடும் கோலத்தில் இறைவனின் சிற்பமும் அருகே சிவகாமி அன்னையுடன் காட்சி தரும் சிற்பங்களும் அமைக்கப் பட்டன. இக்கோயில், ''சுந்தரபாண்டிய ஈசுவரம் உடையார்'' கோயில் என அழைக்கப்பட்டதையும் அறிய முடிகிறது. பிற்காலப் பாண்டியர் கால ஆடற்கலைச் சிற்பங்களுக்குச் சிறந்த எடுத்துக்காட்டாக இவை அமைகின்றன[12].

### தென்காசிச் சிற்பங்கள்

தென்காசி விசுவநாதர் கோயில் கோபுரத்திற்கும், விசுவநாதர் சன்னதிக்கும் இடைப்பட்ட மண்டபம் கி.பி. 1473இல் பராக்கிரம பாண்டியனின் தம்பி குலசேகர பாண்டியனால் கட்டப்பட்டதாகும். இம்மண்டபத்தின் தூண்களில் காணப்படும் இரண்டு தாண்டவச் சிற்பங்கள் குறிப்பிடத்தக்கவை. ஒன்று சிவபெருமானின் ஊர்த்துவத் தாண்டவக் கோலம். இறைவனின் ஆட்டத்திற்கு ஏற்ப நான்முகன் தாளம் கொட்ட, மாயோன் உடுக்கை அடிக்க, நந்திதேவன் குடமுழா வாசிக்க,

கண்ணீர் மல்கக் கண்டுகளிக்கிறார் காரைக்காலம்மையார். இக்காட்சி முழுவதும் ஒரு தூணில் இடம் பெற்றுள்ளது. மற்றொன்று, பதஞ்சலி-வியாக்கிரபாதர் முனிவர்கள் கூப்பிய கரத்துடன் இறைவன் காலடியில் நிற்கும் தாண்டவச் சிற்பம். இறைவனின் காலடியில் முயலகன் விழிபிதுங்கி மாய்வது போன்று சிற்பத்தில் காட்டப்பட்டுள்ளது. ஆடற்கலையின் சிறப்பினை எடுத்துரைக்கும் பாங்கில் இச்சிற்பங்கள் அமைக்கப்பட்டுள்ளன. தென்காசி குலசேகரமுடையார் கோயில் கோபுரத்திலும் ஆடும் கோலத்திலும் இசைக் கருவிகளை வாசிக்கும் நிலையிலும் உள்ள ஆண், பெண் சிற்பங்கள் காணப்படுகின்றன[13].

## நடராசீச்சுவரம்

இராமநாதபுரம் மாவட்டத்தில் காளையார்கோயில் அருகே திருவேகம்பத்துக் கோயில் அமைந்துள்ளது. கல்வெட்டுகளில் இக்கோயில் நடராசீச்சுவரமுடையார் கோயில் என்று குறிக்கப்படுகிறது.

திருவேகம்பத்துக் கோயிலின் கருவறைச் சுவரின் உபான பகுதியில் கி.பி. 13ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த நாட்டிய கரண சிற்பங்கள் காட்சி தருகின்றன. இவை நடராசீச்சுவரத்தினைச் சேர்ந்தவை ஆகும். அறுபதுக்கும் மேற்பட்ட இத்தகைய சிற்பங்கள் இங்குக் காணப்படு கின்றன. பெண்ணும் ஆணும் தனித்து ஆடும் பாங்கிலும், ஆண் இசைக்கருவியை வாசிக்கப் பெண் ஆடுவது போன்ற முறையிலும் சிற்பங்கள் இடம் பெற்றுள்ளன. முழவு, குழல், தப்பு, எக்காளம் போன்ற பல இசைக் கருவிகளும் இங்கு இடம் பெற்றுள்ளன. ஆடற் கலைஞர்கள் சேர்ந்து நாடகப் பாணியில் எண்சுவை தோன்ற ஆடிக்காட்டும் முறையில் இச்சிற்பங்கள் உருவாக்கப்பட்டுள்ளன.

திருவேகம்பத்துக் கோயில் கல்வெட்டுகளிலிருந்து மூலநாயகருக்கு நடராசர் என்று பெயரிட்டு நடராசீச்சுவரம் என்ற பெயரில் கோயில் கட்டப்பட்டுள்ளது எனும் செய்தி தெரிய வருகிறது. இது சைவ சமய வரலாற்றில் புதிய செய்தியாகும். கி.பி. 13ஆம் நூற்றாண்டுக்கு முன்பு 'கூத்தாடும் பெருமாள்', 'கூத்தாடும் தேவர்', 'ஆடல்வல்லான்', 'நாட்டிசுவரர்' என்ற பெயர்களே இருந்தன. 'நடராசர்' என்ற சொல் கி.பி. 13ஆம் நூற்றாண்டில் திருவேகம்பத்துப் பாண்டியர் கல்வெட்டுகளிலேயே முதன் முதலாகக் குறிப்பிடப்படுவது சிறப்பாகும்[14].

திண்டுக்கல் மாவட்டம் சித்தையன் கோட்டையிலுள்ள கோயிலில் பிற்காலப் பாண்டியர் கால ஓவியம் காணப்படுகிறது. தெற்குப் பக்கத் தேவகோட்டத்தில் ஆடவல்லான் உருவமும் அதனைக் கண்டு வியக்கும் சிவகாமியம்மன் உருவமும் எழிலார்ந்த ஓவியங்களாக விளங்குகின்றன[15].

சிவபெருமான் ஆடிய நடனசபைகளில் மூன்று பாண்டிய நாட்டில் உள்ளது. பாண்டிய நாட்டுக்கே சிறப்பளிப்பதாக விளங்கும் கால்மாறி ஆடிய தாண்டவம், சிற்பங்களிலும், செப்புத்திருமேனிகளிலும் சிறப்பிடம் பெற்று விளங்குகிறது. திருக்கோயில்களில் பணி செய்த தேவரடியார்கள் எனப்படும் மகளிர் சிறப்பான பல தொண்டுகளைக் கோயில்களுக்குச் செய்துள்ளனர். அவர்களுக்குத் 'தலைக்கோலி' என்ற பட்டம் வழங்கப்பட்டுள்ளது. கோயில்களில் இறைவனின் முன்பு சாந்திக்கூத்து ஆடுவதற்குத் தானமளிக்கப்பட்டுள்ளது. சமுதாயத்தில் ஆடல் மகளிர் மிகவும் சிறப்பான இடத்தைப் பெற்று விளங்கியுள்ளனர். பாண்டியப் பெருவேந்தர் காலத்தில் 'ஆடற்கலை' உயரிய நிலையில் இருந்தது என்பது மிகையன்று.

## அடிக்குறிப்புகள்

1. நடன காசிநாதன் - தமிழர் நாகரிகம் - நா. மார்க்சீய காந்தி ச. கிருஷ்ணமூர்த்தி, வெ. இராமமூர்த்தி - ஆடலும் பாடலும் கட்டுரை, தொல்பொருள் ஆய்வுத்துறை - 1994.
2. வள்ளி சொக்கலிங்கம் - திருப்பத்தூர் - தொல்பொருள் ஆய்வுத்துறை - 1981.
3. K.A.N. Sastri. The Pandiyan Kingdom, 1972, Page 205 and A.R.E. 1924 No. 33
4. Dr. Uma Maheswari - Heritage of Tamil - Temple Arts Seminar - 1985
5. Dr. A.J. Thinakaran, The Second Pandiyan Empire, 1987, Page 200.
6. புதுக்கோட்டைக் கல்வெட்டுகள் எண் : 275
7. தென்னிந்தியக் கல்வெட்டுகள் தொகுதி 14 - எண் 237.
8. வள்ளி சொக்கலிங்கம் - திருப்பத்தூர் - தொல்பொருள் ஆய்வுத்துறை, 1981.
9. என். சேதுராமன், பாண்டியர் வரலாறு கி.பி. 550 - 1375 - 1989 மற்றும் A.R.E. 1931 - 32 பக்கம் 53.
10. முனைவர் செந்தில் செல்வக்குமரன் - பிற்காலப் பாண்டியர் காலத்தில் சிற்பக்கலை - கல்வெட்டு இதழ் - 41.
11. Dr. C. Sivaramamoorthy, Nataraja in Art, thought and Literature - 1974.
12. செ.போசு. திருப்பரங்குன்றம். தொல்பொருள் ஆய்வுத்துறை, 1981.

13. முனைவர் செந்தில் செல்வக்குமரன் - கல்வெட்டு இதழ் 41.

14. முனைவர் வெ. வேதாசலம், திருவேகம்பத்துக் கோயில் வரலாறு, கட்டுரை.

15. நடன காசிநாதன் - தொல்லியல் நோக்கில் - பாண்டியர் கால ஓவியங்கள் - 1993.

# (ஊ) இசைக்கலை

முத்தமிழை வளர்த்த பாண்டியப் பெருவேந்தர்கள் பெரும் சிறப்புப் பெற்றவர்கள். முற்காலப் பாண்டியர் காலத்தில் இசைக்கலை சிறந்து விளங்கியது போலவே, பிற்காலப் பாண்டியப் பெருவேந்தர் காலத்திலும் இசைக்கலை பெரிதும் போற்றப்பட்டது. இவர்கள் காலத்திலும் தேவாரத் திவ்வியப் பிரபந்தங்களும், புராண இதிகாசங்களும், வேதங்களும், மகாபாரதமும் கோயில்களில் இசையுடன் எடுத்துரைக்கப்பட்டன.

கல்லிடைக்குறிச்சி நாகேசுவரசுவாமி கோயிலில் திருமுறை ஓதுதற்கு நிவந்தமளிக்கப்பட்டிருந்தது.[1] சேரன்மகாதேவி பக்தவத்சலப் பெருமாள் கோயிலில் மகாபாரத விருத்திக்கான நிலத்தானம் வழங்கப்பட்டிருந்தது[2]. ஆழ்வார்திருநகரியில் புராணமும் இதிகாசமும் ஓதிய பிராமணன் ஒருவனுக்குக் கோயிலிலிருந்து பிரசாதம் வழங்கு வதற்குத் தானமளிக்கப்பட்டிருந்தது[3]. திருப்பத்தூர் திருத்தளியாண்ட நாயனார் கோயிலில் திருப்பதிகம் ஓதுவதற்கென்றே விசயபாண்டிய நல்லூர் என்ற கூத்தகுடியில் தனியாக வரி வசூலிக்கப்பட்டிருந்தது[4].

சேலம் மாவட்டம் ராசிபுரம் சுகவனேசுவரர் கோயிலில் பாண்டியர் காலத்தில் நிருத்தமண்டபம் இருந்தது. அதனால் தலைசிறந்த ஆடல் அணங்குகளும் பாடகர்களும் இருந்திருத்தல் வேண்டும் என்பது திண்ணம். [5]

தென்மலை திரிபுரநாகேசுவரர் கோயிலில் பாடல்கள் ஓதுவதற்குத் திருக்கை வேலழகியார் என்பவனுக்குத் தானமளிக்கப்பட்டிருந்தது[6]. அதுபோல் தென் திருவேங்கட மாணிக்கம் என்பவனைக் கோயில் பாடகனாக நியமிக்கப்பட்டிருந்ததையும் ஒரு கல்வெட்டு கூறுகிறது[7].

## திருக்கைக்கோட்டி

பல்லவர் காலம் முதலே கோயில்களில் தேவாரம் ஓதப்பட்டு வந்தது. என்றாலும் தேவாரம் ஓதுவதற்கென்றே பாண்டியர் காலத்தில்தான் தனி மண்டபம் கட்டப்பட்டது. அதைத் 'திருக்கைக்கோட்டி' என்று அழைத்தனர். அத்தகைய மண்டபங்கள் பற்றியும் அதில் தபஸிபர் தங்கியிருந்து தேவாரம் ஓதியதைப் பற்றியும் திருவீழிமிழலை[8] கல்வெட்டும் கல்லிடைக்குறிச்சி கல்வெட்டும் தெரிவிக்கின்றன.

'இயல் இசை நாடகம் எழில் பெற வளர' 'மூவகைத் தமிழ் முறைமையின் வளர' என்றெல்லாம் பாண்டியரின் மெய்க்கீர்த்திகளில் காணப்படுகின்றன. மாறவர்மன் சுந்தரபாண்டியனின் (கி.பி.1216 - 1244) மெய்க்கீர்த்தி 1, வரி 11இல் கூறப்படுது மிகவும் சிறப்புடன்

கூடியதாக உள்ளது. அது 'சுருதியும் தமிழும் சொல் வளம் குலவ' என்று அறிவிக்கிறது.

இசைச்சுரங்கள் ஏழு. சரிகமபதநி. இசைச்சுர நிலைகள் 12. சரி1 ரி2 க1 க2 ம1 ம2 // ப த1 த2 நி1 நி2. சுருதிகள் 22 என்று இன்று இசைக்கல்வியில் உள்ளது. இவற்றின் எண்ணிக்கை பற்றிக் கருத்து வேறுபாடுகள் உண்டு.

இசையில் இசைச்சுரமானது சுருதியில்தான் ஒலிக்கிறது. எனவே இசை நிகழ்ச்சியைத் தொடங்குமுன் சுருதி சேர்த்தல் என்ற பணி மிகவும் அடிப்படையான செயலாகிறது. சுருதி என்ற சொல் தமிழ் இலக்கியங்களில் பரிபாடலில் இடம் பெறுகிறது. இதில் வரும் சுருதி இசைச்சுருதியையே குறிக்கிறது என்பதை செ.அ. வீரபாண்டியன் தனது முனைவர் பட்ட ஆய்வில் நிறுவியுள்ளார். மாறவர்மன் சுந்தரபாண்டியன் மெய்க்கீர்த்தி 1இல் சுருதி என்ற சொல் வருகிறது.

ஒரு பாட்டில் வரும் எழுத்தின் ஒலி அதற்குப் பொருத்தமான இசைச்சுர ஒலியுடன் முழுவதும் பொருந்திய (சிவணிய) வகையில் ஒலிக்க வேண்டும் என்பதைத் தொல்காப்பியச் சூத்திரம் ''இசையொடு சிவணிய நரம்பின் மறைய'' என்ற கூறுகிறது.

'சுருதியும் தமிழும் சொல்வளம் குலவ' என்ற பாண்டியனின் மெய்க்கீர்த்தி வரி மேற்கூறிய தொல்காப்பியச் சூத்திரத்திற்கு விளக்கம் தருவதாக அமைந்துள்ளது. எனவே மாறவர்மன் சுந்தரபாண்டியனின் ஆட்சிக்காலத்தில் இசைப்பாடல்கள் சுருதி சுத்தமாகப் பாடப்பட்டது தெளிவாகிறது.

முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியனின் காலம் இசைச் சிறப்புடன் திகழ்ந்தமைக்கு மெய்கீர்த்தி 11லும் சான்றுகள் உள்ளன. அதன் வரி 12இல் ''எழுவகைப்பாடலும் இயலுடன் பரவ'' என்றுள்ளது.

எழுவகைப்பாடலும் - என்பது ஏழுவகைப் பாடலைக் குறிப்பதாகும்.

பாண்டியர்கள் ஆடகப்புரிசை அரண்மனையில் உள்ள சிம்மாசனத்திற்குக் கூட இசை தொடர்பான பெயர்களையே சூட்டி மகிழ்ந்திருக்கின்றனர். மதுரை அரண்மனையிலே மானாபரணம் என்னும் அம்பலத்திலே 'இசையளவுகந்தான்' என்ற பெயரில் அரசர் அமரும் இருக்கையொன்று இருந்ததை மதுரைத் தென்கரைக் கல்வெட்டொன்று கூறுகிறது[9].

போர்க்களக் காட்சிகளையும் பாண்டியரின் மெய்க்கீர்த்திகள் ஆடல் பாடலுடன்தான் வருணிக்கின்றன.

'முகடு தழுவி மழை தடுக்கும்

காக நெடும்பந்தர்க் கவந்தத்தினாடலும்

கூகையின் பாடலும் கண்டும் கேட்டும்...'

எனத் தலை குறைந்த உடல் மட்டும் ஆடுவதாகவும் கூகை பாடுவதாகவும் மெய்க்கீர்த்தி தெரிவிக்கிறது. இப்பகுதியில்[10] ஆடலுக்கேற்ற தாள இசை கூகையின் பாடலில் வெளிப்படுவதாகக் கூறப்படுவதும் இங்குக் கவனிக்கத் தக்கதாகும்.

முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியனின் மற்றோர் மெய்க்கீர்த்தி அரண்மனையைப் பற்றிக் கூறும்போது,

'பாடருஞ் சிறப்பின் பகுதி வான்றோய்
ஆடகப் புரிசை'

என்கிறது[11]. இங்குப் பாடு என்பது பெருமை, முயற்சி என்று பொருள்படும்.

திருமணம் போன்ற மங்கல நிகழ்ச்சிகளிலும் இறப்பு போன்ற துக்க நிகழ்ச்சிகளிலும்கூடி சங்கு, பறை போன்ற இசைக்கருவிகள் நிகழ்ச்சிக்கேற்ப வாசிக்கப்பட்டதைக் கரூரிலுள்ள இரு கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன[12].

## உவச்சர்

திருமெய்யம் வட்டம் பூவாலைக்குடியில் நெடு நாட்களாக ஊருக்கும் கோயிலுக்கும் உவச்சர் எவரும் இல்லாத காரணத்தினால் கோயில் பண்டாரத்தார்களும் (கருவூலத்தார்) ஊராரும் சேர்ந்து அண்ணன் தம்பிகள் மூவரை உவச்சர்களாக நியமித்தனர். உவச்சக் காணியாக அக்கோயிலைச் சேர்ந்த தேவதான ஊராகிய பகைச்சவர் காலப்பரையன் குடிக்காட்டின் குளமும் வயலும் அவர்களுக்கு அளிக்கப்பட்டது. [13] அம் மூவரில் மூத்தவன் மாராயன் என்ற உயர்ந்த பட்டம் பெற்றவனாகக் காணப்படுகிறான். அரசியல் தலைவர்களுக்கு அளிக்கப்படும் அப் பட்டம் இசை வல்லுநர்க்கும் நிருத்தம் போன்ற ஆடல் கலையில் வல்லவர்க்கும் அன்று அளிக்கப்பட்டதைப் பரவலாகக் காணலாம். தஞ்சைப் பெரிய கோயில் கல்வெட்டுகளில் இதற்குச் சான்றுகள் காணப்படுகின்றன.

கணபதிநல்லூர் என்ற அமண்குடியிலுள்ள நிலத்தையும் குளத்தையும் கோயில் நிருவாகம் பறைகொட்டும் உவச்சர்களுக்கு அளித்தது. அவர்கள் அக்கோயிலில் வழிபாட்டின்போது 'பஞ்சமகாசப்தம்' என்னும் இசையை நிகழ்த்தினர்[14] என்பதைக் கொக்கராயன் பேட்டைக் கல்வெட்டு கூறுகிறது.

மதுரை சுந்தரேசுவரர் கோயிலிலும் இசை வல்லுநர்க்கு ''ஜீவிதக்காணியாக'' நிலம் கொடுக்கப்பட்டிருந்தது. இக்கோயிலில் உள்ள உவச்சர்களுக்கு அண்ட நாட்டு முனையனேரி என்ற இடத்திலுள்ள நிலங்கள் ஜீவிதமாகக் கொடுக்கப்பட்டன. இவர்களில் ஒருவனாகப் பெரியான் தனி வந்தான் என்ற வெள்ளானை வென்ற பாண்டிய

வாத்யமாராயர் என்பவன் கூறப்படுகிறான்.[15] 'வெள்ளானைவென்ற' என்பது பாண்டியனின் சிறப்புப் பெயர். அப்பெயர் வாத்ய மாராயன் என்ற பட்டம் பெற்றவனுக்குக் கொடுக்கப்பட்டிருப்பது மேலும் அவன் பெற்ற சிறப்பினைக் காட்டுகிறது. மற்றொரு கல்வெட்டு பதினொரு பேருக்கு ஜீவிதக் காணியாக நிலம் கொடுக்கப்பட்டதை அறிவிக்கிறது. அவர்கள் இசைக்கருவிகளான, வீரமத்தளம், மத்தளம், திமிலை, சேமக்கலம், கசை, திருச்சின்னம் என்பவற்றை இசைக்க வேண்டும்[16] என்றும் கூறப்பட்டுள்ளது.

## வேதம் ஓதுவதற்கு

அம்பாசமுத்திரம் அருகே திருவாலீசுவரம் கோயிலில் வீரபாண்டியன் காலத்தைச் சேர்ந்த பாண்டவ தூதன் ஸ்ரீகர்சபட்டன் என்பவன் இக்கோயிலில் ரிக்வேதம் ஓதுதற்காகச் சிவசரணசேகரநல்லூர் என்ற கோயிலின் தேவதான நிலத்திலிருந்து மேல் வாரமும் கீழ்வாரமும் தானமளிக்கப்பட்டிருந்தது.[17]

அதே கோயிலில் ஞானாமிர்த ஆச்சார்யரின் சந்தானத்தைச் சேர்ந்த கோளகி மடத்துச் சிவபிராமணர்கள் எட்டு பேருக்கு அக்கோயிலில் திருஞானம் படிப்பதற்கு[18] தேவதான நிலமுள்ள சிவசரணசேகரநல்லூரில் நிலங்கள் கொடுக்கப்பட்டிருந்தன.

திருநெல்வேலி நெல்லையப்பர் கோயிலிலும் திருஞானம் ஓதுதற்கு நிவந்தமளிக்கப்பட்டிருந்தது.

## திருவாய்மொழி

மன்னார்கோயிலில் உள்ள (நெல்லை மாவட்டம்) நாலாயிர விண்ணகர் எம்பெருமான் கோயிலில் திருவாய்மொழி ஓதுவதற்கு 12 பட்டர்களுக்கு நிலத்தானம் அளிக்கப்பட்டதை ஒரு கல்வெட்டு கூறுகிறது.[19]

அதே கோயிலில் பிரபந்தங்களை விண்ணப்பம் செய்வார்க்கு (ஓதுவார்க்கு) நிலத்தானம் அளிக்கப்பட்டதையும் கூறுகிறது.[20]

அக்கோயிலில் உள்ள குலசேகர ஆழ்வார் சன்னதியிலுள்ள குலசேகர பாண்டியனின் கல்வெட்டொன்று, மாசித் திருநாளில் நாலாயிரவன் என்று கூறப்படும் மண்டபத்தில் குலசேகர ஆழ்வாரை எழுந்தருளச் செய்து 'பிள்ளைத் திருப்பாவை கேட்டருளாநிற்க' செண்டலங்கார தாசர் என்பவர் வேண்டிக் கொண்டதற்கிணங்கக் குலசேகர ஆழ்வாருக்கு அடுக்களைப்புறமாக நிலம் கொடுக்கப்பட்டதைக் கூறுகிறது.[21]

## 'பஞ்சமரபு' - என்னும் இசைநூல்

இந்நூலை எழுதியவர் அறிவனார் என்னும் இசைப் பேரறிஞர் ஆவார். இந்நூல் 9ஆம் நூற்றாண்டிற்கும் 12ஆம் நூற்றாண்டிற்கும் இடைப்பட்ட காலத்தில் எழுதப்பட்டதாகக் கூறுகின்றனர். 9ஆம் நூற்றாண்டுக்குப் பிறகு என்பதற்கு - குடுமியான்மலையிலுள்ள பல்லவ மன்னனின் பாடல் கல்வெட்டு, கீதம் என்னும் சொல் வழக்கு, சாரளபாணி - என்னும் பண், கி.பி. 11ஆம் நூற்றாண்டு திருவிசைப் பண் என்பது போன்றவை சான்றுகளாகக் கூறப்பட்டிருக்கின்றன. மேலும் சிலப்பதிகாரத்திற்கு உரை எழுதிய அடியார்க்குநல்லார் 'அறிவனார் செய்த பஞ்ச மரபு' என்று குறிப்பிட்டிருக்கின்றார். தொல்காப்பியத்திலுள்ள பல இசை இலக்கண மாட்சிகளைப் புரிந்து கொள்வதற்கு அடிப்படையாய் இருந்தது இந்நூலேயாகும். சிலம்பிற்கு உரை எழுதிய அரும்பத உரையாசிரியரும் அடியார்க்குநல்லாரும் பயன்படுத்திய பல நூல்களுள் இதுவே தலையாயது. இந்த இரு உரைகள் இல்லையேல் சிலப்பதிகாரத்தின் நுண்ணிய ஆழமான இசையிலக்கணத்தை அறியமுடியாமல் போயிருக்கும் என்கிறார் திரு. வீ.பா.க. சுந்தரம் அவர்கள்.[22]

## திருவிளையாடற் புராணம்

மதுரை நகரத்துத் திருக்கோயிலைப் பாடும் பரஞ்சோதியார் முழவின் சிறப்பையும் குறிக்கின்றார்.

> குழலும் தும்புரு நாரதர்
> பாடலும் குனிந்து
> சுழலும் கொம்பனார் ஆடலும்
> மூவர் வாய்த்துதியும்
> விழுவில் செல்வமும் சுருதியும்
> திசையெலாம் விளங்கும்
> முழவும்கண் துயிலாதது
> முன்னவன் கோயில்

என்று குழல், நாரதர் பாடல், சுருதி, முழவு ஆகியவற்றின் சிறப்பை எடுத்துரைக்கின்றார்.

## கல்லாடம்

பாண்டிய நாட்டை ஆட்சிபுரிந்த முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் திருப்பரங்குன்றத்தில் தெற்கு நோக்கிய குடைவரைக்கோயிலைத் தோற்றுவித்தான். இக்கோயிலில் வள்ளி தெய்வானையுடன் உள்ள முருகன் சிலை உள்ளது. இந்தச் சிலைகளைப் பற்றிக் கல்லாடம் என்ற நூல் முழுவதிலும் 25க்கு அதிகமான இடங்களில் பேசப்படுகிறது.

சுந்தரபாண்டியனால் எடுக்கப்பட்ட இக்கோயிலின் உருவங்கள்தான் கல்லாடத்தில் பாடப்பெற்றிருக்க வேண்டும் எனத் திருப்பரங்குன்றத்தைப் பற்றி நூல் எழுதிய திரு. செ. போசு அவர்கள் கூறியுள்ளார். எனவே கல்லாடம் என்பது இசையைப் பற்றிக் கூறுகின்ற ஒரு சிறந்த நூல் என்றும், அந்நூல் பாண்டியன் காலத்தில் எழுதப்பெற்றது என்றும் கொள்ளலாம்.

## அரையர் சேவை

அரையர் சேவை என்பது வைணவர்களுக்கே உரித்தான ஆன்மீக இசை வடிவமாகும். இன்றும் பாண்டிய நாட்டில் திருவில்லிப்புத்தூரிலும் ஆழ்வார் திருநகரியிலும் அரையர் சேவை அழிந்து விடாமல் போற்றப்பட்டு வருகிறது. இராமானுசர் காலம் முதல் பாண்டிய நாட்டிலுள்ள 18 திவ்விய தேசங்களிலும் அரையர் சேவை நடந்து வந்திருக்கிறது. பாசுரங்களை இசையுடன் பாடுவது, பாடல் பொருளை விரித்துரைப்பது, அபிநயத்துடன் ஆடுவது, இறைவனுடைய பெருமைகளைச் சொல்லி ஏத்துவது, பாசுரங்களில் இடம்பெறும் புராணக் கதைகளை நடத்திக் காட்டுவது, பிரணய கலகம் என்ற ஊடல் திருநாளில் வாயிலாக இருந்து பெருமாளையும் பிராட்டியையும் சேர்த்து வைப்பது போன்ற சேவைகள் அரையர்களுக்கிருந்தன.

ஆழ்வார் பாசுரங்களை அரையர் சேவைக்கு முன்பு பண் இசையில் ஓதுவதில்லை. 'தேவகானம்' என்ற இசை அமைப்பில் தாள ஒலியின்றி 'உதாப்த' 'அனுதாத்த' ஸ்பரிதமாக ஓதி வந்தனர். அரையர்களே பண் தாள வகுப்பிற்கேற்பத் திருவாய்மொழிப் பதிகங்களைத் தாளத்துடன் இசைத்தனர். அரையர்களுக்கு 'இசைக்காரர்' என்ற பட்டப் பெயரும் வழங்கி வந்ததாக அறியப்படுகிறது.

தனிப்பட்ட ஓர் ஆன்மீக இசை வடிவம் வைணவத்திற்கே உரியது. தமிழ் இசை வரலாற்றில் ஆடல், பாடல், நாடகம் என்ற இவற்றை உள்ளடக்கிய ஒரு புதுமையான இசை வடிவம் தோன்றி வளர்ந்து பேணிப் பாதுகாக்கப்பட்டது பெருவேந்தர்களாகப் பாண்டியர்கள் திகழ்ந்த காலத்தில்தான். இன்றும் அதன் எச்சம் பாண்டிய நாட்டில் இருப்பதும் குறிப்பிடத்தக்கதாகும்.

## தமிழ்க் கடிகை

திருக்கச்சூரிலுள்ள ஒரு கல்வெட்டு பாண்டியர் ஆட்சிக்கு மிகவும் பெருமை சேர்ப்பதாக அமைந்துள்ளது.[23]

செங்கல்பட்டுக் கோட்டத்தில் கோசுர நாட்டில் காவனூர் என்ற பொய்யாமொழி மங்கலம் என்னும் ஊரில் கடிகை ஒன்று இருந்தது. இந்தக் கடிகையில் அறிஞர்கள் பலர் இருந்தனர். அவர்களில் ஒருவர் 'முத்தமிழ் ஆசிரியரான தமிழ் கரை கண்ட சாத்தனாருடைய சந்தானத்தில்

பெருநம்பிகள்' என்பவர். இவருக்குக் காணியாகப் பொய்யாமொழி மங்கலம் அளிக்கப்பட்டதைத் தான் இக்கல்வெட்டு கூறுகிறது.

இக்கல்வெட்டின் எழுத்தமைதி கி.பி.13ஆம் நூற்றாண்டாகும். இந்நூற்றாண்டுக்குரிய பாண்டிய மன்னர்களின் கல்வெட்டுகள் இவ்வூர்க்கோயில்களில் காணப்படுகின்றன.

இக்கல்வெட்டில் காணப்படும் முத்தமிழ் கரைகண்ட சாத்தனார் என்ற பெயர் 'மணிமேகலை' என்னும் காப்பியத்தை எழுதிய சாத்தனாரை நினைவுபடுத்துவதாகக் கூறுவர். அவருடைய சந்தானத்தைச் சேர்ந்தவர் பெருநம்பி எனக் கூறப்படுவதும், அவருக்குப் பொய்யாமொழி மங்கலம் காணியாக அளிக்கப்பட்டதும் சிறப்பான செய்திகளாகும்.

கடிகை என்றாலே அது வடமொழிக் கடிகை என்றே பொருள்படும். காஞ்சிக் கடிகை, காந்தளூர்ச்சாலை பார்த்தி வேந்திரவர்மனின் கடிகை ஆகியவை வடமொழிக் கடிகைகளே... முதன் முதலாகத் தமிழ் வித்தகர்கள் அரங்கேறியிருக்கும் தமிழ்க் கடிகையாகத் திருக்கச்சூர்க் கடிகையைத்தான் காண்கிறோம். இக்கல்வெட்டு கி.பி. 13ஆம் நூற்றாண்டு என்றாலும்,நெடுங்காலத்திற்கு முன்பிருந்தே கடிகை இயங்கி வருகிறது என்பதையும், அக்கடிகைக்குப் பாண்டிய மன்னர் புத்துயிர் அளித்தனர் என்பதையும் உணர்ந்து கொள்ள முடிகிறது.

பிரான்மலையிலுள்ள நானாதேசி கல்வெட்டு பாண்டிய மன்னனுடையது. இக்கல்வெட்டு

'முத்தமிழ்ப் பாடலோடாடல் ஓவா
விழவும் வேள்வியும் விளங்கிய வீதியுடையோர்'

என்கிறது.[24]

பாண்டியப் பெருவேந்தர்களின் சம காலத்தில் (அதாவது 12, 13ஆம் நூற்றாண்டுகளில்) வாழ்ந்த கடவ அரசர்களின் கல்வெட்டுகளிலுள்ள செய்திகளும் முக்கியமானவை.

'அறை கடலின் இசையுடனே அண்டர்வேயின்
ஆம்பலிசை செவிகவர அந்திமாலை
நிறைமதியின் நிலவென்னும் நெருப்புப் பட்டால்
நேரிழைநின்றாற்றுவளே நிருபதுங்கா'

என்ற வரிகள் வயலூர்க் கல்வெட்டில் காணப்படுகின்றன.[25] கூடல் ஏழிசை மோகன் சடகோபன் பாட்டைக் கேட்டதாக ஒரு கல்வெட்டு கூறுகிறது.[26]

கி.பி. 13ஆம் நூற்றாண்டுக்குரிய திருவண்ணாமலைக் கல்வெட்டு ஒன்றில்

ஓடரிமைக்கண் உமை இசைபாட
ஆடி அதிரும் கழற் பெருமானுக்கு

இசை மாணிக்கம் இலங்கச் செய்த
பாதம் வல்லபெருமாள்

என்று கூறப்பட்டுள்ளது. இதனால் இசையின் பெருமையை அறிய முடிகிறது.

திருமெய்யத்திலுள்ள சுந்தரபாண்டியன் கல்வெட்டு, இன்னமுத வெள்ளம் எழுந்தருளின பொலி அமுது செய்தருளும் தளிகை ஒன்றுக்குத் தானமளித்ததைத் தெரிவிக்கிறது. இவ்வரிகள் திருமங்கை ஆழ்வாரின்,

'திருமெய்ய இன்னமுத வெள்ளத்தை'

என்பதைப் போல உள்ளன.

திருவில்லிப்புத்தூரில் ஆண்டாளின் பாசுர அடிகளும், இலவானாசூர் கோட்டையில் 'மாணிக்கவாசகரின்' பாடல் வரிகளும் பொறிக்கப்பட்டிருப்பதையும் இங்குச் சிறப்பாகக் கூறவேண்டும்.

பாண்டியர் காலத்தில் திருவரங்கம் கோயில் வளாகத்தில் போசள மன்னர்களால் கட்டப்பட்டதுதான் குழலூதும் பிள்ளை கோயில். இங்கு நாலாயிரத் திவ்வியப் பிரபந்தப் பாடல்களுக்கு அபிநயம் பிடிக்கும் பெண்களின் சிற்பங்களையும் ஆநிரைகள் இசை கேட்கும் சிற்பங்களையும் ஓவியங்களையும் காண முடிகிறது.

## ஆடல் பாடலுடன் வேதங்களும் புராணங்களும்

சேரன் மகாதேவி அப்பன் கோயிலில் ஜடாவர்மன் குலசேகர பாண்டியன் காலத்தில் தனது மைத்துனனான சேரமன்னன் ரவிவர்மனின் வேண்டுகோளுக்கிணங்க, அக்கோயிலில் தினமும் நடைபெறம் வழிபாடுகளின்போது வேதங்களும் புராணங்களும் பாடப்பட வேண்டும் என்றும் அப்போது தேவரடியார்கள் நடனமும் ஆட வேண்டும் என்றும் அறிவித்து அதற்காக நிலதானம் அளித்திருந்தான்.[27]

அதே கோயில் வளாகத்தில் முடி வழங்கும் பெருமாள் மடம் என்ற ஒரு மடமிருந்தது.[28] அதில் சாத்திரங்களும் ரிக்வேதமும், யஜுர்வேதமும், சாம வேதமும், அதர்வண வேதமும் கற்பிக்கும் வேத பாடசாலையும் இருந்தது.[29] மடமும் வேத பாடசாலையும் இருந்ததால் அங்கு ஒரு நூல் நிலையம் அமைக்கப்பட்டது. நூல் நிலையங்கள் 'சரசுவதி பண்டாரம்' என்று அழைக்கப்பெறும். அந்நூல் நிலையத்தை அதிகாரி ஒருவன் நிறுவியதாக முதலாம் ஜடாவர்மன் சுந்தரபாண்டியனின் கல்வெட்டுக் கூறுகிறது.[30]

மேற்கூறியவாறு பாண்டியர் காலத்தில் கோயிலில் வழிபாட்டின் போது வேதங்களும் புராணங்களும் சாத்திரங்களும் இசையுடன் ஒலித்தன. மடங்களில் அவை இசையுடன் கற்றுத் தரப்பட்டன. இந்நூல்களைப் பாதுகாப்பதற்கும் படிப்பதற்கும் சரசுவதி பண்டாரமும் நிறுவப்பட்டது.

சிதம்பரத்தில் நிறுவிய அக்ரகாரத்திலும் நூல் நிலையம் அமைத்தவன் இதே பாண்டியன்தான்.

சிதம்பரம் நடராசர் கோயிலில் உள்ள சரசுவதிபண்டாரம் கல்வெட்டும் இம்மன்னனுடையதுதான். இவ்வாறு பாண்டிய மன்னர்கள் முத்தமிழையும் வளர்த்தனர். நூல் நிலையங்கள் அமைத்து அறிவைப் பெருக்கினர். நூல்களைப் பாதுகாத்தனர்.

## அடிக்குறிப்புகள்

1. ARE 92/1907
2. ARE 531 / 1911
3. ARE 467 / 109
4. ARE 99 / 1908
5. ARE 44 245 / 1888
6. ARE 610 / 1915
7. ARE 567 / 1916
8. ARE 414 / 1908
9. ARE 130 / 1910
10. முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியனின் மெய்க்கீர்த்தி
11. மேற்படி
12. ARE 68 / 1890, ARE 136 / 1905.
13. S.I.I. Vo. XXIII No. 150
14. ARE 11 / 1915
15. ARE 276, 277 / 1941 - 442
16. Ibid and The Second Pandiyan Empire - Dr. A.J. Thinakaran
17. ARE 339/ 1916
18. ARE 359 / 1916
19. ARE 393 / 1916 (நெல்லை மாவட்டம்)
20. Rajendra Vinnagar - R. Tirumalai Appendix I
21. Ibid Appendix II & ARE 402/1916
22. தமிழிசைக் கலைக் களஞ்சியம் மூன்றாம் தொகுதி பக்கம் 239 - வீ.ப.க சுந்தரம்.
23. S.I.I. Vol. XXVI No. 319
24. கோப்பெருஞ்சிங்கன் - எஸ். ஆர். பாலசுப்ரமணியம்



சிதம்பரம் நடராசர் கோயில் மேற்குக் கோபுரம்
முதலாம் சடையவர்மன் சுந்தரபாண்டியன் காலம்
கி.பி. 13 ஆம் நூற்றாண்டு



மதுரை மீனாட்சியம்மன் கோயில் கோபுரம் (கிழக்கு)
(உட்புறம்)



மதுரை மீனாட்சியம்மன் கோயில் கோபுரம் (மேற்கு)
கி.பி. 14 ஆம் நூற்றாண்டு



பாண்டியர் கலைப் பாணியில் அமைந்த சிற்பம்
சேரன் மாதேவி, திருநெல்வேலி மாவட்டம்

பாண்டியர் இலச்சினையான இருகயல்
செண்டுடன் கூடிய கல்வெட்டு

**திருவண்ணாமலை - காலம் : கி.பி. 13ஆம் நூற்றாண்டு**



**கல்வெட்டுத் தொடர் :**

**1. ஸ வி ஸ்ரீ**
**வ த**

**2. விக்கிரம பாண்**

**3. டியந் திரு வீதி**

**4. ஆறாம் வகுப்பு**

---

தமிழ் வளர்ச்சி இயக்ககம்
குறளகம், சென்னை - 600 108